5-5

வாரியார்

# விரிவுரை விருந்து

## திருமுருக கிருபானந்தவாரியார்





வானதி பதிப்பகம்
தி.நகர் · சென்னை ·17

5-6

# ஞான விளக்கு

மறைபொருளை விரித்துரைக்கும் மாமேதை திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களின் சொற்பொழிவுச் சுரங்கத்திலிருந்து சேகரிக்கப் பெற்ற பல்பொருள் பொக்கிஷங்களும், அவர்தம் சிந்தனைச் செல்வங்களும், தேன்சுவைக் கட்டுரைகளும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. இது கிடைத்தற்கரிய அரும்பெரும் கட்டுரைக் களஞ்சியம்.

கூறுமொரு பொருளைக் குறையிலாது உரைக்கும் குணமலை வாரியார் அவர்கள். அவர் ஓர் அறிவுக் கடல். தமிழோடு சமயமேன்மை படைக்கும் தமிழறிஞர். தத்துவச் செல்வர். மிகச் சிறந்த சிந்தனையாளர். அவர்தம் சிந்தனைகள் நம்மைச் செம்மைப்படுத்தும்; உயர்த்தும்; மதிநலம் பெருக்கும்.

விரிப்பன விளங்கும் பல்பொருள் நிரம்பிய கட்டுரைகளைத் தொகுத்து நூலாக வெளியிடும் பணியைத் திருவருட் பணியாக—சிறந்த தமிழ்ப் பணியாகக் கருதி இந்நூலை வெளியிடுகிறேன்.

அஞ்ஞானத்தைப் போக்கும் ஞானவிளக்கினை நமக்களித்த வாரியார் அவர்களைத் தமிழ் மக்களின் சார்பில் நன்றியோடு போற்றி வணங்குகிறேன்.

வாரியார் வழங்கும் தமிழ்ச் செல்வத்தைத் தமிழ் மக்கள் நன்கு பயன்படுத்திப் பயன் பல பெறுவார்கள் என நம்புகிறேன்.

இந்நூலினை வானதி பதிப்பக வெளியீடாக வெளியிட அனுமதியளித்த திருமுருக கிருபானந்தவாரியாரின் கருணை உள்ளத்துக்கு நன்றி. இந்நூல் செம்மையுற மூலச்சுவடிகளை ஒப்புநோக்கி உதவிய பயன்கருதாப் பைந்தமிழர் திரு.வீ. சங்கரன் பிள்ளை அவர்களுக்கும், பிழை திருத்தம் செய்து உதவிய மதிப்பிற்குரிய திருப்புகழமிர்தம் மானேஜர் திரு. ஜெயராம அய்யர் அவர்களுக்கும், உடன் உதவிய கவிஞர் தே. ப. பெருமாள் அவர்களுக்கும் நன்றி.

ஏ.திருநாவுக்கரசு.
வானதி பதிப்பகம்

உ

முருகா

# முன்னுரை

மனிதனை உயர்த்துவது பணமன்று; பதவியன்று; குலமன்று; பருமனன்று; உயரமன்று. அறிவு ஒன்றுதான் மனிதனை உயர்த்தும். "அறிவுடையார் எல்லாம் உடையார்" என்கின்றார் திருவள்ளுவர்.

நூலின் அளவுதான் நுண்ணறிவின் அளவு ஆகும். நல்ல நூல்களைக் கற்குந் தோறும் அறிவு நுணுகி நலம் எய்தும். இறைவன் கற்றவர் விழுங்குங் கற்பகக் கனி; கல்லா மனத்துடன் நில்லாத் தன்மையன்.

உலகிலே மக்கள் செய்யும் பிழைகளுக்கெல்லாம் தலையாய பிழை அறிவு நூல்களைக் கல்லாமையே யாகும்.

பிழைகள் இன்ன இன்ன என்று நமக்கு உபதேசிக்க வந்த பட்டினத்து அடிகளார் தலையாய பிழை கல்லாப் பிழை என்றார்.

**கல்லாப் பிழையுங் கருதாப் பிழையுங் கசிந்துருகி**
**நில்லாப் பிழையும் நினையாப் பிழையும் நின்**
**அஞ்செழுத்தைச்**
**சொல்லாப் பிழையுந் துதியாப் பிழையும் தொழாப்**
**பிழையும்**
**எல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய்கச்சி**
**ஏகம்பனே.**

ஆதலால் ஏனோரும் நூல்களைக் காதலால் ஓதியுணர்தல் வேண்டும்.

உற்றாரும் மற்றாரும் கற்றாரைக் கைகூப்பி வணங்குவர்; கற்றார்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு. கல்லாதவனை இல்லாளும் எள்ளுவள்.

இவ்வாறு கூறிய சீரிய நூல்களைக் கற்போருக்குத் துணை செய்கின்றது வானதி பதிப்பகம். அரிய பெரிய இனிய நூல்களை நல்ல முறையில் அச்சிட்டு உதவுகின்றது. வானதி பதிப்பகத்தின் அதிபர், திரு. திருநாவுக்கரசு அவர்கள் கனியமுதம் போன்ற இனிய குணநலம் படைத்தவர்.

சொற்ப ஒழிவின்றி சொற்பொழிவு செய்து தினந்தோறும் ஒரு ஊராகத் தமிழ்ப்பணி செய்து வரும் அடியேன், பலகாலும் சிந்தித்த சிந்தனைகளை அவ்வப்போது பல நூல்களில் பல நுட்பங்களை எழுதி வெளியிட்டேன். அவைகள் சற்று ஏறக் குறைய முப்பதாண்டுகளாக உதிரி உதிரிகளாக வெளிவந்தவை. அவைகளை யெல்லாம் ஒன்று திரட்டி, "வாரியார் விரிவுரை விருந்து" என்று இன்று வெளியிடுகின்றார்கள். இது மக்களுக்கு மிகவும் பயன்படும். பல நூல்களைப் படித்த பயனை இந்த ஒரு நூலால் பெறுவார்கள்.

பூஜை, தெய்வம், ஆடவல்லான், ஒன்றில் இரண்டு முதலிய கட்டுரைகளைப் படிப்பவர் மிகுந்த மதி நலனைப் பெறுவர்.

வானதி பதிப்பகத்தார் தமிழுக்கும் சமயத்துக்கும் அரும்பெருந் தொண்டு புரிகின்றார்கள். இப்பதிப்பகம் இறையருளால் குறையின்றி வளர்க; வாழ்க.

இந்த விரிவுரை விருந்தை ஏனைரும் உண்டு உவகையுறுவார்கள்; எந்தை கந்தவேள்-வயலூர் வள்ளலின் அருளைப் பெறுவார்கள்.

அன்பன்,

**கிருபானந்தவாரி**

# பொருளடக்கம்

உ

முருகா

# வாரியார் விரிவுரை விருந்து

## 1. திருக்குறள்

**எ**ல்லாத் தேசத்தாரும், எல்லா நாட்டாரும், எல்லா நிறத்தாரும், எல்லாச் சமயத்தாரும், எல்லாக் காலத்தாரும் கருத்து வேறுபாடின்றி ஒப்ப முடிந்த உண்மை வேதம் நமது திருக்குறள் ஒன்றேயாம். உலகிலுள்ள எல்லா அறங்களை யும் தன்னகத்தே கொண்டு, சுருங்கச் சொல்லி விளங்கவைப் பது திருக்குறள்.

ஒரு குலத்துக்கொரு நீதி, மற்றொரு குலத்துக்கொரு நீதி என்று கூறும் மநுவாதி யறநூல்களெல்லாம் வள்ளுவருடைய அறநூலைக் கண்டு வாயிழந்து ஒளிமழுங்கி நாணித் தலை கவிழ்ந்து மறைந்தொழிந்தன.

திருமால், குறள் வடிவு கொண்டு இரண்டடியால் மூவுல கையும் அளந்தனர்; வள்ளுவர், தமது குறளின் இரண்டடி யால் எல்லா உலகங்களையும் அளந்துவிட்டனர்.

திருக்குறள் ஓதுவதற்கு எளிது; மனப்பாடஞ் செய்வதும் சுலபம்; ஒரு முறை படித்தாலேயே போதும். உணர்தற்கு அரிது; வேதங்களிலுள்ள விழுப்பொருள்களை யெல்லாம் விளக்கமாக உரைப்பது; நினைக்குந்தோறும் நெஞ்சில் தெவிட்டாத இன்பத்தை ஊற்றெடுக்கச் செய்வது. இதன் பெருமையை நன்குணர்ந்த மாங்குடி மருதனார்,

ஓதற் கெளிதாய் உணர்தற் கரிதாகி
வேதப் பொருளாய் மிகவிளங்கித்—தீதற்றோர்
உள்ளுதொ றுள்ளுதொ றுள்ளம் உருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு.

என்றனர்.

கடல் தண்ணீர் வற்றிவிட்டாலும், சூரியன் தட்பத்தை யடைந்தாலும், சந்திரன் வெப்பத்தை யடைந்தாலும், திருக்குறள் தனது பெருமையினின்றும் குறையாது. செய்யா மொழி யென்னும் வடமொழி வேதத்தினும், பொய்யா மொழியாகிய இத் தமிழ்மறையே சாலவும் சிறந்தது.

"ஆலும் வேலும் பல்லுக் குறுதி
நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி"

என்பது நம் நாட்டுப் பழமொழி.

நால் என்பது நாலடியார்; இரண்டு என்பது திருக்குறள். ஆதலால், திருக்குறளைப்போல் அறத்தின் நுட்பங்களை வரையறுத்துக் கூறும்நூல் முன்னுமில்லை; இனிப் பின்னுமில்லை. திருக்குறளை எடுத்துப் பொன்போலத் தத்தம் நூல்களில் அமைத்துப் பாடாத புலவர் பெருமக்களில்லை. உதாரணமாக ஒன்றைக் காட்டுகின்றேன்:

கம்பர் ஒரு பெரிய கவிச்சக்கரவர்த்தி; கவிதா சாமர்த்தியத்தில் மிகப் பிரசித்தி பெற்றவர் கம்பர். அவரைப்போல் அழகாகவும், இனிமையாகவும் பாடவல்லார் இல்லை. கம்பன் கவி உம்பர் நாட்டு அமிழ்தினும் இனியது. இது யாவரும் ஒப்ப முடிந்த உண்மை.

வள்ளுவர் அழுக்காறுமை என்ற அதிகாரத்தில்,

"கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்"

என்றார். ஒருவன் ஒரு பொருளைப் பிறருக்குத் தருமமாகக் கொடுக்கும்பொழுது எவன் பொறாமைப்படுவானோ, அவன் அழிவதுமின்றி,அவனுடைய சுற்றத்தாரும் உண்ண உணவும், உடுக்க உடையுமின்றித் துன்புறுவர் என்பது மேற்கூறிய திருக்குறளின் பொருள்.

இந்தஅருமையான திருக்குறளை, கவிநாயகராகியகம்பர், தமது இராமாயணத்திலே இராமனுக்கு விஸ்வாமித்திரர் வாமனவதாரத்தை பற்றிக் கூறும்போது எடுத்து இன்பம் பயக்க உரைக்கின்றனர். அவ்வருமைக் கவி வருமாறு:

எடுத்தொருவருக்கொருவ ரீவதனின் முன்னே
தடுப்பது நினக்கழகிதோ தகைவில் வெள்ளி
கொடுப்பது விலக்குகொடி யோயுனது சுற்றம்
உடுப்பதுவும் உண்பதுவும் இன்றிவிடு கின்ருய்.

கவியரசராகிய கம்பர் இப்படிப் பல இடங்களிலும் திருக்குறளைப் பொன்போல் எடுத்து அமைத்து தமது இராமாயணத்தை அலங்கரிக்கின்ருர் என்ருல், திருக்குறளின் பெருமையை அளவிட வல்லார் யாவர்?

திருக்குறளைத் தொட்டாலும் கை மணக்கும்; படித்தால் கண்மணக்கும்; கேட்டால் செவிமணக்கும்; சொன்னுல் வாய் மணக்கும்; எண்ணினுல் இதயம் மணக்கும். அத்தகைய தெய்வ மணம் வீசும் சீரும் சிறப்பும் உடையது திருக்குறள்.

சிந்தைக் கினிய செவிக்கினிய வாய்க்கினிய
வந்த இருவினைக்கு மாமருந்து—முந்திய
நன்னெறி நாமறிய நாப்புலமை வள்ளுவனுர்
பன்னிய இன்குறள் வெண் பா,

என்ருர் கவுணியனுர் என்ற சங்கப் புலவர்.

திருக்குறளைப் பற்பல மொழிகளில் மொழிபெயர்த்து, வேற்று மொழியினரும் பாராட்டிப் புகழ்வதே அதன் பெருமையையும் அருமையையும் நன்கு புலப்படுத்துகின்றது. வள்ளுவர் ஒருவருக்கே "தெய்வப் புலவர்" என்று பெயர். அவர் சங்கப் புலவர் நாற்பத்தொன்பது பெருமக்களாலும் நன்கு மதிக்கப் பெற்றவர். தூயவாழ்வில் வாழ்ந்தவர். எல்லா அறமும் உணர்ந்தவர். இத்தகைய செந்நாப்போதர் திருவாய் மலர்ந்தருளிய இப் பொதுமறையும் பொன்ருப் புகழையுடையது. என்றும் இளமையானது. முப்பாலால் நாற்பொருள்களையும் நனி விளக்குவது. திருக்குறள், நம் செந்தமிழுக்கே ஒரு பெரிய கௌரவத்தைக் கொடுத்து விட்டது. திருக்குறள் என்னும் திருவாபரணத்தால் தமிழ்த் தாயே மிகுந்த பொலிவுடன் விளங்குகின்றனள்.

தமிழ் எழுத்துக்கள் அகரத்தில் தொடங்கி னகர மெய்யில் முடிவடைகின்றன. எல்லா எழுத்துக்களும் இதற்குள் அடங்கிவிடுகின்றன. திருக்குறளும்,

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு"

என்று அகரத்தில் தொடங்குகின்றது.

"ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்"

என்று னகர மெய்யில் முடிவடைகிறது. இவ்வாறு வேறு எந்த நூலும் அமையவில்லை. இத்தகைய பல சிறப்புக்களை யுடையது திருக்குறள்.

திருக்குறள் அறத்துப்பால், பொருட்பால், இன்பத்துப் பால் என்று முப்பாலாகப் பிரிந்துளது. இதில் முதலாவதாகிய அறத்துப்பால் இல்லறவியல்,துறவறவியல் என்னும் இரு பிரிவினையுடையது. அவற்றுள் இல்லறவியல் பாயிரமுட்பட 24 அதிகாரங்களை யுடையது. துறவறவியல் விரதம் ஞானம் என்னும் இரு சிறு உட்பிரிவினையுடையது. விரதம் 9 அதிகாரங்களையும், ஞானம் 5 அதிகாரங்களையும் உடையன.

இரண்டாவதாகியபொருட்பால், அரசியல், அங்கவியல், ஒழிபியல் என்னும் மூன்று பிரிவினையுடையது. அவற்றுள், அரசியல் 25 அதிகாரங்களையும், அங்கவியல் 32 அதிகாரங்களையும், ஒழிபியல் 13 அதிகாரங்களையும் உடையன.

மூன்றாவதாகிய இன்பத்துப்பால், களவியல், கற்பியல் என்னும் இரண்டு பிரிவினையுடையது. அவற்றுள் களவியல் 7 அதிகாரங்களையும், கற்பியல் 18 அதிகாரங்களையும் உடையன.

ஆகவே, பால் 3; இயல் 8; அதிகாரம் 133; பாக்கள் 1330. இவைகளை ஒருவன் நன்றாகப் படித்துவிட்டால் மீண்டும் ஒன்றையும் படிக்கவேண்டிய அவசியமில்லை. உலகம் போற்றும் உயர்நிலையில் விளங்கலாம்.

"ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தினோடு பகர்ந்ததற்பின்—போயொருத்தர்
வாய்க்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம்."

என்கிறார் நத்தத்தனார் என்னும் புலவர்.

ஆதலால், நம் தமிழ் நாட்டில், தமிழராய்ப் பிறந்த ஒவ்வொருவரும், தமிழ் மறையாகிய திருக்குறளை அவசியமாக ஓதியுணர்தல் வேண்டும்.

## 2. இன்சொல்

மானுடராய்ப் பிறந்த நாம், மனம், மொழி, மெய் ஆகிய மூன்றினாலும் அறம் புரிய வேண்டும். மனத்தாற் செய்யும் அறம், கடவுள் நினைவும், நற்சிந்தையுமாம்.

மொழியாற் புரியும் அறம், ஆண்டவன் திருநாமத்தையும் புகழையும் ஓதுதலும், பிறருக்குத் துன்பம் பயவாத மொழிகளைக் கூறுதலுமாம்.

உடலாற் புரியும் அறம், பதியை மலர் கொண்டு பரவுதலும், அடியார்க்குத் தொண்டு புரிதலும், பிற உயிர்களுக்கு நன்மை செய்வதுமாம்.

பிறருக்கு எவ்வகையாலும் துன்பம் பயவாச் சொல்லே, இன்சொல்லாம்.

**"யாவர்க்குமாம் பிறர்க் கின்னுரை தானே"**

என்றனர் திருமூலர்.

அன்பும் அருளும் நிறைந்த உரைகள் பிறருக்கு இன்பத்தைக் கொடுக்கும். பகைவர்களும் இன்சொல்லால் நம் நண்பராவர். அத்தகைய இன்சொல்லைக் கூறுபவர்க்கு இயமன் தூதரும் அஞ்சுவரென்று ஞானசம்பந்தர் கூறுகின்றனர்.

இன்சொல்லே பேசுகின்றவர்களுக்கு உலகில் ஒரு வகையான துன்பமுமில்லை. இயம வாதனையும் கிடையாது. சிவகதி திண்ணமாகக் கிடைக்கும்.

கனிகள் நிறைந்துள்ள ஓர் மரத்தில் வகையறியா ஒருவன் சுவைமிகுந்த கனிகளை விலக்கிக் கைப்புடைய காய்களை மென்றதை ஒக்கும் இன்னாத சொற்களைக் கூறுவோனியல்பு.

இனிய வுளவாக வின்னுத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. —குறள்.

நம்மிடம் ஒருவன் வன்சொல் கூறுவானுனல், அது நமக்கு வெறுப்பாக விருக்குமன்ருே? பிறர் நமக்கு இன் சொல்லே கூற வேண்டுமென்று விரும்புகின்ற நாம், பிறருக்கு வன்சொல்லைக் கூறுவது சரியன்று.

இன்சொ லினிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது. —குறள்.

பிறர் நம்மிடம் எவ்வளவு துன்பம் தரக்கூடிய வன் சொல்லைக் கூறினும், நாம் அவரிடம் இன்சொல்லே கூற வேண்டும். அவர்களைத் திருத்தவும், நம் வயப்படுத்தவும், இன்சொல்லே சிறந்த கருவியாகும்.

மனதில் வஞ்சகம், அழுக்காறு முதலிய மாசுடையவர் கள் கூறும் இனிய சொற்கள் உண்மையான இன்சொல்லாக மாட்டா. மனதில், மாசு இல்லாது கூறும் சொற்களே இன் சொற்களாம். மனத்தூய்மையைக் கொண்டே இன்சொல் என்று உறுதிகொள்ள முடியும்.

எனவே, மனத்தூய்மையுடன் வாழ்ந்து, இறைவன் திருவருளால் இன்சொல்லைக்கூறப் பயின்று, நாம் அனைவரும், இம்மை யின்பத்தையும் அடைந்து நற்கதி பெறுவோமாக.

சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு
மிம்மையு மின்பந் தரும். —குறள்.

## 3. இராமோபதேசம்

பரத கண்டத்தில், பண்டைக்காலந் தொட்டு எல்லா வகைச் சிறப்பும் பொருந்தி விளங்குவது அயோத்திமா நகரம். அந்நகரத்தை மதுரமுடைய செந்தமிழ்ப்புலவரும், வடமொழிப் புலவரும் வாயாரப் புகழ்ந்துள்ளனர். எல்லா வுலகத்தாரும் தவஞ்செய்து செல்லத்தக்கதாகிய மோக்ஷ வுலகத்திலேயுள்ளவர்களுங்கூட அயோத்தியில் வந்து வசிப்

பதற்கு விரும்புவார்களென்றால் அதன் பெருமையை அளக்க வல்லார் யாவர்?

செவ்விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளிற்
சீரிய கூரிய தீஞ்சொல்
வவ்விய கவிஞ ரனைவரும் வடநூன்
முனிவரும் புகழ்ந்தது வரம்பில்
எவ்வுல கத்தோர் யாவருந் தவஞ்செய்
தேறுவா றுதரிக் கின்ற
அவ்வுல கத்தோ ரிழிவதற் கருத்தி
புரிகின்ற தயோத்திமா நகரம்.

—இராமாயணம்.

இத்தகைய அயோத்திமா நகரத்தை இரவிகுலதிலகராகிய இராமர் இராவண சங்காரத்திற்குப்பின் பன்னீராயிரமாண்டு அறநெறி இதுவே என்று உலகினருக்கு நடத்திக் காட்டி அரசாண்டனர். அவ்வாறு ஆட்சிபுரிந்த காலத்து, ஒரு நாள் நகரவாசிகளும், கிராமவாசிகளும் இராமரிடம் ஞானோபதேசம் பெறவேண்டுமென்று விழைந்து, இராமபிரானுடைய சபாமண்டபத்தையடைந்து, காவலன்பால் விடைபெற்றுச் சென்று கொலுவீற்றிருக்குந் தாசரதியைத் தொழுதார்கள். அவ்வாறு பக்தியுடன் வணங்கிய மகாஜனங்களை இராகவர் நோக்கி மனமகிழ்ந்து இன்னுரை கூறி, எல்லோருமாகத் திரண்டுவந்த காரணம் யாதென வினவினர். மகாஜனங்கள், "தருமத்திற் சிறந்த தயாளுவே! விடய சுகங்களில் பற்றுடைய எங்கள் மனமானது, நிரதிசயானந்த நிமலவாழ்வில் அழுந்துமாறு மெய்ஞ்ஞானோபதேசம் புரிய வேண்டு"மென்று விண்ணப்பித்தனர்.

ஜனங்களது நல்லுரையைக்கேட்ட தசரத நந்தனர் புன்னகை புரிந்து, "சாதுமகாஜனங்களே! எப்போதும் நீங்கள் உபதேசிக்கப்படுகிறீர்கள். ஒவ்வொரு இரவிலும், ஒவ்வொரு யாமத்திலும், என் தூதுவர்களைக் கொண்டு உபதேசிக்கிறேன். நீங்கள் யாவரும் இன்றிரவில் எனது தூதுவர் கூறும் வார்த்தைகளை ஞாபகத்துடன் கேட்டு, நன்றாகச் சிந்தித்து, பின்னர் உங்கள் மனதில் தோன்றுவதை நாளைக் காலை வந்து நம்மிடம் தெரிவியுங்கள்" என்றார். அவ்வண்

ணமே செய்கிருேமென்று அவர்கள் இரகுநாயகரைத் தொழுது தத்தம் இருக்கைக்குச் சென்ருர்கள்.

இரவு வந்தவுடனே தூதர்களின் வார்த்தைகளைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள். அச்சமயம் இராம தூதர்கள், இரவு பதினைன்றேகால் நாழிகைக்குத் தீவட்டிகள், ஆயுதங்கள், தடிகள் இவற்றை ஏந்திக்கொண்டு, வாகனங்கள் மீதூர்ந்து, யானைகள்மேல் துந்துபி முதலிய வாத்தியங்கள் முழங்க, வீதிகள் தோறுஞ் சென்று,

"நகரவாசிகளே! கிராமவாசிகளே! நீங்கள் எல்லோரும் மோகத்தால் ஏன் வீணுகத் தூங்குகிறீர்கள்? இந்த நித்திரை சரியல்ல. எப்பொழுது அனர்த்தம் விளையுமோ தெரியவில்லை. நீங்களனைவரும் மனதைத் திடப்படுத்திக் கொள்ளுங்கள். இந்த அயோத்தியா பட்டினத்திற்கு ஒன்பது வாயில்கள் இருக்கின்றன. அவைகளில் ஒன்று இலகுவாயிருக்கிறது. இந்த இராமராஜ்யத்தில் பயமில்லை. ஆதலால் அந்த வாயில்களுக்குக் காவலாளிகளில்லை. தவிர, கதவுகளுக்குத் தாழ்ப்பாளுமில்லை. கருத்த நிறமுள்ள ஒரு பெரிய திருடன் தென்திசையிலிருக்கிருன் என்று கேள்வி. அவனை ஒருவரும் பார்த்ததில்லை. அவனுடைய வேறு தூதர்கள் மாறுவேடம் பூண்டு இந்நகரத்தின்கண் வந்து உலாவுகிருர்கள். அவர்களை நாங்களும் பார்த்ததில்லை. அவர்கள் வேறு தூதனைக் கண்டால் அந்த நிமிஷத்தில் எங்கும் பேதத்தைச் செய்து கலகஞ் செய்கிறதாகக் கேள்விப்படுகிருேம். இவ்விதம் அநேக தூதர்கள் இவ்விடஞ் சஞ்சரிக்கிருர்கள்.

"இந்த அயோத்தியாதிபதியாகிய இரகுவீரர் நெடுங்காலம் வாழ்ந்திருக்கட்டும். அப்பொழுது நமக்கு யாதும் பயமில்லை. அந்த இரகுபதியினுடைய ஆற்றலை அறிந்தவன் யாவன்? ஞானகரரும், ஆத்மா ராமரும், பிரபுவுமாகிய இரகுநாதரை இத்தூதர்களால் என்செய்ய முடியும்? பலமற்றவர்களாகிய உங்களுக்கு அத்தூதர்களிடத்தில் எப்போதும் பயமுண்டு. உங்கள் மத்தியில் எக்காலத்தும் ஒரு பெருங் காற்று வீசிக்கொண்டிருக்கிறது. அதற்குள் அகப்பட்டு நீங்கள் சுழன்று கொண்டிருக்கிறீர்கள். பலம்

குறைந்த நீங்கள் இரவில் ஏன் தூங்கிவிடுகிறீர்கள்? அந்தத் தூதர்கள் உங்களைத் துன்மார்க்கர்களாக்கி தங்கள் தலைவனாகிய திருடனை இங்கு வரவழைக்கிறார்கள். அந்தச் சமயத்தைத் தெரிந்து கொள்ளமுடியவில்லை. ஆதலால் தூங்குவது நலமன்று; நித்திரையைவிட்டு எழுந்திருங்கள், எழுந்திருங்கள். இந்நகரத்தில் இரவிலும் பகலிலும் விழிப்புடனிருந்து, அருகே எப்போதும் கூர்மையான கத்தியை வைத்திருக்க வேண்டும். சரீரத்தில் அழியாத கவசங்களை யணியவேண்டும். தைரியத்துடன் பயமில்லாம லிருக்கவேண்டும். ஜனங்களே! இந்த அயோத்தியா புரியில் எவன் எப்போதும் தூங்காமல் விழித்துக் கொண்டிருக்கிறானோ அவனுக்குத் திருடனிடம் எப்போதும் பயமில்லை. எங்களுடைய வாய் மொழிகளை எக்காலத்தும் மறவாதிருங்கள். ஜனங்களே! சாவதானம்! சாவதானம்!! சாவதானம்!!!" என்று இவ்விதம் அந்த இராம தூதர்கள் உரக்கக் கூறி துந்துபி முதலிய மனோரம்மியமான வாத்தியங்களை முழக்கினார்கள். அவர்கள் இரவில் மூன்று முறை இப் பொன்மொழிகளைக் கூறிக் கொண்டு நகரமெங்கும் சஞ்சரித்தார்கள்.

இவ்விதமான நற்போதனையைக் கேட்ட மாந்தர்கள் யாவரும் அந்த விஷயங்களின் பொருள்களை, கூர்த்தமதியால் ஆராய்ந்து ஞானத்தை யடைந்தார்கள். பிறகு காலையில் எல்லோரு மெழுந்து காலைக்கடன்களை முடித்துக் கொண்டு அளவு கடந்த மகிழ்ச்சியுடன் சபாமண்டப மெய்தி, இராமபிரானை வணங்கி, "ஏ சீதாபதீ! தங்களுடைய தூதர்களின் சொற்களை எப்போதும் நாங்கள் கேட்கிறோம். ஆனால், அதன் பொருள்களை விசாரியாமலிருந்தோம். நேற்றிரவு தங்கள் தூதர்களுரைத்தவைகளைத் தங்களாணைப்படி எங்கள் அறிவைக் கொண்டு ஆராய்ந்து தெளிந்தோம். அஞ்ஞானம் அகன்றது. ஞானம் உதித்தது. ஆனந்தம் பெருகியது. இராமச்சந்திரா! இப்போது தாங்கள் உபதேசிக்க வேண்டுமென்பதில்லை," என்று புகன்றனர்.

இவ்வாறு அவர்கள் கூறியதைக் கேட்ட இராமபிரான் புன்முறுவலுடன் ஜனங்களை நோக்கி, "எவ்வாறு உங்களுக்கு

ஞானமுண்டாயிற்று? நீங்கள் கவனத்துடன் கேட்ட விஷயங்கள் யாவை? எவ்விதம் ஆலோசனை செய்தீர்கள்? அந்த விவரத்தை முறையாகச் சொல்லுங்கள்" என்று வினவினர்.

ஜனங்கள், "கோதண்டபாணீ! நாங்களடைந்த ஞானத்தைக் கூறுகிறோம். செவிமடுத்தருள்வீர். மோகம் என்பதே இரவு. தூக்கம் என்பதே மயக்கம். இந்த மயக்கம் சரியல்ல. அனர்த்தம் என்பது மரணம். இந்த அயோத்தியா பட்டினமே சரீரம். இதன் ஒன்பது வாயில்களே சரீரத்தின் நவத்துவாரங்கள். அத்துவாரங்களுக்கு இமைகளும் உதடுகளுமே கதவுகள். பிராணன்களென்கிற இராஜ தூதர்கள் சஞ்சரிக்கிறார்கள். பரமாத்மாவே அரசன். ஜீவனும் இந்திரிய தேவதைகளும் தேகமாகிய பட்டினத்தில் வசிக்கும் ஜனங்கள். காலம் என்பது பெரிய திருடன். ஆதியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்கிற தாபத்திரயங்கள் முதலிய தோஷங்கள்தான் காலனுக்குச் சேவகர்கள். இவைகள் வியாதி என்கிற மாறுவேடத்தோடு தேகமாகிய பட்டினத்தில் உலாவுகின்றன. இவ்விடத்தில் சத்சங்கமென்கிற பலமற்ற ஜீவன்களுக்கு அந்த நோய்களால் பயமேற்படுகின்றது. பெருங்காற்றென்பது பேராசை. மோகத்தில் அழுந்தி, மயக்கத்தை யடைந்து, பேராசையால் சுழல ஆரம்பித்தால் அந்தக் காலனுடைய தூதர்கள் தங்கள்தலைவனாகிய காலனை வரவழைக்கிறார்கள். மரணமடையுங்காலம் எப்போதென்பதைத் தெரிந்துகொள்ள முடியவில்லை. ஆகையால் மயக்கத்தையடைவது சரியல்ல.

ஞானமாகிற கத்தி, வைராக்கியமாகிற முனையோடு கூடியது. சத்திய மென்பதே கவசம். உறுதியான பக்தியோடிருத்தலே தைரியம். பரமாத்வை யறிந்தவனே விழித்துக் கொண்டிருக்கிறவனாவான். இவைகளுள்ளவர்களுக்கு எப்போதும் பயமில்லை. ஞானத்தையடைவதுதான் சாவதானம். வாத்தியவொலிகள் அறிவை விளைவிக்கும் சாதுக்களுடைய வசனங்கள். அந்த வசனங்களை எப்போதும் அறிவைக் கொண்டு ஆராய்ந்து தெளிதல் வேண்டும். தங்கள்

சந்நிதியில் வசிப்பதுதான் மோகமொழிந்த விடியற் காலம். நீர்தான் பரமாத்மா. இந்தச் சபைதான் வாசஞ் செய்யவேண்டிய இடம். உமது முன்னாலே நிற்கும் நாங்கள் எல்லோரும் மோக்ஷபதவிக்கு வந்தவர்கள். இப்போது நாங்கள் தங்களைக் கேட்க வேண்டியது யாது? தாங்கள் உப தேசம் செய்ய வேண்டியதுதான் யாது? தங்கள் திருநாமத்தைச் சொன்ன மாத்திரத்தில் மனிதர்கள் மோக்ஷத்தையடைகிறார்கள். இதில் ஐயமில்லை" என்று கூறினார்கள்.

இவ்விதமுரைத்த ஜனங்களின் வார்த்தைகளைக் கேட்டு, பிரபுவாகிய ஸ்ரீராமர் மிகவும்மகிழ்ந்து, "ஏ மகாஜனங்களே! புத்தியைச் செலுத்தி நன்றாகத் தெரிந்து கொண்டீர்கள். நீங்கள் எப்போதும் இன்பக்கடலில் மூழ்கியிருப்பீர்களாக" என்று அருளுரை மொழிந்தனர்.

## 4. திருமகள் உறைவிடம்

மெய்யன்புடைய சகோதர, சகோதரிகாள்! இலக்குமி யாரிடம் உறைகிறாள், யாரிடம் இருப்பதில்லை என்பதை அடியிற் கண்ட இலக்குமியின் மணிமொழிகளாலுணர்ந்து, விலக்கத் தக்கவற்றை விலக்கி, கொள்ளத்தக்கவற்றைக் கொண்டு, இலக்குமி கடாக்ஷம் பெற்று இனிது வாழுமாறு வேண்டுகிறேன்.

கண்ணபிரானுடைய திருத்தேவியாகிய உருக்குமணிப் பிராட்டி நாராயணருடைய திருமார்பிலிருந்து திகழ்பவளும், செந்தாமரையன்ன திருமுகமுள்ளவளும், புண்டரீகப் பொகுட்டில் வீற்றிருப்பவளுமாகிய இலக்குமியைக் கண்டு, ஆச்சரியத்தினால் அழகான கண்கள் மலர்ந்தவளாய், "பதுமாசனீ! நீ எவர்களை அடைகிறாய்? யாரிடத்தில் நிலைபெற்றிருக்கிறாய்? யாரை நீ அடைவதில்லை? உண்மையாக எனக்குச் சொல்வாயாக" என்று வினவினாள். உருக்குமணி தேவியினால் கண்ணன் முன்னிலையில் இவ்வாறு கேட்கப்பட்ட நிறைமதி வதனமுடைய ஸ்ரீதேவியானவள், கருணை கூர்ந்து அன்புடனழைத்து இன்சொல்லாகச் சொல்லலானாள்.

அழகும் தைரியமும் வேலைத் திறமையுமுள்ளவனும், வேலை செய்து கொண்டிருப்பவனும், கோபமில்லாதவனும், தெய்வபக்தியுள்ளவனும், நன்றியுள்ளவனும், ஐம்புலன்களை யடக்கியவனும், சத்துவ குணத்தை யுடையவனுமாகிய மனிதனிடம் நான் நித்யமாக உறைகிறேன்.

தொழில்களைச் செய்யாதவனிடத்திலும், நாஸ்திகனிடத்திலும், ஒழுக்கந் தவறினவனிடத்திலும், குலாசாரந் தவறினவனிடத்திலும், நன்றி கெட்டவனிடத்திலும், கொடுஞ்செய்கை யுள்ளவனிடத்திலும், அடக்கமில்லாதவனிடத்திலும் பெரியோரிடத்தில் பொறாமைப் படுகிறவனிடத்திலும், நான் வசிக்கிறதில்லை. பராக்கிரமும் தேகவன்மையும் மனோதைரியமும் கௌரவமும் குறைந்து, எல்லாவற்றிற்கும் துயரப்பட்டுக்கொண்டும், கோபித்தும், நினைத்ததை நடத்தமாட்டாமலு மிருக்கிற மனிதர்களிடத்தில் நான் தங்கி இருப்பதில்லை. மனத்தில் மேன்மேல் பயனைக் கருதாதவர்களும், இயற்கையிலேயே மனச் சோர்வை அடைந்தவர்களும், அற்பத்தில் சந்தோஷமடையுந் தன்மை யுள்ளவர்களுமாகிய மனிதர்களிடம் நான் ஒருபோதும் நன்றாயிருப்பதில்லை. தருமத்தை அனுஷ்டிப்பவரும், தருமந் தெரிந்தவரும், பெரியாரை அடுப்பவரும், அடக்கமுடையவரும், பிறர் மனத்தை அறிகிறவரும், காலத்தைச் சிறிதும் வீணாக்காதவரும், தானத்திலும் சுத்தத்திலும் ஊக்கமுள்ளவருப், புலன்களை யடக்குவதையும் தியானஞ் செய்வதையும் தத்துவ ஞானத்தையும் விரும்புகிறவரும், பசுக்களிடத்திலும் வேதந் தெரிந்தவரிடத்திலும் அன்புடையவருமான மகாத்மாக்களிடம் எப்போதும் நான் வசிக்கிறேன்.

அழகும் அடக்கமு முடையவரும், தேவதைகளிடத்தி லும் பிரமஞானிகளிடத்திலும் பக்தியுள்ளவரும், வீடுகளையும், பாத்திரங்களையும் சுத்தமாக வைத்துக்கொண்டு, பசுக்களையும், தான்யங்களையும் ஊக்கத்துடன் பார்ப்பவருமாகிய பெண்களிடத்தில், எப்போதும் நான் வசிக்கிறேன்.

தருமசிந்தை யுடையவரும், தம் தருமத்தை அனுஷ்டிப்பவரும், அடக்கத்துடன் பெரியோர்களுக்குப் பணிவிடை செய்வதில் ஊக்கமுள்ளவரும், தூயமனமும் பொறுமையும் சாமர்த்தியமும் உள்ளவருமான ஆடவர்களிடத்தும்; பொறுமையும், சத்தியமும், அடக்கமும், நல்ல இயற்கையும், மனம் வாக்கு காயங்களின் ஒற்றுமையும் உள்ளவர்களும், தேவதா நம்பிக்கை உடையவர்களுமான பெண்களிடத்திலும் வசிக்கிறேன்.

பண்டங்களைக் காப்பாற்ருதவளும், ஆராய்ந்து செய்யாதவளும், எப்போதும் கணவனுக்கு விரோதமாகப் பேசுகிறவளும், பிறர் வீட்டில் நோக்கமுள்ளவளும், நாணமற்றவளுமான பெண்ணை விட்டு விடுகிறேன். ஆசையுள்ளவளும், காரியத்தில் திறமையில்லாதவளும், கருவமுள்ளவளும், சுத்தமில்லாதவளும், கலகத்தில் மனமுள்ளவளும், தூக்கம் அதிகரிப்பவளும், எப்போதும் படுத்திருப்பவளுமான பெண்ணை விட்டுவிடுகிறேன்.

எப்போதும் உண்மையுள்ளவர்களும், காட்சிக்கினியவர்களும், அழகும் குணங்களுமுள்ளவர்களும், கற்புள்ளவர்களும், மங்கள ஆசாரங்களுள்ளவர்களும், அலங்காரமுள்ளவர்களுமான மங்கையர்களிடம் வசிக்கிறேன்.

வாகனங்களிடத்தும், கன்னிகைகளிடத்தும், ஆபரணங்களிடத்தும், மலர்ந்த தாமரைக் கொடிகளிடத்தும், யாகங்களிடத்தும், மழைபொழியும் மேகங்களிடத்தும், சரத்காலத்திய நட்சத்திர வரிசைகளிடத்தும், யானைகளிடத்தும், மாட்டுக் கொட்டில்களிடத்தும், அரசர்களின் சிம்மாசனங்களிடத்தும், மலர்ந்த கரு நெய்தல்களும் தாமரைகளும் நிறைந்த தடாகங்களிடத்தும், அன்னங்களும் அன்றில்களும் கூவுதலினுல் விளங்குகின்றவையும் கரையிலுள்ள மரங்கள் நீரில் தழைத்திருப்பதனுல் அழகுசெய்பவையும், முனிவர்களாலும் சித்தர்களாலும் அந்தணர்களாலும் அடையப்பட்டவையும், எக்காலத்தும் நீர் நிரம்பியவையும், மதகரிகளாலும் மடங்கல்களாலும் கலக்கப்பட்ட நீருள்ளவையுமான நதிகளிடத்தும் நான் வசிக்கிறேன்.

மதயானைகளிடத்தும், சிறந்த இடபங்களிடத்தும், அரசனிடத்தும், சாதுக்களிடத்தும் நான் வசிக்கிறேன். எந்த வீடுகளிலுள்ள ஜனங்கள் அக்னி ஹோத்ரம் செய்துகொண்டும், பசுக்களையும் மறையுணர்ந்தாரையும் தேவதைகளையும் பூசித்துக் கொண்டு பூக்களினால் அருச்சனை செய்து கொண்டுமிருக்கிறார்களோ, அந்த வீடுகளில் நித்யவாசம் புரிகிறேன். எக்காலமும் வேதாத்யயனம் தவறாத மறையவரிடத்தும், எப்போதும் தம் கடமையில் ஊக்கமுள்ள மன்னரிடத்தும், பயிர் செய்வதில் ஊக்கமுள்ள வைசியரிடத்தும், வேளாண்மையிற் சிறந்த வேளாளர்களிடத்தும் நான் வசிக்கிறேன். நாராயணரிடத்தில் மட்டும் முழு அன்புடன் வேறெங்கும் மனஞ் செலுத்தாமல் சரீரமெடுத்து வசிக்கிறேன். ஏனெனில் பெரிய தருமமும், யாரும் விரும்பத்தக்க தகுதியும், சாதுக்களிடத்திலன்பும் அவரிடத்திலிருக்கின்றன. அரசியே! மற்றவிடங்களில் நான் இவ்வாறு சரீரத்துடன் இருப்பதில்லை. இவ்வாறு என்னால் பேசவும் முடியாது. எவனிடத்தில் என் கருத்தினால் நான் இருக்கிறேனோ அவன் புண்ணியம்*, புகழ், பொருள், இன்பம் எல்லாவற்றிலும் மேலாகிறான்" என்றனள்.

---

* இதனை கும்பகோணம் பாஷாபாரததுரந்தரர்பிரம்மஸ்ரீ ம. வீ. இராமானுஜாச்சாரியார் அவர்களால் மொழி பெயர்த்து வெளியிடப்பட்ட தமிழ் மகாபாரதத்துள் விரிவாகக் காண்க.

## 5. யார் உறவு?

சிருஞ் செல்வமும் பொருந்தி வாழ்கின்ற காலத்து சுகங்களை அனுபவித்திருந்து, செல்வந்தீர்ந்து வறுமையுற்ற காலத்து நம்மைவிட்டு நீங்குபவர் உறவாகமாட்டார். வறுமையால் மெலிந்தகாலத்தும் நம்முடன் இருந்து துக்கங்களை அனுபவிப்பவரே சிறந்த உறவு. அவர்களே அன்புடையவர்கள். ஒருகுளத்தில் நீர் நிறைந்திருக்கிறவரை நீர்ப்பறவைகள் அக்குளத்தினிடம் சிநேகமாக உறைகின்றன. நீர் வற்றிவிட்டவுடனே அக்குளத்தை விட்டு அகன்றுவிடுகின்றன. அதுபோன்ற சுபாவமுடையார் உறவல்லர். அக்குளத்திலுள்ள ஆம்பலும் கொட்டியும் (ஓர்வகைக் கொடி) நெய்தலும் நீர்வற்றிய பிறகும் தாம் அக்குளத்தை விட்டகலாமல் உலர்கின்றன. அதுபோன்ற சுபாவமுடையவரே உறவாவர்.

அற்றகுளத்தி னறுநீர்ப் பறவை போல்
உற்றுழித் தீர்வா ருறவல்லர்—அக்குளத்திற்
கொட்டியு மாம்பலு நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவா ருறவு.

ஔவைப் பிராட்டியார்

இடர் வந்த காலத்தில்தான் சிநேகிதர் பந்துக்கள் முதலியவர்களுடைய அன்பை திட்டமாக அளந்தறியலாம். நமக்கு வரும் இடர்தான், சினேகிதரையும் உறவின் முறையாரையும் அளக்கும் அளவுகோல். ஆதலால் அக்கேட்டிலும் ஒரு பயன் உளது என்றுர் பொய்யில்புலவர்.

கேட்டிலு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல்.

இது சம்பந்தமாக தருமபுத்திரர் வினவ, பீஷ்மர் கூறிய உபாக்கியானத்தை எடுத்துக் காட்டுவோம்.

காசிராஜனுடைய தேயத்தில் ஒரு வேடன் விடமுள்ள பாணத்தை எடுத்துக்கொண்டு சேரியிலிருந்து புறப்பட்டு மானைத்தேடிப் புறப்பட்டான். அங்கு ஒரு பெரிய வனத்தில்,

மான்கள் அருகிலிருக்கக் கண்டு மாமிசத்தில் இச்சையுடைய அந்த வேடன் ஒரு மானையடிக்கக் குறிவைத்து கூரிய பாணத்தை விடுவித்தான். தடுக்க முடியாத அந்தப் பாணம் குறிதவறினதால் அக்கானகத்துள்ள ஒரு பெரிய தழைத்த மரத்தின் மீது பாய்ந்தது. கொடிய விடந்தடவிய கணையினுல் மிக்க வேகத்துடன் குத்தப்பட்ட அம்மரம், காய்களும் இலைகளும் உதிர்ந்து உலர்ந்து போயிற்று. வானளாவி வளர்ந்தோங்கியிருந்த அத்தருவானது அவ்வாறு உலர்ந்தபோது, அதன் பொந்துகளில் வெகுநாட்களாக வசித்திருந்த ஒரு கிளி, அம்மரத்தின் மேலுள்ள பற்றினுல் தன்னிருப்பிடத்தை விடவில்லை. நன்றியறிவுள்ளதும் தருமத்தில் மனமுள்ளதுமாகிய அந்தக் கிளி வெளியிற் சஞ்சரியாமலும் இரையெடாமலும் களைப்புற்றும் குரல் தழுதழுத்தும் மரத்துடன் கூடவே உலர்ந்தது. மரஞ் செழிப்புற்றிருந்த போது அதனிடஞ் சுகித்திருந்தது போல் அது உலர்ந்து துன்புறும்போதும் அதனை விட்டுப் பிரியாமல் தானுந்துன்புற்றிருந்தது. அந்தக் கிளியின் உயர்ந்த குணத்தை நன்கு நோக்குங்கள்.

சிறந்த குணமுள்ளதும், மேலான சுபாவமுள்ளதும், மனிதர்க்கு மேற்பட்ட நல்லொழுக்கமுடையதுமான அக் கிளி, அம்மரத்தைப் போலவே சுகத்தையும் துக்கத்தையும் அனுபவித்துக் கொண்டிருப்பதைக் கண்ட தேவேந்திரன் திகைப்படைந்தனன். "திரியக் ஜாதிகளுக்கு இல்லாத கருணையை இந்தப்பட்சியடைந்திருப்பது எவ்வகை?" என்றுநினைத்தான். பிறகு "இதில் ஆச்சரியப்படவேண்டியதில்லை. எல்லாப் பிராணிகளிலும், குணம், குற்றம் எல்லாம் காணப்படுகின்றன" என்றஎண்ணமும் இந்திரனுக்குஉண்டாயிற்று. இங்ஙனமெண்ணிய இந்திரன் மானிடவுருவெடுத்து ஓர் அந்தணன் வடிவமாகப் பூமியில் இறங்கி, அந்தப் பட்சியைப் பார்த்து "ஓ பட்சிகளிற் சிறந்த கிளியே! உன் தாயாகிய * தாக்ஷேயி உன்னுல் நல்ல சந்ததியுள்ளவளாக ஆகிருள். கிளியாகிய உன்னை நான் கேட்கிறேன். உலர்ந்துபோன இந்த மரத்தை

* தக்ஷன் மகள்—இவளால் கிளி வமிசம் உண்டாயிற்று

ஏன் விடாமலிருக்கிருய்?'' என்று கேட்டான். இமையவர் தலைவனும் இந்திரனுல் இவ்வாறு கேட்கப்பட்ட கிளியானது, அவனுக்குத் தலைவணங்கி நமஸ்காரம் புரிந்து, ''தேவ ராஜாவே! உனக்கு நல்வரவு; நான் தவத்தினுல் உன்னைத் தெரிந்து கொண்டேன்'' என்று சொல்லிற்று. தேவேந்திரன் ''நன்று நன்று'' என்று கூறி, 'என்ன அறிவு!' என்று மனத் திற் கொண்டாடினுன். இவ்வாறு சிறந்த செய்கையுள்ளதும் தருமத்தையே முக்கியமாகக் கொண்டதுமாகிய அந்தக் கிளியைப் பார்த்து, இந்திரன் தான் கேட்பது பாபமென்று தெரிந்திருந்தும் கேட்கத் தொடங்கினுன்.

''அறிவிற் சிறந்த பறவையே! இலைகளும் காய்கனிகளும் இன்றி உலர்ந்து பறவைகளுக்கு ஆதரவற்ற இம்மரத்தை ஏன் காக்கிருய்? இது பெரிய வனமாயிருக்கிறதே; இலைகளி னுல் மூடப்பட்ட பொந்துகளும் சஞ்சரிக்கப் போதுமான இடமுமுள்ள இன்னும் அழகான மரங்கள் அனேகம் இப் பெரிய வனத்திலிருக்கையில், முதிர்ச்சியடைந்து சக்தியற்று இரசம் வற்றி ஒளிகுன்றிக் கெட்டுப்போன இந்நிலையற்ற மரத்தை, புத்தியினுல் ஆராய்ந்து பார்த்து விட்டுவிடு'' என்ருன்.

அமரேசனுடைய இந்த வார்த்தையைக் கேட்டுத் தர் மாத்மாவான அந்தக்கிளி, மிகவும் நீண்ட பெருமூச்செறிந்து துயரத்துடன் பின்வருமாறு சொல்லத் தொடங்கிற்று: ''மகபதியே! இந்திராணியின்கணவனே! யாவராலும் வெல்ல முடியாத தேவர்களிருக்கும் பொன்னுலகத்தில் வசிக்கும் நீ, நான் கூறுவதைத் தெரிந்துகொள். அனேக நற்குணங்கள் பொருந்திய இம்மரத்தில் நான் பிறந்தேன்; இளமைப் பரு வத்தில் நன்ருகப் பாதுகாக்கப்பட்டேன்; பகைவர்களாலும் பீடிக்கப்படாமலிருந்தேன்; மழை காற்று பனி வெய்யில் முதலிய துன்பங்களால் வருந்தாது இத்தருவில் சுகித்திருந் தேன். வலாரியே! தயையும் பக்தியுமுள்ளவனுக வேறு இடம் செல்லாமலிருக்கும் என் விடயத்தில் அனுக்கிரகம் வைத்து, என் பிறவியை ஏன் பயன்படாமற் செய்கிருய்? நான் அன்பும் பக்தியுமுள்ளவன்; பாவத்தைப் புரியேன்?

உபகாரிகள் விடயத்தில் தயைசெய்வதுதானே தருமத்திற்கு முக்கியமான இலக்கணம். தயை செய்வதே நல்லோர் களுக்கு எப்போதும் மனத்திருப்தியை உண்டாக்குகிறது. எல்லாத் தேவர்களும் தருமத்திலுள்ள சந்தேகங்களை உன்னிடத்திலேயே கேட்கின்றனர். அதனாலேதான் நீ தேவ சிரேட்டர்களுக்கு அதிபதியாகப் பட்டாபிஷேகம் செய்யப் பட்டிருக்கிறாய்! இந்திரனே, வெகுகாலமாக இருந்த மரத்தை நான்விடும்படி நீ சொல்லத்தகாது. நல்ல நிலைமை யிலிருந்ததை அடுத்துப் பிழைத்தவன் கெட்ட நிலைமைக்கு வந்தவுடன் அதை எப்படி விடலாம்?'' என்றது.

எக்காலமு மிப்பாதப மெனதாமென வைகி
முக்காலமு முதிருங்கனி முசியாது நுகர்ந்தேன்
இக்காலமி தற்கிவ்வண மிடையூறு கலந்தாற்
சுக்காதகல் வதுவோ வுணர்வுடையோர்
மதிதூய்மை

—மகாபாரதம்

இவ்வாறு கூறிய பொருளடங்கியதும் அழகுடையது மாகிய கிளியினது வசனங்களால் மகிழ்வுற்ற மகவான், அதன் நன்றியறிவையும் தயையையும் எண்ணித் திருப்தி யுற்று, தருமம் தெரிந்த அக்கிளியைப் பார்த்து, ''ஒரு வரம் கேள்'' என்று சொன்னான். அன்பர்களே! அக்கிளியானது தன் நன்மையைக் குறித்து வரம் கேட்கவில்லை. அதனுடைய பெருங்குணத்தை உற்று நோக்குங்கள், எப்போதும் பிறர் நோவாமையே பெரிதாகக் கருதிய அந்தக் கிளி, 'ஏ! தேவர் கோமானே! இம்மரமானது நன்றாகச் செழித்துத் தழைத்து ஓங்கவேண்டும்'! என்றது. அப் பறவையினுடைய உறுதி யான பக்தியையும் நிரம்பின நல்லொழுக்கத்தையும் அறிந்து களிப்புற்ற இந்திரன் உடனே அம்மரத்தின்மீது அமிர்தம் பொழிந்தான். அதனால் அத்தரு கனிகளும் இலை களும் தளிர்களும் அழகிய கிளைகளும் உண்டாகித் தழைத் தது. கிளியினுடைய உறுதியான பக்தியால் அம்மரம் முன்னைக் காட்டிலும் மிகவும் நன்றாகச் செழித்தது. நன்றி யறிவு தயை இந்நற்குணங்களின் பயனாகிய அச்செய்கை

யினுல் கிளியும் அத்தருவில் இனிது மகிழ்ந்திருந்து தன் ஆயுள் முடிந்தபிறகு இந்திரலோகத்தை யடைந்தது.

மெய்யன்பர்களே! அந்தக் கிளியானது பட்சியாக இருந்தும் மனிதர்களும் பின்பற்றுவதற்கு அருமையான தருமத்தைக் கடைப்பிடித்தது. அத்தகைய தருமாத்மா வைச் சேர்ந்ததால் அந்த மரமும் சுகத்தையடைந்தது. நல்ல வர்களைச் சேர்ந்தவர்களுக்கு எப்போதும் இன்பமே உண்டா கும். ஆதலால் அக்கிளியின் தன்மையை உடையவர்களே நல்ல உறவினர். அவர்களுடனேயே இணங்க வேண்டும். கொலை புலை களவு முதலிய தீக்குணத்தினின்று நீங்கி, நன்றி யறிவு, சாந்தம், கடவுள்பக்தி முதலிய நற்குணமுடையவரே உறவினர்; மற்றவர் புறவினத்தார் என்ருர் ஸ்ரீமத் இராம லிங்க சுவாமிகள்.

"உயிர்க்கொலையும் புலைப்புசிப்பு முடையவர்க ளெல்லாம்
உறவினத்தா ரல்லரவர் புறவினத்தார்"
—திரு அருட்பா.

## 6. கடன்

உலகத்தில் எல்லோரும் கட்ன்காரர்களே. கடன்படா தவர்கள் ஒருவருங் கிடையாது. கடன் பட்டவர்களுக்கு எப் போதும் நெஞ்சங் கலங்கிய வண்ணமாகவே யிருக்கும். துன்பத்திற் கெல்லாம் பெருந்துன்பம் கடன் பட்டானுடைய துன்பமே. அதனுலன்றே இராவணன் போர்க்களத்தில் இரகுவீரனுழித் தோற்றுப் படையெலாமொழிந்து தனித்து நின்ற காலத்து, "கடன் கொண்டார் நெஞ்சம்போலக் கலங் கினுனிலங்கை வேந்தன்" என்ருர். ஆதலின், கடன் என்பது ஒரு பெரிய துன்பம். எப்போதும் கடன் படப்படாது. ஒரு வேளை கடன் பட்டாலும் அதனைத் தீர்ப்பதற்கு முயலுதல் வேண்டும். இப்போது உலகில் கடன் படாத மக்களே கிடையாது என்றேன். ஒரு சிலருக்கு ஐயமிருக்கலாம். 'எத் தனையோ தனவந்தர்கள் கடனில்லாமல் சுகமே இருக்கிருர் களே?' என்று நினைக்கலாம். சற்று நிதானித்துப் பார்த்தால், அவர்கள் கூடக் கடன்பட்டவர்களே. சுருங்கக் கூறில்

அரசர்கள்கூடக் கடன் பட்டிருக்கிறார்கள். என்ன கடன் பட்டிருக்கிறோம்? யாரிடம் பட்டிருக்கிறோம்? அதை எப்படித் தீர்ப்பது? என்று இப்போது விசாரிக்க வேண்டும்; விசாரித்து உடனே கடனைக் கொடுத்துத் துன்பத்தை நீக்க மிகமிக விரைந்து முயற்சி செய்ய வேண்டும்.

"காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற கண்ணிலாக் குழவிபோலக் கட்டுண்டு இருந்த" நமக்கு இந்த அருமையான சரீரத்தையும், நல்ல மனம் புத்தி முதலிய கரணங்களையும், நன்கு இருப்பதற்கும் உலாவுவதற்கும் இந்த உலகத்தையும், இதன் கண்ணே வாழ்ந்து அனுபவிப்பதற்கு போகத்தையும், ஆண்டவன் கொடுத்தாரல்லவா? முதலாவதாக நமக்கு நன்றாகப் பார்ப்பதற்கு விழிகளைக் கொடுத்திருக்கிறார்; கேட்பதற்குச் செவிகளைக் கொடுத்திருக்கிறார்; பேசுவதற்கு வாக்கையளித்திருக்கிறார்; தொழில் புரிவதற்குக் கரங்களை நல்கியிருக்கிறார்; உலாவுவதற்குக் கால்களைத் தந்திருக்கிறார்; அக் கை கால்கள் வளைந்து நீளவும், மடங்கவும் ஆங்காங்கு கீல்களை அமைத்துக் கொடுத்திருக்கிறார். அவை எப்போதுங் கெட்டுப் போகாமலிருக்க அந்தக் கீல்களில் வழவழப்பான ஓர் பசையை வைத்திருக்கிறார். இவ்வளவுங் கொடுத்ததோடு அமையாது நல்ல அறிவைக் கொடுத்திருக்கிறார். நாம் உண்டு மகிழ இனிய கனிகளையும் காய்களையுங் கொடுத்திருக்கிறார். விடாய்ப் பட்டபோது, பருகி இளைப்பாறத் தெளிந்த தண்ணீரைக் கொடுத்திருக்கிறார். சந்திர சூரியர்களாகிய பெரிய தீபங்களைக் கொடுத்திருக்கிறார். முடிவாக எல்லாம் அவர் கொடுத்த பொருள்களே. இத்தனையும் நாம் அவரிடம் பெற்றிருக்கிறோம். இவ்வளவு பொருள்களை நாம் அவரிடம் பெற்றிருக்கிறபோது நாம் கடன்காரர்கள் என்பதில் என்ன ஆட்சேபனை? ஆண்டவனிடத்தில் நாம் எல்லோரும் கடன்பட்டவர்களே.

இப்போது கடன்காரர்களாகிய நாம் இந்த கடனைத் தீர்ப்பதற்குரிய வழியைத் தேடவேண்டும். நாம் அந்த ஆண்டவனுக்குச் செல்வத்தைக் கொடுத்துக் கடனை நீக்கலாமா? அவர் செல்வத்தை விரும்பாதவர்; வேண்டுதல்

வேண்டாமை யிலாதவர்; மனம் மொழி மெய்களால் அந்த ஆண்டவனை வழிபடுவதுதான் நம் கடனைத் தீர்க்கும் வழியாகும். அத் தனிப் பெருந்தலைவனை வாயார வாழ்த்த வேண்டும். நெஞ்சார நினைக்கவேண்டும். தலையாரக் கும்பிட வேண்டும்.

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனை
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்தவா வினையே னெடுங் காலமே"

என்று தமிழ்வேதம் முரசறைகிறது. காலையில் எழுந்தவுடனே ஆண்டவனை வழிபடவேண்டும். இந்த வழக்கத்தை நம் பெரியோர்கள் தொன்று தொட்டு, நெடுநாட்களாக அனுசரித்து வந்திருக்கிறார்கள். அப்படியே மாலையிலும், கோயில் வழிபாடு செய்யவேண்டும். இந்தக் காலை மாலை வணக்கத்தை வடமொழியில் "**சந்தியா வந்தனம்**" என்பர். நம் செந்தமிழில் "**காலைக் கடன்**" என்று கூறுவர். இந்தத் தமிழ்ப் பதமாகிய காலைக் கடன் என்ற சொல்லில் எவ்வளவு பொருளடங்கி யிருக்கிற தென்பதை அன்பர்கள் உற்று நோக்குக; அந்தப் பதத்தை நன்றாகச் சிந்தித்துப் பாருங்கள். காலையில் ஒவ்வொருவரும் அவசியம் செய்யவேண்டிய கடன். நம் முன்னோர்கள் காலையில் எழுந்தவுடன் இந்த ஈசுவர வழிபாடாகிய கடனை ஒவ்வொரு நாளும் தவறாது செய்துவந்தார்கள். அந்தக் காலைக் கடனாகிய தெய்வ வழிபாடு செய்யாமுன் வேறு வேலை செய்யக்கூடாது. அதனை நம் அருணகிரியாரது தமிழ்மறையும் வற்புறுத்துமாறு காண்க.

"காலையிலெழுந்து னுமமெ மொழிந்து
காதலுமைமைந்த எனவோதிக்
காலமுமுணர்ந்து ஞானவொளிகண்கள்
காண அருளென்று பெறுவேனோ'

—(மாலைதனில்) திருப்புகழ்.

ஆதலால் நாம் ஒவ்வொருவரும் இந்தக் கடனைத் தீர்க்க வேண்டும். கடனைக் கொடுக்கிறபோது, இது முன்னாலே பட்ட கடன், 'இது ஒரு சனியன்' என்று வயிறெரிந்து கொடுக்கலாமா? அங்ஙனம் கொடுப்பவனை உத்தமனென்று

சொல்லமாட்டார்கள். நம்முடைய ஆபத்துக்குக் கொடுத்தானே? என்று சந்தோஷத்தோடும் அன்போடும் முக மலர்ச்சியோடும் கடனைத் தீர்ப்பவனே உத்தமன். அது போல ஆண்டவனுக்கு நம்முடைய இந்தக்கடனாகிய தெய்வ வழிபாட்டை அன்போடும் ஆர்வத்தோடும் செலுத்த வேண்டும். அந்தக் கருணையங் கடவுளை வணங்குவதற்கு "என்ன மாதவஞ் செய்ததோ எனது நற்றலையே" என்று தலையால் வணங்கியும், நாவால் அவரது திருமந்திரங்களை வழுத்தியும், கரங்களால் நறுமலர்களைக்கொண்டு அருச்சனை புரிந்தும், நம்முடைய கடனை அன்போடு செலுத்த வேண்டும். மெய்யன்பர்களே! உற்று நோக்குங்கள். உலகத்தில் ஒருவனிடம் பட்ட கடனைக் கொடுக்காதவொருவன் தண்டனைக்கு உட்படுகிறானல்லவா? அதுபோல இந்தத் தெய்வ வழிபாடாகிய கடனைச் செய்யாவிட்டால் நாம் தண்டனைக்கு ஆளாவோம்? கடன்காரர்களாகிய நம்மைப் பற்றப் பாசக் கயிறு (warrant) கொண்டு ஒருவன் (இயமன்) வருகிறான். அங்கே நம்மையடைக்கிற ஒரு சிறை (Jail) உண்டு; அது தான் நரகம். அங்கே நாம் கடனைக் கொடுக்காமல் மோசம் புரிந்த தீவினைகளையெல்லாம் ஒருவன் கணக்கு எழுதிவைக்கிறான். அவன் பெயர் சித்திரகுப்தன். ஆதலால் அந்த ஆபத்து (Warrant) வருவதற்கு முந்தியே கடனைத் தீர்ப்பதற்கு முந்தவேண்டும். கடன்பட்டானுக்குத் தூக்கம் பிடிக்காதல்லவா? பெருங்கடன்பட்ட நாம் உண்டு உடுத்து உறங்கி அவமே நாள் கழிக்கலாமா? சொற்பதங்கடந்த சோதியாம் ஆதிநாயகனை உன்னி உன்னி, "என்பு நைந்துருகி நெக்கு நெக்கு ஏங்கி, அன்பெனும்ஆறு கரையதுபுரள, நன்புலன் ஒன்றி நாத என்றரற்றி, உரைதடுமாறி உரோமஞ் சிலிர்ப்ப, கரமலர் மொட்டித்து இருதயம் மலர கண்களிசூர நுண்துளிஅரும்ப சாயாஅன்பினை" நாள்தோறும் வளர்த்துத் தாயேயனைய தயாபரனை வழிபட்டு நம் கடனைக் கழிப்போமாக.

ஒரு புல்லின் நுனியிலுள்ள சிறுதுளி நீரில் அதன் அருகிலுள்ள பெரிய மாளிகை தெரிவதுபோல், இதுகாறும் கூறி வந்த இவ்வளவு பொருளையும் அடக்கி நம்மனோர் விரித்துப்

பொருள்கொள்வதற்கு ஏதுவாக சுருக்கமாக எவ்வளவு அழ காக நம்முடைய தமிழ்வேதம் முழங்குகிறது.

"என் கடன் பணி செய்து கிடப்பதே"

## 7. கடவுள் ஏன் படைத்தார்?

**நல்லநாதர்:** வா; தம்பி! நலந்தானே! இப்படி இரு.

**மதிவாணன்:** ஐயா! வணக்கம்; எல்லோரும் நலந் தான். தங்களைக் காணும் பேறு இன்று எனக்குக் கிடைத் தது. பெருமகிழ்ச்சி. இன்று தைமாதப் பிறப்பல்லவா! எங்கும் மகிழ்ச்சி பொங்குகின்றது. புதிய தானியங்கள் உண வாகி உயிர்கள் எல்லாம் உண்டு உவகை யுறுகின்றன. எல் லாரும் புதுமையைத் தானே விரும்புகின்றார்கள். புதிய ஆடையென்றால் ஒரு ஆனந்தம். புதிய மனைவியென்றால் அளவற்ற மகிழ்ச்சி. புதிய ஊர்களையும் புதிய நதி மலைகளை யும் காணுகின்றபோது மகிழ்ச்சி. நல்ல நாளிலே நல்லார் களைக் காண்பது நல்லது.

**நல்ல:** தம்பி! நீ நல்ல பிள்ளை. அழகாகப் பேசுகின்றாய். கடவுளைப்பற்றிக் கூறவந்த மணிவாசகர், "அவர் பழமைக் கும் பழமையானவர்; புதுமைக்கும் புதுமையானவர்" என் கின்றார்.

"முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே!
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும்அப் பெற்றியனே!"

—திருவாசகம்.

புதுமையான நாளிலே புதுமையான பொருள்களை நுகர் கின்ற நாம் புதுமையான பரம்பொருளை நினைந்து வழிபட வேண்டும்.

**மதி:** ஐயா! ஒரு ஐயம் நெடுங்காலமாக இருந்து என் நெஞ்சை வருத்துகின்றது. பலரையுங் கேட்டேன். சரியான விடை காணவில்லை. தங்களிடம் அந்த ஐயம் அகலும் எனக் கருதுகின்றேன். உத்தரவு கொடுத்தால் உரைப்பேன்.

**நல்ல:** தம்பி! நன்ருகக் கேள். அறிவுமயமான ஆண்டவன் உணர்த்திஞல் உணர்ந்து விடை கூறுவேன்.

**மதி:** கடவுள் இந்த உலகத்தையும் நம்மையும் ஏன் படைத்தார்? அவர் படைத்ததஞல் தானே நாம் பலப்பல துன்பங்களை யநுபவிக்கின்ருேம். எத்தனை பேர் என்ன என்ன வேதனைப்படுகின்ருர்கள்? எங்கு பார்த்தாலும் துன்பம். பசி, தாகம், பிணி, வறுமை முதலிய பற்பல துன்பங்கள். ஈசன் நம்மைப் படைக்காமல் இருந்தால் இந்தத் துன்பத்திற்கே இடமில்லை. ஆகவே அவர் ஏன் படைத்தார்? தன்னை வணங்கும் பொருட்டா? விளையாட்டாகவா! இந்த ஐயம் நெடுநாட்களாக இருந்து என்னை வாட்டுகின்றது.

**நல்ல:** மதிவாணு! இதுதாஞ பெரிய சந்தேகம். இது நமது அறிவு நூல்களைக் கல்லாமையால் வந்த தீங்கு.

தம்பி! கடவுள் நம்மைப் படைக்கவில்லை.

**மதி:** கடவுள் நம்மைப் படைக்கவில்லை யென்ருல் நாமே உண்டானேமா? அப்படியாஞல் கடவுளுக்கும் நமக்கும் என்ன தொடர்பு? நாம் ஏன் கடவுளை வணங்க வேண்டும்?

**நல்ல:** தம்பி! சற்றுப் பொறு. ஆன்மாக்கள் என்றைக்கும் உள்ள பொருட்கள்; "பதியினைப்போல் பசுபாசம் அநாதி" என்று திருமூலரும், "என்று நீ அன்று நான்" என்று தாயுமாஞரும் கூறுகின்ருர்கள். இறைவனும் என்றைக்கும் உள்ளவர்; உயிர்களாகிய நாமும் என்றைக்கும் உள்ளவர்கள்.

ஆன்மாக்கள் எண்ணற்றன; ஒளியும் காற்றும் இல்லாத சிறிய இருட்டறையிலே கண்ணில்லாக் குழவிகள் ஒரு தோல் பையில் கட்டுண்டுகிடத்தல் போல், இருளினும் வலிய ஆணவக் குகைக்குள் உயிர்கள் கிடந்து துன்புற்றன. அறியாமையும் இருளும் துன்பமும் நிறைந்து கிடந்த உயிர்களுக்கு அருள்புரிய வேண்டும் என்று பரம கருணுநிதியாகிய இறைவர் எண்ணிஞர். குருடன் ஒருவன் தடுமாறிக் குழியில் விழும்போது அங்குச் சென்ற ஒரு அருளாளன் கோல்

கொடுத்து உதவுவது போல், இறைவர் நமக்கு இந்த உடம்பையும் உட்கருவிகளையும் உலகங்களையும் கதிர் மதி கனல் புனல் கனியாதி நுகர்வுப் பொருள்களையும் படைத்துக் கொடுத்தருளினர். இவற்றை அறிவு நூல்கள் தநு கரண புவன போகம் எனக் கூறும்.

இந்த உலகம் பிருகிருதி மாயையிலிருந்து உண்டாக்கப் பட்டது. ஏனெனில் இல்லாதது புதிதாக உண்டாகாது; உள்ளது ஒரு போதும் போகாது. இது தருக்க நூல் முடிவு; "சற்காரிய வாதம்" என்பர்.

"காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற
கண்ணிலாக் குழவி போல்
கட்டுண்டுடிருந்த எமை வெளியில் விட்டு"

என்று கூறுகின்றார் தாயுமானர்.

பரங் கருணைத் தடங்கடலாகிய கடவுள் நம்மீது ஓவாது வைத்துள்ள ஒப்பற்ற கருணையால், நாம் உய்யும் பொருட்டு அறிவு விளங்க இந்த உடம்பைக் கொடுத்தார். நாம் உடம் போடு கூடி நிற்கும்போது அறிவு சிறிது விளக்கம் பெறு கின்றது.

**மதி:** ஐயா! நடுவில் ஒருசிறு ஐயம். மன்னிக்கவேணும். கடவுள் அறியாமை நீங்கி உய்யும்பொருட்டு இந்த உடம் பைத் தருகின்றார் என்பதனை நான் ஒப்புக்கொள்ளு கின்றேன். எல்லாம் வல்ல கடவுள் உடனே எங்கள் அறி யாமையைப் போக்கிவிடக்கூடாதா?

**நல்ல:** மதிவாணா! ஆன்மா ஆணவ மலத் தொடர் பினால் அறிவுமுற்றும் இழந்துகிடந்தது. செம்புக்குக் களிம்பு போல் ஆணவமல அழுக்கு ஆன்மாவுக்கு அநாதியேயுண்டு. அரிசியிலே யுள்ள தவிட்டை உலக்கையால் குத்திக்குத்தி யகற்றுவது போலவும், வேட்டியிலே யுள்ள அழுக்கைப் பன்முறை தோய்த்து அகற்றுவது போலவும், இறைவர் நம்மைப் பக்குவப்படுத்தி அறியாமையையகற்றி வீடுபேறு தருவர்.

இந்த உடம்பை அவர் நமக்குத் தந்தார். நன்றி பாராட்டும் முகத்தாலேயே நாம் அவரை வழிபடுதல் வேண்டும். தந்ததை மீட்டும் தராதொழியின் பாவமல்லவா? கடனைத் தீர்க்கவேண்டாமா? ஆகவே இறைவனைத் தொழுவது கடனாகின்றது. எழுந்தவுடனே நாம் இந்த உடம்பால் அவரை வழிபடுவது கடனாகின்றது. எனவே அதனைக் **காலைக் கடன்** என்பர், இப்போது "காலைக் கடன் முடித்தாயா?" என்று கேட்டால் "ஆமாம் முடித்துவிட்டேன். இப்போது தான் போய் வந்தேன் (மலசலங் கழித்தேன்)" என்று விடை பகர்கின்றார்கள். மலசலங் கழிப்பது காலைக்கடனாகுமா? ஆடு மாடுகள்கூட மலசலங் கழிக்கின்றன. நாம் மனிதர்கள் அல்லவா? இந்த உடம்பைக் கொடுத்த இறைவனை இந்த உடம்பால் வணங்குவதும் மலரிட்டுத் தொழுவதும் கடமையாகும். ஆகவே "என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்றார் அப்பரடிகள். நன்கு சிந்தித்துப்பார். இந்த உடம்பு தானே வராதல்லவா? உடம்பு அறிவில்லாதது; உயிர் அறிவுள்ளது. அறிவுள்ள உயிர் அறிவில்லாத உடம்புக்குள் எப்படி வந்தது. மாடு வண்டிக்குள் தானே நுழையாதல்லவா ? வண்டியும் தானே சென்று மாட்டின் மீது ஏறிக்கொள்ளாதே. வண்டிக்கும் மாட்டுக்குந் தலைவனாகிய ஒருவன் வண்டியில் மாட்டை நுழைத்துப் பூட்டுகிறான். பூட்டி, அதன்மீது அமர்ந்து ஓட்டுகிறான். வண்டி போல இந்த உடம்பு; மாடுபோல் உயிர். இந்த உடம்பாகிய வண்டியில் உயிராகிய எருதை நுழைத்து பிராணவாயு என்ற கயிறு பூட்டி, இறைவனும் இந்த உயிர்க்கு உயிராயிருந்து நம்மை இயக்குகிறான். அதனால் அவருக்கு இயவுள் என்று ஒரு பேரும் உண்டு.

ஆகவே எல்லையில்லாத கருணையுடைய கடவுள் நாம் உய்ந்து பேரின்பமடையும்பொருட்டு பிரகிருதி மாயையிலிருந்து உலகத்தைப் படைத்து, இந்த உடம்பையும் கருவி கரணங்களையும் கொடுத்து உதவியருளினார். அப்படி உதவியருளிய கருணைக்கு நாம் என்றும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம்.

**மதி:** ஐயா! தாங்கள் கூறிய அறிவுரைகள் அமுத தாரையாக இருக்கின்றன. ஆ! ஆ! என் உள்ளத்தை உருக்குகின்றது. இவ்வளவு தெளிவாக ஒருவரும் உரைக்க வில்லை. இனி வீதியில் வண்டிமாட்டைப் பார்க்கும்போ தெல்லாம் தங்கள் உபதேசமொழி நினைவுக்குவரும். “வண்டி போல் உடம்பு; மாடுபோல் உயிர், கயிறுபோல் பிராண வாயு; செலுத்துபவனைப்போல் இறைவன்” என்ன அழகான உவமைகள். களிமண்ணுக்கும் விளங்குகின்றாற்போல் கூறி னீர்கள். இப்படிச் சொன்னால் எந்த மண்டுக்குத்தான் விளங் காது. நன்கு விளங்கியது. இனி எனக்கு ஐயமே யில்லை. ஒரு சின்ன ஐயம். நாம் கடவுளை வணங்கவில்லையானால் அவர் நம்மைத் தண்டிப்பாரா?

**நல்ல:** தம்பி! நாம் இறைவனை இறைஞ்சவில்லையானால் அவர் தண்டிக்கமாட்டார். கடவுளை நாம் வணங்கினால் கடவுளுக்கு நன்மையா? காவிரியில் நாம் குளித்தால் காவிரிக்கா நன்மை? நமக்கல்லவா நன்மை. காவிரியைக் கண்டு வெறுத்தால் காவேரிக்கு வருத்தமா? காவிரிபோல் கடவுள். கடவுளை வணங்கினால் நமக்கு இன்பம்; வணங்க வில்லையானால் துன்பம். நாம் நன்றி மறந்த பாவமே நமக்குத் துன்பத்தைத் தருகின்றது. ஒரு சிறு நன்றி புரிந்தவனை உள்ளநாள்வரை நன்றி பாராட்டவேண்டியது இன்றியமை யாதது. இமயமலையளவு நன்மை நமக்குப் புரிந்து, இன்னும் ஒவ்வொரு கணமும் நாம் உய்தற்பொருட்டு உதவியருளும் இறைவரை நாம் வணங்காமல் இருப்பது பெரும் பிழை யல்லவா?

ஆகவே, வேண்டுதல் வேண்டாமையிலாத ஈசனை, நாம் உய்யும்பொருட்டு மனமொழி மெய்களால் சிந்தித்தும் வாழ்த்தியும் வந்தித்தும் நலம்பெற வேண்டும். அங்ஙனம் புரிந்தால் உலகில் புகழுடம்பு பெற்று என்றும் நிலைபெற்று வாழலாம்.

மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

**மதி :** பெருமானே! என் ஐயம் அகன்றது. உய்ந்தேன். தைப் பொங்கலன்று நல்லறிவு பெற்றேன், தங்கள் பொன்ஞர் திருவடிக்கு எண்ணற்ற வணக்கங்கள். விடையவனே வணங்கும் தங்கள்பால் விடைபெற்றுக் கொள்ளுகிறேன்.

## 8. அறத்தின் பெருமை

அறமாவது மனுமுதலிய நீதி நூல்களில் விதித்தன செய்தலும், விலக்கியன ஒழிதலுமாம். திருவள்ளுவர், பூதஞ்சேந்தஞர், கணிமேதாவியார், குமரகுருபரர் முதலிய ஆன்ருேர்களால் செய்தற்பால இன்னவென வரையறுக்கப்பட்டதே அறமாகும். அஃது ஒழுக்கம் வழக்கு தண்டம் என மூவகைப்படும்; அவற்றுள் :

(1) ஒழுக்கமாவது, அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரியமுதலிய நிலேகளினின்று அந்த அந்த நிலேக்கு ஓதிய அறங்களின் வழுவாது ஒழுகுதல்.

(2) வழக்காவது ஒரு பொருளேத் தனித்தனியே எனதெனதென்றிருப்பார் அது காரணமாகத் தம்முள் மாறுபட்டு, அப்பொருள்மேற் செல்லுவது. அது கடன்கோடல் முதல் பதினெட்டுப் பதத்ததாம்.

(3) தண்டமாவது, அவ்வொழுக்க நெறியினும், வழக்கு நெறியினும் வழீஇஞரை அந்நெறி நிறுத்துதற்பொருட்டு ஒப்ப நாடி அதற்குத்தக ஒறுத்தல்.

இவற்றுள் வழக்குந் தண்டமும், உலகநெறி நிறுத்துதற் பயத்தவாவதல்லது ஒழுக்கம்போல் உயிர்க்கு உறுதிசெய்யாது. ஆதலால் உயிர்க்கு உறுதிபயக்கும் அவ்வொழுக்கத்தையே அறமென ஆன்ருேர் வலியுறுத்தினர். கற்பிற் சிறந்த இல்லாளுடன் மனமொருமித்திருந்து செல்விருந்தோம்பி, வருவிருந்து நோக்கித் தருமங்களே மேற்கொண்டு ஒழுகுவதே சிறந்த அறமாகும். இதனுலன்ருே அறத்தின் நுட்பத்தை நன்கு நுணுகி யாராய்ந்து உலகினருக்கு அறிவுறுத்தவந்த தெய்வப்புலவராந் திருவள்ளுவர், 'அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை' என்று திருவாய்மலர்ந்தனர்.

இங்ஙனம் இல்லறமாகிய நல்லறத்தை மேற்கொண்டான் பொய் வஞ்சனைகளவு முதலிய தீவினைகளை யொழித்து, நல்வழியில் பொருளையீட்டி, பிரமசரியம், வானப்பிரத்தம், சந்யாசம் என்னும் ஆச்சிரமங்களில் நின்ற இயல்புடைய மூவர்க்கும் நல்லாற்றின் நின்ற துணையாக இருந்து உதவி செய்தல் வேண்டும். இதுவேயுமன்றி, தென்புலத்தார் தேவர் விருந்தினர் சுற்றத்தார் ஆகிய நால்வர்களுக்கும் பகுத்துக் கொடுத்துப் பின் எஞ்சி நின்றதை ஒருவன் உண்டுவருவானேயானால், அவனுடைய மரபு இந்நிலவுலகில் அழிவுறாது எப்போதும் நிலைபெற்று நிற்கும்.

பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியஞ்ச லெஞ்ஞான்று மில்.

—பொய்யாமொழி.

அறத்தின் வழிநிற்பான் எக்காலத்தும் அழியாத புகழையும் இன்பவீட்டையும் எளிதிற் பெறுவான். இதனையுன்னியே நீதி நூல் கூறவந்த ஔவைப்பிராட்டியார், முதலாவதாக,

"அறஞ் செய விரும்பு"

என்றனர். இல்லறமார்க்கத்தின் முதலங்கமாவது பிற உயிர்க்கு இடர் புரியாமையேயாம். எல்லாவுயிர்களுக்கும் நன்மையே செய்தல் வேண்டும். அருட்பிரகாச வள்ளலாராகிய இராமலிங்க சுவாமிகள் இறைவனிடத்தில் ஒரு வரம் வேண்டுமென்று கேட்கிறார். என்ன வரத்தை விரும்பினார்? தனக்கு முத்திவீடு வேண்டுமென்று விரும்பினாரில்லை. சித்தி வேண்டு மென்றும் கேட்டாரில்லை.

" அப்பா நான் வேண்டுதல்கேட் டருள்புரிதல்
வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம்நான் அன்புசெயல்
வேண்டும்"

அன்பர்களே! நன்கு நோக்குங்கள். இராமலிங்க அடிகளுடைய உள்ளத்தில் கருணை ஊற்றெடுத்துத் ததும்புகிறது. விரதங்களுக்கெல்லாம் சிறந்த விரதம் கொல்லா விரதமேயாம். அகிம்சா தருமமே மிகமேலான அறமென்று அறநூல்கள் முழங்குகின்றன. 'தாயுமானாரும் **கொல்லாமையெத்தனை குணக்கேட்டை நீக்கும்"** என்றருளியிருப்பதை

யும் உய்த்துணர்க. இக்கொல்லாமையே அறவினையென்ற தோடமையாது, உயிர்க்கொலையொன்றே மற்ற பாவச் செய்கைகள் எல்லாவற்றையுந்தரும் என்றனர் பொய்யில்புலவர்.

அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்.

இத்தகைய அறத்தின் பெருமையை யுணர்ந்து அறஞ் செய்ய எண்ணுவான் ஒருவன், யாம் இப்பொழுது இளையமாகலின் இறக்கு ஞான்று செய்துமெனக் கருதாது, எக்கால் தருமசிந்தை யுண்டாயிற்றோ அத்தருணமே அறம் புரிய வேண்டும். அங்ஙனஞ் செய்த அறம் இவ்வுடம் பினின்று உயிர்பிரிகின்ற காலத்தும் பிரியாது நம்முடன் வந்து மறுமைக்கும் உதவிசெய்யும்.

கைப்பு, இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு, என்ற அறுசுவையாலமைத்த உணவுகளைப் பரிசாரகர் பலரிருந்தும், இல்லாளே அன்புகூர்ந்து பல இன்சொல்கூறி வேண்டி உண்பிக்கையில், ஒருவகை யுண்டியில் ஒருகவளமேயன்றி மற்றொன்றை நீக்கிப் புசித்த அத்துணைப் பெருஞ் செல்வராயிருந்த பெருமக்களும், ஒரு காலத்தில் தரித்திரர்களாகி வேறோரிடத்திற் போய்க் கூழை யிரந்து உண்பார்கள் என்னில் செல்வம் நிலைத்திருப்பதாக எண்ணி அதனைக் காப்பாற்றத்தக்கதன்று.

அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா ளூட்ட
மறுசிகை நீக்கி யுண்டாரும்—வறிஞராய்ச்
சென்றிரப்ப ரோரிடத்திற் கூழெனிற் செல்வமொன்
றுண்டாக வைக்கற்பாற் றன்று.

—நாலடியார்.

குடைநிழலிருந்து குஞ்சர மூர்ந்தோர்
நடைமெலிந் தோரூர் நண்ணினும் நண்ணுவர்

—அதிவீரராமர்.

என்று செல்வ நிலையாமையைக் குறித்து ஆன்றோர் கூறிய அமுத மொழிகளை உன்னி, செல்வம் உள்ளபோதே பகிர்ந்தளித்துப் பல்லோரோடுமுண்டு பரகதிக்கு வழிதேட வேண்டும். இங்ஙனமின்றி, நாளைக்கு அறஞ்செய்வோம்;

அடுத்த ஆண்டில் வருகின்ற பூசத்திருநாளன்று அன்னதானஞ் செய்வோம் என்று எண்ணுவானேயானல் அவன் அதுகாறும் உயிருடன் இருப்பது நிச்சயமாகுமோ? மறுகணமே மாளினும் மாள்வான். பின்புறத்திலேயே கூற்றுவன் நிற்கிருன்? அவன் எந்த நிமிடத்தில் உயிரைப் பற்றுவானே தெரியாது? யாக்கையோ நிலையற்றது; நீர்மேற் குமிழிக்கு நிகரானது. "இன்றைக்கோ நாளைக்கோ இன்னு மரைநாழிகைக்கோ என்றைக்கோ ஆவியிழப்பு" என்ற முதுமொழிகளை நினைந்து, தீயவைகளை விட்டு இயன்ற அளவில் தருமத்தைப் புரிதல்வேண்டும். இதனையே நம் அருணகிரியாரும் "இன்றைக் கன்றைக்கென நாடாது இடுக கடிது" என்று உபதேசித்தனர். கிள்ளியெடுக்கும் சிறிய அளவினதாகிய ஓர் ஆலமரத்தின் விதையானது, மிகவும் ஓங்கி வளர்ந்து பல கிளைகளுடன் தழைத்துநின்று பெரிதும் நிழலைத் தருவது போல், தக்கார் கைப்பட்ட அறமானது, அற்பமாயினும், ஆகாயம் அற்பமாகும்படி மிகவும் வளர்ச்சியுறும்.

உறக்குந் துணையதோ ராலம்வித் தீண்டி
இறப்ப நிழற்பயந் தா அங்—கறப்பயனும்
தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும். —நாலடியார்

"நொய்யிற் பிளவளவேனும் பகிர்மின்கள்" என்ற அருணகிரிப் பெருந்தகையின் அமுதமொழியையுங் காண்க.

தக்கார் தகாதவர் என்று பகுத்தறிந் தீவதே தானம் எனப்படும். அங்ஙனமன்றி வறியராய் வந்து ஏற்ருர் யாவராயினும் இன்னுர் இனியார் என்று நோக்காது ஈதலே தருமம் எனப்படும். தருமம் புரியும் ஆற்றலில்லாதார் தமக்கு எவ்வளவு சக்தியுண்டோ அவ்வளவாவது கரவாதளித்தல்வேண்டும். இதனை நோக்கியே நம் மூதாட்டியார்

"இயல்வது கரவேல்" என்றனர்.

அதுவும் செய்யச் சக்தியில்லையென்னில் பிறர் தருமம் புரியுங்கால் குறுக்கே விழுந்து எதற்காக இப்படித் தருமம் புரிகிருய்? சிறிது கொடுத்தால் போதாதோ? என்று தடுக்காம

லிருந்தால் போதும். அதுவே தருமம் புரிந்ததுபோலாகும். இதுபற்றியே ஔவைப்பிராட்டியார் 'இயல்வது கரவேல்' என்று கூறினதோடமையாது அடுத்தாற்போல் **"ஈவது விலக்கேல்"** என்றனர். இதனைத் திருவள்ளுவரும்,

"கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பது
முண்பது மின்றிக் கெடும்"

என்றனர்.

அங்ஙனமாயின் நான் ஒருவரையுந் தருமம் புரியுங்கால் தடுப்பதில்லை; அதுவே போதும் எனத் தகுதியுடையான் ஒருவன் எண்ணி வாளாகிடத்தல் கூடாதென **"ஐயமிட்டுண்"** என்றும் உபதேசித்தனர். இங்ஙனம் நமக்கு அறமார்க்கத்தின் பொன்மொழிகளை வற்புறுத்திக் கூறியருளிய அப்பெரியார்களுக்கு நாம் என்ன கைம்மாறு செய்யவல்லேம்? **"குன்றிப்பிளவளவு தினையளவு பங்கிட்டுண்கை"** என்று நம் அருணகிரிநாத சுவாமிகள் அருளியபடி, நம்முடைய வருவாயில் ஒரு சிறிது பாகமாவது ஏழைகளுக்கென்று ஒதுக்கி வைத்து, அதனை அவர்களுக்கு அன்புடனீந்து மறுமைக்கு மாறு நலனைத் தேடிக்கொள்ளல் வேண்டும்.

கடவுள் அறத்தின் வடிவமாக விளங்குகிருர். சிவபெருமானுக்கு **'அறவன்'** என்றே ஒரு திருநாமம் உண்டு. நமது காரைக்காலம்மையார் கயிலாயவரை சென்று கண்ணுதற் கடவுளைக் கண்டுகளித்து வரங்கேட்குங்கால், **'அறவா நீ** ஆடும்போதுன் அடியின்கீழ் இருக்க' என்ருர். சிவபெருமானுடைய ஊர்தியாகிய இடபம் அறத்தின் வடிவு; தருமவிடை என்று அதற்குப் பெயர். அத்தகைய அற வடிவுடைய ஆண்டவனை யடைதற்கு அறத்தினை மறவாது உஞற்றுதல் வேண்டும். **"அறனை மறவேல்"** என்ற திருவாக்கையும் உற்றுநோக்குக. இத்தருமமே எல்லா நலன்களையுந் தந்து இறைவன் திருவடியிற் சேர்க்கும்.

தருமமே போற்றிடி னன்பு சார்ந்திடும்
அருளெனுங் குழவியு மணையு மாங்கவை
வருவழித் தவமெனு மாட்சி யெய்துமேல்
தெருளுறு மவ்வுயிர் சிவனைச் சேருமால்.

—கந்தபுராணம்

மெய்யன்பர்களே!

வரையாது கொடுத்த வள்ளல்கள் வாழ்ந்த நாடன்றே நம் நாடு. வறுமையுற்று வந்த ஒருவனுக்குத் தன்னுடைய தலையையும் கொடுத்த பெருவள்ளலின் ஈகையின் சிறப்பை உணராதார் யாவர்? உயிர்க்கு ஆதரவாக உடலுடன் ஒன்றியிருந்த கவசகுண்டலங்களைச் சேதித்து நல்கிய கதிர் மகன்றன் கொடையின் திறத்தை யாரே உரைக்கவல்லார்? கொடையின் பெருமைதான் என்னே! அக்கொடையாளர் களிடம் யாதுலர்க்கு நல்கக் கூடாத பொருள் யாதானும் ஒன்று இருந்ததுண்டா?

அதிகமான் என்று ஓர் வள்ளலிருந்தான். அவன் இல்லை யென்று கேட்டார்க்கு இல்லையென்று சொல்லா ஈகை யாளன். தகடூர் என்னும் நகரைத் தருமநெறி நின்று காண்டற்கினியனாய்க் காட்சிக்கெளியனாய்ச் செங்கோலோச்சி வந்தான். அம்மன்னன் நெடிது நாள் உயிர்வாழ விரும்பி னான். உலகில் மனிதர்கள் யாவரும் மரணத்தை விரும்பார் களல்லவா? நெடுங்காலம் வாழவேண்டுமென்று ஒவ்வொரு வரும் எண்ணுவது இயற்கை. அங்ஙனமே அம்மன்னர் பெருமானும் விழைந்தான். அதற்கு மார்க்கம் யாதென ஆராய்ந்தான். தன்பால் வரும் அறிவிற்சிறந்த ஆன்றோர் களை அதுகுறித்து உசாவினான். ஒருவரும் அவருக்குத் தக்க வழியைக் கூறினாரில்லை. அம் மணிமுடிவேந்தன் ஒரு கால் அதே ஏக்கமாகத் தனது மாளிகையின் ஓர்பால் மணி யாசனத்திலிருந்து சிந்தித்துக் கொண்டிருந்தான். அச்சமயம் ஓர் பேரறிவாளர் அவன்பால் வந்தனர். வேந்தன் விரைந் தெழுந்து முகமன் கூறி இருக்கை நல்கி உபசரித்து தனது உட்கருத்தை யுரைத்து "ஆயுள் நீடிக்க உபாயம் யாதென" வினவி இருகை கூப்பி நின்றான். அப்பேரறிஞர் "பெருமை மிக்க இத்தருமகுண மன்னன் நீண்டநாள் உலகில் வாழ்ந் திருந்தால் அனேகருக்கு நன்மை விளையும்" என்று எண்ணி, மன்னனை நோக்கி "பயன் தூக்காது நல்கும் பரமதயாளுவே! இதோ தோன்றும் நினது குதிரை மலையின்மேல் சரிந்த ஓர் பெரிய பிளவு உண்டு; ஒருவரும் அணுக முடியாத அப்பிள

வில் ஒரு நெல்லி மரம் உளது. அது பல வருடங்களுக்கு ஒருமுறை பழுக்கிறது. அவ்வாறு பழுக்கினும் ஒரு கனிக்கு மேல் உண்டாவதில்லை. அத்தருவினிடம் யாரும் எளிதிற் செல்லமுடியாது. அத்தகைய அருமையான நெல்லிக் கனியை அரிதின் முயன்று அருந்தினோர் மிகவும் உடல்வலி பெற்று உறுதியுடன் விளங்குவர். அன்னோர் பிணிவாய்ப்பட்டு வருந்தார். வச்சிரம் போன்ற சரீரக்கட்டுடையவராவர். நீண்டநாள் வாழலாம். ஆதலால் கருணை வள்ளால்! நீ அரிய பெரிய முயற்சி செய்து அக்கனியைப் பெற்றுண்டு நெடுநாள் இனிது வாழ்வாய்'' என்று கூறி, மன்னன்பால் விடைபெற்று நீங்கினர்.

அதிகமான் அம்மலையை அடைந்து பிளவிருக்கும் இடத்தைக் கண்டுபிடிக்க முயன்று வந்தனன். ஒருநாள் அப்பெரும் பிளவைக் கண்டான். பெரிதும் வியப்புற்றான். சேடனுலகஞ் செல்லும் பிலம்போல் மிகவும் பயங்கரமாக இருந்தது. அதில் தவறி வீழ்ந்தோர் நமனுலகம் போவதற்கு ஐயமில்லை. அம் மலைச்சரிவின் இடை இடையே முட்புதர்கள் பலவிருந்தன. அதிற் சிக்குண்டோர் மீண்டுந் தப்புதல் முடியாது. இடர்களுக்கு இருப்பிடமான இத்தகைய சரிவின் அடிப்பாகத்தில் அந் நெல்லிமரம் இருந்தது. அதிகமான் அம் மரத்தைக் கண்டான். மனமிக மகிழ்ந்தான். கருமமே கண்ணாயினர் மெய்வருத்தம் பாராரல்லவா? கனியைப் பெற விரும்பிய வேந்தன் அந்தப் பிளவின் அபாய நிலைக்கு அஞ்சினானில்லை. கனியை எப்படியாவது பெறுவதிலேயே அவனது நோக்கம் நின்றது. அஞ்சா நெஞ்சுடைய அவ்வீரன் மெல்ல அப்பிளவில் இறங்கினான்; மரத்தின் அருகிற் சென்றான். அத்தருவினை உற்று நோக்கினான். அத்தருவின் உச்சியில் ஓர் கிளையில் ஒரு கனியிருக்கக் கண்டு அளப்பருங் களிப்பை யடைந்தான். தருவின் மீது ஏறி அரிய அக்கனியைப் பறித்து இறங்கினான். மீண்டும் சரிவினின்றும் வெளிப்பட்டு தன்னுடைய நகரைநோக்கிப் புறப்பட்டான். வரும்போது அடிக்கடி அக்கனியை எடுத்துப் பார்த்துக் கொண்டே மகிழ்ச்சி மிக்கூர்ந்தவண்ணமாக நகரையடைந்து தன்னரண்மனை யருகில் வந்து சேர்ந்தான்.

அத்தருணம் பெரும்புலமைப் பெருமாட்டியாராகிய ஔவைப் பிராட்டியார் அதிகமானைக் காண அரண்மனை வந்தார். காவலர்களால் மன்னன் இல்லையெனத் தெரிந்து வாடிய முகத்துடன் திரும்புகிற சமயத்தில் அதிகமான் வந்து சேர்ந்தான். நடந்துவந்த வருத்தம் ஒருபுறமும், மன்னன் இல்லாத வருத்தம் ஒருபுறமாக மனம் வருந்தித் திரும்பிய ஔவையாரைக் கண்ட மன்னன், முகமலர்ந்து, அம்மையார் பசியால் வாடியிருக்கிறார் என்பதையுணர்ந்தான். உடனே மிகமிக முயன்று தேடிக்கொணர்ந்த நெல்லிக்கனியை உள்ளம் உவந்து அவர் கரத்திற் கொடுத்து "அன்னையே! பசியாலும் தாகவிடாயாலும் வாடியிருக்கிறீர்; இக்கனியை யுண்ணுவீர்" என்று வேண்டி நின்றனன். ஔவையார் பசிதாகத்தால் உடனே வாடியிருந்ததனால், அவ்வரு நெல்லிக் கனியை அருந்தி மன்னன் தந்த ஆசனத்திலிருந்து இளைப் பாறினார். அப்பழத்தின் இனிமையை யுன்னிப் பேராச்சரிய மடைந்த ஔவையார், 'தருமகுணத்திற் சிறந்த தயாசமுத்தி ரமே! இக்கனி மிகவும் இனிமையாயிருக்கிறது. இது போன்ற இனிய கனியை யான் எவ்விடத்திலும் எக்காலத் தும் கண்டதில்லை. இதனை எவ்விடம் பெற்றனை?' என்று வினவினார். அதிகமான் அக்கனியின் பெருமையையும், அதனைத்தான் பெற்ற வரலாற்றையும் கூறி, "தமிழ் மொழிக் கடலின் கரைகண்ட தாயே! இக்கனியை யுண்டு அடியேன் நெடுநாள் வாழவிரும்பினேன். ஆயினும் அடியேன் நெடு நாள் இருந்து என்ன பயன்? என்னால் உலகிற்கு என்ன நன்மை விளையும்? பெரும் புலமைப் பெருமாட்டியாகிய தாங்கள் நெடுநாள் இருந்தால் என்போன்ற அறிவிலிகளுக்கு அறிவுரைகூறி அறத்தின்பால் ஒழுகப் புரிவீர். அநேகம் மக்கள் நல்வழிப்படுவர். ஆதலால் இக்கனியைத் தாங்க ளுண்டு நோயற்ற வாழ்வும் திடசரீரமும் நீடித்த ஆயுளும் அடைந்து எம்மனோர்க்கு இன்னருள் புரியவேண்டி இதனைத் தங்களுக்கீந்தேன். தாங்களுண்டதனால் யான் பெரிதும் மகிழ்ந்தேன்" என்று கூறினன்.

அச் சீரிய உரையைக் கேட்ட ஔவையார் அத்தரும சீலனது பெருங்கொடையின் திறத்தை உன்னி இரும்பூதுற்

றனர். ஆ! ஆ!! என்னே அவன் குணத்தின் மேன்மை? எண்ணுவதற்கும் இயலுமோ? தனக்கென வாழாத் தரும பூபதி யவனேயன்றோ! எவ்வளவு துன்புற்று மிக்க ஆவலோடு தான் நெடுநாள் வாழவேண்டுமென்று அரிதிற்றேடி வந்த கனியைப் பிறருக்கீந்து, பிறர்வாழ்ந்தால் தான் வாழ்ந்ததாக எண்ணிய அக்கொடைப் பெருமானும் அதிகமானை யாரே புகழவல்லார். என்றுமழியாப் புகழை நாட்டிய பெருவள்ளல் அவனே யன்றோ? அத்திருவாளனை யறியாதாரும் உண்டோ? அவ்வள்ளற்பிரானை உடனே வியந்து, ஔவைப்பிராட்டியார் அவன் புகழை உலகறிய இனிய பாடலொன்றை ஓதினர். அது வருமாறு:

"வலம்படு வாய்வாள் ஏந்தி ஒன்னர்
களம்படக் கடந்த கழல்தொடித் தடக்கை
ஆர்கலி நறவின் அதியர் கோமான்
போரடு திருவின் பொலந்தார் அஞ்சி
பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி
நீல மணிமிடற்று ஒருவன் போல
மன்னுக பெரும நீயே தொன்னிலைப்
பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா
தாதல் நின்னகத் தடக்கிச்
சாதல் நீங்க எமக்கீந் தனையே"

அவனிபோற்றும் ஔவைப்பிராட்டியார் திருவாக்கால் இவ்வரிய பாடலைப் பெறச் செய்தது அறத்தின் பெருமையே யன்றோ? அறத்தின் பெருமையே பெருமை!

## 9. பாரி

நம் தமிழகத்திலே ஞானிகள் பக்தர்கள் அடியார்கள் புலவர்கள் இவ்வாறு பல திறப்பட்ட ஆன்றோர்கள் இருந்தார்கள் என்று எண்ணிக்கை அமைக்கவில்லை.

ஆனால், வள்ளல்களுக்கு மட்டும் முதலெழு வள்ளல்கள், இடை யெழுவள்ளல்கள், கடை யெழுவள்ளல்கள் என்று

மூவேழு இருபத்தொன்று என்று வரம்பிட்டு வைத்துள்ளார் கள். ஔவையார்,

"ஆர்த்தசபை நூற்றொருவர் ஆயிரத்தொன்
றும்புலவர்
வார்த்தைபதி னாயிரத்து வாய்க்குமே—பூத்தமலர்
தண்டா மரைத்திருவே தாதாகோ டிக்கொருவர்
உண்டாயின் உண்டென் றறு."

என்று கூறியுள்ளார். வள்ளல்_கோடிக்கொருவர் என்ப தனால் வள்ளலின் அருமை புலப்படும்.

"ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல
தூதியம் இல்லை உயிர்க்கு."

என்கின்றார் திருவள்ளுவர்.

இத்தகைய வள்ளல்களின் வரிசையில், பாரி ஒரு தலை சிறந்தவர். இவர் கடையெழு வள்ளல்களில் ஒருவர். இவ ரைப் பாராட்டாத புலவர்களே இல்லையென்னலாம்.

இப் பாரியைப் பற்றிக் கபிலர் என்ற பெரும் புலவர் புகழ்ந்து பாடுகின்றார்.

"வரையாது வழங்குகின்ற வள்ளல் பாரி; கைம்மாறு கருதாது தருகின்றவன் பாரி; அவனை அன்றி வேறு ஒருவரும் இலர் என்று உலகம் உரைக்கின்றது. பாரியைப்போலக் கைம்மாறு கருதாமலும் வரையாமலும் வழங்குகின்ற கொடைக் குணம் பாரியிடம் மட்டும் அமைந்தது என்று எண்ணவேண்டாம். அத்தகைய வள்ளன்மை மேகத்துக் கும் உண்டு" என்கின்றார்.

"பாரிபாரி என்றுபலர் ஏத்தி
ஒருவர்ப் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனுமல்லன்
மாரியும் உண்டீண் டுலகு புரப்பதுவே"

சிவபெருமானையே பாடுகின்ற திருநாவுடைய சுந்தர மூர்த்தி நாயனாருடைய தேவாரத்திலும் பாரிமன்னன் இடம் பெறுகின்றான்.

"கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினும்
கொடுப்பாரில்லை"

இனி அருணகிரிநாதரும்,

"வண்புகழ் பாரிகாரி என்றிசைவாது கூறி"

என்று திருப்புகழில் பாரியைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

பாண்டிநாடு, முத்தும் முத்தமிழும் ஓங்கிய நாடு. பழந் தமிழ் நாடு; சங்கம் மருவிய தண்டமிழ் நாடு. அந்நாட்டில், ஒரு புறத்தில், பறம்புமலை என்ற சிறந்த மலையுண்டு. இப்போது அது பிரான்மலை என்று வழங்குகின்றது.

அப் பறம்பு மலையைச் சார்ந்து 300 ஊர்கள் இருந்தன. இந்தப் பகுதி பறம்பு நாடு எனப்படும். இப் பறம்பு நாட்டைப் பாரி என்ற வள்ளல்பெருமானுர் ஆண்டு வந்தனர்.

பாரி மன்னர் வளமை மிகுந்த பறம்பு நாட்டைச் செவ்வையாக ஆண்டுவந்தார். இவர் புகழ் கடல் சூழ்ந்த உலக முழுவதும் பரவியிருந்தது. முடியுடை மன்னர்களாகிய சேரசோழ பாண்டியர்கட்கும் எய்தாத பெரும்புகழை இக் குறுநில மன்னர் எய்தியிருந்தார். இவர் அப் பெருமன்னர்க்குக் கப்பங் கட்டாமல் சுதந்திர மன்னராகவே தமது வள நாட்டை யாண்டனர். பறம்பு மலையில் தேனும் பலாப் பழமும் நிரம்பவுண்டு. மக்கள் அவற்றை யுண்டு இன்புற்ருர்கள்.

பாரி மன்னரிடம், வீரம், தீரம், கொடை, கல்வி. பெருந்தன்மை, எளிமை, தோற்றம், ஏற்றம், பண்பு, பொறுமை, பெருமை முதலிய பல நற்குணங்கள் இயல்பாக அமைந்திருந்தன. அவரிடம் இல்லாத குணம் ஒன்றேதான். அது எது? இல்லை என்று இரப்பார்க்கு இல்லை என்று கூறுகின்ற குணம் அவர் பால் இல்லையாயிற்று. ஈந்து சிவந்த இரு கரங்களை யுடையவர்.

பலாப்பழத்தை ஈக்கள் தேடி வருவதுபோல், புலவர்கள் பலர் அவரை நாடி வந்தார்கள். நடந்து வந்தவர்கள் திரும்ப யானைமீதும், பல்லக்குமீதுஞ் சென்ருர்கள். கந்தலுடன் வந்தவர்கள், பட்டாடையுடன் மீண்டார்கள். இவரி

டம் பரிசில் பெற்றுப் புலவர்கள் இவரை வாயாரப் புகழ்ந்து பாடினுர்கள். கொடை என்ற நீரால் தமிழ்ப் பயிரை வளர்த்தார் பாரி மன்னர்.

புலவர் திலகராக விளங்கிய **கபிலர்** என்ற பெரும்புலவர் பாரியின் நற்குணங்களைக் கண்டு அவருடன் இனிய நண்பராகப் பழகிவந்தார். அதனுல், பாரி மன்னருடைய அறிவும் பண்பும் மேலும் மேலும் வளர்பிறை மதிபோல் வளர்ந்து வந்தன.

ஒருநாள் பாரிவேந்தர் வேட்டையாடச் சென்றனர். வீரஞ் செறிந்த அவர், வில்லை வளைத்து, அஞ்சா நெஞ்சுடன் புலி கரடி சிங்கம் யானை காண்டா மிருகம் முதலிய விலங்குகளைக் கொன்று குவித்தனர். துணிந்த செயலுடைய அவருடைய வேட்டைத்திறம் வியக்கத்தக்கது.

இத்தகைய வீரஞ் செறிந்த அப் பாரி மன்னர் வேட்டையை முடித்துக்கொண்டு பறம்புமலையை நாடித் திரும்பினுர். வரும் வழியில் ஒரு முல்லைக் கொடி தாவிப் படரக் கொழுகொம்பிலாது காற்றினுல் அசைந்து துன்புற்றுக் கொண்டிருந்தது. அம் முல்லைக் கொடியின் அரும்புகள் இவரைக் கண்டு வரவேற்றுப் புன்னகை புரிவதுபோல் பொலிந்தன. மலர்ந்த முல்லை மலர்கள் நறுமணம் வீசி வரவேற்பதுபோல் இருந்தது. அக்கொடியின் தவிப்பைக் கண்ட மன்னர் மனம் உருகியது.

ஓரறிவுடைய அக் கொடியின் துன்பத்தைக் கண்டு அவருடைய கண்களிலிருந்து முத்து முத்தாக நீர் சிந்தியது. தேரைவிட்டு இறங்கினுர். அக் கொடியைத் தமது தாமரை மலர் போன்ற கையினுல் தடவித் தந்தனர். ‘ஆ! எனது நாட்டில் செடி கொடிகள் தாமும் துன்புறலாமா? இக் கொடியின் துயரைக் கண்டு அதனை நீக்காமல் நான் ஊர் செல்வேனுனுல் எனது அரசாட்சியின் மாண்பு என்னும்? நான் நல்லரசன் ஆவேனு? ஆ! ஆ! பாவம்! இக் கொடியைக் கண்ட என் உள்ளம் உருகுகின்றதே. இதன் துயரை எவ்வாறு களைவேன்!” என்று சிறிது சிந்தித்தார்.

உடனே தமது மணிகள் கட்டிய சந்தன மரத் தேரை அக்கொடியின் அருகே விடுத்தார். அம் முல்லைக் கொடியை எடுத்து அத் தேரின்மீது இனிது படரவிட்டனர். அம் முல்லைக்கொடி அம் மணித்தேரின் மீது சுற்றிப் படரலுற்றது. மாலை நேரம் ஆதலின், அதில் உள்ள அரும்புகளும் மலரலுற்றன. அது மகிழ்ச்சியின் அறிகுறியாக விளங்கியது. கொடியின் இன்பத்தைக் கண்ட வேந்தர் பெருமான் பெருமகிழ்ச்சியுற்றார். குதிரைகளை அவிழ்த்துக் கொண்டு நடந்த வண்ணம் தமது ஊர் போய்ச் சேர்ந்தனர். அவருடைய ஈகையின் உயர்வுக்கு எல்லையுண்டோ?

"அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
தன்நோய்போல் போற்றாக் கடை"

என்ற திருவள்ளுவரின் திருவாக்குக்கு இவர் இலக்கிய மானார்:

உயர்திணையாகிய மனிதர்கள் படும் துன்பத்தைக் களைவதுடன் அமையாது, ஆடு மாடு முதலியவற்றின் துன்பத்தை அகற்றி, அத்துடன் நில்லாது செடி கொடிகளின் துன்பத்தையும் அகற்றுவாராயினார் பாரி.

"செயிரிலா உலகினில் சென்று நின்று வாழ்
உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்"

என்ற கம்பநாடர் திருவாக்குக்கு இவர் எடுத்துக் காட்டாக விளங்குகின்றார்.

இந்த ஒரு நிகழ்ச்சி பாரிக்குப் பொன்றாத புகழைத் தந்தது. உலகில் உள்ள பெரியோர்களின் உள்ளத்தில் இவ்வரிய செயல் நிலைத்து நின்றது. உலகெங்கும் சூரியகிரணம்போல் பாரியின் இக்கருணைச் செயல் பரவியது.

பின்னர் ஒரு காலத்தில்-கபிலர், விச்சிக்கோன் என்ற மன்னனிடம் பேசும் சமயம் பாரியைப்பற்றிக் கூற நேர்ந்த போது கூறுகின்றார்; "பாரிவேந்தர் பாடியவர்க்குத் தான் பரிசு தந்தார் என்று எண்ணற்க. பாடுந் திறமை இல்லாத பூத்த முல்லைக் கொடிக்குத் தனது பொன்மணித் தேரை வழங்கிய வள்ளல் பாரி" என்று புகழ்ந்து கூறினார்.

"பூத்தலை யறுஅப் புனைகொடி முல்லை
நாத்தழும் பேறப் பாடா தாயினும்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பின் பாரி"

என்பது கபிலருடைய பாடல்.

இவ்வாறு பாரிவேள் பேரும் புகழுடன் வாழ்ந்தனர். ஒரு சமயம் சேர சோழ பாண்டியர் என்ற மூவேந்தர்களும் இவர்மீது பொருமை கொண்டார்கள். நால்வகைச் சேனை களுடன் போருக்கு வந்து பறம்பு மலையை முற்றுகை யிட்டார்கள்.

அப்போது கபிலர் என்ற புலவர் அவர்களை நோக்கிக் கூறுகின்ருர்.

அளிதோ தானே பாரியது பறம்பே
நளிகொள் முரசின் மூவிரு முற்றினும்
...............
...............
மரந்தொறும் பிணித்த களிற்றினி ராயினும்
புலந்தொறும் பரப்பிய தேரினி ராயினும்
தாளிற் கொள்ளலிர் வாளிற் ருரலன்
யான் அறிகுவன் அது கொள்ளுமாறே
சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி
விரையொலி கூந்தல்நும் விறலியர் பின்வர
ஆடினிர் பாடினிர் செலினே
நாடும் குன்றும் ஒருங்கீ யும்மே.

"ஏ மூவேந்தர்களே! பெருமை கொள் முரசினையுடைய நீங்கள் மரந்தோறும் கட்டிய யானைகளை உடையீராயினும், இடந்தொறும் நிரப்பிய தேர்களை யுடையீராயினும், உங்கள் போர் முயற்சியால் இப்பாரியின் பறம்பு நாட்டைக் கொள்ள முடியாது. நுமது வாள்வலிக்கு அஞ்சி அவன் தரமாட்டான். ஆனால் நீங்கள் இந்த நாட்டை எளிதில் பெறும் வகையை நான் அறிவேன். வடித்து முறுக்கப்பட்ட நரம்பினையுடைய சிறிய யாழைச் செய்து, நறுமணங் கமழும் கூந்தலையுடைய உமது மனைவியர் வாசித்துக்கொண்டு பின்

வர, ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் சென்ருல், பாரி உமக்குத் தனது நாட்டையும் மலேயையுந் தருவான்.

மூவேந்தர்களைப் பார்த்து, "நீங்கள் போர் செய்து பாரியின் பறம்பு நாட்டைக் கைப்பற்ற முடியாது. மனேவியருடன் வந்து யாழ் வாசித்துப் பாடியும் ஆடியும் பரிசிலாகப் பெறலாம்" என்று கபிலர் கூறுவாராயின், அப் பாரி மன்னருடைய வீரந்தான் எத்துணை விழுமியது.

இனி அவருடைய வீரம் எத்துணே அரியதோ அதனே விட அவருடைய கொடைக் குணம் அரியதாக விளங்கிற்று.

ஒரு சமயம் புலவர்கள் வந்து பாடினுர்கள். பாரி மன்னர் பறம்புமலேமீது நின்றுகொண்டிருந்தார். அவருக்கு உரியவை முன்னூறு ஊர்கள். சிறிதுகூடத் தனக்கு என்று வைத்துக்கொள்ளாமல் முன்னூறு ஊர்களேயும் பரிசில்களாக வழங்கிவிட்டார்.

இவ்வாறு பாரிவேள் தனது நாடு முழுவதையும் வழங்கி விட்டு வறியராய்ப் பறம்பு மலேயில் வாழ்ந்தனர். அவருடைய அந்த நிலேயில் அவரை எதிர்க்கவேண்டும் என்று மூவேந்தர்களும் வந்தார்கள்.

அப்போது கபிலர் கூறுகின்ருர்: "ஏ மூவேந்தர்களே! இந்த நிலேயிலும் நீங்கள் போர் புரிந்து இந்தப் பறம்புமலேயைப் பெற இயலாது. குளிர்ந்த நீரையுடைய பறம்புநாடு முந்நூறு ஊர்களேயும் பரிசிலர்கள் பெற்றுக் கொண்டார்கள். இப்போது யானும் பாரியும் இக் குன்றமுமே எஞ்சியிருக்கின்றனனம்; நீவிர் பாடினுல் பரிசிலாக இம் மலேயைப் பெற்றுச் செல்லலாம்" என்ருர்.

கடந்தடு தானே மூவரும் கூடி
உடன்றனி ராயினும் பறம்பு கொளற்கரிதே
முந்நூ றூரும் பரிசிலர் பெற்றனர்
யாமும் பாரியும் உளமே
குன்றும் உண்டுநீர் பாடினிர் செலினே.

பாரி மன்னர் வரையாது வழங்கி; முடியுடை மூவேந்தரும் நாணுமாறு வாழ்ந்து, பெருங் கருணையுடையவராய், மாரி நாணுமாறு வழங்கி அழியாப் புகழை அடைந்தார்.

கொடைக் குன்றமாக விளங்கிய அவருடைய புகழ், இன்றும் இமயம் போல் அசையாது அழியாது நிற்கின்றது.

## 10· பகை

ஆன்மாக்களாகிய நமக்கு, என்ன என்ன வகையிலோ இடர்கள் வருகின்றன; இந்த இடர்களில் மிகவும் கொடியது பகையால் வரும் இடரேயாகும்.

பகையில்லாத ஒருவனே அமைதியாக வாழ இயலும்.

### புறப்பகை

தேவர்கள் பொன்னுலகவாசிகள். கற்பகமரம், காமதேனு, ஐராவதம், உச்சைசிரவம், அரம்பை மாதர்கள், சிந்தாமணி முதலிய பல நலன்கள் அமைந்திருந்தும் அவர்கள் சூராதியவுணர்களாகிய பகைவ்ரால், பலகாலம் ஆற்ருெணுத அல்லல் உற்ருர்கள்.

“நெருப்பு மெத்தையிலும் துயில் புரியலாம், கொடிய நஞ்சையும் உண்ணலாம். பகைவரால் வரும் துன்பத்தைத் தாங்குதல் அரிது” என்று அவர்கள் கூறுகின்ருர்கள்.

ஏற்றெழு வன்னிமேல் இனிது துஞ்சலாம்
தோற்றிய வெவ்விடம் எனினுந் துய்க்கலாம்
மாற்றலர் அலைத்திட வந்த வெந்துயர்
ஆற்றரிது ஆற்றரிது அலம்இப் புன்மையே.

இந்த வண்ணம், இந்திராதி இமையவர்கள், இமையா முக்கண் இறைவனிடம் முறையிட்டார்கள்.

ஆதலின் ஒரு வீட்டிலோ, நாட்டிலோ, பகை ஏற்படுமாயின் வாழ்வது அரிது. மனதில் சிறிதுகூடச் சாந்தியேயிராது.

தானவர்களது பகையால், வானவர்கள் பலகாலும் வருந்தினர்கள்.

கூனியின் பகையால் இராமர் இடர்ப்பட்டார். துரியோதனனது பகையால் பாண்டவர்கள் பரதவித் தார்கள்.

இன்றும் பகைவனது எல்லைப் பிடிப்பால், எல்லையில்லாத இடர் நேர்ந்துள்ளது.

### அகப்பகை

அன்றி அகப்பகையும் உளது. அது காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சர்யம் எனப்படும்.

"இந்த காமாதி யறுபகைவர்க்கு நாம் அஞ்சுதல் கூடாது. புறப்பகையனைத்தும் வென்றேன், அகப்பகையை யும் வெல்லுவேன்" என்று தயரதவள்ளல் கூறுகின்ருர்.

வெள்ளநீர் உலகினில் விண்ணில் நாகரில்
தள்ளரும் பகையெலாம் தவிர்த்து நின்றயான்
கள்ளரின் கரந்துறை காமம் ஆதியாம்
உள்ளுறை பகைஞருக்கு ஒதுங்கி வாழ்வெனே

இப்பாடலைப் பலகாலும் படித்துணர்தல் வேண்டும். பாடலின் நடையழகு, தொடையழகு, சொல்லழகு, பொரு ளழகு முதலியன படிக்குந்தோறும் படிக்குந்தோறும் நனியினிய இன்பத்தை நல்குகின்றன.

இனி, இந்த உட்பகைவரால் நலன் அழிந்த சிலர்களை இங்கு நினைவு கூர்தல் வேண்டும்.

### 1. காமம்

இதுதான் முதற்பகை.

காமம் என்ற சொல்லுக்கு ஆசை என்பது பொருள்.

காமத்தால் ஆவி துறந்தவர், தயரதர். மகன்மீது அள வற்ற ஆசை வைத்தார். அதனல், மகனுடைய பிரிவு என்ற துயர், அவருடைய உயிருக்கு இறுதியை நல்கியது.

மக்கள் மீது அன்பு வைக்கவேண்டும். ஆசை வைக்கக் கூடாது.

மகன் மீது அன்பு வைத்த கௌசலை வாழ்ந்தாள். ஆசை வைத்த சக்கரவர்த்தி மாய்ந்தார்.

அன்பு—வாழவைக்கும்
ஆசை—தாழவைக்கும்

## 2. குரோதம்

வடமதுரையையாண்ட உக்ரசேனனுடைய முதலமைச்சன் சூரசேனன். இவருடைய மக்கள் இரண்டு பெண்கள்; ஒரு ஆண். 1. குந்திதேவி, 2. சாத்துவதி, 3. வசுதேவர்.

குந்திதேவியின் மைந்தராகிய யுதிஷ்டிரர் இராசசூயம் என்ற பெரும் வேள்வியைச் செய்தார். அதன் முடிவில் முதல் தாம்பூலம் யாருக்குத் தருவது என்று யுதிஷ்டிரர் கேட்டார்.

வியாசமுனிவர், "ஞானபானுவாகிய கண்ணபிரானே முதல் மரியாதைக்கு உரியவர்" என்றார்.

அதுபடியே யுதிஷ்டிரர் முதல் தாம்பூலத்தை யதுகுல நந்தனராம் வாசுதேவருக்கு வழங்கலுற்றார்.

அப்போது வடவைக்கனல் கொதித்ததுபோல் சீறி யெழுந்து தடுத்தான் **சிசுபாலன்**.

குந்தியின் தங்கை சாத்துவதி. அவள் சேதி நாட்டு மன்னன் தருமகோஷனை மணந்தாள். அவளுடைய மகன் சிசுபாலன். தருமருக்குச் சிற்றன்னையின் மகன் சிசுபாலன்.

கண்ணபிரானுக்குச் சிறிய அத்தையின் மகன் அவன்.

ஆகவே சிசுபாலனுடைய தாய் மாமன் மகன் கண்ணன்.

கண்ணனுக்கு வரும் பெருமையைக் கண்டு, குரோதம் உற்றான். கண்ணபிரானுடன் எதிர்த்துப் போரிட்டு மடிந்தான்.

## 3. லோபம்

ஒரு மனிதனிடத்தில் ஆயிரக்கணக்கில் நற்குணங்கள் அமைந்திருப்பினும், உலோபம் என்ற ஒரு தீக் குணம் இருப்பின், அந்த ஒன்று ஏனைய நற்குணங்கள் அனைத்தையும் அழித்துவிடும்.

"தாடகை என்ற ஒருத்தி, வளமையான வனம் முழுவதையும் அழித்துவிட்டாள், உலோபமானது, சகல நற்குணங்களையும் அழிப்பதுபோல் என உணர்க" என்று ஸ்ரீராமருக்கு விச்வாமித்திர முனிவர் கூறுகின்றார்.

உளப்பரும் பிணிப்புரு உலோபம் ஒன்றுமே
அளப்பரும் குணங்களை அழிக்கு மாறுபோல்
கிளப்பரும் கொடுமைய அரக்கி கேடிலா
வளப்பரு மருத வைப்பு அழித்து மாற்றினாள்.

பாண்டவருக்குப் பாதிராஜ்யம் சேரவேண்டும். சமாதானத்தை விரும்பிய தருமர், கண்ணபிரானைத் தூது அனுப்பி, ஐந்து வீடுகள்மட்டுந் தந்தால் போதும்; ஒற்றுமையாக வாழலாம் என்று கேட்டார்.

மூடனாகிய துரியோதனன், ஐந்து வீடுகளைத் தந்திருந்தால் பரம சுகமாகச் சுற்றம் நண்பர் சூழ வாழ்ந்திருப்பான். ஊசி நாட்டும் இடமும் தரமாட்டேன் என்று மறுத்தான். இந்த உலோப குணம் ஒன்றால், துரியோதனன் தன் குலத்துடன் மாய்ந்தான்.

## 4. மோகம்

மோகத்தால் முழுவதும் அழிந்தவன் இராவணன்.

தன் மனைவியருடன் இனிது வாழ்ந்திருக்கலாம், பிறன் மனைவியாகிய சீதை மீது மோகம்வைத்து, மூவுலக ஆட்சியை முற்றிலுந் துறந்து இறந்தான்.

### 5. மதம்

ஆயிரத்தெட்டு அண்டங்கட்கும் நான் தலைவன். எனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லையென்று, தருக்குற்று அழிந்தான் சூரபன்மன்.

மனிதனிடம், மதம் புகுந்தால் அழிவான்.

யானைக்குக் கன்ன மதம், கரட மதம், கபோல மதம் என்ற மும்மதங்கள் உண்டு.

அதுபோல் மனிதனிடமும், தனமதம், வித்யா மதம், குலமதம் என்ற மும்மதங்கள் இருக்கின்றன. எம்மதமும் சம்மதம் என்று எண்ணாத, இம்மதங்களான மும்மதங்களால் அழிகின்றார் பலர்.

### 6. மாத்சர்யம்

கம்சன் என்ற யதுகுலவேந்தன், தன் தங்கையின் மைந்தரான கண்ணபிரான் மீது, மாத்சர்யங்கொண்டு நாசம் அடைந்தான்.

ஆதலால் இந்த அரிஷட்வர்க்கம் என்கிற உட்பகை ஆறையும் வென்று, மனிதன் சாந்தி பெறுதல் வேண்டும்.

## 11. பற்று

எண்ணிலாத நெடுங்காலமாக எண்ணிலாத பல பிறவிகளை எடுத்துக் கொண்டே வருகிறோம். "நாம் பிறவா நிலனும் இல்லை; அவ்வயின் இறவா நிலனும் இல்லை." இங்ஙனம் ஓயாமல் பிறவி வந்து கொண்டே இருக்கிறது. இதற்கு என்ன காரணம்? நம்மை விடாமல் ஒன்று பற்றிக் கொண்டிருக்கிறது. அது நம்மை எப்பொழுது விட்டு நீங்குகிறதோ, அப்பொழுதுதான் பிறவிக்கடலினின்றுங் கரையேறி முத்திவீடு சேரலாம். நம்மைப் பற்றிக் கொண்டிருப்பது எது? என்னில் "பற்று". "பற்று" என்ற ஒன்று நம்மை மிக அழுத்தமாகப் பற்றிக்கொண்டிருக்கிறது. அப்

பற்று நம்மை விட்டு நீங்கினுல்தான் பிறவிப்பகை ஒழியும். அப்பற்றை அறவே ஒழிக்கவேண்டும். இதனைத் திருவள்ளுவர்,

"பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்."

என்றனர்.

பிறவி ஒழியாமல் வருவதற்குக் காரணம் பற்றேயாம். காரணம் அற்ற பொழுதே காரியமும் நீங்குமல்லவா? ஓரிடத்தில் புகையும் நெருப்பும் இருக்கின்றன. நெருப்பு காரணம்; புகை காரியம். காரணமான நெருப்பு ஒழிந்தவுடனே, காரியமான புகை தானே ஒழியும். அதுபோலக் காரணமான பற்று அற்ற உடனே, காரியமான பிறவி தானே ஒழியும். பற்றற்றபோது பரமன் திருவருள் புரிகிறுன். நம் மணிவாசகனுர், "பற்று நான் மற்றிலேன் கண்டாய்" என்றனர். இக்கருத்தை நம்மாழ்வாரும் நன்கு புலப்படுத்தினர்.

"அற்றது பற்றெனில் உற்றது வீடுயிர்
செற்றது மன்னுறில் அற்றிறை பற்றே"

—திருவாய்மொழி.

இனி பற்று, புறப்பற்று, அகப்பற்று என்று இருவகைப்படும்.

## புறப்பற்று

புறப்பற்ருவது "எனது" "எனது" என்பதாம். என்னுடைய வீடு, என்னுடைய பாத்திரம், என்னுடைய நிலம், என்னுடைய கை, என்னுடைய சரீரம் என்று கூறுகிறேம். இதுவே புறப்பற்று. துறந்தவர்கள் என்று பேர்வைத்துக் கொண்டிருக்கிறவர்களுக்குங்கூட, இப்பற்று முற்றும் நீங்கியதாகக் காண்கிறேமில்லை. பத்திரகிரியார் ஓடு ஒன்று வைத்துக்கொண்டிருந்ததனுல், அவரைச் சமுசாரி என்று பட்டினத்தார் கூறினர். அதனைக் கேட்ட பத்திரகிரியார் அந்த ஓட்டையும் உடனே விட்டெறிந்தனர். ஜனகராஜன், தனது மிதுலாபுரி முழுதும் பற்றி எரிகிறதென்று சொல்லியும், அசைவற்றிருந்தார்.

சதாசிவப் பிரம்மேந்திரர் என்று ஒருபெரியார் இருந்தார். அவர், பற்று நீங்கிய பரமஞானி. அவர், ஒரு சமயம், மகம்மதிய அரசனுடைய அரண்மனைக்கு அருகில் போய்க் கொண்டிருந்தார். அரசன் கண்டு, சினந்து காவலர்களை ஏவித் தண்டிக்கச் சொன்னான். அக்காவலர்கள் போய்க் கொண்டிருந்த மெய்ஞ்ஞானியாகிய அவர் கரத்தைத் தோள் மட்டிலும் வாள்கொண்டு துணித்துவிட்டனர். கரமற்றுக் கீழே வீழ்ந்தது. உதிரம் பெருகி வழிகிறது. சதாசிவப் பிரம்மேந்திரர் அதனை உணரவேயில்லை. எனது கரம் போய் விட்டதே யென்று துடித்தாரில்லை. அவர் அப்படியே சென்று கொண்டே யிருந்தார். அவருடைய பற்றற்ற நிலையை மன்னன் கண்டு வெருவி, மன்னிப்புக் கேட்டுக்கொண்டனன்.

எனது என்ற எண்ணம் நீங்கினால், ஆசையே தோன்றாது. ஒரு பொருளை, எனது என்று ஒருவன் எண்ணியிருக்கிறான்; அப்பொருளை, மற்றொருவன் அபகரித்துக் கொண்டால், உடனே கோபம் வருகிறது; கோபத்தால் மயக்கம் வருகிறது; செய்யத் தக்கவை இன்னவை, செய்யத்தகாதவை இன்னவை என்ற நல்லுணர்ச்சி ஒழிகிறது; கொலையுஞ் செய்யத்துணிகிறான்; இவ்வளவுக்கும் காரணம் "எனது" என்பதேயாகும். ஒரு பொருளை 'எனதல்ல' என்று ஒருவன் எண்ணியிருக்கிறான்; அப்பொருளை யாராவது எடுத்துக் கொண்டால் அதுபற்றி அவனுக்குக் கவலையே கிடையாதல்லவா? உலகத்தில், என்னுடைய பொருள் என்று எவ்வளவுக் கெவ்வளவு ஆக்கிக்கொள்கிறார்களோ, அவ்வளவுக் கவ்வளவு துன்பம் மேலிடுகிறது. உலகத்திலுள்ள பொருள்கள் முழுவதுமே என்னதாக ஆகாதா என்று எண்ணுகிறார்கள். என்னது அல்ல என்று நீக்கிக் கொண்டே வந்தால், துன்பமும் நீங்கிக் கொண்டே வரும்.

இராவண சங்காரத்திற்குப்பின் இரகுராமர் அயோத்திமா நகரத்தை அரசு செலுத்திக்கொண்டிருந்த சமயம், ஒருநாள் கைகேயி ஸ்ரீராமரிடம் வந்து மனத்தால் வணங்கி இனிமையாகக் கூறுகிறாள். "மரகத வண்ணா! கருணை

நிறைந்த ரகுவீரா! நான் அறியாமையால் முன்பு செய்த அபசாரங்களை மன்னிக்க வேண்டும். உன்னைச் சரணமாக அடைந்திருக்கிறேன். நின் விஷயத்தில் நான் புரிந்த குற்றத்தை உன்னி உன்னி உள்ளம் வருந்துகிறேன். பிறவிப் பெருங்கடலில் வீழ்ந்து இடர்ப்படுகின்ற என்னை, உன்னுடைய உபதேசமாகிய தோணியைக் கொண்டு கரை சேர்க்க வேண்டும். எனது அஞ்ஞானம் அகலுமாறு உபதேசம் செய்யவேண்டும்" என்றனள்.

இராமபிரான் புன்முறுவல் கொண்டு "அம்மா! வருந்தாதே; நீ எனக்கு ஒரு தீங்கும் புரிந்ததில்லை; தேவகாரியமாக, எனது எண்ணத்தின்படி கலைமகள் நின்று நாவிலிருந்து வரங்கேட்டு என்னை வனத்திற்கு அனுப்பச் செய்தனள். உன்னிடம் எனக்கு ஒரு சிறிதும் சினமில்லை. நீ உண்மையான ஞானத்தை அடைவாயாக. நாளைய தினம் இலக்குமணன் உன்னை அழைத்துக் கொண்டு போய் உபதேசம் புரிவிப்பான்; செல்லுதி" என்று கைகேயிக்கு விடை கொடுத்தனுப்பினர். உடனே இலக்குமணரை அழைத்து "அருமைத் துணைவா! நாளையதினம் காலையில், கைகேயியைப் பல்லக்கிலேற்றி, நமது நகருக்குவெளியில் சரயுநதிக் கரையில் ஆட்டுக் கூட்டங்கள் இருக்கும் இடத்தில் அழைத்துக் கொண்டு போய், ஒரு முகூர்த்த நேரம் அங்கு இருக்கச்செய்து, அந்த ஆடுகள் ஒலிக்கும் ஒலியை கைகேயி நன்ருகக் கேட்டுத் தெளிவடைந்தபின், என்னிடம் அழைத்துக் கொண்டுவா" என்று கட்டளை யிட்டனர். இரவிகுல திலகருடைய வசனத்தைக் கேட்ட சௌமித்திரி (இலக்குமணர்) "அங்ஙனமே செய்கிறேன்" என்று கூறி விடைபெற்றுச் சென்ருர்.

அடுத்தநாள் காலை இலக்குமணன், பரதருடைய பொன் மாளிகை சென்று, ஆங்கு மகிழ்வுடனிருக்கும் கைகேயியைக் கண்டு, இராமருடைய கட்டளையைக் கூறி, பல்லக்கில் ஏற்றிக் கொண்டு, இகுளைகளும் வாளேந்திய காவலர்களும் சூழ்ந்து வர, அயோத்திமா நகரைக் கடந்து, சரயுநதிக் கரைசென்று, ஆட்டு மந்தைக்கு மத்தியில் பல்லக்கை நிறுத்தி பல்லக்கினின்றும் கைகேயியை இறக்கினர். "அம்மா! இந்த ஆடுகளின்

ஒலியைக் கவனிக்குமாறு இராமருடைய கட்டளை'' என்றனர். உடனே கைகேயி ஆடுகளின் ஒலியைக் உற்றுக் கேட்டனள். ஆடுகள் 'மே! மே!' என்று கூவிக் கொண்டிருந்தன. இந்த ஆடுகள் எதற்காக மே! மே! என்று ஓயாமல் கூவுகின்றன வென்று சற்று நேரம் ஆராய்ச்சி செய்தனள். உடனே அவள் அந்த ஒலியின் இரகசியத்தைத் தெரிந்து கொண்டனள். அஞ்ஞானம் விலகி ஞானம் உதித்தது. அவள் முகத்தில் ஞான ஒளி வீசிற்று. அகமகிழ்ந்தாள். இலக்குமணரை நோக்கி, "குழந்தாய்! பற்றற்ற மெய்ஞ் ஞானத்தை யடைந்தேன்; ஸ்ரீராமரிடம் என்னை அழைத்துக் கொண்டு செல்லுதி'' என்றனள். இலக்குமணர் உடனே கைகேயியைப் பல்லக்கிலேற்றி அரண்மனைக்குக் கொண்டு வந்தார். கைகேயி பல்லக்கை விட்டிழிந்து, இராமரிடம் சென்று, மலர்ந்த முகத்துடன் இரகு புங்கவரை நோக்கி, "காகுஸ்தா! உனது கருணையால், ஆடுகளின் ஒலியைக் கேட்டு ஆராய்ந்து பார்த்தேன்; அறியாமை விலகிற்று; மெய்யறிவு விளங்கப் பெற்றேன். இனி உனது உபதேசத்தை நான் விரும்பவில்லை. உபதேசிக்காமலே உபதேசித்து விட்டாய்'' என்றனள். கைகேயியின் கட்டுரைகளைக் கேட்ட இரகுநந்தனர் இளநகை கொண்டு, "அம்மா! எவ்வாறு நீ மெய்யுணர்வு பெற்றனை? ஆடுகளின் ஒலியிலிருந்து நீ எதைத் தெரிந்து கொண்டாய்? உன் ஆராய்ச்சியின் தன்மையை விவரமாகக் கூறுதி'' என்றனர்.

கைகேயி, "தாசரதீ! சீதாபதீ! நான் ஞானம் பெற்ற வகையைக் கூறுகிறேன்; கேட்டருள்வாய். ஆட்டுக் கூட்டங்களினிடையிற் சென்று அவைகளினொலியைக் கேட்டு ஆராய்ந்தேன். அந்த ஆடுகள் மே! மே! என்று எனக்காகவே கூறின. உலகின்கண் எல்லோரும் பசுக்கள், மனைவி, மக்கள், வீடுகள், ஆடையாபரணங்கள் முதலியவைகளை என்னுடையது, என்னுடையது என்று சொல்லுகிறார்கள். அந்த எனது என்ற பற்றை இந்த ஆடுகள் மறுத்துக் கூறுகின்றன. அவ்வாடுகள் மனிதர்களை நோக்கி 'ஏ ஜனங்களே! எனது என்ற பற்றை அறவே நீக்க வேண்டும்; நாங்கள் முன்

ஜென்மத்தில் எனது எனது என்று சொல்லிக் கொண்டிருந் தோம். அதனுல் இந்த ஜென்மத்தில் ஆடுகளாகப் பிறந் திருக்கிருேம். ஏ மனிதர்களே! எப்போதும் எனது என்ற பற்றை யடையாதீர்கள். அதனே உடனே விட்டு விடுங்கள். அப்படி விடாமற்போனுல் நீங்களும் எமது நிலேயை யடை வீர்கள். நாங்கள் மே! (எனது) மே! (எனது) என்று ஓயாமல் கூவிக் கொண்டிருக்கிருேம். உண்மை யுணருங்கள்'' என்று எப்போதும் ஜனங்களுக்குத் தெரியப்படுத்துகின்றன. அந்த ஒலியின் தத்துவத்தை மனிதர்கள் அறிவினுல் அறிகிறதில்லே. ஸ்ரீராமா! எனது வீடு, எனது இராஜ்யம், எனது சக்களத்தி, எனது அழகிய உடல், எனது ஆடை, எனது ஆபரணம், எனது அன்புடைய தோழியாகிய கூனி இவை முதலிய எனது எனது என்ற கெட்ட எண்ணங்கள் என் மனதில் குடிகொண் டிருந்தன அல்லவா? அவைகளே விட்டுவிட வேண்டு மென்று அந்த ஆடுகள் எனக்கு அறிவுறுத்தின. அவைகளின் வாக்கி யங்களாலும் உனது திருவருளாலும் மே! மே! எனது எனது என்ற பற்ருனது என்னேவிட்டு நீங்கிற்று. எனது சரீரம் என்ற எண்ணத்தையே விட்டுவிட்டேன். ஆதலால் இப் போது தூய்மையை யடைந்தேன். இந்தச் சரீரம் சுகமே இருக்கினும் இருக்குக; இன்றே இறக்கினும் இறக்குக; இன்பமுமில்லே துன்பமுமில்லே'' என்றனள்.

ஸ்ரீராமர் கைகேயியின் பொருளடங்கியவார்த்தைகளேக் கேட்டுப் புன்முறுவல் பூத்து, "அம்மா! நீ நன்ருக அறிவைச் செலுத்தி ஆராய்ச்சி செய்தனே. அறியாமையினின்றும் விடுபட்டனே. மெய்ஞ்ஞானம் மிளிரப்பெற்றனே. பற்றற்ற பரமசுகத்தை அடைந்தாய். நின் உறைவிடம் சென்று சுகமே வாழ்வாயாக'' என்றனர். கைகேயி இராமபிரானே மனவணக்கம் புரிந்து தன்னிருக்கை சேர்ந்து எந்தப் பொருள் மீதும் பற்றில்லாதவளாகி பரமேஸ்வரனேத் தியானம் புரிந்து கொண்டிருந்தாள்.

எனது எனும் புறப்பற்று நீங்க, மெய்யறிவு தோன்றும் என இதுகாறும் கூறிவந்த இத்தனே பொருள்களேயும்

ஒன்ருகத்திரட்டி விழுங்கிவிட்டது அடியிற்கண்ட அருண கிரயாரது திருவாக்கு.

"எனதெனும் மலமறி லறிவினில்
எளிது பெறலென மறைபறை யறைவதோ
ருதய மரணமில் பொருளினை யருளுவ தொருநாளே"
—(கருணைசிறிது) திருப்புகழ்

## அகப்பற்று

இதுகாறும் எனது என்ற புறப்பற்றைப் பற்றிக் கூறினேம். இனி அதற்கு அடுத்தபடியான **அகப்பற்றைப்** பற்றிச் சிறிது விளக்குவாம். "நான்" "நான்" என்கிற எண்ணந்தான் அகப்பற்று என்பது. நான் செய்தேன், நான் சம்பாதித்தேன், நான் எல்லோரையுங் காப்பாற்றினேன், நான் நடத்தினேன், நான் மிகவுஞ் சமர்த்தன் என்ற எண்ணங்களை அடியோடு தொலைக்க வேண்டும். இந்த நான் என்கிற எண்ணம் என்று நீங்குகிறதோ அன்றே மெய்ஞ் ஞானந் தலைப்படும். இதனை மணிவாசகனரும் "நான் கெட்டவா பாடித் தெள்ளேணங் கொட்டாமோ" என்று அருளிச் செய்தமையாலுந் தெளிக. நான் என்ற எண்ணம் கெட்டொழிந்தவுடனே, துன்பம் முழுவதும் நீங்கப்பெற்று, அருட்பெருஞ் ஜோதி தெரிசனம் உண்டாகும்; ஆனந்தம் உதிக்கும்; என்றுமழியா இன்பம் தோன்றும்.

நஞ்செய லற்றிந்த நாமற்ற பின்னாதன்
தன்செயல் தானேயென் றுந்தீபற
தன்னையே தந்தானென் றுந்தீபற,
—திருவுந்தியார்.

"நானென்ப தற்றுயிரொ டீனென்ப தற்றுவெளி
நாதம் பரப்பிரம வொளிமீதே
ஞானஞ் சுரப்பமகி ழானந்த சித்தியொடெ
நாளுங் களிக்க பதம் அருள்வாயே"
—(தேனுந்து) திருப்புகழ்.

சுமித்திரை ஒரு சமயத்தில் ஸ்ரீராமரிடம் வந்து மன வணக்கம் புரிந்து "தசரத பாலா! தானவ குலகாலா! உனது

சந்நிதியில் விண்ணப்பம் ஒன்று உண்டு. எனது அஞ்ஞானம் விலக மெய்ஞ்ஞானத்தை உபதேசிக்கவேண்டும்" என்ருள். இரவிகுலோத்தமர் "அம்மா நீ யார்? என்பதை முதலிற் கூறுவாயாக; பின்னர் உனக்கு உபதேசிக்கிறேன்; நின் இருக்கை புக்கு ஆராய்க" என்றனர். சுமித்திரை இரகு ராமருடைய அந்த வார்த்தையைக் கேட்டு அதிசயமுற்று, வேறென்றும் கூருமல், மீண்டுந்தனது மாளிகைவந்து "நான் யார்" என்று ஆராயலுற்ருள். நான் என்ன குலம்? குலம் என்பது உடம்பைப்பற்றியதல்ல; உடம்புக்குக் குல மில்லை; உயிருக்கும் குலமில்லை; எனவே, நான் அந்தண குலமுமல்ல, அரச குலமுமல்ல, வைசிய குலமுமல்ல, வேளாண் குலமுமல்ல. நான் தேவமாதா? அசுரமாதா? மானுட மங்கையா? என்னில், நாடகம் நடிப்பவன் எப்படி மாறிமாறி வேடந் தரிப்பானே, அப்படி மாறிமாறிப் பிறக் கிறேன். ஆதலால் நான் எந்தவகை மாதுமல்ல. நான் என்பது எது? உடம்பிலுள்ள உரோமமா? அவ்வுரோமம் படர்ந்த தோலா? தோலால் மூடிய தசையா? அத்தசையில் ஊறும் உதிரமா? ஆங்காங்குள்ள எலும்பா? மூளையா? உடம் பிலுள்ள புழுக்களின் கூட்டமா? வயிற்றிலுள்ளிருக்கும் மலக் குவியலா? இவ்வுடம்பை நன்ருகக் கட்டிவைத்துள்ள நரம்பா? எக்காலத்தும் பிரியாதிருக்கும் நோயா? நான் என்ற பொருளே இல்லை. தேகத்திற்கும் எனக்கும் சம்பந்தமில்லை யானபடியால் தேகம் நானல்ல என்று தெளிவடைந்தாள்.

"நான்வே றென் னுடல் வேறு
செகத்தியாவும் வேருக நிகழ்ச்சியா மனேதீத
சிவச் சொரூப மாயோகி என ஆள்வாய்"
—(அனித்தமான) திருப்புகழ்.

பாராதி பூத நீ யல்லை—உன்னிப்
பாரிந் திரியங் கரண நீ யல்லை
ஆரா யுணர்வுநீ என்ருன்—ஐய
னன்பா யுரைத்த சொல் லானந்தந் தோழி.

அடுத்தநாள் சுமித்திரை இராமரிடம் வந்து "ஸ்ரீராமா! ஞானம் உதித்தது; இனி உனது உபதேசம் வேண்டியதில்லை.

நான் என்ற பொருளே இல்லை. நான் என்ற எண்ணம் நீங்கி நிரதிசயானந்தப் பெருவாழ்வை யடைந்தேன்" என்று கூறினள். இரகுராமர் மகிழ்ந்து "அம்மா? நன்கு ஆராய்ச்சி செய்தாய்; நல்லுணர்ச்சி பெற்றுய். இனி உனக்குப் பிறவி யில்லை; நின்னிருப்பிடம் சென்று சுகமே இருப்பாயாக" என்றனர். சுமித்திரை இராமரிடம் விடைபெற்று இருக்கை சேர்ந்து, நான் என்ற எண்ணம் நீங்கினவளாய் இன்பவாழ்வில் திளைத்திருந்தனள்.

இதனைத் திருவெண்காடரது திருவாக்கு நன்கு புலப்படுத்துமாறு காண்க.

"மேவிய புன்மயிர்த் தோகையோ அம்மயிர்
பாவிய தோலின் பரப்போ தோலிடைப்
புகவிட்டுப் பொதிந்த புண்ணே புண்ணிடை
ஊறும் உதிரப் புனலோ கூறுசெய்
திடையிடை நிற்கும் எலும்போ எலும்பிடை
முடைகெழு மூளை விழுதோ வழுவழுத்
துள்ளிடை ஒழுகும் வழும்போ மெள்ளநின்
றூரும் புழுவின் ஒழுங்கோ நீரிடை
வைத்த மலத்தின் குவையோ வைத்துக்
கட்டிய நரம்பின் கயிறோ உடம்பிற்குள்
பிரியா தொறுக்கும் பிணியோ தெரியா
தின்ன தியானென் றறியேன் என்னை
ஏதினுந் தேடினேன் யாதினுங் காணேன்"

இக்கருத்துக்கள் யாவையும் சுருங்கக்கூறி விளங்க வைக்கும் கந்தரபூதித் திருவாக்காலு முணர்க.

"யானாகிய என்னை விழுங்கி வெறுந்
தானாய் நிலை நின்றது தற்பரமே"

இந்த நானெனும் பற்றொழிய சுமித்திரைக்கு உபதேசித்தவாறே, ஸ்ரீராமர் தனது தாயாராகிய கௌசலைக்கும் உபதேசித்துள்ளனர். அது வருமாறு காண்க.

ஒருநாள் கௌசலை தன் அருமந்த புத்திரனாகிய இராமரிடம் வந்தாள். ஸ்ரீராமர் எழுந்து தாயாருக்கு வணக்கம்

புரிந்து நின்றார். கௌசலை "மைந்தா! பவசாகரத்தைத் தாண்டுவதற்கு ஓர் உபதேசம் புரியவேண்டும். பந்தபாச மாகிய அழுக்குகளால் கலங்கிய என் இதயமாகிய தடா கத்தை நின் உபதேசமாகிய தேற்றாங்கொட்டையால் தெளியச் செய்ய வேண்டும்" என்றனள். ஸ்ரீராமர், அன்னை யின் மொழியைக் கேட்டு புன்னகை புரிந்து "அம்மா! நாளைக் காலையில் எழுந்திருந்து பசுக்களைக் கட்டியிருக்கும் தொழுவஞ்சென்று, சற்றுநேரம் ஆவின் கன்றுகளின் வசனத் தைக்கேட்டு, அதனை மனதில் ஆராய்ச்சி புரிந்து, பிறகு என் அருகில் வருவாய்; நான் பின்னர் உனக்கு உபதேசம் புரி கிறேன்" என்றனர். கௌசலை மகனுடைய வார்த்தை யைக்கேட்டு வியப்புற்று, தன்னிருப்பிடம் சென்று, மறுநாள் அருணோதயத்தில் பசுத்தொழுவத்தை யடைந்தாள். பசு வின் கன்றுகள் ஒலியை உற்றுக் கேட்டனள். பசுவின் கன்று கள் "அஹம்மா" "அஹம்மா!" என்று கூவிக்கொண்டிருந் தன. அந்த ஒலியைக் கேட்ட கௌசலை இந்தக் கன்றுகள் அஹம்மா! என்று ஏன் கூறுகின்றன? இவ்வொலியின் தத்துவமென்ன? என்று ஆராய்ந்து பார்த்தனள். அஞ் ஞானம் நீங்கப்பெற்றாள்; மெய்யறிவுபெற்று விளங்கினாள்; உள்ளத்தில் உவகையூற்றெடுத்தது. உடனே இராமரிடம் வந்து, "குழந்தாய்! கன்றுகளின் ஒலியைக்கேட்டு மெய்ஞ் ஞானம் பெற்றேன்; இனி உன் உபதேசத்தை நான் விரும்ப வில்லை" என்றனள். அன்னையின் அருமொழியைக் கேட்ட இராமர், "அம்மா! கன்றுகளின் வசனத்தால் உனக்கு எவ் விதம் ஞானம் உதித்தது? அவ்வொலியிலிருந்து நீ எதைத் தெரிந்துகொண்டாய்? விவரமாகக்கூறுதி"என்று வினவினார்.

கௌசலை, "இரகுநந்தன! ஆவின் கன்றுகளின் "அஹம்மா" என்ற ஒலியைக்கேட்டு, அதன் தத்துவத்தைக் கருத்தூன்றிக் கவனித்தேன்; அதன் பொருளை யுணர்ந்தேன்! அக்கன்றுகள் மனிதர்களை நோக்கி 'ஏ ஜனங்களே! "அஹம்மா" (அஹம்-நான், மா-இல்லை) நான் இல்லை யென்று சொல்லுங்கள். "நான்" "நான்" என்று எண்ணு கிறவரை பிறவிப் பெரும்பிணி நீங்காது; "அஹம்மா" நான் இல்லை என்றுணருங்கள்" என்று தெரிவிக்கின்றன. இவ்வரிய

விஷயத்தை மாந்தர் அறியவில்லை, இப்போது என் புத்தி தெளிந்து விட்டது; நான் என்ற எண்ணம் விலகிற்று" என்றனள். அதுகேட்ட ஸ்ரீராமர் மனமகிழ்ந்து "அம்மா! நீ மெய்ஞ்ஞானத்தை யடைந்தனை. இனி உனக்குப் பிறவி யில்லை! நான் உங்கள் மூவருக்கும் எனது வாக்கால் உபதேசிக்காமல் இருந்ததற்குக் காரணம் கூறுகிறேன். உபதேசிக்கிறவன் குருவாக ஆகிறான்; நான் உங்கள் மூவருக்கும் குமாரன்; பெண்களுக்குக் கணவன்தான் குரு; எப்போதும் கணவனைத்தவிர வேறு கதியில்லை. ஆதலால் நான் உங்களுக்கு நேர்முகத்தில் உபதேசிக்கவில்லை. இனி அரண்மனை சென்று சுகித்திருப்பாய்" என்று கூறினார். கௌசலை தன்னிருக்கை நண்ணி நான் என்ற அகப்பற்றை யொழித்து ஞான மயமாய்த் திகழ்ந்தனள்.

இவ்வரிய கருத்தை நம் அருணகிரியாரும் அழகாக உரைத்தனர்.

நானு ரொடுங்க நானுர் வணங்க
நானுர் மகிழ்ந்து உனையோத
நானு ரிரங்க நானு ருணங்க
நானுர் நடந்து விழநானுர்.
—(ஊனேறெலும்பு) திருப்புகழ்.

மெய்யன்பர்களே!

இப் புறப்பற்றும் அகப்பற்றும் அறவே நீங்கப் பெருதவர்கள் எத்தனை கோடிகாலந் தவங்கிடந்தாலுங் கடவுளைக் காணமுடியாது. யான் எனதென்னும் பற்றறுக்காதவரை ஈன சமயத்தார் என்றனர் நம் அருணகிரியார்.

யானென தெனச்சருவு மீனசமயத் தெவரும்
யாரு முணர் தற்கரிய நேர்மைக்காரனும்
—வேளைக்காரன் வகுப்பு.

நான் எனது என்ற இருபற்றுகளையும் வடமொழியில் அகங்காரம் மமகாரம் என்பர். இந்தப் பற்றுகளிரண்டும் நீங்குவதற்கு உபாயம் பற்றற்ற பரமனை வழிபடுவதேயாம். தனக்குவமையில்லாத் தலைவனுகிய அத் தயாசாகரனது

தாடாமரைக்கு அன்பு செய்வதால் பற்று நீங்கும்; நீங்கவே வானவருக்கும் மேலான முத்தி வீடு உண்டாகும்.

யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.

—பொய்யாமொழி.

இதுகாறுங் கூறிவந்த விஷயங்களையும், விரியுமென அஞ்சிக் கூறாத விஷயங்களையும், உபநிடதங்களின் முடிவுகளையும், சித்தாந்த சாத்திரங்களின் நுட்பங்களையும் தன்னகத்தே அடக்கி, அணுவைத் துளைத் தேழ்கடலைப் புகட்டியவாறு, சுருங்கக்கூறி விளங்கவைக்கும் அடியிற்கண்ட நம் அருணகிரிநாத சுவாமிகள் அருளிச் செய்த தமிழ் வேதம் முரசென முழங்குமாறு காண்க.

"எனதியானும் வேறாகி எவரும் யாதும் யானாகும்
இதய பாவனா தீதப் அருள்வாயே"

—(அமலவாயு) திருப்புகழ்.

## 12. சத்தியம்

### "சத்யம் வத"—வேதம்

### (உண்மையைப் பேசு)

கடவுள் சத்தியவடிவாக விளங்குகின்றார். விளையாட்டிற்கும் பொய் சொல்லுவதில்லை என்ற சத்தியநெறியில் நின்றவன், இமயமலையினும் சிறந்தவனாவான். அச் சத்தியவானைச் சண்டமாருதத்தாலும் அசைக்க முடியாது. அவனுக்கு மூன்று உலகமும் அடிமைப்படுகின்றன. அவனை வெல்ல இந்திரனாலும் முடியாது. உண்மையே யுரைப்போனுடைய சொற்கள், வஜ்ஜிராயுதத்தினும் வன்மையுடையன. அவனுடைய உள்ளம் மானச சரோவரத்திலுள்ள நீரைப் போல் தெளிந்திருக்கும். கடலைக் கலக்கிச் சேறாக்கினாலும் ஆக்கலாம்; அவன் உள்ளத்தைக் கலக்கி அசுத்தஞ் செய்ய முடியாது. எத்தனையுயர்ந்த தவத்தைப் புரியினும் பொய்மை

யென்னும் புன்மை இருக்குமேல் அத்தவம் நன்மையைத் தராது.

"யாமெய்யாக் கண்டவற்று ளில்லை எனைத்
தொன்றும்
வாய்மையி னல்ல பிற"

என்ற பொய்யாமொழியை யுணராதார் யாவர்? சத்தியத்தினும் உயர்ந்த தருமமில்லை. அசத்தியத்தினும் உயர்ந்த அதருமமில்லை. பூகம்பத்தால் உலகம் அசையினும் சத்தியம் அசையாது. அதை மேற்கொண்டோன், எக்காலத்திலும் தாமரைத் தடாகத்திலிருப்பதுபோல் இன்புற்றிருப்பான். ஆதலால், எக்காலத்திலும், யாவரிடத்தினும், சத்தியத்தையே பேசவேண்டும். அவ்வாறின்றி உண்மையை ஒளிப்பதனுல், பற்பல கேடுகள் உண்டாகும். உண்மையை ஒளிப்பவனுடைய தவம், தானம், தருமம், கல்வி முதலியவை கிருஷ்ணபக்ஷத்துச் சந்திரனைப்போல் தேயும்.

முன்னொருகாலத்தில் **தேவசர்மா** என்ற தவமுனிவர் இருந்தார். அவர் காமம், வெகுளி, மயக்கம் என்ற முக்குற்றங்களையும் கடிந்தவர். தவத்தையே தனமாகக் கொண்டவர். **ரிசி** என்ற தருமபத்தினியுடன், அறவொழுக்கில் அசைவற்று வாழ்ந்தார். அவரிடம் **விபுலன்** என்ற மாணவன் வேதங்களையும், அங்கங்களையும் அன்புடன் ஓதிவந்தான். ஒரு சமயம் அந்த முனிவர் வேள்வி சம்பந்தமாக வெளியிற் செல்ல நேர்ந்தது. அவ்வாறு புறப்படும்போது தனது சீடனையழைத்து, "விபுலா! நான் வருகின்றவரை எனது மனைவியைப் பாதுகாத்துக்கொள். இந்திரனே மிகவும் காமி; மாயாவி. அவன் எவ்விதமாயினும், கட்டழகும் கற்பொழுக்கமுமுடைய எனது மனைவியின் கருத்தைக் கலைக்கப் பார்ப்பான். ஆதலால் அவனுடைய கருத்து நிறைவேருவண்ணம், மிகவும் விழிப்புடன் இருந்து, பாதுகாத்துவரவேண்டியது நின் கடமை" என்று கட்டளையிட்டுச் சென்ருர்.

விபுலன், குருநாதனுடய கட்டளையைச் சிரமேற்கொண்டு, மிகவும் விழிப்புடன் குருபத்தினியின் அருகிலேயே இருந்து காத்துவந்தான். விபுலன், "இந்திரனை வெற்றி

பெறுவதற்கு நாம் வேருக இருந்தால் முடியாது. எப்படி யாவது இந்திரன் ஏமாற்றிவிடுவான். குருபத்தினியின் மனத்தை மாற்றி, அவளைக் கெடுத்துவிடுவான். ஆதலால் நாம் குருபத்தினியின் உடம்பில், அருவமாக இருந்து காக்க வேண்டும்'' என்று எண்ணி, பரிசுத்த மனத்துடன், தனது யோகசக்தியால், குருவின் மனைவி யுடம்பில் பிரவேசித்துத் தாமரையிலைத் தண்ணீர் எனப் பற்றற்று இருந்தான். இந்திரனும், மிகவும் அழகிய உருவத்துடன் வந்துவிட்டான். யாருமில்லாத பர்ணசாலையில் புகுந்தான். ரிசி தனித் திருப்பதைக் கண்டு, இதுதான் தக்க சமயமென்று உணர்ந்து, அவள் மனத்தைக் கலைக்க முயன்ருன். ரிசியின் மனம் சற்று சஞ்சலித்தது. அவள் இந்திரனை நல்லுரை கூறி உபசரிக்க எண்ணினுள். விபுலன் உள்ளிருப்பதால் அவன் பலத்தால் எழுந்திருக்க முடியவில்லை; பேச முடியவில்லை. இந்திரன் பற்பல பிதற்றியும், அவள் பதிலுரைக்க முடிய வில்லை. இந்திரன் அதுகண்டு நடுநடுங்கினுன். இதற்குள் விபுலன், ரிசியின் உடம்பினின்றும் வெளிப்பட்டு, இந்திரனை வைது, அவமானப்படுத்தி, விரட்டிவிட்டான். பிறகு குரு வந்தார். விபுலன் நடந்தவற்றை எல்லாங் கூறினுன். ஆனுல், தான் அவள் உடம்புக்குள் சென்றிருந்ததை மட்டும் சொல்ல வில்லை.

பிறகு விபுலன் பெரிய தவசிரேட்டனுக ஆனுன். அவனு டைய மனத்தில் சிறிது செருக்குமட்டும் இருந்தது. இப்படி யிருக்க, ரிசியின் உடன் பிறந்தாள் வீட்டில் ஓர் விசேடம் நடந்தது. ரிசியும், தேவசருமரும் அதற்குப் புறப்படுகையில் ஓர் அப்சரசுவினிடமிருந்து விழுந்த தெய்வமலர், கீழே கிடந்தது. அதை அந்த ரிசி கையில் எடுத்துக்கொண்டு போனுள். இதன் அரியமணம் அழகு முதலியவற்றைக் கண்ட, அவள் தங்கை, இதுபோன்ற மலர் தனக்கொன்று வேண்டுமெனத் தன் தமக்கையைக் கேட்டாள். அதனை யறிந்த தேவசருமர், தமது சீடனுகிய விபுலனை மலர்கொண்டு வர ஏவினுர். விபுலன் மலருக்கு என்று புறப்பட்டவுடனே அவன் தவப்பெருமையால் அவனுக்கு அங்கேயே மலர்கள் கிடைத்தன. அவனுக்கு இருந்த செருக்கு இன்னும்

N. Latha

சிறிது அதிகரித்தது. அம்மலர்களை எடுத்துக் கொண்டு திரும் பினன். அங்கு வழியில் இருவர் மத்துமாதிரி சுற்றி வந்தனர். ஒருவருக் கொருவர் வேகத்தின் வேறுபாட்டைப் பற்றி வாத மிடத்தொடங்கினர். அதில் ஒவ்வொருவரும் தாம் சொன் னது சரியென்று கூறி, நம்மிருவருள் யாவருடைய அபிப்ரா யம் தவறுடையதோ அவன் "விபுலன் அடையும் கதியை யடைவான்" என்று சபதஞ் செய்தனர். அதைக்கேட்ட விபுலன் நடுங்கினன். "நான் என்ன பாவம் செய்தேன்"? என்று சிந்தித்தான். அவனுடைய செருக்கு நீங்கியது. சிறிது தூரம் வந்தான். அங்கு அறுவர் சொக்கட்டானடிக் கொண்டிருந்தனர். அவர்களில் ஒருவன், "யார் தவருக ஆட்டம் ஆடுகிருர்களோ அவர்கள் விபுலன் அடையப் போரும் கதியை அடைவான்" என்று சபதம் செய்தான். அதைக்கேட்டு விபுலன் மனம் பதைபதைத்தான். என்ன யோசித்தும் தான் எந்தப் பாவத்தையும் செய்ததாகப் புலப் படவில்லை. முடிவில் "தான் குருபத்தினியின் தேகத்துக்குள் புகுந்திருந்தது பாபமோ?" என்று ஐயுற்ருன். இவ்வாறு சிந்தித்து வரும்போது, "குருபத்தினியைக் காக்கும் பொருட்டு நல்லெண்ணத்துடன் செய்ததனுல் அது பாவமா காது. அதனைக் குருநாதனிடங் கூருது மறைத்துவந்ததே பாவம்" என்று எண்ணினன். இவ்வாறு எண்ணிய விபுலன் குருமூர்த்தியினிடம் வந்து, நடந்தவற்றைத் தெரிவித்து, தான் ஒளித்துவைத்ததையும் உரைத்து வணங்கி நின்ருன்.

தேவசருமர், "குழந்தாய்! நீ பார்த்த இருவர் இரவும் பகலுமாம். அந்த அறுவர் ஆறு இருதுக்கள். நீ மிகவும் தருமாத்துமாவாகையால் உனக்கு அவைகள் உதவிபுரிந் தன. ஒருவன் எந்த பாவத் தொழிலை எவ்வளவு மறைவாக ஒருவருமறியாமல் செய்தாலும், அதற்கு இராப்பகல்களும், ருதுக்களும் சாக்ஷியாக இருக்கும். நல்ல விஷயத்தை செய் யும்போதும் ஒருவேளை பாவம் செய்யும்படி நேரிடலாம். அதனுல் அவனுக்குச் சிறிதும் பாவமே வராது. அதைச் சொல்ல வேண்டிய இடத்தில் சொல்லாமல் ஒளித்து வைத் தால்தான் பாவம். பொதுவாகத் தருமசங்கடங்களில்

அவசியம் செய்யும்படி நேர்ந்த பாவத்தைச் சொல்ல வேண்டிய இடத்தில், ஒரு சிறிதும் கூசாமல் வெளியிடுவதே அதற்குத் தக்க பரிகாரமாம்" என்று கூறினர். விபுலன் கேட்டு உண்மையின் உயர்வையுணர்ந்தான்.

ஆதலால், அன்பர்களே! எக்காலத்திலும் உண்மையை ஒளித்துவைக்கப்படாது. உண்மை அநேக நலன்களைத் தந்து நம்மை உயர்த்தி ஓங்கவைக்கும். உலகிற் சத்தியத்தையே நித்தியமாகக் கொண்ட அரிச்சந்திரனை யுணராதார் யாவர்? அரிச்சந்திரன் சத்தியத்தைக் கடைப்பிடித்து பொன்றுப் புகழைப் பெற்றான். உலகில் சத்தியம் தழைத்தோங்குக.

## 13. எது வீரம்?

வீரம் எது என்பதை விளக்குவது இக் கட்டுரையின் நோக்கம். வீரம் வீரம் என்றால், பலர் வாள் தாங்கி வில் பிடித்துப் போர் புரிவது என்று கருதுகின்றார்கள். ஆனால் ஆயுதங்களைத் தாங்கி உயிரைத் துரும்பாக நினைத்துப் புரியும் போர், வீரம் அன்று. அது வீரமாகாது.

எத்தனை நெருக்கடி நேர்ந்தாலும் அறத்தை விட்டு அகலாது நிற்கின்ற மனப் பண்புடையவர்களே வீரர்கள். அற நெறியை அகலாது கடைப்பிடிப்பதுவே வீரம். ஒரு சமயம் செல்வமெல்லாம் இழக்க நேர்ந்தாலும், உயிரே நீங்கும் இடர் எய்தினலும், அறத்தைக் கடைப்பிடிப்பவரே வீரராவார்.

நிறப்பெரும் படைக்கல நிறத்தி னேருற
மறப்பயன் விளைக்குறும் வன்மை யன்றரோ
இறப்பினுந் திருவெலாம் இழப்ப எய்தினும்
துறப்பிலர் அறம் எனல் சூர ராவதே.

இந்தப் பாடல் இராமர் சுமந்தரரை நோக்கிக் கூறியது.

அறத்தின் நெறி நின்று, அத் தரும நெறியை விடாது பிடித்துள்ள ஒருவருக்கு எத்துணைத் துன்பம் நேரினும் அறத்

தில் உறுதியுடன் நிற்பர். அத்தகைய வீரர் சிலர் நமது பாரத நாட்டில் வாழ்ந்தார்கள்.

மனுகுலத்திலே வந்தவன் அரிச்சந்திரன். அம் மன்னர் பெருமானிடம் ஒரு சமயம் விஸ்வாமித்திரர் வந்து, "யானை மீது ஒரு இளைஞன் நின்று கவண் கல் எறிந்தால் அக் கல் எத்துணை உயரஞ் செல்லுமோ அத்துணையுயரம் பொன், யாகம் புரிய வேண்டும்" என்று கேட்டார். "தருகின்றேன்" என்றான் அயோத்தி யரசன். "வேண்டும் போது பெறுவேன்" என்றார் விஸ்வமித்திரர்.

பின்னர் ஒருநாள் அம்முனிவர் வந்து அரசாங்கத்தை யாசித்தனர். உத்தம மன்னன் அரசை அப்போதே முனிவருக்கு வழங்கிவிட்டான்.

விஸ்வாமித்திரர், "மன்னா! நீ அன்று தருவதாகச் சொன்ன பொற்குவியலைக் கொடு" என்று கேட்டார்.

என் செய்வான்? இறைவன். இல்லையென்றால் சொல் தவறிய பாவம் வரும். சொற்சோர்வது பிழை. பொருளை யீட்டித் தருவதாக மன்னன் காசிக்குச் சென்றான். மனைவியையும் மகனையும் விற்றான். தான் சுடலை காக்கும் புலையனுக்கு அடிமையானான். உலகங் காத்த அரிச்சந்திரன் சுடலை காத்தான். மணித்தவிசில் வீற்றிருந்த மன்னன், வெற்றெலும்பின் மீது இருந்தான். ஓமப்புகைபட்ட உடம்பில், ஈமப் புகை பட்டது. சிவந்த திருமேனி கருமேனியாயிற்று. பட்டு பீதாம்பரம் உடுத்த இடையில், பிணத்தின்மீது போர்த்த சல்லாத் துணியிருந்தது. தெள்ளமுதம் உண்ட வாயில், வாய்க்கரிசியைப் பொறுக்கி யுண்டான். பல ஆண்டுகள் இவ்வாறு துன்பத்தில் துடித்தான். அப்போதும் அம் மன்னர் பெருமான் வாய்மையை விட்டு வழுவவில்லை!

இறந்த மகனைக் கொணர்ந்து விறகிலிட்டுச் சுடுவதற்கு முயல்கின்றாள் சந்திரமதி. உருக்குலைந்த அவளை மனைவியென்று உணராத அரிச்சந்திரன், சிதையை உதைத்து, "ஏண்டீ! இம் மயானம் உனக்குச் சொந்தமா? காலணாவும் முழத்துண்டும் தரவேண்டும்" என்றான். "அண்ணா! என்னிடம் ஒரு சல்லியும் இல்லை" என்றாள் உத்தமி.

"ஏண்டீ உன் கழுத்தில் உள்ள தாலியை விற்றுக் கொடு" என்றான் மன்னன். சந்திரமதி, "அந்தோ! இத் தாலி அயோத்தியை யாளும் மன்னர் ஒருவருக்கே தெரியும். இச் சுடலை காக்கின்ற வெட்டியான் கண்டானே" என்று கூறி யழுதாள்.

அரிச்சந்திரன் ஒருபுறம் எரிகின்ற பிணத்தைச் சிறிது தூண்டி நன்கு எரிய விட்டு, அந்த வொளியில் அவளை உற்று நோக்கினான். மனைவியென்று அறிந்தான். "பெண்மணி! மாண்டது நமது தவப்புதல்வனா?" என்று வினவினான். கணவன் என்று அறிந்தாள் மாதரசி. "சுவாமி! நீர் பிணஞ் சுட்டுக்கொண்டா இருக்கின்றீர்?" என்று கேட்டாள். இருவரும் அருமந்த மைந்தனைத் தழுவிப் புலம்பி யழுதார்கள். அப்போது வந்தார் விஸ்வாமித்திரர். "அரிச்சந்திரா! பொன் தர இசைந்த சொல்லை 'இல்லை' என்று சொல்; உனது நாட்டையும் வீட்டையும் இறந்த மகனையும் அரசையும் தருவேன்" என்றார்.

மன்னவன் கூறுகின்றான். "விஸ்வாமித்திரரே? நீர் கலை யுணர்ந்தவரா? உமக்கு இது அழகா? பொய்கூறி நான் கற்ப கோடி யுகமா வாழப்போகின்றேன். இந்த உடம்பை புலையனும் விரும்புவதில்லை. இப் புன் புலால் யாக்கையைப் பெரிதென நினைத்து உயிரினும் உயர்ந்த சத்தியத்தை விடுவேனா? முனிவரே! உடைந்த கண்ணாடிகூட பின்புறம் சுவர்மீது வைக்க வுதவும். உடைந்த பானை ஓடும் வறுக்கும் ஓடாக உதவும். மாண்ட உடும்பின் தோல் கஞ்சிராவுக்கு ஆகும். உடைந்த பொருள்கள் யாவும் வேறு ஒருவகைக்குப் பயன் படுகின்றன. மனிதன் இறந்துபோனால் இந்த உடம்பு ஒன்றுக்கும் பயன்படுவதில்லை. இத்தகைய அசுத்தமான இந்த உடம்பு வாழவேண்டும் என்று பொய் புகல்வதா? நாங்கள் நகரத்தை யிழந்தோம்; அருந்தவப் புதல்வனை யிழந்தோம்; செல்வத்தை யிழந்தோம். இனி எமக்குக் கிடைக்க இருக்கும் பரகதியையே இழக்க நேர்ந்தாலும் சொன்ன சொல்லை இழக்கமாட்டோம்" என்றான். ஆ! ஆ! என்று வானில் ஒரு ஒலி தோன்றியது. மதியையும் வாயையும் இழந்து விஸ்வாமித்திரர் மறைந்தார்.

புலையனுர் விரும்பாத இப் புன்புலால் யாக்கை
நிலையெ னுமருண் டுயிரினும் நெடிதுறச் சிறந்தே
தலைமை சேர்தரு சத்தியம் பிறழ்வது தரியேம்
கலையுணர்ந்த நீ எமக்கிது கழறுவ தழகோ.

பதியிழந் தனம் பாலனை யிழந்தனம் பெற்ற
நிதியிழந்தனம் இனி எமக்குண்டென நினைக்கும்
கதியிழக்கினும் கட்டுரை யிழக்கிலன் என்ருன்
மதியிழந்துதன் வாயிழந் தருந்தவன் மறைந்தான்.

மலை புரண்டுவரினும், கடல் கொந்தளித்துப் பொங்கி வரினும், வானம் இடிந்து தலைமீது விழ நேர்ந்தாலும் தரும நெறி நின்றும் வழுவாது நிற்கும் செயலே வீரச்செயல். இத் தகைய வீரர்களில் முன்னணியில் நிற்கின்றவர் அரிச்சந்திரர். இவர் தருமவீரர்; மகாவீரர்.

* * *

ஔவையார், ஐம்புலன்களை வென்றவனே வீரன் ''புலனைந்தும் வென்ருன்றன் வீரமே வீரம்'' என்கின்ருர்.

ஞானமாகிய அங்குசத்தால் ஐம்பொறிகளாகிய மெய் வாய், கண், நாசி, செவி என்ற ஐந்து யானைகளை அடக்கின வனே சிறந்த வீரன் என்கின்ருர் திருவள்ளுவர்,

உரன்என்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரன்என்னும் வைப்புக்கோர் வித்து.

அர்ச்சுனன் இந்திர நீலமலையின் மீது நின்று பொறி புலன்களை அடக்கி மனத்தை ஒடுக்கி அரியபெரிய தவஞ் செய்தான்; பூட்டிய பூட்டை இழுத்துப் பார்ப்பது போல், மகனுடைய தவம் உறுதியாக உளதா என்று ஆராய்ந்தறிய நினைத்தான் இந்திரன். இரம்பை மேனகை திலோத்தமை ஊர்வசி என்ற நான்கு அழகின் சிகரங்களாகிய அரம்பையர் களை அனுப்பினன்.

அவர்கள் மயில் குயில் தென்றற் காற்று மதனன் முத லிய பரிவாரங்களுடன் வந்தார்கள். அசைவற நின்று தவம் புரியும் அர்ச்சுனப் பெருமானுக்கு முன்னே நின்று இன்னிசை

யுடன் பாடினார்கள்; சிலம்போசையுடன் ஆடினார்கள். தாங்கள் கற்ற சாகசங்களை யெல்லாம் புரிந்தார்கள். தனஞ்சயன் மனஞ்சயனாக நின்றான். இரும்புத் தூண்போலே நின்றான். விழித்திருந்தும் அவன் அவர்களைப் பார்க்கவில்லை. காதிருந்தும் கீதங்களைக் கேட்கவில்லை. மூக்கிருந்தும் நறுமணங்களை முகரவில்லை. அவன் ஞானவீரனாக நின்றான். தேவமாதர்கள் நாணினார்கள். "விஸ்வாமித்திரராதி முனிவர்கள் எல்லாம் நம்மைக் கண்டு நிலைகுலைந்தார்களே? இந்த இளைஞன் நம்மைக் கண்டு ஒரு சிறிதும் திடம் குலையாது வைரத் தூண்போல் நிற்கின்றானே? இது என்ன அதிசயம்?" என்று கூறி அஞ்சி யகன்றார்கள்.

பின்னர் சிவபெருமான் வெளிப்பட்டு அர்ச்சுனனுக்குப் பாசுபதாஸ்திரம் வழங்கினார். யாரும் பெறாத அருளை அர்ச்சுனன் பெற்றான். இதனையறிந்த இந்திரன் பெரிதும் உவந்தான். மகனிடம் வந்து, உள்ளம் குழைந்து தழுவினான். செம்பொற்றேரில் ஏற்றி அமராவதி நகருக்கு அழைத்துச் சென்றான். பொன்னுலகில் தனஞ்சயனுக்கு இந்திர பட்டாபிஷேகஞ் செய்தான். அரம்பையர்களாகிய ஊர்வசி முதலியோர் நடனம் ஆடினார்கள். பரதக்கலையில் வல்லவனாகிய அர்ச்சுனன் இடமறிந்து தலையசைத்து, முடிவில் சிறந்த பரிசுகளை வழங்கினான். அவனுடைய அளவற்ற எழிலைக் கண்ட ஊர்வசி அவன்மீது காதல் கொண்டாள்.

அன்று இரவு தனியே ஒரு சிறந்த பொன் மாளிகையில் மலரணைமீது துயில் புரிந்துகொண்டிருந்தான். ஊர்வசி நன்கு அலங்கரித்துக்கொண்டு நறுமணங் கமழ, பழங்கள் நிறைந்த நவமணித் தட்டுடன் நடுநிசியில் வந்தாள். அர்ச்சுனன் அவளுடைய பாதச் சிலம்போசை கேட்டுக் கண் விழித்து எழுந்தான்; "தாயே! வருக. உனக்கு வணக்கம்" என்று கூறி அவள் பாதமலர் மீது வீழ்ந்தான். ஊர்வசி திகைத்து நின்றாள்; நாணினாள். சீற்றமுங் கொண்டாள்: "அரசர் கோமானே! உன்னை மகன் என்று கருதியா நடுநிசியில் வந்தேன். என் ஆர்வத்தைக் கெடுத்தனையே. நான் பொதுமகள்தானே. உன்னை விரும்பி வந்தேனே. என் எண்

ணத்தைச் கடலில் கரைத்த காயம்போல் வீணுக்கினுயே. இது முறையா?'' என்ருள்.

''அம்மா! உன்னேப் பொதுமகள் என நான் அறிவேன். உன்னேக் கூடினுல் அது பிழையில்லே எனவும் அறிவேன். நான் இப்போது பொன்னுலகத்துக்கு அரசன். நீ என் சபை நடனமாது. நீ எனக்கு உரிமையானவள். ஆனுல் திருநீறு தரித்து ஐந்தெழுத்தை ஓதி சிவசிந்தை செய்யும் நான் பொதுமகளாகிய உன்னே ஏற்றுக்கொள்ளமாட்டேன். நீ என் பிதாவை மருவியபடியால் எனக்கு அன்னே முறையாகின்ருய். சிவனடியே சிந்திக்குந் திருவுடைய நான் உன்னேத் தீண்டமாட்டேன்'' என்று உறுதியுடன் உரைத்தான். அப்போது, அறக்கடவுள் ஆ! என்று தலேயசைத்தது. அவனுடைய தரும வீரத்தைக் கண்டு உலகம் அதிசயமுற்றது. இதுதான் வீரம்.

அக்ஞாத வாசத்தில் அர்ச்சுனன் பேடி யுருவமுற்று விராடனுடைய நகரத்தில் அவனுடைய அருமைப் புதல்விக்குப் பரதக்கலேயைக் கற்பித்து வந்தான். ஓராண்டு முடிந்தது. பாண்டவர்கள் பண்டை யுருவமெடுத்தார்கள். சபையில் தருமரும் வீமனும் அர்ச்சுனனும் நகுலசகாதேவரும் வீற்றிருந்தார்கள்.

விராடராஜன் மலர்மாலேகளுடனும் கனிவர்க்கங்களுடனும் வந்து, தருமருடைய தாள்மலர் மீது வணங்கினுன். ''மன்னர் பெரும! என் நாடு நகரம் முழுவதும் தங்கட்குக் காணிக்கையாகத் தந்தேன். என் மகள் உத்தர குமாரியை அர்ச்சுனருக்கு மனேவியாகத் தந்தேன்'' என்ருன்.

அப்போது அர்ச்சுனன் விராட வேந்தனே நோக்கி, ''வேந்தே! உன் அன்புக்கு நன்றி. உன் மகளுக்கு நான் ஓராண்டு பரதக்கலேயை ஓதுவித்தேன். அவள் என் மாணவி. மாணவி எனக்கு மகளாக வேண்டும். நீ எனக்குத் தந்த அவளே நான் ஏற்றுக்கொள்ளுகிறேன். ஆனுல் மனேவியாக ஏற்றுக்கொள்ள மாட்டேன். மருமகளாக ஏற்றுக் கொள்ளுகிறேன். என் மகன் அபிமன்யுவுக்கு அவளே மணஞ் செய்து மருகியாகக் கொள்வேன்'' என்ருன்.

அழகிய இளம் பெண்மணியை—பல நாள் பழகிய எழில் கொடியை, அவள் தந்தை வலிதில் தருகின்றேன் என்று கூறியும், அவளை மனைவியாகக் கொள்ளாது மருகியாகக் கொண்ட தனஞ்சயனுடைய தரும வீரமே வீரம்.

திருநீறு புனைந்தார் யாவரேனும் வணங்கி வழிபட வேண்டும் என்று உறுதி கொண்ட மெய்ப்பொருள் நாயனரை, வஞ்சகனுகிய முத்திநாதன் திருநீறு பூசிக் கரவாக வந்து, ஆகம நூல் அவிழ்ப்பான்போல் வாள் எடுத்து வீசினன். குருதியொழுக உயிர் துடித்து வீழ்கின்ற மெய்ப்பொருள் நாயனர் தமது தருமநெறி தவருது தொழுது வென்ருர். அவனைக் கொல்ல வந்த தத்தனை நோக்கி "தத்தா! அவர் நமர்; அவரை அபாயமின்றி நகரைக் கடக்குமாறு செய்" என்று பணித்து, முத்திநாதனை ஊர் தாண்டி விடுத்து தத்தன் வருமளவும் உயிர் தாங்கி யிருந்து, சிவனடி சாய்ந்த மெய்ப்பொருள் நாயனருடைய தரும வீரமே வீரம்.

## 14. பொறுமையின் பெருமை

பொறுமை கடலினும் பெரிது. பொறுமையே புகழை வளர்க்கும்; புண்ணியத்தை வளர்க்கும். உலகம் அழிந்தாலும் பொறுமை மிக்கவர் புகழ் அழியாது. மாந்தாதாவின் பொறுமை மிகமிக வுயர்ந்தது. பல இடர் செய்த துரியோதனனை வெகுளாது, இந்திரசேனனிடமிருந்து அவனைச் சிறை மீட்டு, அறவுரை கூறி அன்புடன் அனுப்பிய தருமருடைய பொறுமையை அளவிட வல்லார் யாவர்?

தீயவர்கள் எத்துணைத் தீங்கு செய்தாலும் அவைகளைப் பொறுத்து, மீண்டும் மனமொழி மெய்களால் தீங்கு செய்யாமல் மன்னிப்பதோடு, தீமை செய்தார்க்கும் நன்மையே செய்வார்கள் தூயவர்கள்.

மனைவியைக் கவர்ந்த இராவணன் போரில் தோல்வியுற்று, வில்லும் வாளும் தேரும் படையும் குடையும் எல்லாம் இழந்து, இருபது கரங்களையும் தொங்கவிட்டு, நில

மகளை நோக்கி, காற்பெருவிரலால் நிலத்தைக் கிளைத்துக் கொண்டு, விழுதுடைய ஆலமரம்போல் நின்றபோது கருணை வடிவான ஸ்ரீராமர் அவனை வெகுளாமல், "இன்று போய் போருக்கு நாளை வா" என்று அருள்புரிந்த பொறுமையின் பெருமையை யாவரேனும் அளக்க முடியுமா?

நீற்றறையில் இட்டும், நஞ்சு கலந்த அன்னத்தை நல்கியும், மதயானையை ஏவியும், கல்லிற்கட்டி கடலில் வீழ்த்தியும் தீங்கு புரிந்த பல்லவன், தனது பிழையை யுணர்ந்து பணிந்தபோது, திருநாவுக்கரசு நாயனுர் அவனது அளவற்ற பிழைகளைப் பொறுத்து அருளிய பொறுமையை அளவிட்டுரைக்க ஆதிசேடனுலும் ஆகாதே.

பொறுமையோடு இருக்கவேண்டும் என்று எண்ணுகின்ருர்கள் சிலர்; ஆனுல் தம்மை யாராவது இகழ்கின்றபோதோ, புகைவண்டியில் இடந்தரமாட்டேன் என்று பிடிவாதஞ் செய்கின்றபோதோ, தம்மையும் அறியாமல் சினம் வந்துவிடுகின்றது. அங்ஙனம் வரக்கூடாது. பிரசண்ட மாருதத்திற்கும் அசையாமல் நிற்கின்ற குன்றம் போல் பொறுமையைக் கைக்கொள்ள வேண்டும்.

நாம் கேட்டறிந்த பெரியவர்களில் பலர் இந்தப் பொறுமையை அணிகலமாகப் பூண்டு வாழ்ந்தனர். கண்டறிந்த பெரியவர்களில் மகாத்மா காந்தியடிகள் பொறுமையே வடிவமாக வாழ்ந்தனர்.

இந்த நாடு விடுதலையடையவேண்டும் என்று, அவர் பொறுமையுடன் உழைத்த உழைப்புக்கு எல்லையில்லை. பொறுமை என்ற புகைவண்டியில் ஏறி, சத்தியம், அஹிம்சை என்ற இரு தண்டவாளங்களின்மீது, கடவுள் நம்பிக்கை என்ற எஞ்சினைப் பூட்டி யோட்டினுர். அந்த வழியில் எத்தனை எத்தனை காடுகள், மலைகள், நதிகள், பயங்கரமான கணவாய்கள்; இத்தனையும் கடந்தார். சுதந்தரம் என்ற பட்டினத்தை யடைந்தார். அடக்குமுறை, சிறைவாசம் முதலிய இடர்களை அவர் எவ்வளவு பொறுமையுடன் சகித்துக்கொண்டார்.

அவருடைய திருமுகத்தில்தான் என்ன சாந்தம்? புன் சிரிப்பில் விளங்கும் அழகு மூவுலகங்களேயும் கவர்ந்துவிட வில்லேயா? ஆ! ஆ! தன்னேக் கொல்லவந்தபோதுகூட பொறுமை.

ஒரு முறை அவர் சிறையில் இருந்தனர். அவருடைய பெருமையைப் பலர் உணர்ந்திருந்த காலம் அது. சிறைக் கூடமா அது, அன்று; தவக்கூடம். கடவுள் தியானத்தில் அமர்ந்திருப்பார். தன்னே மறந்திருப்பார். ஒரு நாள் நீண்ட நேரம் தியானஞ் செய்துகொண்டே இருந்துவிட்டார். அவ ரைக் காவல் புரிந்தவனுக்குப் பசி. கண்ணே மூடிக்கொண்டு தினம் இப்படியே துன்பத்தைச் செய்கின்ருன் என்று எண்ணி, உலகமெல்லாம் போற்றும் உத்தமர் காந்தியடி களேக் காலால் உதைத்தான். வேகமாக உதைத்தபடியால் மகாத்மா கீழே விழுந்தார்; உதிரம் ஒழுகியது. பொறு மையை நன்கு கடைப்பிடித்த மகாத்மா எழுந்து, தன்னே உதைத்தவனுடைய காலேத் தடவி 'உமது காலே என் பல் குத்தியிருக்குமே? கடவுள் இவ்வளவு கொடுமையான பல்லே அமைத்ததற்கு வருந்துகின்றேன். அந்தோ? உமது காலுக்கு ஏதாவது வருத்தம் உண்டாயிற்ருே?' என்று தாரை தாரை யாகக் கண்ணீர் சொரிந்து அழுதார்.

"உதைத்த கால் வலிக்கின்றதா?" என்று அழுகின்ற உத்தமருடைய பொறுமையையும், அவர் பெருமையையும் அக் காவலன் அறிந்தான். அவன் மனங்குழைந்தது. அவர் கால்மீது வீழ்ந்தான். "பொறுமைக் கடலே! தங்கள் திருவாக்கினுல் என்னே இரண்டு வார்த்தை வையுங்கள்; நான் பெரிய குற்றத்தைச் செய்துவிட்டேன். மன்னியுங் கள்" என்று கூறி வேண்டினுன். மகாத்மா காந்தியடிகள், "ஐயா! நீங்கள் வருந்தவேண்டாம். யார் மனமும் நோவாத படி நடப்பதே அஹிம்சை. அந்த அஹிம்சை என்ற மாளி கையை யடைய விரும்புகின்ற நான், உம் மனம் நோவ எப்படி வைவேன்? கடவுள் உமக்குக் கருணே செய்வாராக" என்ருர். அந்தக் காவலன் அவரைப் பல முறை தொழு தான். அவன் மனம் அவரை மனிதத் தெய்வமாக எண் ணியது.

அன்பர்கள் சிந்திக்க; உதைத்தவனைக் காந்தியடிகள் ஏதாவது வைதிருந்தால் அவன் திருந்தி நல்வழிப் பட்டிருக்கமாட்டான் அல்லவா? மகாத்மாவுடைய பொறுமை, இப்படி எத்தனையோ கருங்கல் மனிதர்களை வெண்ணெய் போல் உருகச் செய்தது. ஆதலின், பொறுமை என்ற விரதத்தை மேற்கொண்டு, அதில் உறைத்து நின்று, அது முற்றுப்பெறத் தெய்வசிந்தனையுடன் வாழ்வோமாக.

திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து
அறனல்ல செய்யாமை நன்று. —திருக்குறள்.

## 15. மஹாகவி பாரவி

வடமொழி வல்லவரில் **பாரவி** என்பவர் மிகச் சிறந்தவர்; மிகவும் ஆழ்ந்த கருத்துக்களடங்கிய இனிய கவிகளைப் பாடும் பெருந் திறனுடையவர்; இவர் பல காவியங்களை ஸமஸ்கிருதத்தில் செய்துள்ளார். இவர் செய்த காவியங்களில் ஒவ்வொரு சுலோகமும் படிக்கப் படிக்க இனிமையாகத் திகழும். வடமொழிப் புலவர் திலகர்களாக மூவர் விளங்கினர். **காளிதாஸர், பாரவி, தண்டி** என்போர். இம் மூவரில் **காளிதாஸர்** உவமானத்திற் சிறந்தவர்; **பாரவி** பொருளின் பெருமையிற் சிறந்தவர்; **தண்டி** பதங்களின் அழகிற் சிறந்தவர்.

உபமா காளிதாஸஸ்யா பாரவே ரர்த்தகௌரவம்
தண்டிநம் பதலாலித்யம் மாகே ஸந்தி த்ரயோ குணா:

இப் பெரியார் எப்போதுங் காவியங்களை இயற்றி அக் கவிகளுடன் பேசி விளையாடிப் பொழுது போக்குவதால், குடும்பத்தைக் கவனிக்கப் போதிய நேரமும் மனமும் இல்லாமற் போய்விட்டன. கல்வியுடையாரிடத்தில் செல்வம் இருப்பது மிகவும் அருமை. புலவர்களிடம் வறுமைப்பேய் வாழ்வது இயல்பு. இவர் குடும்பம் வறுமையால் வாடியது. இவர் வறுமையால் வாடவில்லை. இவருடைய மனம் எந்நேரமும் கலைக்கடலில் திளைத்திருந்ததே அதற்குக் காரணம்.

இவர் மனைவி ஒருநாள் குடும்பத்தின் வறுமை நீங்க இறைவனிடம் சென்று பரிசு பெற்று வருமாறு வற்புறுத்தினுள். மனைவியின் வேண்டுகோளுக்கு இணங்கிய இப்புலவர் பெருமான் புறப்பட்டார்; அரசனது அரண்மனையைத் தேடிச் செல்வாராயினுர். வழியில் ஓர் காட்டைக் கடக்க நேரிட்டது; நெடுந் தூரம் நடந்து வந்ததால் காலயர்ந்து ஓர் மரத்தின் அடியில் தங்கினுர். சற்று இளைப்பாறினுர். புலவர்கள் மனம் எப்போதும் கவிமலர்ச் சோலையிலேயே விளையாடிக் கொண்டிருக்கும்;

ஸஹஸா விதத்த ந க்ரியாம் அவிவேக:
பரமாபதாம் பதம்
வ்ருணுதே ஹி விம்ருச்ய காரிணம் குணலுப்தா:
ஸ்வயமேவ ஸம்பத:

பொருள்:—முன்பின் ஆராயாமல் ஒரு காரியத்தையும் செய்யக் கூடாது; ஆத்திரமானது பல துன்பங்களுக்குக் காரணமாகும். குணங்களில் ஆசைகொண்ட சம்பத்துக்கள் யோசித்துச் செய்பவனைத் தானே நாடுகின்றன.

இந்த அரிய சுலோகத்தைப் பாடி ஒரு தாமரை யிலையின் மேல் எழுதினுர். பிறகு அவ்விடத்தை விட்டு நீங்கினுர். அப்பொழுது அத் தேசத்தை யரசாளும் அரசன் வேட்டையாடி இளைத்து அம் மரத்தின்கீழ் நிழலுக்காக ஒதுங்கினுன். தாமரை யிலையின் மேல் எழுதியிருந்த சுலோகத்தைப் பார்த்தான்; அளப்பற்ற ஆனந்தங்கொண்டான்; அதன் பொருட் செறிவைவும், சொல்லமைப்பையும் உன்னி உளம் பூரித்தான். பன்முறை படித்தான். அத் திவ்விய சுலோகத்தைத் தன் கைக்குறிப்புப் புத்தகத்தில் எழுதிக்கொண்டான். இந்த அரிய சுலோகத்தை எழுதிய மாப்பெரும் புலவரைத் தன் அரண்மனைக்கு வரவழைக்குமாறு ஏற்பாடு செய்துவிட்டுத் தன்னரண்மனை சென்ருன்.

அரசன் ஏவலாளிகள் அதனைப் பாடியவர் யார் என்று ஆராய்ந்து, கவி பாரவி என்றுணர்ந்து அவரைத் தேடுவாராயினர். பாரவி அரசனுடைய அரண்மனை வாயிலையணுகினுர். வாயிற் காவலர் அவருடைய பெருமையை உணர

வில்லை. கவியரசு பெருமையைக் காவலர் எங்ஙனம் உணர்வார்? அப் புலவர் திலகரை அவர்கள் உள்ளே அநுமதிக்கு வில்லை. பாரவி சில நாள் காத்திருந்தும் அரண்மனைக்குள் செல்ல முடியவில்லை. வருந்தியவுள்ளத்துடன் திரும்பி ஊர் போய்ச் சேர்ந்தார். தூர தேசஞ் சென்ற கணவனை எதிர் பார்க்கும் கற்புடைக் காரிகையைப்போல் அரசன் அச் சுலோகம் பாடிய புலவர் பெருமானை எதிர்பார்த்திருந் தான். "புலவர் எங்கே? கவியரசு எங்கே?" என்று கண்ட வரையெல்லாம் வினவிக் கொண்டேயிருந்தான். இரவும் பகலும் "வந்தாரா? கண்டு பிடித்தீரா" என்று கேட்ட வண்ணமாக, புலவர் வரும் வழிமேல் விழிவைத்திருந்தான். புலவர் வந்தாரில்லை. அவர் எழுதிய சுலோகத்தை எப்போதும் தன் கண்ணிற் படும்படி படுக்கை வீட்டின் சுவற்றில் எழுதி வைத்தான். அடிக்கடி அதனைச் சொல்லி மகிழ்வான்.

ஆண்டுகள் சில கழிந்தன; ஒருநாள் அரசன் வேட்டையாடப் புறப்பட்டான். புறப்படும்போது தன்மனைவியிடம் ஒரு வாரத்தில் திரும்பி வருவதாகக் கூறி விடைபெற்றுச் சென்றான். வேட்டையாடப் போன மன்னன் மறுநாளே திரும்பி ஓர் அவசர காரியமாய் அரண்மனைக்கு வந்து தன் சயன அறைக்குட் புகுந்தான். அங்கு, பஞ்சணைமேல் தன் மனைவி வேறு ஒரு ஆடவனுடன் படுத்துறங்குவதைக் கண்டான். வடவைத் தீயைப்போல் கொதித்தான். அடங்காத சினம் மூண்டு எழுந்தது. அவ்விருவரையும் கொல்ல வாளாயுதத்தை உருவி வீசப் போகுந் தருணத்தில், எதிரில் எழுதி இருந்த சுலோகத்தைப் பார்த்துச் சற்று சினந்தணிந்தான். அவ்விருவரையும் எழுப்பி, அப் புருடன் யார் என்பதைக் கண்டறிந்து குற்றத்தைக் காட்டி தண்டிக்க வேண்டும் என்று எண்ணி, அவர்களை எழுப்பினான். "அப் புருடன் யார்?" என்று விசாரித்தான். தன் மனைவியுடன் சயனித்திருந்தவன், அழந்தைப் பருவத்தில் ஓர் தாதியால் திருடப்பட்டு, ஒருவரும் அறியாமல் வளர்ந்து, தனது முதன் மந்திரியால் கண்டுபிடிக்கப்பட்ட தன் மகனே என்பதையுணர்ந்தான். ஆனந்தக் கண்ணீர் வடித்தான். மகனையும்

மனைவியையும் இரு கரத்தாலும் அணைத்து அன்பு செய்தான்.

தன்னைமீறி எழுந்த கோபத்தைத் தணித்து, தன் கற்பின் மிக்க மனைவியையும், தன் குலத்துக்கு ஒரு மகனையும், தன் மரபையும், தன் அரசாட்சியையும் காத்தருளிய அவ்வருமைச் சுலோகத்தை வாழ்த்தினான். அதன் பெருமையை முன்னையினும் ஆயிரமடங்கு அதிகமாகக் கொண்டாடினான். அதனைப் பாடிய புலவர் பெருமானை நினைந்து நினைந்து நெஞ்சம் உருகினான். உடனே தன் மந்திரிகளையும் ஏவலர்களையும் அழைத்து "இந்தச் சுலோகத்தைப் பாடிய பாவலரை ஒரு வாரத்திற்குள் கண்டுபிடித்து எல்லாவகைச் சிறப்புடன் பல்லக்கிலேற்றி அழைத்து வரவேண்டும்" என்று கடுமையான ஆணையிட்டான். ஒவ்வொருவரும் அக் கவியைப் பாடிக்கொண்டு ஊர்ஊராய்த் தேடிப் பாரவியைக் கண்டு பிடித்து பொற்சிவிகையிலேற்றிக் கொண்டு மங்கல முரசுகள் ஒலிக்க, சகலவிருதுகளுடனும் அழைத்துக் கொண்டு வந்தார்கள். அரசன் அப் பாவலரைப் பணிவுடன் வரவேற்று அவரைக் குபேரனாக்கினான். அவரிடம் நெடுநாளாகக் குடியிருந்த வறுமைப் பேய் போனவிடந் தெரியவில்லை. ("அன்பர்கள் எங்கு போயிற்று என்று தேடிக் கண்டுபிடிக்க வேண்டாம்.")

இந்த மஹாகவியின் வாக்கின் பெருமையையறிய வேண்டுமானால், இவர்இயற்றிய "கிராதார்ஜுனீயம்" என்ற மகாகாவியத்தைப் படித்துப் பார்க்கவும்.

## 16. நிதானம்

எல்லாவித தானங்களினும் நிதானம் பெரிது. நிதானத்துடன் ஒவ்வொரு கருமத்தையும் நன்கு ஆய்ந்து செய்தல் வேண்டும். அவசரம் ஆயிரம் பொன்னையழிக்கும். "பதறுக் காரியம் சிதறுது" என்பது பழமொழி.

நிதானத்தை யிழந்தவர் நெடுந்துன்பம் அடைவர். இதனை விளக்கும் அடியிற்கண்ட உண்மை வரலாறு:

ஊர் ஊராகச் சென்று பண்டங்களைக் கூவி விற்கும் வணிகன் ஒருவன், முதல் வேண்டி ஒரு பெரிய முதலாளியிடம் கடன் வாங்கியிருந்தான். கடன் கொடுத்த தனவந்தன் வணிகனை ஒருநாள் தன் கடனைத் தருமாறு மிகவும் நெருக்கினான். கையில் பணம் இல்லாமையால், கடனைத் திருப்பித் தருவதற்கு வழியறியாத வணிகன் வருந்தினான். தனவந்தன் "நீ இப்படியே காலங் கடத்துகின்றாய்; இனி நான் பொறுக்கமாட்டேன். கடனுக்கு வழி சொன்னால் தான் உன்னை விடுவேன்" என்று கடிந்து கேட்டான்.

வணிகன் தன்வசம் அப்போதிருந்த ஒரு பொன் சங்கிலியை எடுத்துக் கொடுத்து, தான் பட்ட கடனுக்கு அச் சங்கிலி போதுமானதாக இல்லாமையால், ''ஐயா! இந்தப் பொன் சங்கிலியையும், என் உயிரினும் இனிய நாயையும் ஈடாக வைத்துக் கொள்ளும். நான்கைந்து நாட்களுக்குள் பணத்தைக் கொடுத்து இந்த இரண்டையும் திருப்பிக்கொள்வேன்" என்று கூறிச் சமாதானம் செய்து சென்றான். அந் நாயும், பொற் சங்கிலியும் அம் முதலாளியிடம் இருந்தன.

இரண்டொரு நாள்களுக்குப் பின், நள்ளிரவில், அத் தனவந்தன் வீட்டில் கள்வர்கள் நுழைந்தார்கள். அதுகண்ட அந் நாய் கள்வரை நோக்கிக் குரைத்தது, கள்வர்கள் அதற்கு வேண்டிய இறைச்சித் துண்டுகளை அதன் முன் எறிந்தார்கள். அறிவுள்ள அந்த நாய் இறைச்சியுணவினை ஒரு பொருளாக எண்ணாமல், மேலும் மேலும் குரைத்தது. இதற்குள் அத் திருடர்களில் துணிந்த ஒருவன் வீட்டிற்குள் கன்னம் வைத்து, தனவந்தனுடைய பணம் நகைகள் வைத்திருக்கும் பெட்டியை எடுத்துக்கொண்டு வெளிப்பட்டான். ஓட முயன்ற அவனை ஓடவிடாது நாய் மேல்வீழ்ந்து கடித்து, மறித்து, பெரிய இரைச்சல் போட்டுக் குரைத்தது.

காற்றின் நிமித்தம் மேல் மாடியில் படுத்திருந்த தனவந்தரும், அண்டையயலாரும் விழித்து எழுந்துவந்து, ஓடிக் கள்வர்களைப் பிடித்துக் கொண்டார்கள். அந்த நாயினால் அவருடைய பெரிய சொத்து காப்பாற்றப்பட்டது. அதனால் அவருக்கு அளவற்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. "ஆ! இந்த

நாய் இல்லையானால், ஆயிரக்கணக்கான பணமும், பொன் வைர நகைகளும் போயிருக்கும். இதோ இங்கே இறைந்து கிடக்கும் இறைச்சித் துண்டுகளை, இதற்கு இரையாக, வந்த திருடர்கள் இறைத்திருக்கின்றார்கள். அதனையும் இது பொருட்படுத்தாமல் தன் கடமையைச் செய்து நமது உடைமையைக் காத்தது. மனிதர்கள்கூட சிறு தொகைக்காகத் தமது கடமையை மறந்து மடமையடைகின்றார்கள். இந்த நாயின் அரிய செயலே செயல்'' என்று எண்ணி எண்ணி வியப்பும் உவகையும் அடைந்தார்.

பொழுது விடிந்தது. நாய் செய்த உதவியைக் கருதி, அதன் தலைவன் பட்ட கடனை விடுவிடுத்து, ஒரு சீட்டில் இந்த வரலாற்றை எழுதி, அதன் கழுத்தில் கட்டி, நீ உன் தலைவனிடம் போய்வா'' என்று குறிப்பாகக் கூறினான். குறிப்புணர வல்ல அந்நாய் தன் தலைவனிடம் மிக்க மகிழ்ச்சியுடன் ஒரே ஓட்டமாக ஓடிவந்தது.

நன்றியறிவுள்ள நாயைக்கண்ட அவ்வணிகன் சினந்தான். ''ஏ மதிகெட்ட நாயே! நான் பட்ட கடனுக்காக உன்னை அடகு வைத்துவிட்டு வந்தேன். கடன் தீர்ப்பதற்கு முன் இங்கு ஏன் ஓடிவந்தாய்? உனக்கு என்ன அத்தனை மமதை'' என்று வைது, அருகில் இருந்த ஒரு பனம்பழம் அளவுள்ள கருங்கல்லை எடுத்து அதன்மீது எறிந்தான். அக் கல் அதன் தலையிற்பட மண்டை உடைந்து நலமிக்க நாய் அலறி வீழ்ந்து மாண்டது.

நாய் மாண்டபின் சினம் ஆறிய வணிகன், நாயை உற்றுப் பார்த்தான்; அதன் கழுத்தில் கடிதத்தின் சுருள் தெரிந்தது. அதை விரைந்து எடுத்து படித்துப் பார்த்தான்.

''அன்புள்ள ஐயா! நேற்று இரவு என் வீட்டில் கள்வர்கள் நுழைந்து பெருமதிப்புள்ள பணப்பெட்டியை எடுத்துச் செல்லலுற்றார்கள். தங்கள் நாய் தன்முன் எறிந்த மாமிசத் துண்டையும் மதிக்காமல் கள்வர்களைக் கடித்தும் குரைத்தும் மறித்தும் போரிட்டது. அதனால் நானும் அக்கம் பக்கமுள்ளார்களும் கண்விழித்து, கள்வர்களைப் பிடித்து பணப் பெட்டியை மீட்டோம். இந்த நாய் இல்லையானால் எனக்

குப் பெரிய கேடு வந்திருக்கும். இது செய்த உதவியை உன்னி உன் கடனை நான் தள்ளிவிட்டேன். நாயைத் திருப்பி யனுப்பியுள்ளேன். நீ நேரில் வந்து உன் பொற் சங்கிலியைப் பெற்றுக்கொண்டு போவாய்.''

இப்படிக்கு
அன்பும் நன்றியும் உள்ள,
**தொட்டப்பச் செட்டி.**

இக் கடிதத்தைப் படித்தவுடன் வணிகன் கீழே வீழ்ந்து அழுதான்; உருண்டான்; புரண்டான்; தலையின் மீது மோதிக் கொண்டான். நாயை எடுத்து அணைத்துப் புலம்பினான். என் அன்புள்ள நாயே! அந்தோ நான் சண்டாளன். ஆத்திரக்காரன். நீ என்னைக் காண எவ்வளவு வேகமாகவும் அன்புடனும் ஓடிவந்தாயோ? பாவியேன் உன்னை அடித்துக் கொன்றுவிட்டேனே; உன் மண்டை பிளந்தபோது நீ என்ன நினைத்தாயோ? எப்படி வலித்ததோ? ஐயோ! என் இதயம் வெடிக்கவில்லையே? கொஞ்சம் நிதானபுத்தியுடன் கவனிக்காமற் கெட்டேன். நான் மதிகெட்ட மடையன். நன்றி மிக்க உன்னைக் கொன்ற எனக்கு நற்கதி வருமா? என் உள்ளம் உருகுகின்றதே. அற்ப உயிராகிய உனக்கிருந்த அறிவு மேலான உயிராகிய எனக்கில்லையே'' என்று பலவாறு புலம்பி யழுதான். இறந்த நாய் எழுந்திருக்குமா?

தனக்குக் கடன் தந்த தொட்டப்பச் செட்டியிடம் நடந்ததைக் கூறியழுதான். அவரும் கண்ணீர் வடித்தார். அப் பொன் சங்கிலியை அவனிடம் தந்தார். அதனைக் கண்டாரும் கேட்டாரும் கலங்கிக் கலுழ்ந்தார்கள். அவ்வணிகன் அந்த நாயைப்புதைத்து அங்கு ஒரு சிறுகோயில் கட்டி, அதற்குள் அந்த நாயைப் போன்ற கற்சிலையை வைத்தான்; தான் செய்த தவறுக்கு அது ஒரு சிறு பரிகாரமாகச் செய்து நன்றி செலுத்தினான்.

இக்கோயிலை இன்றைக்கும் பார்க்கலாம். ரெயிப்பூருக்கு (Raipur) பதினொரு கல் தொலைவில் இருக்கின்றது.

# 17. கவிக்கொடி

பாண்டவர்களிற் சிறந்தவனும், பரமேஸ்வரனிடம் பாசுபதம் பெற்றவனும், உலகமெல்லாம் புகழும் சிறந்த வில்லாளியுமாகிய அர்ச்சுனனுக்கு, கவிக்கொடி (அநுமக்கொடி) வந்ததற்கு இரண்டு காரணங்கள் உண்டு.

1. பவன குமாரனுகிய பீமன் மந்தார மலரை விரும்பி அளகாபுரிக்குச் செல்லும்போது, வழியில் சிறு குரங்கு வடிவாக இருந்த அநுமந்தருடன் வாது செய்து, பின்னர் ஆஞ்சனேயரென்றுணர்ந்து வணங்கி வாழ்த்த, இராம தூதராகிய அஞ்சனேச் செல்வர் "தம்பி! நினக்கு யாது வரம் வேண்டுமென", பீமன் "என் தம்பியாகிய தனஞ்சயனுடைய இரதத்தின்மீது கொடியாக இருந்து அருளல் வேண்டும்" என, அவ்வாறே அநுமார் தன் தம்பியாகிய வீமனுக்கு வரமளித்தார்.

2. ஒரு சமயத்தில் அர்ச்சுனன் கண்ணபிரானின்றித் தேரூர்ந்து தென்திசையிலுள்ள ஒரு பெரிய கானகத்தில் வேட்டையாடச் சென்ருன். முடிவில் தான் ஒருவனுகவே சாரதி யிருக்குமிடத்தில் அமர்ந்து இரதத்தைச் செலுத்திக் கொண்டும், கணைகளை விடுத்து வழியிலுள்ள துன்பத்தை விளைக்கும் மிருகங்களைக் கொன்று கொண்டும் வரும்போது, அன்று பகலில் நீராடுவதற்காக இராமேசுரஞ் சென்று, சேதுவில் ஸ்நானஞ் செய்து உச்சிப்பொழுதில் செய்ய வேண்டிய மாத்தியான்னிக முதலிய கருமங்களை முடித்துக்கொண்டு, மீண்டுந் தேரேறிக் கடற்கரையில் உல்லாசமாகச் சிறிது மனந்தருக்கி உலாவிக்கொண்டிருந்தான். அங்கு ஒரு சிறு குன்றின்மேல் சாமானிய வானர ரூபத்துடனும், பிங்கல நிறமுள்ள உரோமங்களுடனும், மங்கள சொரூபராகிய ஆஞ்சனேயர் 'ராம ராம' என்று உதடு அசையாமல் ஜெபஞ்செய்து கொண்டிருந்தார். அவரைக் கண்ட தனஞ்சயன், "ஏ குரங்கே! உன் பெயர் என்ன?" என்று வினவினுன்.

கவி சிரேட்டராகிய அநுமார், புன்னகை புரிந்து "தசரத நந்தனராகிய இராமச்சந்திர பிரபு நூறு யோசனை தூரம் இக்கடலில் கற்களால் அணைகட்டியது எவனுடைய

பிரதாபத்தாலோ? எவனைச் சகாயமாகக் கொண்டு அரக்கர்களை வென்றனரோ? அவன் நான். என் பெயர் அநுமான்; வாயுபுத்திரன்'' என்று பதில் கூறினர்.

இங்ஙனஞ் சிறிது தருக்குடன் கூறிய வார்த்தைகளைக் கேட்ட விஜயன், தானும் செருக்குடன் சிரித்து, அநுமானை நோக்கி, ''முன்னாளில் இரகுராமர்கடலில் கற்களைக்கொண்டு அணைகட்டியது வீண்சிரமம்; சிறந்த வில்லாளியாக இருந்தும் தன் பாணங்களினாலேயே அணைகட்டி ஏன் காரியசித்தியடைந்திருக்கலாகாது?'' என்றான்.

உடனே அநுமான், ''அர்ச்சுனா! என்னைப்போன்ற வாநர சிரேட்டர்களின் பாரத்தினால் சரசேதுவானது சமுத்திரத்தில் அமிழ்ந்து விடுமென்றெண்ணி இரவிகுலோத்தமர் சரத்தால் அணைகட்டவில்லை'' என்றார்.

தனஞ்சயன், ''மாருதியே! கவிகளின் பாரத்தினால் சரசேது கடலில் மூழ்கி விடுமானால், வில்லாளியின் வில்வித்தைக்கு என்ன மகிமை யிருக்கிறது? உமக்கு முன்னால் இப்போது நான் சரசேதுவைக் கட்டுகிறேன்; நீர் அதன்மேல் நர்த்தனம் முதலியவற்றை உமது விருப்பத்தின்படி செய்யும்; பின்னர் எனது விற்சாதுர்யத்தைப் பாரும்'' என்றுரைத்தான். அநுமார் புன்முறுவல் கொண்டு, ''சவ்யஸாசீ! நீ கட்டும் சரசேதுவானது எனது கால் கட்டைவிரல் பட்டவுடன் கடலில் அமிழ்ந்துவிடும்; அவ்வாறு முழுகிவிட்டால் நீ என்ன செய்கிறாய் சொல்லு'' என்றார்.

பார்த்தன், ''ஆஞ்சனேயரே! உமது பாரத்தால் என் சரசேது நீரில் மூழ்கிவிடுமானால், இவ்விடமே அக்கினிப் பிரவேசஞ் செய்கின்றேன்; இது சத்தியம்; சரசேதுவை முழுகச் செய்யாவிடில் தாங்கள் என்ன செய்கின்றீர்? உமது பந்தயத்தைத் தெரிவியும்'' என்றான்.

வாயுகுமாரன் அர்ச்சுனனுடைய சபதத்தைக் கேட்டு, ''பாண்டு நந்தனா! உன் சரசேதுவை என் கால் கட்டைவிரலால் கடலில் முழுகும்படி செய்யாவிடில், நினது இரதத்தின் கொடியின்கணிருந்து உனக்கு வேண்டிய உதவியைப் புரிகிறேன்'' என்றனர்.

அர்ச்சுனன், "அவ்வாறே யாகுக" என்று கூறிக் காண்டீபத்தை எடுத்து வளைத்து எட்டு திக்குகளும் செவிடுபடும்படி நாணோசையை யுண்டுபண்ணி அளவற்ற கணைகளை விடுத்து நெருக்கமாகவும், உறுதியாகவும் ஓர் அணையைக் கடலிற் கட்டினான்.

தனஞ்சயனால் சமுத்திரத்தின் மேல் நூறு யோசனைத் தூரம் கட்டிய சரசேதுவை, அநுமார் நோக்கி, அர்ச்சுனன் பார்த்திருக்கும்போதே, ஒரு கணநேரத்தில் தன் கால் கட்டைவிரலால், அந்த சேதுவைக் கடலில் மூழ்கும்படி செய்தார். தேவர்கள் மாருதிமீது பூமாரி பொழிந்தனர். விஜயன் இதைக் கண்டு நாணி, கடற்கரையில் சிதையை யடுக்கித் தீப்பாய நிச்சயஞ் செய்தனன். அந்த வேளையின் பக்த சகாயராகிய கண்ணபிரான் அங்கு நிகழ்ந்தவற்றை யுணர்ந்து, பிரமசாரி வேடம் பூண்டு அவ்விடமடைந்து, நடந்த வரலாற்றைக் கேட்டு, "நீவிர் இருவரும் முன் செய்த காரியம் யாவும் வீண்தான். சாட்சியின்றி செய்யும் காரியம் பயன்படாது; பொய், மெய் காணமுடியாது. ஆதலால் நீங்கள் இருவரும் முன்போல் செய்யுங்கள்; நான் பார்வையிட்டு உண்மை பொய் என்பதைத் தெரிந்து நியாயம் கூறுகிறேன்" என்றனர். அநுமாரும், அர்ச்சுனனும் கேட்டு அவ்வண்ணமே செய்கிறோம் என்று உடன்பட்டார்கள்.

பிறகு பார்த்தனன் காண்டீபத்தை வளைத்து முன் போலவே சரசேதுவைப் புதுக்கினான். அந்த சேதுவுக்கு மத்தியில் ஒருவருமுணராதபடி கண்ணபிரான் சக்கரத்தை வைத்தார். அநுமார் தனது காற்பெருவிரலால், சரசேதுவை அழுத்தினார். சேது அசையவேயில்லை. அது கண்டு, பாதங்கள், முழந்தாள்கள், கைகள், உடம்பு முழுவதையும் கொண்டு முழு பலத்தாலும் அழுத்தினார். அப்பொழுதும் சேது அசையவில்லை. மனம் சோர்ந்தார்; ஆலோசனை செய்வாராயினர். முன் ஒரு விரலாலழுத்திய இந்த சேது, இப்பொழுது உடல் முழுவதாலும் உதைத்தும் அசையவில்லை. இதற்குக் காரணம் இவர் பிரம்மசாரியல்ல; ஸ்ரீமந் நாராயணன்தான். நான் தருக்குற்றதால், அற்புதமான செய்கை

யையுடைய ஸ்ரீகண்ணபிரான் அதைப் பரிகாசஞ் செய்ய வந்திருக்கிறார். உலகமுண்ட உத்தமராகிய வாசுதேவருக்கு முன்னால், வாநரத்தின் பராக்கிரமம் எங்கே? என்று எண்ணி, பற்குணனை நோக்கிக் கூறுகிறார்:

"ஏ குந்தி புத்திரா! நீ வெற்றி பெற்றாய்; அது இந்தப் பிரம்மசாரியின் உதவியாலேயாம். ஆனால் இவர் பிரம்ம சாரியல்ல. சரசேதுவில் சக்கரத்தைப் பிரவேசிக்கச் செய்து கிருஷ்ணன் உன்னைக் காப்பாற்ற வந்தார். இது உண்மை. இவர் திரேதாயுகத்தில் இராமராக இருக்கும்போது எனக்கு துவாபரயுகத்தில் கிருஷ்ணாவதார தெரிசனை தருகிறே னென்று வரமளித்திருந்தார். அந்த வார்த்தையை உண்மை யாக்குவதற்கு உன் சரசேதுவைக் காரணமாகக் கொண்டு வந்திருக்கிறார்" என்று அர்ச்சுனனிடம் அநுமார் சொல்லிக் கொண்டிருக்கும்போதே, பகவான் பிரமசாரி யுருவத்தை மாற்றி கிருஷ்ண ரூபத்துடன் திவ்ய தெரிசனமளித்தார். அநுமார், உடனே உள்ளமுருகி உடம்பு பூரித்துப் பல்காலும் பணிந்தார். பீதாம்பரதரனும், நீலமேகவண்ணனுமாகிய கமலக்கண்ணன் மாருதியை ஆலிங்கனஞ் செய்து ஆசி கூறினார். கண்ணனுடைய அனுமதியினால் சக்கரம் இருப் பிடஞ் சென்றது. சமுத்திரத்தின் அலைகளால் சரசேது கலைந்துவிட்டது. அத்தருணம் அர்ச்சுனன், அச்சுதனால் தன் ஆவி நிலைத்தது என்று செருக்கொழிந்து நின்றான்.

அப்போது தேவகி நந்தனர், பார்த்தனை நோக்கி "ரகு ராமரை அவமதித்தாய்? அதனால் அநுமன் உன் வில்வித்தை யைப் பொய்யாக்கினன்" என்று கூறிப் பிறகு அநுமாரை நோக்கி, "ஓ ஆஞ்சநேய! நீ எவன் பிரதாபத்தால் இராமர் ஆழியில் அணைகட்டினாரோவென்று தன் பெருமை கூறி இராமரைத் தாழ்த்திப் பேசியதால் விஜயனால் வெல்லப் பட்டாய்; இனித் தருக்கற்று எப்போதும் என்னைத் தியானஞ் செய்து கொண்டிரு" என்றுரைத்து, மீண்டும் நகரஞ் சென்றனர்.

# 18. தீபம்

உயிர்கள் யாவும் விரும்புவது ஒளி ஒன்றேயாகும். இருளை எந்த உயிர்களும் விரும்பமாட்டா. இருளிலே துன்புற்று மரங்களில் ஒடுங்கிக் கிடந்த பறவைகள் கதிரவன் ஒளி வருகின்ற குறிப்பையறிந்து, வைகறையில் சிறகையடித்துக் கொண்டு ஆரவாரஞ் செய்து மகிழ்வது கண்கூடு. கதிரவன் ஒளியைக் கண்டு நிலமகள் முகமலர்வதுபோல், தாமரைகள் மலர்கின்றன. செடிகளும், கொடிகளும், மரங்களும் கண் விழித்துப் பார்ப்பதுபோல், அழகிய மலர்கள் மலர்கின்றன. மக்களும் மகிழ்கின்றார்கள். உலகிற்கு இன்றியமையாத பொருள் ஒளியொன்றேயாகும். துன்பத்தின் வடிவாகிய நரகத்தை இருள் என்று கூறுவது மரபு. வள்ளுவர் கூறுமாறு காண்க:

அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்.

ஒளியினால் நமக்குப் பெரிய இன்பம் உண்டாகின்றது. உலகில் ஒளியைத் தருகின்ற பொருள்கள் மூன்று என்க. கதிரவன், திங்கள், விளக்கு என்ற மூன்றினால் நாம் நன்மையடைகின்றோம். கதிரவனும், சந்திரனும் நமக்கு வேண்டும் போது, வேண்டிய இடங்களில் உதவுவதில்லை. விளக்கை வேண்டியபோதெல்லாம், வேண்டிய இடங்களில் எல்லாம், வேண்டியபடி பயன்படுத்திக் கொள்ளலாம். ஆதலின் ஒரு வகைக்கு சந்திர சூரியரைவிட நமக்கு விளக்கு மிக்க பயன் படக் கூடியதாக இருக்கின்றது. தவிர, அண்மையில் நமக்கு உதவுகின்றது. அதனால் இறைவனை, திருவிசைப்பா,

"ஒளிவளர் விளக்கே! உலப்பிலா ஒன்றே"

என்று அழைக்கின்றது.

"சூழொளி விளக்கே"

என்று அழைக்கின்றார் மணிவாசகனார். விளக்கின்றி மனிதன் வாழ முடியாது.

அதனால்தான் பகலில் சூரியனுடைய ஒளி நிரம்பியிருக்கின்ற காலத்திலுங்கூட நாம் திருவிளக்கை வைத்து வழிபடுகின்றோம். வழிபாட்டுக்கு இன்றியமையாத அங்கமாக விளங்குவது தீபமாகும்.

பழைய காலம் முதல், இன்றுவரை, திருவிளக்குப் பூஜை செய்வதும், மங்கல காலங்களில் விளக்கை ஏற்றுவதும், திருமண காலத்திலே விளக்குகளை வைத்து மணமக்கள் வலம் வருவதும், நம் நாட்டு வழக்கமாகும்.

வீமன் பலருக்கு இடுக்கண் புரிந்த பகனை மாய்த்து வேத்திரகீய நகருக்கு வந்தபோது, அங்குள்ள அந்தணர்கள் நெய் விளக்கு ஏற்றி, வீமசேனனை வரவேற்று உபசரித்தனர் என வரும் பாரத வரலாற்றையும் அறிக.

"வாசமாமணி விளக்கெடுப்ப இவன்
வந்து தாமுறையு மனை புகுந்து."

இராமலிங்க அடிகள், மனமாகிய தோழியை நோக்கி, "தோழி! இது அருளாளர் வருகின்ற தருணம், கணக்கில்லாத விளக்குகளை ஏற்றிடுவாய்; பசுநெய் விட்டு விளக்குகளை ஏற்று; வேறு நெய்யால் எம்பெருமான் திருமேனிக்கு மாசு நேர்ந்தாலும் நேரும். 'இது காலை நேரமாயிற்றே? இருள் இல்லையே? விளக்கு வேண்டுமா?' என்று வினவாதே. மங்கலமாக ஏற்றவேண்டும்" என்று, இனிய செஞ்சொல் மொழிகளால் பாடுகின்றார்.

அருளாளர் வருகின்ற தருணமிது தோழி
ஆயிரமா யிரங்கோடி அணிவிளக்கேற் றிடுக
தெருளாய பசுநெய்யே விடுகமற்றை நெய்யேல்
திருமேனிக் கொருமாசு செய்தாலும் செய்யும்
இருளேது காலைவிளக் கேற்றிடவேண் டுவதோ
என்னாதே மங்கலமா யேற்றுதலாங் கண்டாய்
மருளேலங் கவர்மேனி விளக்கமதெண் கடந்த
மதி கதிர்செங் கனல்விரவி என்னிலுஞ் சாலாவே.

ஆலயத்தில் விளக்கேற்றி இறைவனை வழிபடுவார்க்கு மெய்ஞ்ஞானமுண்டாகும். "விளக்கிட்டார் பேறு சொல்லில் மெய்ந்நெறி ஞானமாகும்" என்கின்றார் அப்பரடிகள்.

அணைந்து போகுந் தருணத்தில், தன் வால்பட்டுத் தூண்டிக் கொண்ட புண்ணியத்தினுல், எலி, பலிச்சக்கர வர்த்தியாகப் பிறந்தது என்ற வரலாற்றினுலும், விளக்கின் பெருமை விளங்குகின்றது.

இறைவனைத் திருவிளக்கில் ஆவாகனஞ் செய்து, வழி படுகின்ற விதியும், நமது பழமையான சாத்திரங்களில் உண்டு. இறைவனை அருணகிரிநாதர்,

"தீபமங்கள ஜோதீ நமோநம"

என்று துதிக்கின்ருர்.

"தீபவிளக்கங் காண எனக்குன்
சீதள புத்மந் தருவாயே"

என்ற சிதம்பரத் திருப்புகழின் உயர்ந்த கருத்தை உன்னுந் தோறும் உன்னுந்தோறும் உள்ளம் உருகுகின்றது.

"கோவாத முத்தமே குறையாத மதியமே
கோடாத மணி விளக்கே"

என்று அருட்பிரகாச வள்ளலார் அம்பிகையைத் துதிக்கின்ற னர். ஆதலினுல் தீபத்தை வழிபட்டு, உள்ளே யுள்ள ஆணவ இருளையோட்டி ஞான ஒளியைப் பெருக்க அறிஞர்கள் முயல்க.

## 19. தீபாவளி

தீபாவளி என்னும் நன்னுளைப் பொன்னுளாக யாண்டுங் கொண்டாடுகின்ருர்கள். ஆனுல் அதன் உண்மை யறிந்த வர்கள் ஒரு சிலரே யாவார்கள். அதனைச் சிறிது இங்கு விளக் குவாம்.

பெரும்பாலோர், நரகாசுரனைக் கண்ணபிரான் சங்கரித் தார். அந்த அரக்கனை யழித்த நாளே தீபாவளி என்று கூறிக்கொண்டிருக்கிருர்கள்.

நரகாசுரனைச் சங்கரித்த நாள் அதுவாக இருக்கட்டும். ஆனுல் கேவலம் ஒரு கொடியவனைக் கொன்ற நாளுக்கு, ஒரு

கொண்டாட்டம் நிகழ்வது, யாண்டும் எக்காலத்தும் இருந்த தில்லை. அப்படி யிருக்குமாயின், இரணியனைக் கொன்ற நாள், இராவணனைக் கொன்ற நாள், கம்சனைக் கொன்ற நாள், இடும்பனைப்-பகனைக் கொன்ற நாள், துரியோதன னைக் கொன்ற நாள், அவ்வாறே அந்தகாசுரன், சலந்தரா சுரன், இரண்யாட்சன், திருணவர்த்தன், இப்படி புகழ் படைத்த அரக்கர்கள் ஒவ்வொருவரையுங் கொன்ற நாட் களையெல்லாம் கொண்டாடுவதாயின், ஆயுளே அதற்குச் சரியாகிவிடும். ஆகவே நரகாசுரனைக் கொன்றதற்காகத் தீபாவளி ஏற்பட்டதன்று.

தீபம்...விளக்கு; ஆவளி—வரிசை.

தீபத்தை வரிசையாக வைத்துச் சிவபெருமானை வழி படுவதற்கு உரிய நாள், தீபாவளி என வுணர்க. தீபமங்கள ஜோதியாக விளங்கும் சிவபெருமானை, நிரம்பவும் விளக் கேற்றி வணங்கினார்கள் நமது முன்னோர்கள். திருக்கார்த் திகையில் விளக்கேற்றி வணங்குகின்றார்களன்றோ?

"விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்" என்பது ஞானசம்பந்தர் திருவாக்கு.

சிவ விரதம் எட்டு எனக் கந்தபுராணத்தின் ஏழாவது காண்டமாகிய உபதேசகாண்டம் புகல்கின்றது.

அவையாவன:

(1) சோமவார விரதம்

(2) உமாமகேச்சுர விரதம் (கார்த்திகை மாதம் பௌர்ணமி)

(3) திருவாதிரை விரதம் (மார்கழியில்)

(4) சிவராத்திரி விரதம் (மாசியில்)

(5) கல்யாண விரதம் (பங்குனி உத்திரம்)

(6) பாசுபத விரதம் (தைப்பூசம்)

(7) அஷ்டமி விரதம் (வைகாசி பூர்வபட்ச அஷ்டமியில்)

(8) கேதார மாவிரதம் (இதுதான் தீபாவளி)

தொல்லேவல் வினைகழித்துத் தருஞ்சோமவாரமா
திரை நோன்பன்றிப்
புல்லியவு மாமகேச் சுரஞ்சிவராத் திரிமுறையில்
பொருந்த நோற்கப்
பல்வினையுந் தொலைந்திடுகே தாரமண விரதமிவை
பரமநோன்பு
கொள்ளுறு சூற் படைவிரத மெனுமெட்டுஞ் சிவ
விரதங் குணிக்குங்காலே.

## இந்த விரதம் நோற்கும் முறை

புரட்டாசி மாதம் பூர்வபட்சம் அஷ்டமியில் தொடங்குதல் வேண்டும். நிறைகுடம் வைத்து, அதில் சிவபெருமானை ஆவாகனஞ் செய்து, இருபத்தொரு இழையுடைய நூலைக் கையில் புனைந்து, அருச்சனை செய்து, தூப தீப நிவேதனம் புரிந்து வழிபடவேண்டும்.

ஐப்பசி மாத அமாவாசைக்கு, முந்தினநாள் சதுர்த்தசியினன்று, அதிகாலையி லெழுந்து நீராடி, தூய ஆடையுடுத்து, நெல்லின்மீது நிறைகுடம் வைத்து, மாவிலையும் தருப்பையும் வைத்து, அதில் சிவமூர்த்தியை நிறுவி, சிவமாகவே பாவனை புரிந்து, பக்தி பரவசமாக அருச்சித்துப் பாராயணம் புரிந்து, தூப தீப நிவேதனங்கள் செய்து வழிபடவேண்டும்.

மறுநாள் அமாவாசையன்று காப்பை யவிழ்த்துவிட்டு உணவருந்தவேண்டும். இந்த விரதம் கேதாரவிரதம் எனப்படும்.

பிருங்கி முனிவர் சத்தியை விலக்கிச் சிவபெருமானை மட்டும் வலம்வந்து வழிபட்ட காரணத்தினால், உமாதேவியார் வெகுண்டு, இடப்பாகம் பெறும்பொருட்டு, திருக்கயிலாய மலையினின்றும் நீங்கி, கௌதம முனிவருடைய வனத்தை யடைந்தனர். அவ்வனம் அம்பிகையின் வரவினால் மிகவுஞ் செழிப்புற்றது. பாம்பும் தவளையும், அரவும் கீரியும், உரகமுங் கருடனும் உறவாடின.

கௌதமர் கௌரியைத் தொழுது துதித்தனர். இந்த விரதத்தைக் கௌதமர் கூற, விதிப்படி உமையம்மையார் நோற்று, இறைவருடைய இடப்பாகத்தைப் பெற்று மகிழ்ந்தனர்.

கௌரி நோற்ற காரணத்தால், கேதாரகௌரி விரதம் எனவும் இது பேர் பெற்றது.

இருபத்தொருநாள் அனுட்டிக்க முடியாதவர்கள், ஐப்பசி தேய்பிறைச் சதுர்த்தசியன்று மட்டும் மேற்கூறிய முறைப்படி அனுட்டிக்கவேண்டும்.

இவ்விரதத்தை எல்லோரும் மேற்கொண்டு, அன்று சிவ மூர்த்தியை வழிபட்டு, நலம் பெறுதல்வேண்டும். தீபங்களை வரிசையாக ஏற்றி, அன்புடன் வழிபடவேண்டும்.

தீபாவளியன்று மது மாமிசங்களை யுண்டு களியாட்டம் களிக்கின்ற மாந்தர் பெரும் பாவத்திற்கு ஆளாவார். இனியேனும் அந்தத் தீயநெறியைக் கைவிட்டுத் தூய நெறி நின்று நலம் பெறுவார்களாக.

## 20. திருவள்ளுவரும், அருணகிரிநாதரும்

மிகுந்த வெய்யில்—புழுக்கம் ஏற்படும்போது இன்று மழை வரும் என்று நாம் கருதுகின்றோம். அவ்வண்ணமே மழை பொழியவும் காண்கின்றோம். அதுபோல அநீதியாகிய வெப்பம் மிகுந்த காலத்து, ஞானமாகிய வானத்தில் அருளாகிய கொண்டல் தோன்றி நீதி மழை பொழியும்.

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னே நீதி எது? அநீதி எது? என்ற விளக்கமின்றி உயிர்களாகிய பயிர்கள் அருங் கோடையால் வாடியபோது, மெய்ஞ்ஞானமாகிய வானத்தில் திருவள்ளுவராகிய அருள்மேகம் தோன்றி அறம், பொருள், இன்பம் என்ற மூன்று உலகங்களும் தழைக்க ஆயிரத்து முந்நூற்று முப்பது முறை நீதி மழைகளைப் பொழிந்தது. அந்த நன்னீர் இன்றும் வற்றாமல் பள்ளத்தில் மட்டுமின்றி மேட்டிலேயும்கூடத் தங்கி நிற்கின்றது.

உள்ளுந்தொறும், உள்ளுந்தொறும் தெள்ளமுதத்தை —தெவிட்டாத இன்பத்தை அள்ளித் தரும் வாக்கு; தக்கார் அனைவரும் எக்காலத்தும் போற்ற, என்றும் நின்று இளமை யுடன் விளங்கும் வன்மையுடையது அது.

"அறிவுடையார் எல்லாமுடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்"

என்பது பொதுமறையின் புனித வாக்கு.

"அறிவும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அறிவே சிவமாவது ஆரும் அறிகிலார்
அறிவே சிவமாவ தாரும் அறிந்தபின்
அறிவே சிவமா யமர்ந்திருப் பாரே."

—திருமூலர் திருமந்திரம்.

சிவம் வேறு அறிவு வேறு அன்று. அறிவே மெய்ப்பொருள். ஏனையவெல்லாம் பொய்ப்பொருள்களாம். பொய் என்பதற்கு நிலையில்லாதது என்பது பொருள். நிலைபேறுனது கடவுள் ஒன்றே. மற்றவையெல்லாம் தோன்றி நின்று ஒருங்கு மாய்வனவாம்.

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு,"

என்கின்றார் தெய்வப் புலவராகிய திருவள்ளுவர்.

எனவே, சிவம் என்றும், எப்பொருள்களிலும், ஊடுருவி நிற்கின்றது. அதனை அறிவதுவே அறிவெனத் தெளிக.

அருணகிரிநாதர்,

"அறிவு திருமேனி யென் றுணர்ந்துன்
அருண சரணார விந்தமென்று பெறுவேனோ?"

"அறிவை யறிபவர் அறியும் இன்பந்தனை"

எனப் பலப்படக் கூறுகின்றார்.

திருவள்ளுவரை நன்றாக உணர்ந்தவர் அருணகிரிநாதர். பாம்பறியும் பாம்பின் கால் என்பதுபோல, ஞானிகளை ஞானிகளே யறிவர்.

மக்களிலே மூன்று பிரிவுண்டு. மனித உடம்பெடுத்த விலங்குகள், மனித உடம்பெடுத்த மனிதர்கள், மனித உடம் பெடுத்த தேவர்கள்.

(1) மனிதருள் விலங்கு:—செய்வன, தவிர்வன அறியாது, உண்டு உடுத்து உலாவி உவகை யுறுவார்கள்.

(2) மனிதருள் மனிதர்: நன்மை, தீமை தெரிந்து, மனதைச் சென்றவிடத்துச் செலவிடாது தடுத்து, தீதுஒரீஇ, நன்றின்பா லுய்த்து நலமுற வாழ்பவர்.

(3) மனிதருள் தேவர்: மெய்யுணர்வு பெற்று, நான், எனது என்னும் இருவகைப் பற்றுக்களும் அற்று, பற்றற்ரு ஊனப் பற்றி, திருவருள் நெறி நின்று கருணை வடிவினராய்த் திகழ்பவர்.

திருவள்ளுவர் மனிதருள் தேவர். அவரை மனிதருள் மனிதராக எண்ணக்கூடாது. அவரைத் தேவர் என்று ஆன்ருேர்கள் கூறி மகிழ்ந்தார்கள்.

"தேவர் குறளும்"

என்ற வெண்பாவினுல் அறிக.

அருணகிரிநாதர், திருவள்ளுவரைத் தேவர் என்கின்ருர். அன்றியும் திருக்குறளைப் படிக்கக்கூடாது. படிப்பது சாமானியம். ஓதுதல் உயர்வுடையது. ஓதுவதற்கு மூன்று இலக்கணங்கள் உண்டு. ஒன்று ஓதுகின்ற நூலின்மீது காதல்; ஓதும்போது உள்ளம் கசிதல்; அதற்கு அடையாளமாக கண்ணீர் மல்குதல்.

"காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார்"

என்ருர் திருஞான சம்பந்தர்.

திருவள்ளுவர், திருக்குறளை ஓதுதல்வேண்டும், உணர்தல் வேண்டும் என்கின்ருர்.

'ஓதியுணர்ந்தும்' என்கின்ற குறளின் அருமையையுணர்க.

அருணகிரிநாதர்,

"திருவ(ள்)ளுவ தேவர் வாய்மை என்கிற
பழமொழியை ஓதியே யுணர்ந்து"

—(படர்புவியின், திருப்புகழ்.)

என்று திருப்புகழில் மிக அழகாகக் கூறியருளினுர்.

இனி வள்ளுவர் அறம், பொருள், இன்பம் என முப்பாலாகச் செப்பினுர். இதனை அருணகிரிநாதர்,

**''இடரற முப்பால் செப்பிய''**—(அகல்வினை) திருப்புகழ் என்று கூறுகின்ருர்.

இதனுல் அநீதியாகிய அருங் கோடையை மாற்ற, ஞான வானத்தில் எழுந்த அருள்மேகம் திருவள்ளுவர் என்பதும், அவர் மொழிந்த பொதுமறையாகிய நீதிமழை பள்ள மேடுகளிலும் இன்றும் தங்கி யுதவுகின்றது என்பதும், அறிவு மயமாகிய மெய்ப்பொருளை யறிவதுவே அறிவின் பயன் என்பதும், திருவள்ளுவர் மனிதருள் தேவர் என்பதும், அவர் அருளிய குறளை ஓதியுணர்தல் வேண்டுமென்பதும், அது எப்பாலாரும் ஒப்ப முடிந்த முப்பால் என்பதும் விளங்குகின்றன.

ஆதலின், உலகப் பொதுமறையாகிய உயர்ந்த திருக்குறளை, எம் மதத்தினரும், ஏனேரும் ஓதியுணர்ந்து உயர்வு பெறுவார்களாக.

## 21. அருணகிரிநாதர்

வெய்யில் அதிகம் உண்டானபோது, மழை வருவது இயல்பு. அதுபோல், அதர்மம் அதிகம் உண்டானபோது, ஞானவானில் கருணை மேகங்கள் தோன்றி, தருமம் என்ற மழை பொழியும்.

இன்றைக்கு ஈராயிரம் ஆண்டுகட்கு முன் அறம் எது? மறம் எது? என்று மக்கள் உணராது மயங்கித் தயங்கிய போது, திருவள்ளுவர் என்ற செழுங்கொண்டல் தோன்றி, அறம் பொருள் இன்பம் என்ற முப்பாலும் விளங்க. ஆயிரத்து முந்நூற்று முப்பது முறை திருக்குறள் என்ற மழையைப் பொழிந்தது. அந்த அறப்புனல் இன்றும் பள்ளத்திலே மட்டுமன்றி, மேட்டிலும் தேங்கி உலகை உய்விக்கின்றது.

இதுபோல், 15-ம் நூற்றுண்டில் சைவ வைணவப் பூசல் என்ற வெப்பத்தால் மக்கள் நலிந்தபோது, திருவண்ணுமலே யில் அருணகிரி என்ற கார்மேகம் எழுந்து, சிந்தை குளிர, செவி குளிர, உயிர் குளிர, ஊன் குளிர, திருப்புகழ் என்ற அமுதத் தமிழ் மழையைப் பொழிந்தது; பதிஞயிரம் முறை பொழிந்தது.

முருகப் பெருமானிடம் அருள் பெற்றவர்கள் பலர். ஆனுல் மெய்ஞ்ஞான பண்டிதனும் செவ்வேட்பரமன் திரு வாக்கால் பிரணவ மந்திர உபதேசம் பெற்றவர்கள் மூன்றே பேர்தான்.

(1) சிவபெருமான்.
(2) அகத்தியர்.
(3) அருணகிரிநாதர்.

தேவ சிரேட்டர் சிவபெருமான்.
முனி சிரேட்டர் அகத்தியர்.
நர சிரேட்டர் அருணகிரிநாதர்.

வேலா சரணம் சரணமென்மேல் வெகுளாமல் இனி
மேலாயினுங் கடைக் கண்பார்பருப்பதவேந்தன்மகள்
பாலா குறுமுனியார்க்குந் திருப்புகழ்ப்
பண்ணவர்க்கும்
ஆலால முண்டவர்க்கும் உபதேசித்த என்
ஆண்டவனே.

என்று முருகரந்தாதி மொழிகின்றது.

அருணகிரிநாதருடைய பெருமையை அநுபூதிமாஞகிய தாயுமானப் பெருந்தகையார் பல இடங்களில் பாராட்டு கின்ருர்.

கந்தரநு பூதிபெற்றுக் கந்தரநு பூதிசொன்ன
எந்தை யருள்நாடி யிருக்குநாள் எந்நாளோ?

ஐயா அருணகிரி அப்பா உனேப்போல
மெய்யாக ஓர் சொல் விளம்பினரார்—வையகத்தோர்
சாற்றரிதென் றேசற்ருர் தன்னனேயாய்
முக்கணெந்தை
நாற்றிசைக்குங் கைகாட்டி ஞன்.

என்றெல்லாம் இனிது வியந்து துதிக்கின்ருர்.

அருணகிரிநாதர் நினைக்க முத்தியளிக்குந் திருத்தலத்திலே, சிறந்த சைவ மரபிலே தோன்றினர்.

"நல்லாறு தெரிந்துணர நம்பர் அருளாமையினல், கொல்லாமை மறைந்துறையும் பரசமயங் குறுகினர்!" அப்பர்.

அதுபோல் ஆறுமுகப் பெருமான் அருள் துணை செய்யாமையால், அருணகிரியார் தமது இளமைப் பருவத்தை இருமனப் பெண்டிர்பால் கழித்தனர். அதன் பயனுக நோய் வாய்ப்பட்டார்.

பிணியின் முதிர்ச்சியால், வல்லாளராஜனுடைய கோபுரத்தின் உச்சியில் ஏறி, "முருகா" என்று கீழே உருண்டார்.

பண்டைத் தவவலிமையால், முருகப்பெருமான் குருவடிவாகத் தோன்றி, செங்கரத்தால் தாங்கி, அவருடைய செவியில், "சும்மா இரு சொல்லற" என்று உபதேசித்து அருளி மறைந்தார்.

அருணகிரிநாதர் அங்ஙனமே சிவயோக சமாதியில் அமர்ந்திருந்தார்.

அகத்தே கண்ட முருகவேளைப் புறத்தேயுங் கண்டார்.

" கருணையடியரொ டருணையில் ஒருவிசை
சுருதி புடைதர வருமிரு பரிபுர
கமல மலரடி கனவிலும் நனவிலும் மறவேனே"

"அருணகிரி! நம் திருப்புகழை உலகம் உய்யப் பாடு" என்றூர் முருகவேள்.

"ஐயனே! வேதாகமங்கட்கும் எட்டாத நின் புகழை, ஏடு எழுதா முழு ஏழையாகிய எளியேன், எங்ஙனம் பாடுவேன்?" என்று கேட்டார்.

முருகன் அவருடைய நாவிலே, வேலாயுதத்தால் 'ஓம்' என்ற தனிமொழியை எழுதி, "முத்து என்று பாடுக" என்று பணித்தருளினர்.

உடனே அருணகிரிநாதருக்குக் கடல் மடை திறந்த வெள்ளம்போல் வாக்கில் தமிழ் வெள்ளம் பெருக் கெடுத்தது.

"அறிவுமறி தத்துவமும், அபரிமித வித்தைகளும்
அறியென இமைப்பொழுதில் வாழ்வித்த வேதியனும்

என்று திருவகுப்பில் கூறியிருக்கின்றார் அருணகிரியார். அக் கணத்திலே சகல கலா வல்லுனராகி, சிவஞானச் செம்ம லாய்த் திகழ்ந்து பாடுகின்றார்:

"முத்தைத் தரு பத்தித் திருநகை
அத்திக் கிறை சத்திச் சரவண
முத் திக்கொரு வித்துக் குருபர எனவோதும்"

என்று பாடுவராயினர்.

## தல தரிசனம்

தலங்கள் தோறும் சென்று சென்று பாடுவராயினர். இமயம் முதல் குமரி வரை யாத்திரை புரிந்தார். ஈழநாடும் சென்று கதிர்காமம், திருகோணமலை, யாழ்ப்பாணம் முதலிய தலங்களில் எழுந்தருளிய எம்பெருமானைக் கல்லை யுங் கனிவிக்கும் கன்னித் தமிழால் பாடினர்.

திருச்செந்தூரில் நடன தரிசனம் பெற்றார்; பழநியில் ஜெபமாலை பெற்றார்; திருவேரகத்தில் பிரணவ மந்திர உப தேசம் பெற்றார்; விராலிமலையில் அஷ்டமா சித்திகளையும் பெற்றார்; வயலூரில் சிறந்த வாக்குவளம் பெற்றார். வில்லி புத்தூராருடன் வாதிட்டுப் புலவர்களின் காதுகளை அறுக் கும் வன்மையை அகற்றி நன்மை புரிந்தார். சம்பந்தாண்டா னுடன் வாது செய்து, கம்பத்தினின்றும் கந்தவேளை வர வழைத்துப் பலரும் காணக் காட்சிதரச் செய்தார். அப் போது பாடிய திருப்புகழ் 'அதல சேடனாராட......' என்ற பாடல்.

## திருவடி சேரல்

முடிவில் ஆனிமாதம் மூலநட்சத்திரத்தில் முருகன் திரு வடியில் சேர்ந்தார்.

விருப்புடன் உபய சரணமென் மலரை
வேண்டுவார் வேண்டுவ தளிக்கும்
பொருப்புகள் தோறும் நின்றருள் ஒருவன்
புகழினை அகநெகப் புகன்று
கருப்புகு தாத கதிதனைக் காட்டும்
கலையுணர் புலவர்கள் திலகம்
திருப்புகழ் அருணகிரி எமது அடிகள்
திருவடி குருவடி வாமே!

## 22. கந்தசஷ்டி விரதம்

உலகத்திலே சிறந்த செல்வம் படைத்தவர் சிலரும், வறுமையாகிய தீயின்மேல் கிடந்து வாடுகின்றவர் பலருமாக இருக்கின்றனர். இதற்கு என்ன காரணம்?

இறைவனை நினைந்து நல்ல விரதங்களை நோற்றவர் சிலர்; விரதங்களை நோலாதவர் பலர். முற்பிறப்பில் நல்விரத மிருந்து இறைவனை வழிபட்டவர், இப்பிறப்பில் சகல செல்வ யோகமிக்க பெருவாழ்வில் வாழ்வார்கள். அல்லாதவர் நல் குரவில் ஆழ்ந்து அல்லல்படுவர். இதனைத் தெய்வப் புலவ ராகிய திருவள்ளுவர் தெரிவிக்கின்றனர்.

இலர்பலர் ஆகிய காரணம் நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்.

“இரைதேடுவதோடு இறையுந்தேடு” என்று பாம்பன் சுவாமிகள் கூறுவார். ஆகவே மனிதப் பிறப்பெடுத்த நாம் இப்பிறப்பை நமக்குத் தந்த தலைவனைக் குறித்து விரதங் களிருந்து வேண்டுதல் வேண்டும்.

எளிதிலே அருள்புரியும் மூர்த்தி கலியுக வரதராகிய கந்தக் கடவுள். தலையாய தேவாதி தேவர்க்கெல்லாம் தலை யாய தனிப்பெருந் தலைவர். “மாலயனுக்கு அரியான்; மாதவ ரைப் பிரியான்” என்பார் அவரைப்பற்றி அருணகிரிநாதர். முருகப் பெருமானை நினைந்து நல்விரதங்களை யாற்றி வழிபாடு செய்தோர் எல்லா நலன்களையும் எளிதிற் பெறுவர்.

முருகவேளுடைய விரதங்களுள் தலையாய விரதம் கந்த சஷ்டி விரதம் ஆகும்.

சிவபெருமானுடைய விரதங்கள் எட்டு. அவற்றுள் தலையாயது சோமவார விரதம். அந்த அஷ்ட விரதங்களுள் ஒன்று தீபாவளி விரதம். இறைவன் ஜோதி வடிவானவன்.

"மறைய நின்றுளான் மாமணிச் சோதியான்'
"திருவையா றகலாத செம்பொற் சோதி"
"ஆதியு மந்தமுமில்லா அரும் பெருஞ் சோதி"
தீபமங்கள சோதீ நமோநம"

என்பனவாதி தமிழ் வேத வசனங்களால் அறிக.

ஆகவே சிவபெருமானை உள்ளன்புடன் நினைத்து வரிசையாக விளக்குகளை வைத்து வழிபடுகின்ற விரதம் தீபாவளி.

தீபம்—விளக்கு. ஆவளி—வரிசை.

விளக்குகளை வரிசையாக வைத்துச் சிவபெருமானைத் தீபாவளியன்று வழிபடவேண்டும். இதன் பெருமையையும், நோற்கும் முறையையும் உபதேச காண்டத்தில் நன்ருக உரைக்கப்பட்டிருக்கின்றது. இவ்விரதத்தை உமையம்மையார் நோற்றனர்.

நரகாசுரனைக் கொன்ற காரணத்தால் கொண்டாடப் படுவது தீபாவளி என்பது பிழை. ஒரு அசுரனைக் கொன்றதற்காக ஒரு கொண்டாட்டம் இருக்கமுடியாது. அப்படியானுல் இரணியன், ராவணன், இடும்பன், பகன், சலந்தரன் அந்தகன் முதலிய அரக்கர்களைக் கொன்றதற்கும் கொண்டாட்டம் இருக்கவேண்டும். ஆகவே நரகாசுரனை வதைத்ததற்கும் தீபாவளிக்கும் தொடர்பு இல்லை என உணர்க.

தீபாவளி ஐப்பசித் திங்கள் தேய்பிறை சதுர்த்தசி திதியில் விரதம் இருக்கவேண்டும். அன்று உபவாசமாக இருந்து சிவபெருமானை வழிபடவேண்டும்.

மறுநாள் அமாவாசை யன்று பாராயணஞ் செய்ய வேண்டும்.

அதற்கு மறுநாள் வளர்பிறை பிரதமையிலிருந்து கந்த சஷ்டி விரதம் தொடங்கவேண்டும்.

பிரதமையன்று அதிகாலே எழுந்து நதியாயின் நீரின் எதிர்முகமாக நின்றும், கிணறு குணங்களாயின் வடதிசை நோக்கி நின்றும்,தண்ணீரில் அறுகோணம் வரைந்து அதில் சடாக்கர மந்திரத்தை எழுதி, இடையே பிரணவத்தை எழுதி அத்தண்ணீரைச் சிவகங்கையாகப் பாவனே புரிந்து அதில் முழுகவேண்டும்.

பின்னர் கரையேறி, தோய்த்து உலர்ந்த தூய ஆடைகளே யுடுத்து, அநுஷ்டானம் புரிந்து, முருகவேள் திருக்கோயிலுக்குச் சென்று மலர் இட்டு, விதிப்படி வலம் வந்து, திருப்புகழ், திருமுருகாற்றுப்படை, கந்தர் கலிவெண்பா, கந்தர் அநுபூதி இவைகளே ஓதி உள்ளம் உருகி ஒருமையுடன் வழிபடவேண்டும்.

இவ்வாறு ஐந்து நாட்கள் நோற்றபின், ஆருவது நாள் சஷ்டியன்று, முன் கூறியபடி நீராடி, சிறப்பாக ஜபதபங்களேச் செய்யவேண்டும். அதிக பாராயணஞ் செய்து சிந்தனே முழுவதும் செவ்வேள் திருவடிக்கே செலுத்தவேண்டும். அன்றிரவு ஆறு காலங்களில் முருகன் திருவுருவத்திற்கு ஆயிரத்தெட்டு மந்திரங்களால் அருச்சனே புரியவேண்டும். உறங்காமல் உணர்வுடன் குழைந்த உள்ளத்துடன் துதித்து வடிவேலிறையை வழிபடவேண்டும்.

மறுநாள் சப்தமி திதியன்று நீராடி வழிபாடு முடித்த பின் ஆறு அடியார்க்கு அன்னம் வழங்கி உணவு கொள்ள வேண்டும். அன்று பகலில் உறங்கக் கூடாது.

ஆறுநாட்களிலும் பூரண உபவாச மிருக்க முடியாதவர்கள், ஐந்து நாட்கள் பால்பழமுண்டு, சஷ்டியன்று முழு உபவாசமாக இருக்கவேண்டும்.

இதுவும் மாட்டாதவர்கள், ஐந்துநாட்கள் உச்சிவேளேயில் இறைவனுக்கு நிவேதித்த உணவை யுண்டு, இரவு பட்டினியாக இருந்து, ஆருவது நாள் மிகவும் அன்புடன் உபவாசமாக இருந்து வழிபடவேண்டும். ஐந்து நாட்களிலும் படுக்

கையில் படுக்கக்கூடாது. தூய பட்டு விரித்து அதன்மீது படுத்து இதயத்தில் முருகனை நிறுத்தி அகக்கண்ணுல் நோக்கி தியானித்த வண்ணமாகவே உறங்கவேண்டும்.

இவ்வாறு சஷ்டிவிரதம் இருந்தோர், மகப்பேறு முதலிய எல்லா நலன்களையும் எளிதிற் பெறுவர். இவ் விரதத்தைப் பற்றிக் கந்தபுராணத்தில் கூறுமாறுங் காண்க.

வெற்பொடும் அவுணன் தன்னை வீட்டிய தனிவேற் செங்கை
அற்புதன் தன்னைப் போற்றி அமரரும் முனிவர்யாரும்
சொற்படு துலையின் திங்கள் சுக்கில பக்கந் தன்னில்
முற்பக லாதியாக மூவிரு வைகல் நோற்ருர்.

முருகவேள் முழுமுதற் கருணை முன்னிற்க.

## 23. மார்கழித் திருவாதிரை

காருற்ற ஆணவக் கருவறையில் கண்ணில்லாக் குழந்தையைப் போல் கட்டுண்டு கிடந்த ஆன்மாக்களுக்கு, கருணைக் கடலாகிய இறைவன் தநுகரணபுவன போகங்களை யருளி, ஐம்பெருந் தொழில்களை யயர்கின்ருன். அவை இறைவனுக்கு விளையாட்டுப் போலே ஆயாசமின்றி நடைபெறுகின்றன. "காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி" என்பார் மாணிக்கவாசகர்.

திருக்கோயில்களில் நாள்தோறும் நடந்துவரும் வழிபாடுகள் இந்த ஐம்பெருந் தொழில்களையே உணர்த்தி நிற்கும்.

1. வைகறையில் பள்ளியறையின் திருக்காப்பு நீக்கித் தரிசிக்கப் பெறுதலாகிய "திருவனந்தல்" என்று சொல்லப் பெறுகின்ற **திருப்பள்ளியெழுச்சி** அருளலை (அநுக்கிரகத்தை)க் குறிக்கும்.

2. பின்னர் அபிஷேகம் முதல் நடைபெறும் வழிபாடு படைத்தல் என்ற சிருட்டியைக் குறிக்கும்.

3. அதற்குப்பின் அடுத்த காலம் முதல் அர்த்தயாமப் பூஜைக்கு முன் நிகழ்கின்ற வழிபாடுகள் யாவும் காத்தல் என்ற திதியைக் குறிக்கும்.

4. அர்த்தயாம வழிபாடு அழித்தல் என்ற சங்காரத்தைக் குறிக்கும்.

5. பள்ளியறை வழிபாடு திரோபவம் என்ற மறைத்தலைக் குறிக்கும்.

இவ்வாறு ஆண்டவன் அருளால் அயரும் ஐம்பெருந் தொழில்களின் குறிப்பே கோயில் வழிபாடுகள் எனவுணர்க.

இனி, தேவர்களுக்கு ஒருநாள் நமது வருடமாகும். தை முதல் ஆனி வரை பகல்; ஆடி முதல் மார்கழி வரை இரவு ஆகும். இந்த முறையில் மார்கழி மாதம் விடியற்காலமாகும். ஆண்டு முழுவதும் அவ்வம்மாதங்களில் செய்யும் விழாக்களும் இந்த ஐம்பெருந் தொழில்களையே உணர்த்தும்.

1. மார்கழி மாதம் விடியற்காலையாதலினால், அம் மாதத்தில் நிகழும் திருவாதிரை விழா அநுக்கிரகம் என்ற **அருளல்** ஆகிய இனிய தொழிலை யுணர்த்தும்.

2. தை மாதம் நிகழும் விழா **படைப்பு** (சிருஷ்டி).

3. மாசி மாதம் முதல் ஐப்பசி மாதம் வரை நிகழும் விழாக்கள் **காப்பு** (திதி).

4. கார்த்திகை மாதத்தில் நிகழும் விழா **அழித்தல்** (சம்மாரம்).

5. கார்த்திகை மாதத்தில் உத்சவ முடிவாகிய திருக்கார்த்திகையின் மறுதின முதல், மார்கழி மாதத்தின் திருவாதிரைத் திருவிழா கொடியேற்றத்தின் முன்னாள் வரையிலுள்ள நாட்கள் திரோபவம் என்பதை (மறைத்தலை) யுணர்த்தும். திரோபவம் நீங்க மற்ற சிருஷ்டி முதலிய நான்கினுள்ளும் ஐம்பெரும் தொழில்களின் தூல நிலைகள் காட்டப் பெறுகின்றன.

1. **கொடியேற்றுதல்**—சிருஷ்டி.

2. **நிவேதனங்கள்**—திதி.

3. **கிருஷ்ண கந்தம்**—சம்மாரம்.

4. **தேரோட்டம்**—திரோபவம்.

5. **தீர்த்தவாரி**—அநுக்கிரகம்.

1. **கொடியேற்றம்:**—ஆணவ இருளில் கிடந்த ஆன்மாக்களை அதினின்றும் மேலேற்றி உய்விக்கும் பொருட்டுச் செய்வதே சிருஷ்டி. விடை எழுதிய கொடியை மேலேற்றுதல் அதனை உணர்த்தும்.

2. **நிவேதனம்:**—மும்மல நீக்கத்தின் பொருட்டு ஆன்மகோடிகளுக்கு அளித்தருளிய உடம்பு உலகம் நுகர்வுப் பொருள்கள் முதலியவற்றைத் தருவதே காத்தற்றொழிலாகும். இதனைப் பற்பல நிவேதனஞ் செய்வது உணர்த்தும்.

3. **கிருஷ்ணகந்தம்:**—ஏழாந் திருநாளன்று நடராஜ மூர்த்திக்கு சாத்தப்படுகின்ற கருநிறமுள்ள மை.

ஆன்மகோடிகளைக் கட்டுப்படுத்திய பாசத்தை ஞான நோக்கினால் ஒடுக்குதலை இது உணர்த்துவதனால் சம்மாரம் எனப்படும்.

4. **தேர் விழா:**—துன்பமயமான உலகவியாபாரங்கள் யாவும் கீழ்ப்பட மேற்கொள்வது தேரேறுதல். இது மறைத்தலாகிய திரோபவம் ஆகும்.

5. **தீர்த்தவாரி:**—இறைவனது கருணைமயமான தண்ணீரிலே ஆன்மாக்கள் முழுகி, ஆச்சாரியனுடைய திருவருளால் மலநீக்கம் பெற்று, சத்திபதிந்து உய்வு பெறுதலாம். இது அநுக்கிரகமாகும்.

எனவே, நித்திய நைமித்திய வழிபாடுகளும் திருவிழாக்களும் இறைவனுடைய ஐம்பெருந் தொழில்களை உணர்த்தும் பொருட்டு நடைபெறுகின்றன.

ஆகவே, இவற்றுள் மார்கழியில் நிகழும் விழா அநுக்கிரகமாகும் என்று கூறினோம். இது எல்லா விழாக்களிலும் மிகமிகச் சிறப்புடையதாகும்.

கிழமைகளில் சோமவாரம் சிவபெருமானுக்கு உரியது. நட்சத்திரங்களில் திருவாதிரை சிவபெருமானுக்கு உரியதாகும்.

திருவாதிரை நட்சத்திரத்தில் தீர்த்தவாரியாகக் கொண்டு மார்கழியில் திருவிழா நிகழும்.

தோற்றத்தை உடுக்கையாலும், காத்தலை அபய திருக் கரத்தாலும், அழித்தலை கரத்தில் ஏந்திய அக்கினியாலும், மறைத்தலை ஊன்றிய திருவடியாலும், அருளலை தூக்கிய குஞ்சிதபாதத்தாலும் காட்டியருளும் நடராஜமூர்த்தியின் விழா இத் திருவாதிரையிலே நிகழும். பூலோக கைலாய மாகிய சிதம்பரத்திலே கனகசபாபதிப் பெருமானுடைய இந் நல்விழா மிகவுயர்ந்த முறையில் நடைபெறும். ஆ! ஆ! அடியவர்களின் திருக்கூட்டம் 'அர அர' என்று முழக்கம் புரிந்து ஆனந்தமுறும்.

சேந்தனர் இறைவனுக்கு நிவேதித்த பரிகலசேடமே உண்ணும் நியதியுடையவர். ஒரு மார்கழித் திருவாதிரை நாளிலே அவருக்குப் பிட்டுங் களியுமே அமையப் பெற்றன. மனவருத்தத்தோடு அவற்றை இறைவனுக்கு நிவேதித்தனர். அவருடைய மெய்யன்பை விளக்கும்பொருட்டு, நடராஜ மூர்த்தி, தமது சிற்சபையிலே பிட்டுங் களியும் உதிர்ந்து கிடக்குமாறு செய்தருளினர். இதனைக் கண்ணுற்ற தில்லை மூவாயிரம் அந்தணர்களும், ஏனைய அடியார்களும் எல்லை யில்லாத மகிழ்ச்சியுற்று, இறைவனுடைய திருவருளின் எளி மையையும், சேந்தனருடைய அன்பின் அருமையையும் பாராட்டிப் புகழ்ந்தார்கள். அன்றுதொட்டு இன்றுவரை மார்கழித் திருவாதிரைதோறும் பிட்டுங் களியும் எப்பெருமா னுக்குச் சிறந்த நிவேதனங்களாக அமைந்து வருகின்றன.

மார்கழித் திருவாதிரைத் திருவிழா முழுவதும் அநுக் கிரக வடிவமாதலால், அநுக்கிரகத்தைக் குறிக்கும். தீர்த்த ஸ்நானம் முக்கியமாதலால், அம்மார்கழி நித்திய பூஜாநுக் கிரகமாகிய விடியற்காலையில் தீர்த்தத்தில் முழுகி, திருவடி தரிசனம் புரிவது ஆன்றோர் ஆசாரம்.

இதனால், திருவருளையில் எழுந்தருளியிருந்த நமது நான்காவது குருமூர்த்திகளாகிய மணிவாசக அடிகளார் மார்கழி விடியற்காலை தீர்த்தமாடப் போகவேண்டும் என்று ஒரு பெண் மற்றொரு பெண்ணை எழுப்புவதாகவும், சிவமய

மாகிய நீரில் முழுகுவதாகவும், திருவடியைத் தரிசிப்பதாக வும் அமைந்திருக்கும் **திருவெம்பாவை**யை அருளிச் செய் தனர்.

இத் திருவெம்பாவையை அன்பர்கள், மார்கழி மாதத் தில் விடியற்காலையில் முழுகி, திருநீறு பூசி, ஒருமைப்பட்ட மனதுடன் ஓதி வழிபடுவாராயின், துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும் பெற்று உய்வர்.

## 24. சிவராத்திரி

சிவம் என்ற சொல்லுக்கு துக்காதிகளைப் போக்கு கின்றது என்பது பொருள். "ச்யதி துக்காதிகமிதி சிவா" ராத்திரி என்ற சொல்லுக்கு சுகத்தைச் செய்கின்றது என்பது பொருள். "ராதி-சுகமிதி-ராத்ரி" என்ற துக்கத்தை நீக்கிச் சுகத்தைச் செய்கின்ற இரவு சிவராத்திரி எனப்படும்.

சிவ விரதங்கள் எட்டு; அவற்றுள் சிவராத்திரி ஒன்று. இது மாசி மாதம் கிருஷ்ண பட்சம் சதுர்த்தசி திதியன்று வருவது. அதிகாலையில் நீராடி திருநீறு அணிந்து உருத்தி ராட்சமாலை பூண்டு, சிவபூஜை செய்து, திருஐந்தெழுத்து ஓத வேண்டும். பகல் முழுவதும் உபவாசம் இருத்தல் வேண்டும். மாலையில் மீண்டும் நீராடி, சிவாலயஞ்சென்று வழிபட வேண்டும். முடியுமானால் நெய்விளக்கு ஏற்றி, மலரால் அர்ச்சனை செய்வித்து, உள்ளங் குழைந்து உருகி, தேவார திருவாசகங்களை ஓதித் துதிசெய்து, வலம் வந்து, அஷ்டாங்க வணக்கம் புரிந்து வழிபாடு செய்தல் வேண்டும்.

நான்கு காலங்களிலும் சிவபூஜை செய்யவேண்டும். சிவ பூஜை செய்ய இயலாதவர்கள், நான்கு காலங்களிலும் கோயிலில் நடைபெறும் பூஜைகளில் கலந்துகொண்டு தெரி சிக்கவேண்டும். நிரம்பிய அன்புடன் திரு ஐந்தெழுத்து ஓதுதல் இன்றியமையாதது; மறுநாள் காலை நீராடி வழி பட்டு பாரணம் புரிந்து விரதத்தை முடிக்கவேண்டும். இங்ஙனம் புரிந்தோர்களுடைய சகல வினைகளும் நெருப்பில் விழுந்த பஞ்சுப் பொறிபோல் எரிந்து கரிந்து சாம்பராகும்.

பிரமனும், திருமாலும் நான் பிரமம் நான் பிரமம் என்று தருக்கமிட்டுப் போர்புரிந்தனர். அவர்கள் இடையே அடி முடி காணமாட்டாமல் ஒரு தாணு சோதிமயமாய் நின்றது. அப்படி தோன்றிய நாள்தான் சிவராத்திரி. அக்காலம் மாசி மாதம் கிருஷ்ணபட்சம், சதுர்த்தசி திதி, சோமவாரம், திருவோண நட்சத்திரம் கூடிய புண்ணிய காலம் என்க.

பிரமதேவனும் திருமாலும் துதிக்க, அவர்கள் முன்னர் அத் தாணுவில் சிவமூர்த்தி உருவமாகத் தோன்றி யருளிய நேரம் இரவு 14 நாழிகைக்குமேல் என உணர்க. அவ்வாறு சகளீகரித்த சிவமூர்த்தி, மாலயனுதி வானவர் யாவர்கட்குந் திருவருள் புரிந்தனர்.

"இச் சிவராத்திரியன்று வழிபட்டோர்க்கு, நாம் எல்லா நலன்களேயும் அருளுவோம்" என்று சிவபெருமான் அருள் புரிந்தனர்.

இலிங்கோத்பவகாலம் என்ற 14 நாழிகைக்குமேல் ஒரு முகூர்த்தகாலத்தில், சிவபஞ்சாக்கரம் ஜெபிப்போர் எண்ணற்ற நன்மைகளே எளிதிற் பெறுவர்.

'காலம்' என்பது கடவுளுக்கு அடுத்தது. காலத்தில் செய்வதற்கு அதிக பலன் உண்டு.

ஞாலங் கருதினுங் கைகூடும் காலங்
கருதி இடத்தாற் செயின்.

என்பார் திருவள்ளுவ தேவர்.

காலத்திற் செய்கின்ற கருமங்கள் ஒன்றுக்கு ஆயிரமாகப் பெருகி நன்மை செய்யும். "பருவத்தே பயிர் செய்" என்ற பழமொழியையும் உன்னுக. காலம் அறிதல் என்ற ஒரு அதிகாரமே அமைக்கின்ருர் வள்ளுவர்.

ஆதலால் புண்ணிய விரத நாட்களில் செய்கின்ற தானத்திற்கும், ஜெபத்திற்கும், நிரம்பிய பலன் உண்டு. விரதங்கள் இருந்து, பெருமானே வழிபடுவது நம் நாட்டில் தொன்றுதொட்டு வந்த பழக்கம். விரதாதிகளே யநுஷ்டிக்காதவர்கள் நரகுறுவர் என்பர் அருணகிரிநாதர்.

"சூழ் விரதங்கள் கடிந்த குண்டர்கள்
வாதை நமன்றன் வருந்திடுங் குழி விழுவாரே"
—திருப்புகழ்.

நதிகளில் சிறந்தது கங்கை; விண்மீன்களில் சிறந்தது கதிர்; மரங்களில் சிறந்தது கற்பகம்; தேவர்களில் சிறந்தவர் திருமால்; பசுக்களில் சிறந்தது காமதேனு; யானைகளில் சிறந்தது ஐராவதம்; மலரில் சிறந்தது தாமரை; புதல்வரிற் சிறந்தவர் குமாரக்கடவுள்; மலைகளில் சிறந்தது இமயம்; இவைகளைப்போல் விரதங்களில் சிறந்தது **சிவராத்திரி**.

சிவராத்திரியில் சிறந்த நேரம் **இலிங்கோத்பவகாலம்.** இலிங்கோத்பவகாலம் என்பது இரவு பதினான்கு நாழிகைக்கு மேல் ஒரு முகூர்த்த நேரம் என அறிக. இரவு 11-30 மணிக்கு மேல் 1-00 மணி வரை என வுணர்க.

சுத்த உபவாசம் இருக்க இயலாதவர்கள், பால் பழத் துடனாவது இருக்கலாம். இரவு முழுவதும் கண் விழிக்க இயலாதவர்கள், இலிங்கோத்பவகாலம் வரையாவது கண் விழித்து ஜெபம் புரிய வேண்டும்.

உபவாசத்தினால் உடல் நலத்திற்கும் வழியுண்டு. சதா உண்டு உண்டு வயிற்றை நிரப்புகின்றோம். உணவுகளை அரைத்து செரிக்க வைக்கும் கருவிகளுக்கு, மாதத்திற்கு ஒரு நாள், அல்லது ஆண்டுக்கு ஒரு நாளாவது பூரண ஓய்வைத் தரவேண்டாமா? அவ்வாறு தருவதால் மிகுந்த உடல் நலம் உண்டாகும். உபவாசத்திற்கு மறுநாள் உடம்பு மிக்க ஆரோக்கியமாக இருக்கும்.

இரண்டாவது, உணவு இன்றி உபவாசம் இருப்பதனால் மனம் முதலிய கருவிகரணங்கள் ஒடுங்கும். அதனால் தியானம் புரிய நிரம்ப வசதியுண்டு. நன்றாக செப தபம் புரியவும் இறைவனை ஒரு மனதுடன் வழிபடவும் முடிகின்றது. ஆதலால், உபவாசத்தை எல்லோரும் சிவராத்திரியில் மேற்கொள்வது உத்தமம். தோசை, இட்டிலி, உப்புமா இவைகளைத் தின்று இருக்கின்றது விரதம் ஆகாது; அது விரதமல்ல; விரோதம்.

சிவராத்திரியன்று விடையவராம் சடைமுடியண்ணலை வழிபட்டு வரம் பெற்றோர் பலர். மற்றைய நாட்களில் ஆயிரம் பஞ்சாக்கரம் ஜெபித்த பயன், சிவராத்திரியில் ஒரு பஞ்சாக்கரம் ஜெபித்தால் வரும். இகபர நலன்களை எளிதில் தரவல்லது சிவராத்திரி.

## 25. பூஜை

நினைக்கும் தன்மையுடையவன் மனிதன்; நினைவை வெளிப்படுத்துங் கருவி வாய்; உணவுகளை அருந்துகின்ற வாய்க்குப் பெருமை கிடையாது. வாயிருந்தும் விலங்குகளை வாயில்லாத பிராணிகள் என்று கூறுகின்றோம். கருத்துக்களை வெளிப்படுத்தி வசனிக்கும் வாயை உடையவன் மனிதன்.

இந்த உடம்பும் வாக்கும் நமக்குத் தந்தவன் இறைவன். இவைகள் தாமே வந்து அமைவதில்லை. நாமேயும் எடுத்துக் கொள்வதில்லை.

"வாழ்த்த வாயும் நினைக்க மட நெஞ்சும்
தாழ்த்த சென்னியுந் தந்த தலைவன்"

என்கின்றார் அப்பர்.

எனவே, நினைக்க நெஞ்சையும், வசனிக்க வாயையும், இந்த இரண்டையும் தாங்கி நின்று தொழிற்படுகின்ற உடம்பையும் தந்த இறைவனை, நாம் ஒவ்வொருவரும் நன்றி மறவாமையின் பொருட்டு, பூவும் நீரும் கொண்டு பூஜை செய்ய வேண்டும்.

பூ—பூர்த்தி, ஜா—உண்டாக்குவது! மலமாயா கன்மங்களைப் பூர்த்தி செய்து, சிவஞானத்தை யுண்டாக்கும் புனிதமான செயல் பூஜா எனப்படும். பூஜா என்ற சொல் பூஜை என வந்தது.

பூஜைக்கு முக்கியமான சாதனங்கள் பூவும் நீருமாகும்.

"புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணலு மதுகண்டு அருள் செய்யா நிற்கும்"

நல்ல மலர்களைக் கொண்டு இறைவனை நாள்தோறும் அர்ச்சனை செய்யவேண்டும். அதுவே மெய்யும் கையும் பெற்றதற்குப் பயனாகும்.

உலகில் செல்வமும் சீரும் படைத்துச் சிறப்பாக வாழ்கின்ற ஒருவனைக் கண்டபோது, ''இவர் முற்பிறப்பில் நல்ல பூ வெடுத்துப் பூசை செய்தவர்'' என்று இன்றும் கூறுவார்கள்.

தண்ணீரையே சிவலிங்கமாகத் திரட்டி அம்பிகை பூசித்த திருத்தலம் திருவானைக்கா.

விநாயகர் சிவபூசை செய்த திருத்தலம் திருச்செங்காட்டங்குடி. அதனால் அது கணபதீச்சுரம் எனப் பேர்பெற்றது.

சூரசங்காரத்தின் பொருட்டு, முருகவேள் படைகள் சூழப் போகும் வழியில், மண்ணியாற்றங்கரையில் சிவபூஜை செய்த இடம் திருச்சேய்ஞ்ஞலூர்.

சூரசங்காரம் புரிந்து திரும்பியபோது, தென் கடற்கரையில் ஐந்து சிவலிங்கங்கள் வைத்து முருகவேள் பூசித்தனர். அர்ச்சனை செய்யும்போது அமரர் வேண்ட, கையில் உள்ள மலருடன் திரும்பிக் காட்சி கொடுத்த கோலந்தான் திருச்செந்தூர் முருகன் திருவுருவம். இன்றும் செந்திலாண்டவன் பின்புறம் ஐந்து சிவலிங்கங்கள் இருக்கின்றன. ஆராதனை செய்யும்போது பின்புறம் கொண்டுபோய் ஆராதிக்கின்றதை இன்றும் திருச்செந்தூரில் காணலாம்.

இப்படி முருகன் வழிபட்ட திருத்தலங்கள் திருமுருகன் பூண்டி, வயலூர் முதலியன.

சக்கரம் பெறும் பொருட்டுத் திருமால் நாள்தோறும் ஆயிரந் தாமரை மலர்களால் அரனை அருச்சித்தனர். அதுவே திருவீழிமிழலை. பிரமதேவர் பூசித்த திருத்தலம் பிரமபுரம்; இந்திரன் பூசித்த திருத்தலம் கண்ணார்கோயில்.

நண்டு பூசித்தது; சிலந்தி பூசித்தது; பாம்பு பூசித்தது; குரங்கு பூசித்தது; அணில் பூசித்தது; காகம் பூசித்தது குரங்கணிமுட்டம்).

பெரிய உருவமுள்ளது யானை; சிறிய உருவமுள்ளது எறும்பு. எறும்பு முதல் யானை யீருக என்று கூறுவர். திருச்சி ராப்பள்ளிக்கு அருகில் உள்ள திருஎறும்பூர் எறும்புபூசித்த திருத்தலம்; யானை பூசித்த திருத்தலம் திருவானைக்கா.

எறும்பும் யானையும் பூசித்த இந்தத் தலங்களைக் கண் கூடாகக் கண்டும், மனிதர்கள் இறைவனைப் பூசிக்காமல் உண்டு உடுத்து உலாவி வீணே காலங் கழித்துக் காலன் வாய்ப்படுகின்றனர்.

இவர்களைக் கண்டு வருந்தி அதிவீரராமபாண்டியர் பாடுகிருர்.

சிவகருமஞ் செய்யார் திருநீறு சாத்தார்
தவநிலையாஞ் சைவநெறி சாரார்—அவனிதனில்
கான்பரந்த பச்சைக் களாநிழலைக் கைதொழார்
ஏன்பிறந்தார் மானிடராய் இன்று?

இறைவனைப் பூசிக்காத புல்லர்களை மனிதர்கள் என்று கூறக்கூடாது. அவன் தந்த கையால் அவனை வழிபட மறுத்தால் நன்றிகொன்ற பாவம் விடாதுதானே.

எறும்புகடை யானைதலை ஈசனைப் பூசித்துப்
பெறுங்கதிகண் டுய்தேருர் பேய்கள்— அறிந்த
உலகத்தார் உண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையாய் வைக்கப் படும்.—முதுமொழிமேல் வைப்பு.

கண்ணபிரான் மகப்பேறு வேண்டி சிவபூஜை செய்தனர். அதனுல் பிறந்த மகனுக்கு சாம்பவான் என்று பேரிட்டனர்.

அர்ச்சுனன் சதா சிவபூஜை செய்தனன். சிலர் கேட்கின்ருர்கள், "எங்கள் வீட்டில் யாராவது இறந்துவிட்டால் அப்போது பூஜை செய்யலாமா?" என்பார்கள். அர்ச்சுனன் தன் மகன் அபிமன்யு மாண்ட அன்றிரவு சிவபூஜை செய்தான் என்று மகாபாரதம் பேசுகின்றது.

முன்னே செய்த பூஜையின் பயன் இப்போது வந்து உதவுகின்றது. இப்போது பூஜை செய்தால் மறுமைக்கு வந்து உதவும். முன்னே செய்த விளைவு இப்போது உணவுக்கு

வருவதுபோல் என வுணர்க. "தொலினே ஜேஸின பூஜா பலமு" என்று தியாகையர் பாடுகின்ருர்.

பழங்காலத்தில் வசிட்டர் பராசரர் முதலிய மகரிஷிகள் அனைவரும் சிவலிங்கம் அமைத்துப் பூசித்தார்கள். அந்த ஆலயங்கள் ஆங்காங்கு இன்றுங் காட்சி தருகின்றன.

அரசர்கள் சிவலிங்கம் அமைத்துப் பூசித்தார்கள்: "இறைவனைப் பூவும் நீரும் கொண்டு பூசிப்பவர் திருக் கைலாய மலைக்குத் தடையின்றிச் செல்வார்கள். அவர்கள் பின்னே மெல்ல நானும் போய்விடுவேன்" என்கிருர் அப்பமூர்த்திகள்.

"போதொடு நீர் சுமந்தேத்திப் புகுவார் அவர்பின்
புகுவேன்."

## நாய்ப் பிறவி வேண்டும்

பிறவியில் இழிந்தது நாய்ப்பிறவி யென்பார்கள். நாயிற் கடையேன் என்பார்கள். இத்தகைய இழிந்த நாய்ப்பிறவி எனக்கு வேண்டும் என்று விரும்புகின்ருர் ஒரு அன்பர். அந்த நாய்ப் பிறவி எப்படி யமையவேண்டும்? கடைவீதி சுற்றும் அங்காடி நாய்ப் பிறவி யன்று. "தினந்தோறும் சிவபூசை செய்து உணவு அருந்தும் அடியார்கள் உண்ட எச்சிலிலையில் உள்ள சேடத்தை யுண்ணும் நாயாய்ப் பிறக்க வேண்டும்" என்கின்ருர். இது எதனைக் குறிக்கின்றது? சிவபூஜையின் சிறப்பைத் தெரிவிக்கின்றது.

ஈயாப் பெரும்புல்லர்க்கே இதஞ் சொல்லியிரந்
துழல்வேன்
மாயாப் பிறவியறுக்கும் சிவபெரு மான்பதம் என்றும்
ஓயாமல் பூசைசெய் துண்ணன்பர் சேடத்தை
உண்ணும் ஒரு
நாயாய்ப் பிறந்திலனே அருணபுரி நாட்டினிலே.

அன்பர்கள் மறவாமல் மனத்தில் அமைத்துக் கொள்ள வேண்டிய கருத்துக்களுள் இரண்டு, உயர்ந்த உண்மை யானவை; அவையெவை? அறவழியில் செலவழித்த பொருள் நம்முடையவை; பூஜையில் செலவழித்த நேரம் நம்முடைய நேரம்.

எல்லா நலன்களும் சிவபூஜையால் ஒருவனுக்குக் கை கூடும். எண்ணிய எண்ணங்கள் யாவும் ஒருங்கு எய்தும். அரிய கருமங்களையும் செய்து முடிக்கலாம். உடல் நலம் உள நலம் உணர்வு நலம் ஆகிய அரிய நலன்களும் விளையும்.

உமாதேவியார், இடப்பாகம் பெறுவதன் பொருட்டு இறைவனைக் கச்சியம்பதியில் வந்து சிவபூஜை செய்தார் என்ற இனிய வரலாற்றை ஈண்டு சிந்தியுங்கள்.

**எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர்தாம் விரும்பும்**
**உண்மை யாவது பூசனை யெனவுரைத் தருள**
**அண்ணலார் தமை அர்ச்சனை புரியஆ தரித்தாள்**
**பெண்ணில் நல்லவ ளாயின பெருந்தவக் கொழுந்து.**

மார்க்கண்டேய முனிவர் மறலியை வெல்ல வேண்டி திருக்கடவூரில் சிவபூஜை செய்தார் என்பது உலகறிந்த உண்மை. சிவமூர்த்தி அவர் செய்த சிவலிங்கத்தினின்றும் வெளிப்பட்டு, மறலியை யுதைத்து, என்றும் பதினாறு ஆண்டாக வாழுமாறு மார்க்கண்டேயருக்கு அருள்புரிந்தார். இதைவிடச் சிவபூஜைக்கு மேலான சான்று என்ன வேண்டும்.

திருமால் வைகுந்தபதியாகத் திருமகளுடன் வாழ்கின்ற பெருவாழ்வும், பிரமதேவர் படைப்புத் தலைவராக நாமகளுடன் சத்தியவுலகில் தாமரைத்தவிசில் வீற்றிருக்கும் அரும் வாழ்வும், பொன்னுலகில் முப்பத்து முக்கோடித் தேவர்கள் புடை சூழ, ஐராவதம், உச்சைச்ரவம், காமதேனு, கற்பக மரம், சிந்தாமணி, சசிதேவி, அரம்பையர்கள் ஆகியவைகளுடன் இந்திரன் வாழும் உயர்நலமும் சிவபூஜையால் கிடைத்தன என்பதை உணர்தல் வேண்டும்.

**வண்டுளறுந் தண்டுழாய் மாயோன் இறுமாப்பும்**
**புண்டரிகப் போதுறையும் புத்தேள் இறுமாப்பும்**
**அண்டர்தொழ வாழுவான் இறுமாப்பும் ஆலாலம்**
**உண்டவனைப் பூசித்த பேறென் றுணர்ந்திலையால்.**

ஆகவே மனிதப் பிறப்பெடுத்த ஒவ்வொருவரும் இறைவனுடைய திருவடிவைத் தங்கள் தகுதிக்குத் தக்க அளவில்

அமைத்து, நல்ல மலர்களை அன்புடன் இட்டு, உள்ளங் குழைந்து உருகித் துதிசெய்து நாள்தோறும் பூசிக்க வேண்டும்.

பூஜைக்கு இரு சிறகுகள் வேண்டும். ஒன்று அன்பு; ஒன்று ஆசாரம்.

"உம்பர்கள் ஸ்வாமீ நமோநம எம்பெருமானே
நமோநம
ஒண்டொடி மோகா நமோநம எனநாளும்
உன்புகழே பாடி நானினி அன்புடன் ஆசார
பூஜைசெய்
துய்ந்திட வீணாள் படாதருள் புரிவாயே"
—(கொம்பனையார்) திருப்புகழ்.

## 26. நடுங்கும்

சிலர் யானையைக் கண்டு நடுங்குகின்றார்கள். சிலர் புலியைக் கண்டு நடுங்குகின்றார்கள்; சிலர் சிங்கத்தைக் கண்டு நடுங்குகின்றார்கள்.

ஆனால் வேட்டையாடும் வீரர்கள் புலி, கரடி, சிங்கம் இவைகளைக் கண்டு நடுங்காதும், ஒடுங்காதும் எதிர்த்து, வாளாலும் வேலாலும் கொன்று, வெற்றிமாலை புனைகின்றார்கள்.

"தறிசெறி களிறும் அஞ்சேன்
தழல்விழி உழுவை யஞ்சேன்"

உழுவை-புலி.

என்று வீரகர்ஜனை புரிகின்றார் மாணிக்கவாசகர்.

சிலர் பாம்பைக் கண்டு நடுங்குகின்றார்கள்; "பாம்பென்றால் படையும் நடுங்கும்" என்பது பழமொழி.

ஜோகிபிடாரன் எத்துணைக் கொடிய பாம்புகளையும் பிடித்துத் தன் விருப்பத்துக்கு ஏற்ப ஆட்டுகின்றான். மந்திர சித்தி பெற்றவர்கள் நாகங்களைக் கண்டால் நடுங்குவதில்லை. விஷராஜா என்ற பேருடன் விளங்கும் ஒருவர் (அம்மன்குடி) எத்துணை கொடிய விஷத்தையும் மாற்றிவிடுகின்றார். பழநி

யில் நீலகண்ட மந்திரம் தெரிந்த ஒரு குடும்பத்தார்கள் கொடிய நல்ல பாம்புகளைக் கண்டால், புடலங்காய்களை எடுப்பதுபோல் நடுக்கமின்றி எடுத்துக்கொள்ளுகின்றார்கள்.

"புற்றில் வாள் அரவும் அஞ்சேன்" என்று வீர வசனம் புகல்கின்றார் வாதவூரடிகள். சிலர் வறுமையைக் கண்டு மிக மிக நடுங்குகின்றார்கள். "கொடிது கொடிது வறுமை கொடிது" என்கின்றார்கள்.

ஆனால் உயர்ந்த திருவருள் ஞானிகள் வறுமையை வரவேற்கின்றார்கள்.

"இறைவனே! வெண்ணீறு புனைந்த மெய்யடியார்கட்குச் சதா விருந்து செய்து வருகின்ற வறுமையையும், விரதமிருந்து இளைக்கின்ற உடம்பையும் எனக்குக் கொடு" என்று வறுமையை வரமாகக் கேட்கின்றார் சிவப்பிரகாசர்.

"வெண்டிருநீறு புனையுமா தவர்க்கும்
விருந்து செய்துறு பெருமிடியும்
கொண்டநல் விரதத்து இளைத்த யாக்கையும் இக்
கொடியனேற் கருளுநாள் உளதோ?"

சிலர் நோயைக் கண்டு நடுங்குகின்றார்கள். "பிணியெலாம் வரினும் அஞ்சேன்!" என்று இயம்புகின்றார் மாணிக்கவாசக சுவாமிகள்.

சிலர் இயமனைக் கண்டு நடுங்குகின்றார்கள். ஆனால் தவநெறி நின்ற சிவஞானிகளுக்கு இயமன் ஒரு சுண்டெலியாகக் காட்சி தருகின்றான்.

"கோணிலா வாளும் அஞ்சேன்
கூற்றுவன் சீற்றம் அஞ்சேன்"
—திருவாசகம்.

"நமனை அஞ்சோம்" —அப்பர்.

"வாராதகல் அந்தகா வந்தபோதுயிர் வாங்குவனே"
—அருணகிரிநாதர்.

சிலர் பிறப்புக்கும் இறப்புக்கும் நடுங்குகின்றார்கள். அருள் பழுத்த அருந்தவ சீலர்கள் போற்றும் மாணிக்க

வாசகர், "பிறப்பினோ டிறப்பும் அஞ்சேன்" என்று கூறு கின்றார்.

எனவே யானைக்கும், புலிக்கும், சிங்கத்திற்கும், அரவுக் கும், வறுமைக்கும், பிணிக்கும், நமனுக்கும், பிறப்புக்கும் இறப்புக்கும், எரிக்கும், இடிக்கும், மலைக்கும் நடுங்காத ஞானிகள், சிலரைக் கண்டு மிகவும் நடுங்குகின்றார்கள்.

'ஒன்றுக்கும்நடுங்காத ஞானிகள் யாரைக்கண்டு நடுங்கு கின்றார்கள்? அவர்கள் என்ன எமனைவிட வலிமையுடையவர் களா? வேலும் வாளுந் தாங்கிய வீரர்களா?' என்ற கேள்வி எழும்.

மரணம் இன்றி வாழ்வதற்கு அமிர்தம் வேண்டும் என்று வானவர்கள் கருதினார்கள். அமிர்தம் வேண்டும் என்று விரும்பிய வானவர்கள், சிவபெருமானை வேண்டியிருந்தால் ஒரு விநாடியில் அமிர்தத்தை அப்பெருமான் வழங்கியிருப் பார்.

தேவர்கள் தான்தோன்றிகளாகத் தாமே சென்று பாற் கடலைப் பலகாலும் கடைந்தார்கள். இமையவர்கள் எதிர் பார்த்தது அமிர்தம். திருப்பாற்கடலில் திடீர் எனத் தோன்றியது ஆலகால விஷம். ஆ, ஆ! மிகப்பெரும் பயங் கரமான விஷம். உலகங்களையெல்லாம் அது நடுங்க வைத் தது. வானவர் தானவர் மானவர் சித்தர் முத்தர் கின்னரர் கிம்புருடர் மண் விண் கதிர் மதி முதலிய எல்லாம் நடுங்கின. அதன் வெப்பத்துக்கு ஆற்றாது மூலைக்கு ஒருவராக உம்பர்கள் ஓடினார்கள்; என் ஓட்டத்தை ஒருவரும் பிடிக்க முடியாது என்று ஓடினான் உம்பர் வேந்தன். "எங்கே ஓடுகின்றீர்கள்?" என்று வினவிக்கொண்டே ஓடினார் நான்முகக் கடவுள். நஞ்சின் அருகில் சென்ற திருமாலின் உடம்பு பஞ்சுபோல் பதைத்துக் கருமையாயிற்று. அவரும் ஓடி ஒளிந்தார்.

பின்னர் தேவர்கள் யாரும் ஒருங்கு கூடித் திருக் கைலாய மலையை யடைந்து; திருநந்திதேவரிடம் விடை பெற்றுக் கொண்டு, கண்ணுதற் கடவுளைக் கண்ணாரக் கண்டு கையாரத் தொழுது, வாயாரத் துதிசெய்து,

"பெருமானே! நாங்கள் அடிமைகள். தேவரீர் ஆண்டவன். எங்கட்கு நீரே தலைவர். அடிமைகளாகிய நாங்கள் பாற்கடல் கடைதல் என்ற ஒரு விவசாயத்தைச் செய்தோம்: அதில் முதலில் விளைந்த விளைவு தேவரீருக்கு உரியது" என்று விநயமாக விளம்பி நின்றார்கள்.

தேவாதி தேவராகிய சிவபெருமான், அந்தக் கொடிய விடத்தைச் சுருக்கி எடுத்துத் தமது கண்டத்தில் அடக்கி எல்லோருடைய கண்டங்களையும் மாற்றினார். இயமனை உதைத்த அப்பெருமானுடைய திருவடி தேவர்கட்குத் திருவருள் புரிந்தது.

இவ்வாறு தேவர் மனிதர் முதலிய அனைவர்க்கும் நஞ்சினையுண்டு வாழ்வு அளித்த, நமனை யுதைத்த நம்பிரானாகிய நம்பனைப் பரமன் என்று கருதாமல், வேறு ஒரு தலைவன் உண்டு என்று நவில்வதற்கு யார் நடுங்கவில்லையோ, அவர்களைக் கண்டு ஞானிகள் நடுங்குகின்றார்கள். சிவமூர்த்தியையன்றி மற்றுமொரு மூர்த்தியைப் பரம் என்று கூற நடுங்காதவரைக் கண்டு ஞானிகள் நடுங்குகின்றார்கள்.

இதோ பாருங்கள், இந்தக் கருத்துடைய அரிய அமுதப் பாடலை.

அடுங்காலம் இதுஎன்ன விடம் எழலும்
நனிவெருவி அயன்மா லேனோர்
கொடுங்காலன் றனைக்குமைத்த குரைகழற்கீழ்
சரண்புகுதக் கொதித்து வாழ்நாள்
பிடுங்காமல் அருள்புரிந்த பிரான்அன்றிப்
பின்னையும்ஓர் பிரான் உண்டு என்ன
நடுங்காதார் தமைக்காணப் பெற்றிடினும்
என்னுள்ளம் நடுங்கும் மாதோ.

...காஞ்சிப்புராணம்.

புற்றில் வாளரவும் அஞ்சேன்
பொய்யர்தம் மெய்யும் அஞ்சேன்
கற்றைவார் சடையெம் மண்ணல்
கண்ணுதல் பாதம் நண்ணி

மற்றுமோர் தெய்வந் தன்னை
உண்டென நினைந்தெம் பெம்மாற்
கற்றிலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சுமாறே. —திருவாசகம்

## 27. தெய்வம்

நம் நாட்டில் பலர், அறிவு நூல்களைப் படியாமலும், படித்தவர்கள்பால் படியாமலும், பலப்பல சந்தேகங்களை யடைகின்றார்கள். அமைதியின்றி வாதிடுகின்றார்கள். அலக்கண் உறுகின்றார்கள்.

"இந்துக்கள் சிவன், திருமால், முருகன், கணபதி, தட்சிணாமூர்த்தி, நடராஜா, அம்பிகை இப்படிப் பல தெய்வங்களை வைத்து வணங்குகின்றார்களே! இது அறிவுக்குப் பொருந்தவில்லையே? ஆலயத்துக்குச் சென்றால் எத்தனை கடவுள்கள்? ஐயோ! கல்லெல்லாம் கடவுள்களாகக் காட்சி தருகின்றனவே? எத்தனை தேங்காய்கள் உடைப்பது? ஏன் ஒரே கடவுளை வைத்தால் என்ன?" என்று, இப்படி அடுக்காகவும், மிடுக்காகவும் வினவுகின்றனர்.

இப்படி வினா வரும் என்று அறிந்தோ என்னவோ பட்டினத்துச் சுவாமிகள் ஒரு அருமையான பாடல் பாடியிருக்கின்றார். அது வருமாறு :

ஒன்றென்றிரு; தெய்வம் உண்டென் றிரு; உயர்
செல்வ மெல்லாம்
அன்றென்றிரு; பசித்தோர் முகம்பார்; நல்அறமும்
நட்பும்
நன்றென்றிரு; நடு நீங்காம லேநமக் கிட்டபடி
என்றென்றிரு; மனமே! உனக்குப தேசமிதே.

"தெய்வம் ஒன்று என்று இரு; தெய்வம் உண்டு என்று இரு" என்று சுவாமிகள் உலகுக்கு உபதேசிக்கின்றார்.

சிவன் திருமால் முருகன் கணபதி இப்படி நாமங்கள் பல; உருவங்கள் பல; தெய்வம் ஒன்றுதான்.

ஒரு வீட்டில் குழந்தை பிறக்கின்றது. அதற்கு ஒரு பேரும் இல்லை. இவர்களே பார்த்து நடராஜன் என்று ஒரு பேர் சூட்டினார்கள். தாய் **கண்ணப்பா!** என்று அழைக்கின்றாள். தந்தை **ராஜப்பா**! என்று அழைக்கின்றார். பாட்டி **ராஜ மாணிக்கம்** என்றும், பாட்டனார் **துரை** என்றும், தமையன் **தம்பி** என்றும், தமக்கை **குட்டியப்பா** என்றும், சிறிது நாளில் தம்பி பிறந்து அவன் **அண்ணா**! என்றும், விளையாடும்போது வீதியில் **பையா**! என்றும், திருமணம் ஆனதும் மனைவி **நாதா** என்றும், மாமனார் **மாப்பிள்ளை** என்றும், மகன் பிறந்தால் **அப்பா** என்றும், மகனுக்கு மகன் பிறந்தால் **தாதா**! என்றும், மருமகன் **மாமா** என்றும், வயது முதிர்ந்தால் **பெரியவரே**! என்றும், உயிர் பிரிந்தால் **பிணம்**! என்றும், பலர் பலவாறு ஒருவரையே அழைக்கின்றார்கள். இது கண்கூடு.

ஒருவன் வீட்டுக்குப் போனால், தந்தை மகனே! என்று அழைத்தால் "ஏன்" என்கின்றான். மகன் அப்பா என்று அழைத்தால் "ஏன்!" என்கின்றான். மாமன் மாப்பிள்ளை! என்று அழைத்தால் ஏன் என்கின்றான். மருமகன் மாமா! என்றழைத்தால் ஏன் என்கின்றான். பாட்டன் பேரப்பிள்ளை! என்றழைத்தால் ஏன் என்கின்றான். அதே சமயத்தில் பேரன் தாதா என்று கூப்பிட்டால் ஏன் என்கின்றான். தமையன் தம்பி! என்று விளித்தால் ஏன் என்கின்றான். மனைவி நாதா! என்று கூப்பிட்டால் ஏன் என்கின்றான். ஒரு மனிதன் தன்னை யார் எப்படி எப்படி அழைத்தாலும் ஏன் ஏன் என்று கூறுகின்றான்.

அதுபோல் ஒரே பரம்பொருளை முருகா! என்றாலும் ஏன் என்கின்றார். சிவனே! என்று துதித்தாலும், திருமாலே என்று துதி செய்தாலும், கணபதியே என்று அழைத்தாலும் ஏன் என்கின்றார்.

இனி "கடவுள் பலவுருவங்களாக இருக்கின்றாரே! அதற்கென்ன காரணம்?" என்று ஒரு வினா எழலாம்.

நாம ரூபம் இல்லாத கடவுள், அடியார்கள் பொருட்டு பல்வேறு நாமரூபங்களைத் தாங்கி அருள்பாலிக்கின்றார். குழந்தைகளின் உள்ளத்தைக் கவர்வதற்காக மிட்டாய்க்

காரன், சர்க்கரையைப் பாகு செய்து, அதில் பலவகை நிறங் களையூட்டி, கொக்கு போலவும், குருவிபோலவும், காக்காய் போலவும், மீன், பாகற்காய், கத்தரிக்காய், மிளகாய், அணில் முதலியன போலவும், பலப்பல வகையாகச் செய் கின்ருன். குழந்தைகள் தங்கள் தங்கள் விருப்பத்துக்கு ஏற்ப அந்த மிட்டாய்களை வாங்கி உண்டு மகிழும். எனக்குப் பச்சை மீன் மிட்டாய் போதும் என்று ஒரு குழந்தை கூறும். எனக்கு சிவப்பு மீன் மிட்டாய் வேணும் என்று மற்ருெரு குழந்தை கூறும். மிளகாய் மிட்டாய் உறைக்கும், பாகற் காய் மிட்டாய் கசக்கும், ஆதலால் நான் கரும்பு மிட்டாய் வாங்கிக் கொள்வேன் என்று ஒரு குழந்தை கூறும். எல்லாம் சர்க்கரை தானே என்று அக்குழந்தைக்குத் தெரியவில்லை. நிறத்திலும், உருவிலும் ஈடுபடுகின்றன. இதேபோல், இறை வன் பல வண்ணங்களையும், வடிவங்களையும் கொண்டு அடி யார்களின் உள்ளங்களைக் கவர்கின்ருன்.

ஒரே நடிகன், கோவலனுகவும், இரணியனுகவும், சித்தி ராங்கியாகவும், விகடக்காரனுகவும், சீதையாகவும் நடிக் கின்ருன். அதுபோல இறைவனும், உருவத்திருமேனி நான்கும், அருவத் திருமேனி நான்கும், உருவருவத் திரு மேனி ஒன்றும் கொண்டு நடிக்கின்ருன். நடிப்பதனுல், அவன் கூத்தன் என்றும், இனி நடிப்பவர்கட்கெல்லாம் அரச னுக இருப்பதனுல், நடராஜன் என்றும் பேர் பெறுகின்ருன்.

"அருவமோ ரூபாரூபம் ஆனதோ அன்றிநின்ற
உருவமோ உரைக்குங் கர்த்தா வடிவெனக்
குணர்த்திங் கென்னில்
அருவமும் ரூபாரூபமும் ஆனதும் அன்றி நின்ற
உருவமும் மூன்றும் சொன்ன ஒருவனுக்கு உரைக்
கலாமே"

என்று சிவஞான சித்தியார் கூறுகின்றது.

"அகரமென அறிவாகி உலக மெங்கும்
அமர்ந்தகர உகர மகரங்கள் தம்மால்
பகருமொரு முதலாகி வேறுமாகிப்
பலவேறு திருமேனி தரித்துக் கொண்டு

புகரில் பொருள் நான்கினையும் இடர்தீர்ந் தெய்தப்
போற்றுநருக் கறக்கருணை புரிந்தல்லார்க்கு
நிகரில் மறக் கருணைபுரிந் தாண்டு கொள்ளும்
நிருமலனைக் கணபதியை நினைந்து வாழ்வாம்''

என்று விநாயக புராணத்தில் கச்சியப்ப முனிவர் கூறுகின்றனர்.

எனவே இறைவன் ஒருவன்தான். பலப்பல பேதங்களைத் தாங்கி நிற்கின்றான்.

"நல் தெய்வமும் அநந்த பேதம்'' என்கின்றார் தாயுமானர். இந்த வாக்கை நன்கு சிந்தியுங்கள். தெய்வம் அநந்தம் அன்று; தெய்வ பேதம் அநந்தம் என்கின்றார்.

ஆதலால் கடவுள் ஒன்று; அவரையடைய வழிகள் பல. அன்பர்கள், சமய வாதம், தெய்வ பேதம் இவைகளை நீக்கி, சாந்த மயமாக நின்று, திருவருள் தாகத்துடன், ஒரு மூர்த்தியை உன்னி ஒருமைப்பட்டு தியானித்து உய்ய வேண்டும்.

பூதமும் கரணம் பொறிகளும் புலனும்
பொருந்திய குணங்களோர் மூன்றும்
நாதமும் கடந்த வெளியிலே நீயும்
நானுமாய் நிற்கும் நாள் உளதோ?
வாதமும் சமய பேதமும் கடந்த
மனோலய இன்ப சாகரமே
ஏதும் ஒன் றறியேன் யாதும் நின்செயலே
இறைவனே ஏக நாயகனே.

சிவஞ்சத்தி நாதம் விந்து சதாசிவன் திகழும் ஈசன்
உவந்தருள் உருத்திரன்றான் மாலயன் ஒன்றி னொன்றாய்
பவந்தரும் அருவ நாலிங் குருவநா லுபய மொன்றாய்
நவந்தரு பேதமாக நாதனே நடிப்பன் என்பர்.

## 28. ஆடவல்லான்

இறைவன் எங்கும் நிறைந்தவன்; எல்லாம் அறிதின்றவன்; கருணை நிறைந்தவன்; இன்பமயமானவன்; எல்லா ஆற்றலும் உடையவன். ஆன்மாக்களின் பொருட்டு பல வேறு திருமேனிகளை எடுத்துக்கொள்ளுகின்றான். அவற்றுள் இடையறாது ஆனந்தத் தாண்டவம் புரியும் நிலை ஒன்று. அது எல்லா மூர்த்திகளிலும் சிறந்தது. அந்த ஆனந்தக்கூத்து ஆன்மாக்களின் பொருட்டு ஓவாது சிவபெருமானால் நிகழ்த்தப் பெறுகின்றது. அவன் ஆடவில்லையானால், உலகத்தில் ஒன்றுமே ஆடாது. அந்தத் திருக்கூத்துக்கு முதலுமில்லை; முடிவுமில்லை. ஏனைய தெருக்கூத்துக்களைப் போன்றதன்று அத் திருக்கூத்து; அற்புதத் தனிக்கூத்து அது. சேக்கிழார் சுவாமிகள் கூறியருளினார்:

"ஆதியு முடிவுமில்லா அற்புதத் தனிக் கூத்தாடும்
நாதனார் கழல்கள் வாழ்த்தி வழிபடும் நலத்தின்
மிக்கார்"

ப-பாவம்; ர-ராகம்; த-தாளம். பாவ ராக தாளம் என்ற மூன்றும் ஒன்று கூடியது பரதம். இந்த பரத கலை, நடராஜப் பெருமானிடமிருந்து தோன்றியது. "அன்பர்க் கின்பத் திற முதவு பரத குரு" என்கின்றார் அருணகிரிநாதர். இனி பரத நூல்கள், நடனம் நூற்றுஎட்டு என்று கூறுகின்றன. சிவாகமங்களும், சிவதாண்டவம் நூற்றுஎட்டு என்று கூறியிருக்கின்றன.

நடராஜ மூர்த்தியைப் பற்றி தியான சுலோகம் அடியில் வருமாறு காண்க:

த்ரிநேத்ரம் சதுர்ப்புஜம் சாந்தம் ரக்தவர்ணம்
ஸ்மிதாநநம்!
கரோட பகபத்ரஞ்ச சார்க்க புஷ்பகம்!!
கங்கா சந்த்ர ஸமாயுக்தம் அபஸ்மாரோ பரிஸ்திதம்!
தக்ஷிணம் குஞ்சிதபாதம் வாமபாதந்து உத்ருதம்!!
ஸவ்யந்து பூர்வமபயே அந்யேட மருகந்ததா!
வாமஹஸ்தேது டோளாந்தம் இதரம் அந்நிபாத்ரகம்!
வாமகர்ணேது பத்ரஞ்ச தக்ஷிணே நக்ர குண்டலம்!

அபயே பணிஸம்யுக்தம் ஸர்வாங்கே பஸ்மதாரிணம்!!
ஏவம் நடேச மித்யுக்தம் த்யாத்வா மந்த்ரேண
பூஜயேத்.

இதன் பொருள் :—

நடேசப் பெருமானுடைய திருவுருவம், மூன்று கண்களும், நான்கு தோள்களும், சாந்த குணமும், சிவப்பு நிறமும், புன்முறுவல் செய்யும் முகமும் உடையதாயும்; தலையின் ஓடும், கொக்கின் இறகும், ஊமத்தையும், எருக்கும், கங்கையும், நிலவும் ஆகிய இவற்றைத் தலையில் அணிந்ததாயும்; வலப்பாதம் அபஸ்மார (நினைப்பு நீங்கிய) முயலகன் மீது ஊன்றி நிற்பதாயும்; இடப்பாதம் தூக்கப்பட்டு சற்று குஞ்சித்ததாயும்; வலக்கரங்களுள், முன் கரம் அபயம் அளிப்பதாயும்; பின் கரம் டமருகம் தாங்கியதாயும்; இடக்கரங்களுள் முன்னது வீசித் தொங்கவிட்டுள்ளதாயும்; பின்னது நெருப்பை ஏந்தியதாயும்; இடச்செவியில் திருத்தோடும்; வலச்செவியில் மகரகுண்டலமும் அணிந்ததாயும்; அபயகரத்தில், நாகாபரணம் பூண்டதாயும்; சர்வாங்கத்திலும் திருநீறு தரித்து நிலவுவதாயும், மேல் காட்டப்பட்ட சிவமந்திரத்தாற் பூசிக்கற்பாலது.

தாண்டவ வடிவம், தென்னுட்டிலே சிறப்பாக விளங்குகின்றது. எனினும் வடநாட்டிலும் காணப்படுகின்றது. சாளுக்ய அரசர்களது தலைநகராயிருந்த வாதாபி நகரத்தின் குகைக் கோயிற் சுவரில், பதினறு கரங்களுடைய ஒரு சிவ தாண்டவமூர்த்தம் செதுக்கப்பட்டிருக்கின்றது. இக் குகை செய்யப்பட்ட காலம் கி. பி. 578ம் ஆண்டெனக் கருதப்படுகின்றது. பல்லவ அரசர் காலத்தில் காஞ்சியம்பதியில் புதுக்கிய கைலாசநாதர் கோயில் சுவரிலும் (கி. பி. 675) நடராஜ வடிவம் ஒன்று செதுக்கப்பட்டுள்ளது. ஆரியபுரம் என்னும் சாளுக்கிய நாட்டு நகரிலும், பத்துக் கரங்களையுடைய ஒரு நடராஜ வடிவம் உள்ளது. எல்லோரா குகைக் கோயில்களிலும், நடராஜ வடிவங்கள் இருக்கின்றன.

இனி எல்லாக் கோயில்களிலும் நடேச வுருவம் பொதுவாக வழிபாட்டிற்கு உளதாயினும், சிறப்பாக உளதாகிய திருத்தலம் தில்லைச் சிதம்பரமாகும்.

**சிதம்பரம்**

சிதம்பரம் மிகப் பழைய கோயில். அதற்குக் கோயில் என்றே பேர். அங்கேயுள்ள சிவலிங்கம் திருமூல நாதர். பதஞ்சலி முனிவரும், வியாக்ரபாதரும், தேவரும் மூவரும் வழிபட்டு அருள்நலம் பெற்ருர்கள். அத்தலத்தில் வியாக்ர பாதர், பதஞ்சலி முனிவரர் பொருட்டு, சிவபெருமான் திரு நடனம் புரிந்தருளினர். அந் நடனம் ஆனந்தத் தாண்டவம்—அல்லது நாதாந்த நடனம் எனப்படும். இந்த நடனத்தின் தத்துவத்தைத் தவயோக சித்தர்களே யறிவர்.

மாலாங்கனே இங்கு யான்வந்த காரணம்
நீலாங்க மேனியன் நேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்ப வந்தேன்.

என்று திருமூலர் கூறுகின்ருர். திருமூலருடைய திருமந்திரத்திலே ஒன்பதாந் தந்திரத்திலே, "திருக்கூத்துத் தரிசனம்" என்ற ஒரு தலைப்புளது. அது நாதாந்த நடனத்தின் உண்மையை நன்கு விளக்குகின்றது. நடனத்தைக் கண்டுகளித்த பதஞ்சலி முதலியோருடன், சித்த சிகாமணியாக விளங்கிய திருமூலரும் ஒருவர் என, அவர் பாடலால் தெளிவாகின்றது.

நந்தி அருள்பெற்ற நாதரை நாடிடின்
நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிரர்
என்றிவர் என்னேடு எண்மருமாமே.

இதனுல் பதஞ்சலிமுனிவர், நந்தி அருள்பெற்ற சித்தருள் ஒருவர் என்பதும் புலனுகின்றது.

இறைவன் ஞானக் கண்ணைத் தர, தில்லை மன்றுள் அப் பரமனது திருநடனத்தை பதஞ்சலி முதலிய சித்தர்கள் கண்டு இன்புற்ருர்கள்.

எண்ணருங் காதல் கூரும் இருவரும் காண ஞானக்
கண்ணினை நல்க முன்னைக் காரிருள் கழிவுற் றின்ன

வண்ணமென்றறியவாரா வளரொளி மன்றுள்மாதோ
டண்ணல்நின் ருடுகின்ற ஆனத்த நிருத்தங்
கண்டார்.

—கோயிற் புராணம்.

**சித்தர்**

சித்தாந்தச் செந்நெறியில் நான்கு படிகள்; சரியை கிரியை யோகம் ஞானம் என்பன. இவற்றுள் சிவயோக நெறி நின்று ஞானங் கைவரப்பெற்றவர்கள் சித்தர்கள். சிவ மூர்த்தி யோகிகளுள் மகாயோகியாவார். சடாமகுடம் யோக தண்டம் கமண்டலம் புலித்தோல் கோவணம் கபாலம் வெண்ணீறு உருத்திராக்கம் என்றிவை யெல்லாம் யோகிகளுடைய சின்னங்களாகும். இவைகளையுடைய மூர்த்தி சிவமூர்த்தி.

சித்தர்கள், ஞான சித்தர், நாதசித்தர், ரஸேஸ்வர சித்தர் என மூன்று பிரிவினராவார்கள். உண்மையான ஞான நிலையில் நின்றவர் ஞான சித்தர்; பிராணயாமயோகப் பயிற்சியால் சுழுமுனை நாடியில் உண்டாகும் நாதத்தில் தம் மனத்தை ஒடுக்கி சமாதி நிலையில் நின்றவர் நாதசித்தர். ரஸாயன முறையால் காயசித்தி யடைந்தவர் ரஸேஸ்வர சித்தர். இந்த ரஸேஸ்வர சித்தர்களே வைத்தியம், ரஸ வாதம் முதலிய நூல்களைச் செய்தவர்கள்.

ஞான சித்தர்கள், சுத்த சன்மார்க்க சித்தர்கள் எனவும் அழைக்கப் பெறுவர். அகத்தியர், அகப்பேயார், திருமூலர், பாம்பாட்டியார், கடுவெளியார், இடைக்காடர், கருவூரார், சிவவாக்கியர், திருவெண்காடர், பத்ரகிரியார், அருணகிரி யார், திருமாளிகைத் தேவர் என்ற ஆன்றோர்கள் ஞான சித்தர்கள் ஆவார்கள்.

அநாதிநாதர், ஆதிநாதர், சடேந்திரநாதர், கோரக்க நாதர், சகோதநாதர், மச்சேந்திரநாதர், சித்திய நாதர், மதங்கநாதர், வகுளிநாதர் என்பவர்கள் நவநாதசித்தர்கள். "குகையில் நவநாதரும்" என்று அருணகிரியார் திருப்புகழில் கூறியுள்ளனர். "சொலலின் முடிவில் முடியாத பகுதி புருடர் நவநாதர்" என்ற திருப்புகழ் வாக்காலும் அறிக.

இங்ஙனம் வந்த சித்தர் மரபு, தாயுமானுர் காலம் வரை தமிழ் நாட்டில் சிறப்பாகச் செழித்திருந்தது. தாயுமானு ருடைய குருநாதர் திருமூலர் திருமரபில் வந்தவர் என்று தாயுமானுரே ''மூலன் மரபில் வரு மௌனகுருவே'' என்று கூறுவதனுல் அறிக.

## பதஞ்சலி முனிவர்

சிவயோகச் செந்நெறியில் நின்ற, பழைய சித்தர்களுள் ஒருவர் பதஞ்சலி முனிவர். இவர் மகத நாட்டினின்றும் தில்லைவனம் வந்து, அரிய பெரிய தவஞ்செய்து, இறைவன் திருவருளால் நாதாந்த நடனத்தைத் தமது சிவஞான யோக வலிமையினுலே அகக்கண் கொண்டு கண்டு களித்தவ ராவார். அத் திருக் கோலந்தான் தில்லை ஞான வெளியில் உள்ள நடேசருடைய திருவடிவம்.

## நாதாந்த நடனம்

ஞான மாத்திரையாய் நிற்கும் பரசிவம் ஏகமாய், குணு தீதமாய், சிதாகாசத்துக்குள் விளங்கும் பரஞ்சோதியாய் உள்ள பொருளாகும். அச் சிவத்தினது தத்துவாதீதமான அத்துரிய நிலையில் எச் செயலும் நிகழ்வதில்லை. அக்காரணத் தினுல் அது சுத்த சிவம் என்றும், பரசிவம் என்றும் பேசப் பெறும். அத் தனிநிலை, மனத்தால் நினைக்கவும், வாக்கினுல் பேசவும், கலையினுல் அளக்கவும் இயலாதது.

"வாசித்துக் காணெணுதது பூசித்துக் கூடொணுதது
வாய்விட்டுப் பேசொணுதது நெஞ்சினுலே
மாசர்க்குத் தோணெணுதது நேசர்க்குப் பேரொணு
மாயைக்குச் சூழொணுதது விந்துநாத[தது
ஓசைக்குத் தூரமானது மாகத்துக் கீறதானது
லோகத்துக் காதியானது"

"காணெணுதது உருவோடருவது
பேசொணுதது உரையே தருவது
காணு நான்மறை முடிவாய் நிறைவது பஞ்சபூதக்

காய பாசம தனிலே யுறைவது
மாயமாயுட லறியா வகையது
காயமானவ ரெதிரே யவரென வந்துபேசிப்
பேசொணாதது வெளியேய் ஒளியது
மாயனா ரயனறியா வகையது
பேத பேதமொ டுலகாய் வளர்வது விந்துநாதப்
பேருமாய் கலையறிவாய் துரியவ
தீதமானது"

"சரியையாளர்க்கு மெய்க் கரியையாளர்க்கு மச்
சகல யோகர்க்கு மெட் டரிதாய
சமயபேதத்தினுக் கணுகொணா மெய்ப்பொருட்
டருபராசக்தியில் பரமான
துரிய மேலற்புதப் பரமஞானத் தனிச்
சுடர்வியா பித்தநற் பதி"

என்பனவாதி பலப்பல திருப்புகழால், எங்கள் கருணைஞான வள்ளலாகிய அருணகிரிநாதர் திருவாய் மலர்ந்தருளியுள்ளார்.

தனிப்பரம் பொருளாகிய அப்பரசிவம், புறப்பொருள்களைத் தன்னருளுடன் நோக்கும் நிலையில், பராசக்தி யெனப்படும். அதனால் சிவத்தின் அருள்நிலையே பராசக்தியாகும் என்று அறிக. தீயும் சூடும் போலே பரசிவமும் பராசக்தியும் ஒன்றேயென வுணர்க. பரசிவமாகிய ஞானநிலையும், பராசக்தியாகிய அருட்செயல்நிலையும் ஒரே பொருளின் இருதன்மைகளாகும். பராசக்தியும் ஞானசொரூபமே யாகும்.

பராசக்தியானது மறைத்தலில்லாத தன் சுத்தஞான நிலையினின்றும் நீங்கி, உயிர்களுக்குத் தனுவாதிகளைத் தோற்றுவித்து, மலபரிபாகம் வரும்பொருட்டு பிறப்பு இறப்புக்களை நல்கி, கன்மங்களை நுகர்வித்து, மறைத்தல் தொழிலைச் செய்யுமிடத்து, அவைகளைப் பக்குவப் படுத்தும் சிவசக்தியாக மாறுமிடத்து, அது திரோதான சக்தி யென்று சொல்லப்பெறும். அதுவே இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தியென முத்திறப்பட்டு நின்று வியாபரிக்கும்.

உயிர்களுக்கு மலத்தை நீக்கிச் சிவத்தை அளித்தற்கு இரங்கும் நிலே இச்சாசக்தி; அங்ஙனம் உயிர்கள்பால் இரக்கங் கொண்டபின்னர், அவை சிவத்தைச் சார்வதற்கு வேண்டப் படும் உபாயங்களே அறியுநிலே ஞானசக்தி. இவ்வுபாயங்க ளாவனவாம் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் அருளல் என்றவைகளே வகுக்கும் நிலே கிரியாசக்தி.

சிருட்டியாரம்பத்தில் பரமசிவம் தனது துரிய ஞானத் தனி நிலேயை விடுத்து அசைந்து, பராசக்தி நிலேயை யடை கின்றது; அப் பராசக்தியினது நிலேயும் தூய ஞான நிலேயே யாயினும், அந்நிலே உயிர்களேக் குறித்த நினேவு ஏற்பட்ட இடமாமென அறிக. அப் பராசக்தி திரோதாயி யெனப் பட்டு, உயிர்களின் பொருட்டு சிருட்டியாதிகளேச் செய்யும் பொருட்டு வியாபரிக்குங்கால், ஞான சக்தியாய் வியாபரிக் கும். அவ் வியாபரிப்பே பரநாதம் எனவும், சிவதத்துவம் எனவும் கூறப்படும்.

இதனுல், உயிர்களின் பொருட்டுப் பரசிவம் பரா சக்தியை அதிட்டித்துத் தொழிற்படுவதே சிடிட்டியாரம்பம் என்பது அறியப்படும். எனவே பரம்பொருளாகிய சிவம், சிதாகாசமாகிய பராசக்தியினிடம் எழுப்புவதே, சிதாகாசத் துள் எழுகின்ற முதல் அசைவாம் என்பதும் புலப்படும்.

பரசிவம், சக்தியினது ஒரு கூருகிய ஞான சக்தி யோடு கூடித் தொழிற்படுவதனுல், சிவதத்துவம் தோன் றும்; அதிலிருந்து சக்தி தத்துவம் தோன்றும்; அச்சக்தியி லிருந்து நாதம் பிறக்கும்; அந்நாதமே அபர நாதம் எனப் படும்; அந்நாதத்திலிருந்து விந்து தோன்றும்; அவ் விந்துவே அபர விந்து எனப்படும். இதனே,

> "சிந்தையி னுள்ளே திரியுஞ் சிவசக்தி
> விந்துவும் நாதமு மாயே விரிந்தனள்"

என்ற திருமூலர் திருவாக்கினுலுந் தெளிக.

சிவ தத்துவத்தில் சக்தியிருக்குமேனும், சிவ ரூபமாகிய ஞானமே சிறந்து விளங்கா நிற்கும்; சக்தி தத்துவத்தில் சிவம் இருக்குமேனும், சக்தியினது இயல்பாகிய கிரியையே

முனைந்து விளங்கும். சிவன் தனது சக்தி சங்கற்பத்தால் நாநாவிதமாம் உருவப் பிரபஞ்சத்தைப் பஞ்சகிருத்தியப் படுத்துவன்.

பரம காரணமான அதீத நிலையில் பரசிவம் பராசக்தி யோடுங்கூடி அசைவுறுதலே நாதாந்த நடனம் ஆகும்.

நாதாந்தம் என்பது, நாத அந்தம் எனப் பிரியும். நாத தத்துவத்தின் முடிவு எனப் பொருள்படும். நாதம்: தத்து வங்கள் எல்லாவற்றினுந் தலையாயது என்பது மேலே கூறிய வற்றால் அறிக. இங்கு நாதம் என்றது பரநாதமாகிய சிவ தத்துவ மென்பதும் அறிக. "நாதமுங் கடந்த வெளியிலே நீயும் நானுமாய் நிற்கு நாள் உளதோ" என்பார் பட்டி னத்தார்.

இந்த நாதாந்த நடனத்தினையே, சமயாதீதப் பழம் பொருளாகிய ஏகநாதன், தில்லைத் திருச்சிற்றம்பலத்துள், தனது நடராஜத் திரு வடிவத்தால் வெளியே விளக்கிக் காட்டுகின்றனன்! நடராஜப் பெருமான் தன் ஆனந்த மேலீட்டினால், ஆன்மாக்களின் மீதுள்ள தன் கருணையே தனது அருள் திருமேனியாகக் கொண்டு, எஞ்ஞான்றும் இடையறாது நின்று நிகழ்த்தும் அப்பொற்புறு நடனமே தில்லைத் திருநடனமாகும். பரசிவம் பராசக்தியை நோக்கு தல் உயிர்கட்குச் சிருட்டியாதிய விளையும் பொருட்டே என வுணர்க. இதனையே "மாதொருபாகம் நோக்கி மன்னு சிற்றம்பலத்தே......அற்புதத் தனிக்கூத்தாடும் நாதனார்" என்று தெய்வச் சேக்கிழார் சுவாமிகள் கூறுகின்றனர்.

சிதாகாசமாகிய பரவெளியிலே, பரம்பொருள் பரநா தத்தை எழுப்பி ஆடும் அவ்வாடலே, ஆன்மாக்களுக்குத் தநுகரண புவன போகங்களைப் படைத்துக் கொடுத்த லோடு, முத்தியின்பத்தையும் வழங்குகின்றது. எனவே நாதாதீதமாகிய அந்த அருள் நடனம், உலக உயிர்கள் யாவும் உய்வதற்குக் காரணமாகும் என்பதை யுணர்க. பரநாத தோற்றமே சிருட்டியாரம்பம்; அதன் ஒடுக்கமே சங்காரம். இத் தத்துவத்தைத் தெரிவிக்க வந்தது திருக் கோயிலில் உள்ள பள்ளியறை. பரசிவம் ஐந்தொழில்

நிகழத் தன்னிற் பிரிவிலாத பராசக்தியை நோக்குதல் என்ற உண்மையை, உலகம் உணர்ந்து உய்யும் பொருட்டே, அந்த அமைப்பு என்பதைக் கூர்த்த மதியினர் உணர்வர்.

அன்றியும், நடராஜ வடிவம், ஐம்பெருந் தொழில்களைக் காட்டுவதுமன்றி, இவ்வைம்பெருந் தொழிலுக்கும் அதீதமாயுள்ள பேரின்ப நிலையையும் குறிக்கும்; சிவபரம்பொருள் கேவல திசையில் இருந்த ஆன்மாக்களுக்குத் தநுகரணுதிகளைக் கொடுத்தல் **தூல நடனம்** எனப்படும்; அது ஆன்மாக்களுக்குப் பெத்த திசை அறிவிக்குந் தொழில் **அதிசூக்கும நடனம்** எனப்படும்! ஆன்மாக்கள் பந்தத்தினின்றும் விடுபட்ட முத்த திசையில் அநுபவப் பேறு **பரநடனம்** அல்லது **ஞான நடனம்** எனப்படும்.

எனவே ஆனந்தத் தாண்டவம் பஞ்ச கிருத்தியத்தை மாத்திரம் காட்டுவதன்று; அது நின்மல துரிய நிலையில் உண்டாகும் அருள் விளக்கத்தையுங் காட்டி, அதற்குப்பின் உண்டாகும் துரியாதீதத்துச் சிவபோக ஆநந்த நிலையையுங் காட்டுவதாகும். மெய்ஞ் ஞானமாகிய அருள்விளக்கமே மெய்யுணர்வாகும்.

"ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு."

என்பார் திருவள்ளுவர்.

இந்த மெய்ஞ்ஞான அருள் விளக்கத்துக்குப் பின் நிகழா நிற்குந் திருக்கூத்தே சிவபோகமாகும். இதனைச் சேக்கிழாரன்றி வேறு யாரால் விளக்க முடியும்? சிவயோக சிகாமணியாகிய திருமூல நாயனரது அநுபவப் பேற்றைக் கூறுமிடத்து இதனைக் கூறுகின்றார்.

எவ்வுலகும் உய்ய எடுத்தருளிய சேவடியாரைச்
செவ்விய அன் புறவணங்கிச் சிந்தைகளி
வரத்திளைத்து
வவ்வியமெய் யுணர்வின்கண் வரும்
ஆனந்தக் கூத்தை
அவ்வியல்பிற் கும்பிட்டங் காராமை யமர்ந்திருந்தார்.

சிவபோகவிளைவாம் திருக்கூத்தைக் கண்டு திளைத்த சித்தருள் ஒருவராகிய திருமூல நாயனர், தமது திருமந்திரத்

தில் இப் பேரின்பத் திருநடனத்தின் உட்பொருளை, மிகவும் சிறப்பித்து விளக்கியருளினர்.

பரம்பொருளாகிய சிவம், ஆன்மாக்களின்மீது வைத்துள்ள கருணையே தமது உருவாகக் கொண்டு, பராபரையின் திருமுன் ஆனந்தத் திருக்கூத்தை இயற்றுகின்ருர் என்ற தத்துவத்தைக் கூறுகின்ருர்.

அண்டங்கள் ஏழினுக் கப்புறத் தப்பான்
உண்டென் றசக்தி சதாசிவத் துச்சிமேல்
கண்டங் கரியான் கருணைத் திருவுருக்
கொண்டங் குமைகாணக் கூத்துகந் தானே,

அப்பராநந்தக் கூத்து நிகழ்வதற்குரிய இடம் பேரின்ப நிலையாகிய துரியமே என்பதைக் கூறுகின்ருர்.

தெற்கு வடக்குக் கிழக்குமேற் குச்சியில்
அற்புத மானதோர் அஞ்சு முகத்திலும்
ஒப்பில் பேரின்பத் துபய உபயத்துள்
தற்பரன் நின்று தனிநடஞ் செய்யுமே,

இப்பேரின்ப உபயத்துள் நிகழ்வதாகிய நடனத்திற்கு அம்பலமாக அமைந்துள்ளது பராசக்தியேயாம் என்பதைக் கூறுகின்ருர்.

அண்டங்கள் ஓரேழும் அம்பொற் பதியாகப்
பண்டையா காசங்கள் ஐந்தும் பதியாகத்
தெண்டினிற் சக்தி திருஅம்பலமாகக்
கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானே.

அத் திருக்கூத்தைக் கண்கூடாகக் காணவல்லார் மாயை கடந்த மாதவரேயாகும்.

தீமுதல் ஐந்தும் திசை எட்டும் கீழ்மேலும்
ஆயும் அறிவினுக் கப்புறம் ஆனந்தம்
மாயைமா மாயை கடந்து நின்ருர் காண
நாயகன் நின்று நடஞ்செய்யு மாறே.

அப் பரமானந்தக் கூத்தைக் காணுந்தோறும் காணுந் தோறும், புளியைக் கண்டார்க்கு நாவில் நீர் ஊறுவதுபோல்

உள்ளத்தே ஆனந்த அருவிபாயும்; சிவ போக விளைவே அத் திரு நடனம்:

புளிக்கண்டவர்க்குப் புனலூறு மாப்போல்
களிக்குந் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம்
அளிக்கும் அருட்கண்ணீர் சோர் நெஞ்சுருக்கும்
ஒளிக்குள் ஆனந்தத் தமுதூறும் உள்ளத்தே.

நாதாந்த நிலையிலே நின்று நம்பன் நடிக்கின்றதனாலே அண்ட சராசரம் யாவும் ஆடுகின்றன.

தேவர்சுரர் நரர் சித்தர் வித்தியாதரர்
மூவர்கள் ஆதியின் முப்பத்து மூவர்கள்
தாபதர் சத்தர் சமயஞ் சராசரம்
யாவையும் ஆடிடும் எம்மிறை யாடவே.

மேலும் சிவபோகமாகிய முத்தி முடிவைக் குறித்த லோடு, சிவபரம் பொருளே ஆக்கல் அளித்தல் மறைத்தல் அருளல் என்ற ஐந்தொழில்களையும், அயன் அரி உருத்திரன் மகேசன் சதாசிவன் என்னும் ஐவகை மூர்த்திகளின் வழி யாகச் செய்கின்றது என்பதைக்காட்டி நிற்குந் தன்மை தன் னிடந் தங்குமாறு அமைந்துள்ள திருவுருவம் நடராஜ வடிவ மாகும்.

அவருடைய திருக்கரத்தில் விளங்கும் உடுக்கை (டமருகம்)யினால் உலக சிருட்டியையும், அபயகரத்தினால் காத்தலையும், நெருப்பை ஏந்திய திருக்கரத்தினால் அழித்தலை யும், ஊன்றிய திருவடியால் மறைத்தலையும், தூக்கிய திரு வடியால் ஆன்மாக்களுக்கு அருளலையும் இத்திருவுருவம் காட்டுகின்றது.

இதனை "உண்மை விளக்கம்" என்ற சித்தாந்த நூலா சிரியர் மனவாசகங் கடந்தார் கூறுகின்றார்.

தோற்றந் துடியதனில் தோயுந் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உள்ள திரோதம் முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

அரன்துடி தோற்றம் அமைத்தல் திதியாம்
அரன் அங்கி தன்னில் அறையிற் சங்காரம்
அரனுற் றணைப்பில் அமரும்தி ரோதாயி
அரனடி யென்றும் அநுக்கிரகம் என்னே.
—திருமந்திரம்.

தாண்டவஞ் செய்யவல்ல ஆண்டவன், மாயையை எடுத்து அப்படி உடுக்கையினுல் உதறுகின்ருர். ஆன்மாக்களின் வல்வினைகளை-சஞ்சிதத்தைத் தமது திருக்கரத்தில் உள்ள நெருப்பில் சுட்டுச் சாம்பலாக்குகின்ருர். ஆணவ மாகிய முயலகனை மேலெழா வண்ணம் கிரியா சத்தியாகிய வலப்பாதத்தினுல் மிதித்திருக்கின்ருர். ஆனந்த அநுபவத்தை ஞான சக்தியாகிய தூக்கிய திருவடியினுல் தந்து ஆன்மாக்களைப் பேரின்பசாகரத்தில் அழுத்துகின்ருர். இதுவே அவர் செய்யும் பரத நாட்டியத்தின் உட்பொருள்.

மாயை தனை உதறி வல்வினையைச் சுட்டுமலஞ்
சாய அமுக்கிஅருள் தான்எடுத்து—நேயத்தால்
ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்
தானெந்தை யார்பரதந் தான்.—உண்மை விளக்கம்.

இனி நடராஜ வடிவம், பஞ்சாட்சரத்தால் அமைந்ததும் ஆகும். அதனை அறிந்து தியானிப்பதும், ஞான சாதகர்களுக்குக் கூறப்பட்ட முறைகளுள் ஒன்ருகும்;

ஆடும் படிகேள்நல் அம்பலத்தான் ஐயனே
நாடுந் திருவடியி லேநகரம்—கூடும்
மகரம் உதரம் வளர்தோள் சிகரம்
பகருமுகம் வாமுடியப் பார்.

இதன் பொருள்:

“மாணுக்கனே! பொன்னம்பலமுடையான் திருநடனஞ் செய்கின்ற முறையைச் சொல்கின்ருேம்; கேட்கக் கடவாயாக.

| | |
|---|---|
| நின்ற பாதத்திலே | ந |
| திருவுந்தியிலே | ம |
| திருத்தோளிலே | சி |
| திருமுகத்திலே | வா |
| திருமுடியிலே | ய |

இந்த வண்ணம் எம்பிரான் ஐந்தெழுத்தையும் உருவமாகக் கொண்டு ஆடுகின்முன் என்று அறிக. இது தூல பஞ்சாக் கரம்.

அன்றியும் சூக்கும பஞ்சாக்கர வகையாலும் அப் பரம னது தாண்டவ வுருவம் பேசப் பெறும்.

சேர்க்குந் துடிசிகரம் சிக்கெனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம்—பார்க்கிலிறைக்
கங்கி நகரம் அடிக்கீழ் முயலகனுர்
தங்கு மகரமது தான்.

மருவுந் துடியுடன் மன்னிய வீச்சு
மருவிய அப்பும் அனலுடன் கையும்
கருவின் மிதித்த கமலப் பதமும்
உருவில் சிவாய நமஎன ஓதே.

| | |
|---|---|
| ஒலிக்கின்ற உடுக்கை | சி |
| வீசிய கரம் | வ |
| அமைத்த கரம் | ய |
| அனலேந்திய கரம் | ந |
| முயலகனே மிதித்த பதம் | ம |



இத்தகைய அருளானந்த அற்புதத் திருக்கூத்தை உள் முகத்தில் நாடி அலேகின்ற மனத்தை ஒடுக்கி, உள்ளுணர்வு பெற்று உவக்கவேண்டும் என்கிருர் திருமூலர்.

ஆடிய காலும் அதிற்சிலம் போசையும்
பாடிய பாட்டும் பலவான நட்டமும்
கூடிய கோலம் குருபரன் கொண்டாடத்
தேடியு(ள்)ளே கண்டு தீர்ந்தற்ற வாறே.

இதுகாறும் கூறிய விளக்கத்தினுல், நாதாந்த நடன மென்னும், ஆனந்தக் கூத்தால் உலகில் காணப்படும் அசைவு கள் யாவும் அவன் தன் அருளாலே செய்யும் ஆணேயினுலே நிகழ்கின்றன என்பதும், அத்தகைய நிகழ்ச்சியானது ஆன் மாக்கள் தம்முடைய இன்பங்கட்குக் காரணமான பந்தத்தி னின்றும் நீங்கிப் பேராவியற்கைத்தாகிய முத்தியின்பத்தைப் பெறும் பொருட்டே நிகழ்கின்றதென்பதும், அத் திருக் கூத்து நடைபெறுமிடம் தூலமாகிய திருச்சிற்றம்பலமே

யன்றி, உலகமாகிய திருக்கோயிலும், சூக்குமமாகிய தகரா காசம் எனப்படும் அன்பர்களது இதய கமலமும் ஆகும் என் பதும் இனிது புலப்படும்.

இத்தகைய தத்துவங்களைத் தெளிவுறக் காட்டுத் திருவுருவம் நடராஜ வடிவினையன்றி வேறு ஒன்றும் இல்லை. இதனை நமக்கு உணர்த்திய ஆன்றோர்களின் மதிநலம் துதி நலம் உடையதாகும். நடராஜ வடிவினைச் சூழ்ந்திருக்குந் திருவாசி ஓங்காரமாகும். இத்தகைய திருவுருவம் சிறப்பாக விளங்குவதனால் தில்லையைத் தெரிசித்த மாத்திரத்தில் முத்தி யென முந்தையோர் மொழிந்தனர். அதாவது நடராஜ வுருவத்தால் விளங்கும் சிவபோக நிலையைத் தரிசித்தமாத் திரத்தில் முத்தியுறும் என்பது போதரும்.

அதனால் இத் தில்லை நடராஜ வுருவினைக் காணும் வாய்ப்புக் கிடைக்குமாயின், மண்ணுலகில் மனிதப் பிறப்பு மற்றொருமுறை வந்தாலும் குறைவில்லை என்கின்றார் அப்பர் மூர்த்திகள்.

குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண்
சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்
வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்த பொற்பாதமும் காணப்
பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே.

தன்பால் வந்த அடியார்களை "என்று வந்தாய்?" என்று கருணையுடன் கேட்பது போலவும் இருக்கின்றது தென்பால் நோக்கியாடும் தில்லைப்பரமானது அபய கரத்தின் குறிப்பு.

ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை
கன்றிய காலனைக் காலால் கடிந்தான் அடியவர்க்காச்
சென்று தொழுமின்கள் தில்லையுள் சிற்றம்பலத்து
நட்டம்
"என்று வந்தாய்?" எனும் எம்பெருமான்றன்
திருக்குறிப்பே.

"இனி எல்லாமாய் நின்ற எம்பிராஞகிய அம்பலக் கூத்தனைத் தினையளவு நேரமாகிலும் நான் மறந்து உய்யமாட்டேன்" என்கிருர் அப்பர்.

பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்
நினைப்பவர் மனங் கோயிலாக் கொண்டவன்
அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனை
தினைத்தனைப் பொழுதும் மறந்துய்வனே.

இத்தகைய திருக்கூத்தைச் சுந்தர மூர்த்தி நாயனர் தரிசித்தபோது, அவருக்கு நிகழ்ந்த அநுபவத்தின் சிறப்பை எமது சேக்கிழார் பெருமான் கூறுகின்றுர்.

ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள அளப்பருங்
கரணங்கள் நான்கும்
சிந்தையே யாகக் குணமொருமூன்றும் திருந்துசாத்து
விதமேயாக
இந்துவாழ் சடையான் ஆடும்ஆனந்த எல்லையில்
தனிப்பெருங் கூத்தின்
வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா
மகிழ்ச்சியில் மலர்ந்தார்.

கருணையே வுருவாகிய கனகசபாபதியின் தாண்டவத்தின் பெருமையை, வேதசிவாகமங்களே முழுவதும் உணர்ந்தில என்றுல், எம்போன்ருர் எங்ஙனம் உணர்வர்? ஏதோ அவன் அருள் உணர்த்தியவாறு சிறிது வரைந்தோம். அன்பர்கள் அனைவரும் ஆனந்த நடனம் புரியும் அம்பலவாணனை, இன்னமும் பல யோனியில் எய்தாதிருக்குமாறு இறைஞ்சி, இன்னருள் பெறுவார்களாக.

## 29. விழாச் சிறப்பு

கண்ணிற்கும் கருத்திற்கும் இனிமையைத் தருவது திருவிழா. இதனை ஊர்தோறும் பண்டைப் பெரியோர்கள் அயரா அன்புடன் நடாத்தினுர்கள்.

"ஊர் ஊர் கொண்ட சீர்கெழு விழவினும்
ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும்"

என்கின்ருர் திருமுருகாற்றுப்படையில் நக்கீரர்.

அந்தந்த ஊர்களில் முக்கியமாகவுள்ள ஆலயங்களில் ஊர் மக்கள் பலரும் ஒன்றுபட்டுச் செய்வது விழா.

காவிரிப்பூம்பட்டினத்திலே இந்திரவிழா எடுத்ததாகச் சிலப்பதிகாரத்திலே இளங்கோவடிகள் இயம்புகின்றார்.

## ஆலயத்தின் அமைப்பு

ஆலயம் என்பது நமது உடம்பு. ஆலயத்தில் உள்ள கல்யாணமண்டபம், யாக மண்டபம், வியாகரண மண்டபம், நிருத்த மண்டபம், அர்த்த மண்டபம், இந்த ஆறும் நமது உடம்பினுள் மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆதாரங்களை அறிவிக்கின்றன. உள்ளமாகிய கர்ப்பக்கிருகத்திலே சிவலிங்கம் இருக்கின்றது. அது உயிருக்குயிராகிய இறை.

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளல் பிரானுர்க்கு வாய் கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்துங் காளாமணி விளக்கே.

என்பது திருமூலர் திருமந்திரம்.

கோயிலில் உள்ள கொடிமரம், நமது உடம்பிலுள்ள முதுகெலும்பு; அதில் முப்பத்திரண்டு கட்டுக்கள் இருக்கின்றன. முப்பத்திரண்டு கட்டுக்கள் கொடிமரத்திலும் உண்டு; கொடிமரத்தில் முறுக்கிய வெள்ளைத் துணியையும் தருப்பைக் கயிற்றையும், வளைத்து வளைத்து ஏற்றுவர். அதற்கு துவஜா ரோகணம் என்று பேர். அவ்வாறு கொடியேறிய பின் பஞ்ச மூர்த்தி புறப்பாடு, பெரிய மேளங்கள், தேவார, திருவாசக, திருப்புகழ்ப் பாராயணங்கள், ஆடல், பாடல் முதலியன நிகழும்.

இங்கே முதுகெலும்பின் நடுவே வளைந்து வளைந்து செல்லும் வெள்ளை நரம்பாகிய சுழுமுனை என்ற நாடியின் வழியே பிராணவாயு ஆறுதாரங்கடந்து, பிரமரந்திரவழியே சஹஸ்ராரத்தை யடைந்தபோது தசவித நாதங்களும் தெய்வக் காட்சியும் உண்டாகும்.

இத்தகைய அரிய பெரிய கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு தத்துவ ஞானிகளால் ஏற்படுத்தப்பட்டது திருவிழா என உணர்க.

உடல்நலக் குறைவினாலும், ஆசௌசம் முதலிய இடர்களினாலும் கோயிலுட் சென்று வழிபாடு செய்யமாட்டாத ஆன்மாக்களின் பொருட்டும், பக்குவமடையாத சில உயிர்களின் பொருட்டும், இறைவன் கோயிலை விட்டு வெளியே எழுந்தருளி வருகின்றான்.

கோடிக்கணக்கான செம்பொன்னைச் செலவழித்துப் பண்டைக்காலத்திலே சேர சோழ பாண்டியர்கள் கோயிலைப் புதுக்கினார்கள். வானளாவிய கோபுரங்களும், ஆயிரங்கால் மண்டபமும், ஐந்து சுற்று மதில்களும், நவரத்தின அணிகலன்களும் செய்து அமைத்த அரசர்கள் உற்சவ மூர்த்திகளைச் செம்பினால் அமைத்தார்கள். மூலவமூர்த்திகளைக் கல்லினால் அமைத்தார்கள், ஏன்? நெருப்புக் கல்லில் அதிகமாகத் தங்கியிருக்கின்றது. அருள் சோதி கல்லிடம் அமைகின்றது. இனி மின்சாரத்தை செப்புக் கம்பி மூலம் பாய்ச்சுகின்றார்கள். ஆகவே கோயிலுக்குள் குவிந்திருக்கும் அருள் மின்சாரத்தை வீதிகள் தோறும் பாய்ச்சுகின்ற உற்சவர் செம்பினால் அமைதல் வேண்டும் என்றும், இந்த மின்சாரத்தைக் கண்டு பிடிப்பதற்கு முன்னரேயே, நம் மூதாதையர் கண்டு அமைத்தனர்.

ஆதலினால், விழாக்காலங்களில் அருள் வெள்ளத்தைத் திருவீதிகளில் பரப்புவதற்காக இறைவன் எழுந்தருளி வருகின்றான் என்று உணர்க.

இனி கண் பெற்றதன் பயன் நல்விழாவைச் சேவித்தலேயாகும் எனத் தெளிக. திருமயிலாப்பூரில் திருஞானசம்பந்தர் முன், சிவநேசர் எலும்பை வைத்து வணங்கினார். பாலறுவாயர், "உலகிலே பிறந்தார் பெறுகின்ற பயன், சிவபெருமானுடைய அடியவர்கட்கு அன்னமளித்தலும், கண்ணாரக் கண்ணுதலாருடைய நல்விழாவைக் கண்டு களித்தலுமேயாம் என்பது உண்மையானால், இந்த எலும்பு பெண்ணுருவம் பெறுக" என்றார்.

"மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன் மதிசூடும்
அண்ணலார் அடியார் தமை அமுது செய்வித்தல்
கண்ணினல் அவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்
உண்மையா மெனில் உலகர்முன் வருகென
உரைப்பார்"

என்றவுடன் அவ்வெலும்பு பெண்ணுருவம் பெற்றது.

என்றதனல் விழாவின் பெருமையை விளம்பவல்லார் யாவர்? ஆகவே நல்விழாவின்போது எல்லோரும் அன்பும் பண்பும் உடையவர்களாய் வந்து கண்குளிரக் கண்டு அருளும் பொருளும் பெற்று இன்புறுவார்களாக.

இத்தகைய நல்விழாவைக் காணுவதற்குக் குழுமுகின்ற அன்பர்கள், திருவீதிகளேயும், விழா நிகழும் திருத்தலத்தை யும் அசுத்தம் செய்யக்கூடாது. உள்ளும் புறமும் தூய்மை யுடன், வாய்மை வழி நின்று மகிழ்வார்களாக.

## 30. தெய்வத்துணே

கானகத்தில் ஒரு சந்யாசி நெடுங்காலமாகத் தவஞ் செய்து கொண்டிருந்தார்; அவர் சிறந்த ஒழுக்கமும் உயர் குண நலனும் உடையவர். ஒருமைப்பட்ட மனத்துடன் புலன்களே வென்று தவவேந்தராக அவர் திகழ்ந்தார். அக் கானகத்தில் வாழும் கொடிய விலங்கினங்களும் அவரிடம் குழந்தைகள்போல் அடங்கி அன்பு செய்தன.

அம் முனிவர் பெருமான், பச்சிலேகளேயும், உலர்ந்த சருகுகளேயும், கிழங்குகளேயும், நீரையும் உணவாகக் கொண்டு, உடம்பை வாட்டி, வினேகளே வீட்டித் தவசிலரா கத் திகழ்ந்தார்.

ஒருநாள் அவர்முன் மகாலட்சுமிதேவி தோன்றிக் காட்சியளித்தனர். மூனிவர் திருமகளேத் தொழுதார்.

"முனீந்திரா! நீ முன்னே செய்த நல்வினேப்பயன் காரணமாக சிலநாள் நான் உன்னிடம் தங்கியிருக்கப் போகிறேன்".

"தாயே! நான் தவத்தையே தனமாகக் கொண்டவன். வெறுக்கை (செல்வம்) மீது வெறுக்கையுற்றவன். உமது கருணையும் அதனால் வரும் செல்வமும் நாட்டில் இல்லறத்தாருக்கல்லவா வேண்டும். என்னிடம் நீ இருந்து பயனில்லையே."

"தபோதனரே! இப்போது உனக்கு செல்வம் வேண்டாம் என்றிருக்கலாம். முன்னே நீ செய்த புண்ணியத்தின் பயனாக உன்னிடம் குறிப்பிட்ட ஒரு காலம்வரை இருக்கத்தான் வேணும். இது இறைவனுடைய அருளாணையின் நியதி. நான் உன்னிடம் இருக்கும்போது, உனக்கு எல்லாம் நன்மையாகத்தான் முடியும். ஒரு பயமும் வராது. உனக்கு சகல சித்திகளும் உண்டாகும். அரச மரியாதைகள் கிடைக்கும். உலக மக்கள் மதித்துக் கொண்டாடி உபசரிப்பார்கள்" என்றாள்.

முனிவர், "அம்மா! எல்லாம் ஈசன் செயல். உன் கருணை கடாட்சப்படி நடக்கட்டும்" என்றார்.

அவரிடம் லட்சுமியின் பரிபூரண அருள் பதிந்தது.

முனிவர் நீராடித் திரும்பும் வழியில் ஒரு பெரும் புதையல் வெளிப்பட்டது. அதில் தங்கப் பவுன்கள் நிறைந்திருந்தன. லட்சுமி கடாட்சம் ஏற்பட்டிருக்கின்ற காரணத்தால், அவருடைய காலடியில் அது வந்தது. அவரோ ஆசாபாசம் விட்டவர். அதைக் கண்டு சிரித்தார். தேவி! இது எனக்கு ஏன்? தலைமயிர் இல்லாதவருக்கு மலர்ச்செண்டால் என்ன பயன்? தவஞ் செய்கின்ற எனக்கு இப்பணம் எதற்கு? என்று கூறி அதனைத் தீண்டாமலேயே தான் தவஞ் செய்யும் மரத்தடி யடைந்தார்.

மறுநாள் முனிவர் "நம்மிடம் திருமகள் தங்கியிருக்கின்றாளே! அரச மரியாதை கிடைக்கும் என்றாளே! இதைச் சோதித்துப் பார்ப்போம்" என்று எண்ணினார்.

அந்தக் காட்டுக்கு அருகில் இராஜசேகரம் என்ற ஒரு நகரம். அதனைப் பராந்தகன் என்ற அரசன் அரசுபுரிந்து வந்தான்; முனிவர் அரசவை சென்றார். பெரிய மண்டபம்.

அமைச்சர்கள், பிரதானியர்கள், ஏனைய பரிசனங்கள் புடை சூழ மன்னர் பெருமான் அரியணை மீது அமர்ந்திருந்தான். முனிவரைக் கண்டு எழுந்து எதிர்வந்து தொழுதான்.

முனிவர் அம்மன்னவன் தலையில் இருந்த மணிமகுடத்தைக் காலால் உதைத்தார். (லட்சுமி தேவியின் சொல்லை சோதிக்குமாறு இவ்வாறு செய்தார்.)

சபையில் உள்ளவர்கள் ஆ! ஆ! என்று அலறினார்கள். அமைச்சர்கள் திடுக்கிட்டார்கள். மன்னவன் மனம் பதறியது. அந்த ஒரு கணத்தில் அந்தச் சபையே ஆடிவிட்டது; முனிவருக்கு என்ன ஆபத்து வருமோ என்று எல்லோரும் எண்ணினார்கள்.

இலட்சுமிதேவி முனிவருடைய நடையை நோக்கிப் புன்னகை புரிந்தாள். இந்த முனிவரிடம் நாம் அருள்புரிந்தால், இவன் வெறி பிடித்தவன் போல் இப்படி மன்னவனுடைய மணி மகுடத்தை உதைத்தானே என்று கருதினாள். உடனே திருமகள் அருளால், அந்தக் கிரீடத்திலிருந்து ஒரு நாகப்பாம்பு வெளிவந்து படம் எடுத்து ஆடியது. இதைக் கண்ட அரசனும் அவையோரும் அதி அற்புதங் கொண்டார்கள். ஆ! முனிவர் பெருமான் திரிகால ஞானி. நமக்கு வர இருந்த இடரைக் கருணையினால் தவிர்த்தருளினார்.

"இந்தப் பாம்பு முடிக்குள் நுழைந்திருக்க வேண்டும். நான் இதை அறியாமல் எடுத்துத் தலையில் அணிந்துகொண்டேன். ஆ! இந்தப் பாம்பு கடித்திருந்தால் நான் மாண்டு போவேன். இதைக் கானகத்தில் தவஞ்செய்யும் இவர் யோகக் காட்சியால் கண்டு, நாகப்பாம்பு கடித்து அதனால் நான் மாளாது வாழும்பொருட்டு என்னைக் காத்தருள வேண்டி வந்து உதவி செய்தார்" என்று மன்னவன் நினைத்தான்.

மாதவ முனிவருடைய மலரடிமீது பலமுறை வீழ்ந்து வணங்கினான். "சிறியேனை வாழவைத்த தெய்வமே! என் இடர் களைந்த எந்தை பெருமானே! குடிமுழுதாண்ட குருமணியே! தங்கட்கு நான் என்ன கைம்மாறு செய்ய

வல்லேன். தேவரீரை என் உயிருள்ள வரை பூசிப்பேன். நேசிப்பேன்" என்றெல்லாந் துதித்தான். எல்லோரும் அவருடைய அடிமலர் மீது வீழ்ந்து தொழுதார்கள்.

அவரைப் புஷ்ப ரதத்தின்மீது ஏற்றி குடை, சாமரம், ஆலவட்டம் முதலிய உபசாரங்களுடன் மேள தாளங்கள் முழங்க, விண்ணுலகம் அதிருமாறு வாண வேடிக்கையுடன் ஊர்வலம் செய்தார்கள்.

முனிவர் சிந்திக்கின்ருர். இது என்ன விந்தை. ஒரு விநாடியில் நமக்கு இத்துணைச் சிறப்பும் இராஜ மரியாதை யும் நகர்வலமும் நடைபெறுகின்றன. மன்னவனைக் காலால் உதைத்தேன். என் காலை வெட்டித் தண்டிக்கவேண்டிய மன்னன் காலில் வீழ்ந்து அடிமையாகி நிற்கின்ருன். இது திருமகள் அநுக்கிரகம். முடியிலிருந்து அவள் சர்ப்பமாக வந்து இத்தனைக் கூத்தும் புரிவிக்கின்ருள். அவள் இன்னும் என்ன என்ன திருவிளையாடல் செய்யப் போகின்ருளோ? என்று எண்ணித் தனக்குள் சிரித்துக் கொண்டார்.

அரண்மனைக்கு அருகில் உள்ள பூங்கா வனத்துக்கு இடையில் கட்டியுள்ள சந்தன மாளிகையில் முனிவரைப் புதிய வெல்வெட்டு விரித்த ஆசனத்தில் அமர வைத்து, மன்னன், மன்னனுடைய மனைவி, மகள் முதலியோர் மயில் விசிறி எடுத்து விசிறி, பால், பழம், தேன், இளநீர் தந்து உபசரிக்கின்ருர்கள். அதலபாதாளத்தில் இருந்த ஒருவனை இமய மலையின் உச்சியில் அமர்த்தியது போல் இருந்தது. காட்டில் தனித்துப் போற்றுவார் ஒருவருமின்றி காய், சருகு உண்டிருந்த முனிவர் இன்று இராஜோபசாரத்துடன் தங்கப்பிடியிட்ட வெண்சாமரம் மன்னவனே வீச, பஞ்சு மெத்தையிட்ட தந்தக் கட்டிலில் வீற்றிருக்கின்ருர்.

இப்படி சில தினங்கள் கழிந்தன. முனிவர் முடிமன்னனை நோக்கித் தான் கானகம் போகவேணும் என்ருர். மன்னவன் மறுத்து "தேவரீர் இங்ஙனமே இருந்து எங்களை உய்விக்க வேண்டும்" என்ருன்.

முனிவர் மீளவும் இலட்சுமியின் கருணையின் வலிமையைச் சோதிக்க நினைத்தார்.

நடு இரவு. அரசனும் அரசமாதேவியும் ஒரு கட்டிடத்துக்குள் பஞ்ச சயனத்தின்மீது பள்ளிகொண்டு உறங்கிக் கொண்டிருந்தார்கள். முனிவர் அந்த படுக்கை வீட்டுக்குள் நுழைந்து மன்னவன் முதுகிலும், மகாராணியின் முதுகிலும் பளார் பளார் என்று நான்கு அடி கொடுத்து, இவருடைய கரங்களைப் பிடித்து, கரகர என்று மாடுகளை இழுத்து வருவதுபோல் இழுத்துக்கொண்டு வெளியே வந்தார். இது எத்துணை அடாத செயல். அரசருடைய படுக்கையறையில் மற்றவர் நுழையலாமா? கோப்பெருந் தேவியை மற்றவர் தீண்டலாமா? தீண்டி அடிக்கலாமா? தலை போகின்ற காரியம்.

மன்னவன் இன்னதென் றறியாமல் திகைத்து நின்றான். இலக்குமிதேவி திடுக்கிட்டாள். தவ முனிவர் திடீர் என்று இந்த அடாத செயலைச் செய்து நம்மைச் சோதிக்கின்றாரே! நாம் அவரிடம் தங்கியிருக்கின்றபோது அவருக்கு ஒரு அவமரியாதை வரக்கூடாதே என்று எண்ணினாள். உடனே திருமகள் செயலால் அரசன் படுத்திருந்த கட்டிடம் திடீர் திடீர் என்று இடிந்து விழுந்தது. இதைக் கண்ட மன்னவன் ஆ! ஆ! நான் இதன் உள்ளே படுத்து அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தேனே. கட்டிடம் இடியப் போவதை அறிவுக் கண்ணால் அறிந்த அருந்தவ முனிவர் என்னைக் காக்குங் கருணையால் இங்ஙனஞ் செய்தனர். இல்லையேல் நானும் என் தரும பத்தினியும் மாண்டு ஒழிந்திருப்போம். இப் பேராபத்திலிருந்து என்னைக் கருணை மேலீட்டினால் காத்தருளினார்.

'செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது'

இந்த உதவிக்கு என்ன கைம்மாறு செய்தாலும் ஈடாகுமா? வாழ் நாள் முழுவதும் நாம் இவருக்கு மீளா அடிமையாகி வாழ்வதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்'' என்று எண்ணிய பராந்தகன், மாதவருடைய மலரடியைப் பலகாலும் பணிந்து எழுந்தான். கண்ணீரால் அவருடைய கால்களைக் கழுவினான்.

இச் செயலைக்கண்ட முனிவருக்கு அதி ஆச்சரியம் ஏற்பட்டது. திருமகளின் கருணைத் திறத்தை நினைந்து நினைந்து விம்மிதம் அடைந்தார். கமலாசனியின் கருணையின் வலிமைதான் என்னே? உலகமெல்லாம் இறைஞ்சும் இந்தக் கோமானை கோவணாண்டியின் கால்மேல் வீழ்ந்து வணங்குமாறு செய்கின்றாள். தேவியின் பெருமையே பெருமை. அவளின் அருளிருந்தால் துரும்பும் அரசு புரியுமே? அம்மம்ம! நினைக்கவும் முடியாத அற்புதம்! செய்யத் தகாத செயலைச் செய்த எனக்குச் சிறப்பின் சிகரம் சேர்கின்றது என்று சிந்தித்தார். தேவியை வந்தித்தார்.

இவ்வாறு முனிவர் சில காலம் அரச மரியாதைகளுடன் மிக உயர்ந்த சுகாசனங்களில் அமர்ந்து, எல்லோருடைய வணக்கங்களுக்கும் உரியராய் விளங்கினார்.

ஒருநாள் இரவு இலட்சுமிதேவி அவருடைய கனவில் தோன்றி, "முனிவரே நான் நாளைக் காலை உம்மை விட்டு அகலுவேன். இனி உமக்கு இங்கு ஒரு உபசாரமும் நடவாது" என்று கூறி மறைந்தாள். முனிவர் எழுந்தார். திருமகள் விலகிவிட்டாள் என்பதை உணர்ந்தார்.

முனிவர் முதல்நாள் மன்னவன்பால் கொடுத்த மாம்பழத்தை வெட்டிக் காலையில் ஒரு துண்டை யுண்டான். உடனே மயங்கி விழுந்தான். அரச வைத்தியர்கள் வந்தார்கள். அம் மாம்பழத்தில் நஞ்சு கலந்திருக்கின்றனதென அறிந்தார்கள். நஞ்சு தணியும் நன் மருந்தை நல்கினார். பராந்தகன் குணமடைந்தான்.

அக் கனி அரண்மனை நந்தவனத்தில் பழுத்தது. அது மரத்தில் இருக்கும்போது நல்ல நாகம் அதில் நஞ்சைக் கக்கியிருந்தது. முனிவர் இக்கனி நஞ்சு கலந்ததென்பதை அறியாது மன்னனிடம் முதல் நாள் மாலை தந்தார்.

மன்னவன் "ஓ! இந்த முனிவர் இப்பழத்தில் நஞ்சூட்டி நம்மைக் கொன்று அரசுரிமையைக் கைப்பற்றக் கருதினார் போலும். இவரைக் கொல்வது நல்லதன்று. முன் இருமுறை நம் மரணத்தைத் தடுத்து உதவி செய்தவர்.

கொன்றன்ன இன்னு செயினும் அவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும்.

ஆதலால் இவருடன் இனி பழகக்கூடாது என்று தன் மன துக்குள் நினைத்து, தன் ஏவலரிடம் முனிவரை யாதொரு இடையூறும் இன்றி காட்டில்விட்டு வருமாறு கட்டளை யிட்டான்.

காவலர் முனிவரை அழைத்துப்போய் கானகத்தில் விடுத்து, "முனிவரே! எமது மன்னரைக் கொல்லுமாறு நீர் நஞ்சு கலந்த கனியைத் தந்த காரணத்தால் உம்மை மன்னர் அகற்றிவிட்டார். இனி நகருக்குள் வராதீர்; வந்தால் தலை போகும்" என்று கூறிச் சென்றுர்கள்.

முனிவருக்குச் சிரிப்புத்தான் வந்தது. "ஆ! திருமகள் செய்யும் திருவிளையாடல்தான் என்னே! அவள் விலகிய அடுத்த கணத்தில் எனக்கு அரச மாளிகையில் இடமில்லை. அன்றியும் அரசனுடைய வெறுப்பும் ஏற்பட்டது. திருமகள் கடாட்சம் இருந்தால் தீமையும் நன்மையாகும். அவ ளுடைய கடாட்சம் இல்லையேல் நன்மையும் தீமையாக முடியும். நான் தந்த மாம்பழமே நஞ்சாக மாறி எனக்கு இந்த நிலையமைந்தது. நான் சுகத்தை விரும்பாதவன். துக்கத்தை வரவேற்கின்றவன். சாமானியமான மனிதர்கள் என்ருல் கதி கலங்கி, மதி மயங்கி அதிக வேதனை அடைவார் கள். நேற்று அரச போகம். இன்று காட்டில் நிற்கும் யோகம். தேவி! நின் திருக்கூத்தை யறிந்தேன். சில காலம் என்பால் தங்கி வேண்டாம் என்ற உயர்ந்த சிறப்பை யெல்லாம் எனக்கு வலிதில் தந்து விளையாடினுய். அம்மா! நீ ஆண்டியை அரசனுக்குவாய்; அரசனை ஆண்டியாக்கு வாய்; துரும்பை இரும்பாக்குவாய்; இரும்பைத் துரும்பாக்கு வாய்; குட்டிச் சுவரை அரண்மனையாகச் செய்வாய்; அரண் மனையைக் குட்டிச்சுவராக்குவாய். உன்னுல் எல்லாம் ஆகும். தாயே! உனக்கு வணக்கம்" என்று தேவியைத் தொழுது விட்டு, எப்போதும்போல் மனத்தை யடக்கித் தவஞ் செய் யத் தொடங்கினுர்.

## 31 ஒன்று தெரிந்தால் ஒன்று தெரியாது..

உலகத்தைக் காண்கின்றபோது, உலகைப் படைத்த ஒரு பரம்பொருள் உண்டெனமதிப்பதுவே அறிவுடைமை. குடத்தைக் கண்டவுடன், குடத்தை வனைந்தான் ஒருவன் இருக்கவேண்டும் என்று நினைக்கின்றோம் அல்லவா? உலகம் காரியப் பாடுடையது. காரியம் கர்த்தா இன்றி நிகழாது. ஆகவே உலகிற்கு ஒரு கர்த்தன் வேண்டும். அவன் உலகைத் தோற்றுவித்தான். நிலைபெறச் செய்கின்றான். ஒடுக்குகின்றான்.

ஆனால், அக்கடவுள் கண்களுக்குத் தெரியவில்லையே என்று ஐயுறுவார் பலர். கட்புலனுக்குத் தோன்றாமையால், ஒரு பொருள் இல்லையென்று கூறுவது மடமை. மலரில் உள்ள மணம் கட்புலனுக்குத் தோன்றுகின்றதா? நெருப்பில் உள்ள சூடு கட்புலனுக்குத் தோன்றுகின்றதா? கடல் நீரில் உள்ள உப்பு கட்புலனுக்குத் தோன்றுகின்றதா? சிந்தியுங்கள்.

'உடலுமுடல் உயிருநிலை பெறுதல் பொருளென உலகம்
ஒருவிவரு மநுபவன சிவயோக சாதனையில்
ஒழுகுமவர் பிறிது பரவசமழிய விழிசெருகி
உணர்வு விழிகொடு நியதி தமதூடு நாடுவதும்''

என்கின்றார் அருணகிரிநாத சுவாமிகள்.

உணர்வு விழியினால், உணரப்படுகின்ற பொருள் பரம்பொருள் எனவுணர்க. அந்தவுணர்வு, உலக நிலையினின்றும் நீங்கி, உலகை மறந்து, உள்ளத்தையும் மறந்து, உணர்வையும் மறந்து, உயிரையும் மறந்தபோது அரும்புகின்ற ஒன்று ஆகும். நூலறிவினால் வாலறிவனைக் காண இயலாது.

''உருவெனவும் அருவெனவும் உளதெனவும் இலதெனவும்
உழலுவன பரசமய கலையார வாரமற
உரையவிழ உணர்வவிழ உளமவிழ உயிரவிழ
உளபடியை உணருமவர் அநுபூதி யானதுவும்''

என்று உணர்த்துகின்றார் அருணகிரிநாதர்.

கடவுள், அங்கிங்கெனுதபடி எங்கும் பிரகாசமாய், அருளொடு நீக்கமற நிறைந்திருக்கின்ருர். ஆனுல் காணமுடியவில்லை. பாலில் நெய்யிருக்கின்றது; தெரியவில்லை, கண்ணுக்குத் தெரியாமையால். பாலில் நெய்யில்லையென்ருல் நம்மை அறிவுள்ள உலகம் பழிக்குமன்ருே?

* * * ''பாலில்படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்''

உறவு கோல்நட்டு உணர்வுக் கயிற்றினுல் முறுகவாங்கிக் கடைய அவன் முன்னிற்பன்.

உலகிலே இறைவன் எங்கும் நிறைந்திருப்பானுயின், உலக மாயை அவனைப் பற்ருதோ? பற்ருது. ஏதுபோல்? கடலில் பிறந்து, கடல் நீரைக் குடித்து, கடலிலேயே வாழ்கின்ற கடல் மீனில், உப்பு ஏறுவதில்லை. அதுபோல உலகமெங்கும் நிறைந்திருக்கும் இறைவனை, உலகமாயை பற்றுவதில்லை. பாம்பன் சுவாமிகள் இப்படி விளக்கியருளினுர்.

உலகக்காட்சி தெரிகின்ற வரை, கடவுட் காட்சி தெரியாது. கடவுட்காட்சி தெரியத் தலைப்பட்டார்க்கு, உலகக் காட்சி தெரியாது.

''நாயைக் கண்டால் கல்லைக் காணேம், கல்லைக் கண்டால் நாயைக் காணேம்'' என்பது நம்நாட்டுப் பழமொழி. நாயை அடிக்கக் கல் தேடுவது என்ற பொருளில் இப் பழமொழி எழவில்லை.

ஒரு சிற்பி ஒரு வீட்டின் முகப்பில், கருங்கல்லில் நாய் செய்து வைத்தான். புதிதாக வந்த ஒருவர், தொடக்கத்தில் நாய் என்று கண்டு மயங்கி நின்ருர். அறிவு தெளிந்தபின் அது நாயன்று; கல் என்று கண்டார். நாய் என்று கண்டபோது கல் தெரியவில்லை; கல் என்று கண்டபோது நாய் தெரியவில்லை. நாயும் அதுதான், கல்லும் அதுதான். அதுபோல் உலகம் என்று கண்டால், கடவுள் தெரிவதில்லை. கடவுள் என்று கண்டால், உலகம் தெரிவதில்லை.

மரத்தினுல் யானை செய்து வைத்திருக்கின்றது. கோயிலுக்கு வந்த ஒருவர் அதனைப் பார்க்கின்ருர். யானையென்று

பார்க்கின்றூர். மரம் தோன்றுவதில்லை. மரம் என்று பார்க்கின்றூர். அப்போது யானை தோன்றுவதில்லை. அதுபோல் பரம் என்று பார்த்தால், பார் தெரிவதில்லை. பார் என்று பார்த்தால் பரம் தெரிவதில்லை.

"மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதல் பூதம்"

என்பது திருமந்திரம்.

முன்னுளில் யாழ்ப்பாணத்திற்குக் கப்பலில் போவார்கள். அப்போது இந்தியக் கரை தெரிகின்ற வரை யாழ்ப்பாணக் கரை தெரியாது. யாழ்ப்பாணக் கரை தெரிந்த அந்தக் கணத்தில் இந்தியக் கரை தெரியாது. இருகரைகளும் தெரிகின்ற அளவில், ஒரு நடு இடம் கிடையாது. இனி இருகரைகளும் தெரியாத அளவிலும் ஒரு நடு இடங் கிடையாது. ஒரு கரை தெரிந்தால் மறு கரை தெரியாது. அதுபோல், பொருட்காட்சி தெரிகின்ற வரை அருட்காட்சி தெரியாது. அருட்காட்சி தெரிந்த போது பொருட்காட்சி தெரியாது.

"சும்மா விரு சொல்லற என்றலுமே
அம்மா பொருள் ஒன்றும் அறிந்திலனே"

என்கின்ற இந்த அநுபவத்தை, அருணகிரிநாதர் பெற்றுர். இந்த அநுபவத்தை எனக்குக் காட்டு என்று வேண்டுகின்றுர் சிதம்பர சுவாமிகள்.

"சும்மா விருஎனநீ சொல்லப் பொருளொன்றும்
அம்மா அறிந்திலமென் றன்றுரைத்த—எம்மான்
அருணகிரி நாதன் அநுபவம் நாயேற்குக்
கருணைபொழி போரூரா காட்டு.

'எல்லாமற என்னை யிழந்தநலம் சொல்லாய்'

என்கிற அநுபூதி யநுபவத் திருவாக்கை யுன்னுக.

* * * "எல்லாம் ஒருங்கிய நிர்க்குணம் பூண்டு
என்னைமறந் திருந்தேன் இறந்தே விட்டது
இவ்வுடம்பே"

என்னும் கந்தரலங்காரக் கனியமுதப் பாடலாலும் அறிக. ஆ! ஆ!! எத்துணைப் பெரிய அனுபவம்.

குறியைக் குறியாது குறித்து அறியும் நெறியில் விளைவது அந்த அநுபவம். அந்த அநுபவம் ஏற்பட்டபோது, செறிவற்று, உலகோடு உரை சிந்தையும் அற்று, அறிவு அற்று, அறியாமையும் அற்றுவிடும்.

வெளியில் விளைந்த வெறும் பாழைப் பெற்ற வெறுந் தனியாக விளங்கும் நிலை அது.

அங்கே காண்பானுமில்லை; காட்சியுமில்லை; காட்சிப் பொருளுமில்லை. ஞாதுரு ஞான ஞேயங்களாகிய முப்பாழுங் கடந்த முழுநிலை அது. முப்பாழுங் கடந்து அப்பாலே சென்ற அநுபவஞானிகள், இப்பார்வையின்றி வேறு எப் பார்வையுமின்றி, நற்பார்வையாகிய அருட்பார்வை யிலேயே நிலைத்து நிற்பர். அவர்கட்குக் காலமில்லை; காம மில்லை; பாவமில்லை; புண்ணியமில்லை. சுகமில்லை, துக்க மில்லை. தானில்லை, பிறரில்லை. அங்கே ஒன்றுமேயில்லை. எங்கும் ஒரே அருள். மருள் இல்லை. இருள் இல்லை. சுத்த வெளி. நித்த ஒளி. அந்த ஒளிமயமாய் நின்று அறிவுக் குன்றின் மேல் நிற்பர். அங்கே கீழ்மேலில்லை. மலைமீது ஏறிப் பார்ப்பார்க்கு, உயர்வு தாழ்வு தெரியாது அல்லவா?

ஒளியில் விளைந்த உயர்ஞான பூதரத்து உச்சியின்மேல் அளியில் விளைந்ததோர் ஆனந்தத்தேனைப் பருகி, உருகி இன்பம் பெருகி ஏகாந்தமாக நிற்பர். அங்கே மோகாந்த காரமில்லை. தேகாந்தந் தீர்வர். வாக்கும் மனமும் கடந்த நிலையில், போக்கும் வரவும் புணர்ப்பும் இல்லாத பெருநிலை அந்த நிலை யெனவுணர்க. அத்திரு நிலையில் விளையும் ஆனந் தத்தை ஆராலும் உரைக்க ஒண்ணுது.

"போக்கும் வரவும் இரவும் பகலும் புறம்பும் உள்ளும்
வாக்கும் வடிவும் முடிவும் இல்லாதொன்று வந்து வந்து
தாக்கும் மனோலயந்தானே தரும் எனைத் தன்வசத்தே
ஆக்கும் அறுமுகவா சொல்லொணுதிந்த ஆனந்தமே"

என்ற அற்புதச் செந்தமிழ்த் திருவாக்காலும் உணர்க.

N. Latha



ஆகவே, அந்த அருட் காட்சியைக் காண விழைவார், சிறிது சிறிதாக உலகக் காட்சியை மறப்பதற்கு முயலுதல் வேண்டும். இது மறைந்தபோது, அருட்காட்சி நிறையும். அது தியானுதி முயற்சியினுல் கைகூடும். பாடுபடாத மக்கள் அதனே எங்ஙனம் பெறுவர்? "நான்பட்ட பாடு பஞ்சுதான் படுமோ?" என்பார் இராமலிங்கர்.

அருளால் கண்டால் அனைத்தும் ஒன்ருகத் தெரியும். அறிவால் கண்டால் காண்கின்ற தன்னேயும் தெரியாது.

"அருளால் எவையும் பார் என்ருன்—அத்தை
அறியாதே சுட்டிஎன் அறிவாலே பார்த்தேன்
இருளான பொருள்கண்ட தல்லால்—கண்ட
என்னேயுங் கண்டிலன் என்னேடி தோழி"

என்கிருர் தாயுமானவர்.

எனவே, உலகையும் தன்னேயும் மறந்து, உணர்வு நிலே நின்று, அவனருளே கண்ணுகக்கொண்டு கண்டு, அயரா இன்ப நிலேயில் அருளாரமுதம் உண்டு, பக்குவ ஆன்மாக்கள் பரிபூரணம் பெறுக.

## 32. ஒன்றில் இரண்டு

சிவம், விஷ்ணு என்ற இரு பெருங் கடவுள்களே நமது பாரத நாட்டில் சான்ருேர்கள் வணங்கி வழிபடுகின்ருர்கள். சிவத்தை வழிபடுகின்றவர்கள் சைவர்கள்; விஷ்ணுவை வழி படுகின்றவர்கள் வைஷ்ணவர்கள்.

உண்மையறிதற்கு ஊழ் வேண்டும். உண்மை யுணராத சைவர்களும் வைஷ்ணவர்களும், வேற்றுமை மனம் படைத்து, ஒருவரையொருவர் வைதும், வாதிட்டும், அமைதி யும் சாந்தியும் இன்றி அல்லல் படுகின்ருர்கள்.

சைவர்கள் விஷ்ணுவை நிந்திப்பதும், வைஷ்ணவர்கள் சிவத்தை நிந்திப்பதுமாக இருக்கின்ருர்கள். இவர்கட்கு நிந்தனேயில் ஒரு மகிழ்ச்சி. இது அறியாமையின் சிகரம்.

இந்த உலகை உற்று நோக்குங்கள்; தட்பமும் வெப்பமும் சேர்ந்து எங்கும் காணப்படுகின்றன.

ஒரு மலர், மலராக இருக்க வேண்டுமாயின் தட்பமும், வெப்பமும் அதில் சமானமாக இருக்கவேண்டும். மலர் வாடுகின்றது: காரணம் என்ன? அதில் சமமாக இருந்த குளிர்ச்சி குறைந்துவிட்டது; மலர் அழுகிவிடுகின்றது; காரணம் என்ன? அதில் சமமாக இருந்த சூடு குறைந்துவிட்டது. எனவே, சூடும் குளிர்ச்சியும் ஒன்றை யொன்று விடாமல் கலந்து மலரில் இருப்பதனுல்தான் மலர் அழகு செய்கின்றது.

நமது உடம்பிலும் தட்பமும் வெப்பமும் அமைந்திருக்கின்றன. சூடு குறைந்து விடுமானுல் உயிர் உடம்பில் நிலே பெறுவதல்லே. சூடு குறையத் தொடங்கியவுடன் சுற்றத்தார் சுற்றி அமர்ந்துவிடுகின்ருர்கள்.

சூடும் குளிர்ச்சியும் எல்லேயற்றிருக்குமானுல் உயிர்கள் அங்கு தோன்றுவதில்லே. சூடு குறைந்த, வடதுருவப் பிரதேசங்களிலும், குளிர்ச்சி குறைந்த சஹாராவிலும் உயிர்கள் இடர்ப்பட்டுத்தான் வாழ்கின்றன!

தட்பத்தின் சூக்கும ஆற்றல் திருமால்; வெப்பத்தின் சூக்கும ஆற்றல் சிவம். இந்த இரு பொருள்களும் ஒரே பொருளின் இரு பகுதிகள்.

அடியேன் 16 மாகாணங்கள் சுற்றியிருக்கின்றேன்; கடல் கடந்தும் பல நாடுகள் சென்றிருக்கின்றேன். இதுவரை நான் ஒரே பக்கமுள்ள காகிதத்தைக் கண்டேனில்லே. ஒரு பக்கமுள்ள கடிதம் எங்காவது இருக்கமுடியுமா? எத்துணே மெல்லியகடிதமாயிருப்பினும், அதற்கும் இருபக்கம் இருந்தே தீரும். ஒரு நாணயம் என்ருல் அதற்கும் இருபக்கங்கள். ஒன்று சிவம்; ஒன்று விஷ்ணு.

சிவமூர்த்தங்கள் அறுபத்து நான்கு என்று சிவாகமங்கள் கூறுகின்றன. இந்த அறுபத்து நான்கு மூர்த்தங்களில் ஒன்று கேசவார்த்தமூர்த்தி; பாதி சிவம், பாதி மால்.

சங்கரநாராயணர் திருக்கோயிலில் இந்த மூர்த்தி இன்றும் காட்சி தந்து இந்த உண்மையை உணர்த்திக் கொண்டிருக்கின்றது.

பேயாழ்வார் திருவேங்கடமலைக்குச் சென்ருர். அங்குள்ள பெருமானைக் காண்கின்ருர். ஒருபுறம் சடைமுடியும், மற்ருெருபுறம் மணிமுடியும், ஒரு கரத்தில் மழுவும், மற்ருெரு கரத்தில் சக்கரமும், ஒரு பாதியில் நாகாபரணமும், மற்ருெரு பாதியில் பொன்னுபரணமுமாக அவ்வுருவம் காட்சி தருகின்றது.

அவர் அருட்கவி, உடனே பாடுகின்ருர்:

தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும்
சக்கரமும்
சூழரவும் பொன்னுணுந் தோன்றுமால்-சூழுந்
திரண்டருவி பாயுந் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்ருய் இசைந்து.

என்ன அருமையான காட்சி! இப்பாடலின் மாட்சிதான் என்னே! பேதபுத்தியில்லாத பெருந்தகைமை!

சிவத்தை வழிபடுகின்ற சிவனடியாரை நிந்திக்கின்ற திருமாலடியாரும், திருமாலை வழிபடுகின்ற திருமாலடியாரை நிந்திக்கின்ற சிவனடியாரும், இங்கு மாறுபட்டு வேறுபட்டாலும் வெந்தீ நரகில் ஒன்றுபட்டு விடுகின்ருர்கள்.

நரகக் குழியில் இரண்டுபேருந் துள்ளித்துடித்து ''அண்ணே! உன்னை நிந்தித்து இந்தக் கதிக்கு நான் ஆளானேன்'' என்று இருவரும் அங்கு ஒற்றுமைப்பட்டு விடுவார்கள்.

அருணகிரியார் பாடுகின்ருர்:

''ஈசர்விஷ்ணுவை சேவை செய்வோர்தமை
இகழ்வோர்கள்
ஈனர் இத்தனை பேர்களும் ஏழ்நர குழல்வாரே''
—(ஓதுவித்தவர்) திருப்புகழ்.

ஆகவே அடியவர்கள் சிவநிந்தையும் விஷ்ணுநிந்தையும் புரிந்து நரக வெந்துயருக்கு இலக்காக வேண்டாம் என வேண்டுகின்றேன்.

. தட்பத்தின் நிறம் பச்சை, குளிர்ச்சியை விரும்புகின்றவர்கள் கண்களுக்குப் பச்சைக் கண்ணாடி புனைகின்றார்கள். படுக்கை வீட்டில் குளிர்ச்சியாக இருக்கும்பொருட்டு பச்சைக் கண்ணாடிக்கூடுடன் கூடிய விளக்கை எரிக்கின்றார்கள். குளிர்ந்த பயிர் பச்சைப் பசேல் என்று காட்சி தருகின்றது.

திருமாலின் நிறம் பச்சை. 'பச்சைமா மலைபோல் மேனி.'

வெப்பம் அதிகமானால் கண் சிவக்கின்றது. நெருப்பின் நிறம் சிவப்பு; சிவமூர்த்தி பவளம் போன்ற மேனியையுடையவர்.

குளிர்ச்சியான திருமால் நீரிடைத் துயில்கின்றார். வெப்பமான சிவம் மயானத்தில் நடிக்கின்றார்.

திருமால் கோயிலில் தீர்த்தப் பிரசாதம் வழங்கப்படுகின்றது. சிவாலயத்தில் வெந்த வெண்ணீறு வழங்கப் படுகின்றது. தட்பமான திருமாலுக்கு சூட்டையுண்டு பண்ணுகின்ற துளசிமாலை.

வெப்பமான சிவத்துக்கு குளிர்ச்சியைத் தருகின்ற வில்வ மாலை.

நமக்குச் சீதளம் உண்டாகி, நீர் கோத்துக்கொண்டு தொண்டை அடைத்துவிட்டால் துளசியிலையின் கஷாயத்தை தருகின்றார்கள்.

பெருநோய், தொழுநோய், மஹாரோகம் என்கின்ற கொடிய உஷ்ணவியாதியுடையோர் சிறந்த மஹாவில்வ இலையை அதிகாலையில் முறையேஉண்பாராயின், அந்நோயின் கொடுமை தணியும்.

நமது முன்னோர்கள் அமைத்த இந்த அரிய நுட்பங்களை உன்னிப் பார்த்தால் பெருவியப்புத் தோன்றுகின்றது.

மாதொருகூறன் (அர்த்தநாரி) என்று சிவமூர்த்தியை யுரைக்கின்றனர். ஒரு பாதி சிவம்; ஒரு பாதி உமை.

இதுவும் முன் கூறிய உட்பொருளை உணர்த்துவதே யாகும். இதன் விளக்கம் வருமாறு:

சிவசக்தி பேதம் நான்கு.

போர் சக்தி, கோப சக்தி, இன்ப சக்தி, புருஷ சக்தி.

போர்சக்தி—துர்க்கை
கோபசக்தி—காளி
இன்பசக்தி—உமை
புருஷசக்தி—திருமால்

இறுதி செய்திடலே சீற்றம் இன்பமே
ஆண்மை யென்ன
அறைதரு சக்தி நான்காம் அரன்தனக் கையை காளி
முறைதரு கௌரி யின்னோர் மும்மையும் பெற்றோர்
ஏனைப்
பெறலருஞ் சக்தி யான்இப் பெற்றியும் மறைகள்
பேசும்.
—கந்தபுராணம்.

இது திருமால் கூறுகின்றதாக அமைந்த திருப்பாடல்.

ஆகவே உமையின் ஒரு வடிவே திருமால். ஆண்கள் இடப்பக்கம் கீழ்வைத்துச் சயனிக்கவேண்டும். பெண்கள் வலப்பக்கம் கீழ்வைத்துச் சயனிக்கவேண்டும். திருமால் எல்லா இடங்களிலும் வலப்பக்கம் கீழ்வைத்துப் பள்ளி கொண்டிருக்கும் தன்மையை நோக்குமின். அதனால் அவர் சிவசக்தி என்பது விளங்குகின்றதன்றோ?

"அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே"
என்கின்றார் அப்பர்.

"பிறைதங்கு சடையானை வலத்தே வைத்து"
என்கின்றார் திருமங்கையாழ்வார்.

"பார்யாத்வ மார்யாபதே"
என்கின்றார் சங்கராச்சாரியார்.

சிவபெருமானே தேவர்களை நோக்கிப் பின்வருமாறு கூறுகின்றார்:

"திருமாலையும் உமாதேவியையும் வேறாக உரைப்பவர் என் அன்புக்குப் புறம்பானவர்கள். ஒன்றாக உரைப்பவர்கள் அன்புக்கு உரியவர்கள் ஆவார்கள்."

உமாதேவியையும் திருமாலையும் இகழ்பவர்கள் எரிவாய் நரகிடை வீழ்ந்து இன்னல் எய்துவார்கள்.

பூந்துழாய்ப் படலை மாலைப் பூவைவண்ணனையுஞ் செய்ய
மாந்தளிர் கவறு மேனி மலைமகள் தனையும் வேருய்
ஓர்ந்துரைப் போர் என் அன்பில் தீர்ந்தவர் ஒருவராக
வாய்ந்துணர் கிற்போர் என்றன் அன்பினில் சிறந்தாரன்றே.
*அலர்த்தகம் விளர்ப்பச் சேந்த சீறடி யம்மெல் லோதி
சிலைக்கரும் புருவ வாட்கண் உமையைவண் தேறல் கக்கும்
மலர்த்துழாய் அலங்கல் பூவை வண்ணனை இகழ்ந்துளோர்கள்
உலப்பில் நாள் எரிவாய்த்தீய நரகிடை உழப்ப ரன்றே.

—கூர்ம புராணம்.

ஒருவன் தன்னை இகழ்ந்தாலும் பொறுத்துக்கொள் வான்; தனது அன்புக்குரிய பத்தினியை இகழ்ந்தால் பொறுத்துக் கொள்ளமாட்டான். அதுபோல், சிவமூர்த்தி தனது சக்தியாகிய நாராயணரைச் சிறிதே இகழ்ந்தாலும் தண்டிப்பார். ஆகவே சிவத்துக்கு அன்னியமாகத் திரு மாலைப் பிரித்து ஓதுதல் உணர்வு ஆகாது.

தன்னை இகழ்தல் பொறுத்திடினும்
தனதிற் கிழத்தி தனை இகழின்
மன்னுஞ் சீற்றம் மிகும் எவர்க்கும்
மற்றங் கதுபோல் மாயோனை
உன்னிச் சிறிதே இகழ்ந்திடினும்
ஒறுக்கும் ஈசன் ஆதலினுல்
கன்னித் துளவோன் இறைவன் எனப்
பிரித்தோதிடுதல் கடனன்றே.

—கூர்மபுராணம்.

திருமால் அறிதுயில் புரிகின்ருர்; அம்பலவாணர் ஆனந்தக் கூத்தாடுகின்ருர். இதை நோக்க வேறு வேறு செயல்போல் தோன்றும்.

தூக்கம், ஆடல், இரண்டும் வேறு அன்று. தூக்கம் எப் போது வருகின்றது? கவலையற்ற இடத்தில் உறக்கம். முற்

---

* அலர்த்தகம்=செம்பஞ்சு:

காலத்தில் கடன் பட்டவர்கள் உறங்கமாட்டார்கள். கடனைத் தரவேண்டுமே என்று கவல்வார்கள். இப்போது கடன் தந்தவர்கள் உறங்கமாட்டார்கள்.

எனவே கவலையற்ற நிலையை உணர்த்துகின்றது திருமாலின் அறிதுயில்.

மகிழ்ச்சி மிகுந்தால் ஆட்டம். அதிக சந்தோஷம் வந்தால் ஆடுகின்றோம். களிப்பின் மிகுதியைத் தெரிவிக்கின்றது அம்பலவாணரது திருக்கூத்து.

கவலையற்ற இடமும், களிப்பு மிகுந்த இடமும் ஒன்றுதான்.

இருள் நீங்குவதும், ஒளி உண்டாவதும், வேறு வேறு சமயமா? இருள் நீங்கிய பின்னரா ஒளியுண்டாகின்றது? ஒளி வந்த பின்னரா இருள் நீங்குகின்றது? இல்லை; இருளின் நீக்கமும் ஒளியின் ஆக்கமும் ஒரே சமயந்தான்.

இருள் நீக்கம்போல் கவலையற்ற நிலை; ஒளியின் ஆக்கம் போல் களிப்புற்ற நிலை.

எனவே கவலையற்ற நிலையை மாயோன் திருப்பள்ளியும், களிப்புற்ற நிலையைச் சேயோன் திருநடனமும் நமக்கு உணர்த்துகின்றன.

திருவரங்கத்தையும் கோயில் என்ற சொல்லாலேயே கூறுவார்கள்.

பொன்னம்பலத்தையும் கோயில் என்ற சொல்லாலேயே கூறுவார்கள்.

பூவுலக வைகுண்டம்—ஸ்ரீரங்கம்.

பூவுலக கைலாயம்—சிதம்பரம்.

இரு பெருந்தலங்களுக்கும் சபை என்றுதான் பேர். அரங்கம் என்றால் சபை. அரங்கேற்று காதை என்று சிலப்பதிகாரத்தில் கூறுவதைக் கேட்டிருப்பீர்களே. புராணம் அரங்கேற்றம் என்பார்களே.

ஆகவே ஒன்று திருவரங்கம்; ஒன்று கனகசபை; இரண்டையும் பொன்னரங்கம் என்றே ஆன்றோர்கள் அழைத்துள்

ளார்கள். திருவரங்கத்தில் அரங்கராஜா: ஞானசபையில் நடராஜா.

மார்கழி வைகுண்ட ஏகாதசியில் திருவரங்கத்தில் சிறப்பு விழா; கனகசபையிலும் திருவாதிரையில் சிறப்பு விழா.

இருபெருந் தலங்கட்குஞ் சென்று சேவிக்க மாட்டாதவர்க்குச் சிதம்பரத்திலேயே ஒருசேர வைத்து, ஒரே கும்பிடு இருவருக்கும் சேருமாறு திருமால் பள்ளிகொண்டிருக்கவும் கூத்தப் பெருமான் திருத்தாண்டவம் புரியவும் அமைந்த அமைப்பு எத்துணை இன்பத்தைத் தருகின்றது. ஒருவர் நடராஜா; இன்னொருவர் கோவிந்தராஜா.

பொய்கை யாழ்வார் கூறும் புனித வாக்கையும் ஈண்டு உணர்க!

**பொன் திகழு மேனிப் புரிசடையெம் புண்ணியனும்**
**நின்றுலகந் தாய நெடுமாலும்—என்றும்**
**இருவரங்கத் தால்திரிவ ரேனும் ஒருவன்**
**ஒருவனங்கத் தென்றும் உளன்.**

ஆதலால் ஒரு பரம்பொருளின் இரு தன்மைகள் நன்மையும், நிறைவும்.

நன்மை—சிவம்
நிறைவு—திருமால்
(விஷ்ணு—வியாபகமானது)

ஒன்றில் இந்த இரண்டும் அமைந்துள்ளன.

எனவே வேற்றுமை யுணர்ச்சியின்றி ஒன்றில் இரண்டையும் பார்த்து ஒன்றுபட்டு, உலகம் உய்வுபெறுக!

## 33. உயர்ந்த ஒரு வழி

மனிதர்களாகிய நாம் மனதை யுடையவர்கள்; மனம் சிந்திக்குங் கருவி; கை செய்யுங் கருவி; அதனால் தெலுங்கில் கை செய்யென்றே வழங்குகின்றது; கால் நடக்குங் கருவி; வாய் பேசுங் கருவி: காது கேட்குங் கருவி; கண் காணுங்

கருவி; ஆனல் கண் காணவேண்டியதைக் காணவேண்டும்: காது கேட்க வேண்டிய இனிய அரிய நல்ல கேள்விகளைக் கேட்கவேண்டும்; வாய் உண்மையை இறைவனுடைய அருட் புகழையே பேசவேண்டும். உண்ணுகின்ற வாயை வாய் என்று பெரியோர் கூறுவதில்லை. ஒரு கூடை தவிடு, ஒரு படி பருத்திக்கொட்டை, ஒரு கட்டு புல் உண்டு ஒரு தொட்டிக் கழுநீரைக் குடிக்கின்ற அகண்ட பெரிய வாயையுடைய மாட்டை வாயில்லாத பிராணி என்கின்றோம். அதிக தீனி யுண்ணுகின்ற யானையும் வாயில்லாத பிராணிதானே. ஆகவே பேசவேண்டியவைகளைப் பேசுகின்ற வாயே வாய்.

"கடியேறு மலரோனைக் கடுஞ்சிறையில் வைத்துப்
படியாதி எவ்வுயிரும் படைத்தருளும் பிரானை
முடியாத முதலோனை மூவர் பெருமானை
வடிவேலன் தனைப்பேசா வாயென்ன வாயே
வள்ளி மணாளனைப் பேசா வாயென்ன வாயே!"

என்று மாயூர புராணத்தில் மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை யவர்கள், அவருக்கென்றே உரிய அரிய தமிழ் இன் னுரையால் கூறுகின்றனர்.

கைகளால் தான தருமம் புரியவேண்டும். வறியவர்க்கு உதவி புரியவேண்டும். நல்ல திருத்தொண்டுகளைக் களையா மல் செய்யவேண்டும்; கொடுத்துக் கொடுத்துக் கை நீள வேண்டும்; சிலருக்குக் கை வேறு வகையில் நீளுகின்றது!

'தருகை நீண்ட தயரதன்' என்று கம்பநாடர் கூறு கின்றார். தசரதனுக்குக் கரம் கொடையினுல் நீண்டதாம்.

முருகப்பெருமானுடைய திருவுருவத்தைக் குறிக்க வந்த ஆதிசங்கரர் கூறுகின்றார்:

'புஜே சௌர்ய தைர்யம் கரே தானதர்மம்'

முருகனுடைய கரங்களில் தான தருமங்கள் குடியிருக் கின்றன என்பது இதன் பொருள். சீதக்காதி என்ற ஒரு உத்தமனுடைய கரங்கள் ஈந்து சிவந்தனவாம். 'ஈந்து சிவந் தது சீதக்காதியின் இரு கரமே!" என்பது படிக்காசுப் புலவ ருடைய வாக்கு. இரண்டு கரங்களாலும் அள்ளித் தருவான்

என்பது சிந்தனைக்குரியது. "கரே தஸ்ய க்ருத்யம்" என்கின்றார் மற்றொரு பாடலில். கைகள் ஆண்டவனுடைய பணிகள் புரியவேண்டும்.

இதுபோல் மனம் நினைக்கவேண்டியதை நினைக்க வேண்டும். நற்சிந்தனையுள்ள மனமே நன்மனம்.

இறைவனுடைய பெருங் கருணையை இடையறாது நினைக்கவேண்டும். அவ்வண்ணம் நினைப்பதன் பயன் யாது? அப்பனுடைய அளவற்ற கருணையை ஆழமாக நினைக்கும் போது கருங்கல்லினும் திண்ணிய மனம் உருகும். நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந்து உருகினால் சண்முகன் தஞ்சத்து அருள் புரிவான். "உருகும் அடியவர் இருவினை இருள் பொரும் உதய தினகர" என்கின்றார் அருணகிரிநாதர். 'உருகும் அடியார் இருவினைத் தொகை யறுக்குமவன்' என்பது பூத வேதாள வகுப்பு. "ஆமாறுன் திருவடிக்கே அகங்குழையேன் அன்புருகேன்" என்றும், "கலந்த அன்பாகிக் கசிந்துள் உருகும் நலம்" என்றும் கூறுகின்றார் மணிவாசகர்.

இறைவனுடைய கருணையை எண்ணினால் எந்தக் கருங் கல் மனந்தான் உருகாது. உலகிலே சிறிய உதவிகளைச் செய்தவர்களை நினைத்தாலே நெஞ்சம் நெகிழ்கின்றது. இறைவன் தாயினும் சாலக் கருணை புரிகின்றான். தாய் இப் பிறவிக்கு மட்டும் உரியவள்: இறைவன் பிறவிகள் தோறும் தாயாக விளங்குகின்றான். "தொடர்ந்து நின்ற தாயானை" என்கின்றார் அப்பரடிகள்.

இறைவனுடைய கருணை ஆயிரம் ஆயிரம் வகையாக அமைந்திருக்கின்றது. அவற்றுள் ஒன்று இரண்டு நினைவு கூர்வாம்.

இந்த உடம்பை அருமையிலும் அருமையாக ஆக்கித் தந்தனன். இந்த உடம்புக்குள் எத்தனை எத்தனை வகையான நுண்ணிய கருவிகள்! இவற்றையெல்லாம் நாமே படைத்துக் கொள்ள இயலுமா?

நாம் தாய் வயிற்றில் இருந்தபோது நமக்கு இறைவன் உணவு தந்துளான். பெற்ற பின்னர் தாய் பால் தருகின்றாள். கருவில் உள்ள குழவிக்கு அவளால் உணவுதர இயலாது.

"கருப்பைக்குள் முட்டைக்கும் கல்லுக்குள்
தேரைக்கும்
விருப்பொடு உணவளிக்கும் ஈசன்"
என்கின்றார் ஔவையார்.

ஈயறியாப் பசுந்தேனே எழுத்தறியா மறைப்பொருளே
காயறியாச் செழுங்கனியே கற்பகத்தின்
பசுங்கொழுந்தே
தாயறியாக் கருவிலிருந் தமுதூட்டுந் தாய்த்துணையே
நீயறியாச் செயலுளதோ நிகில பரம்பர மூர்த்தி!"
என்பது திரிகூடராசப்பக் கவிராயருடைய தென்றமிழ் வாக்கு.

கருவில் உள்ள குழந்தைக்கு இறைவன் உணவு ஊட்டுவதற்குச் சான்று, பிறந்தவுடன் அக்குழவி கருமையாக மலம் போடுகின்றது. அதைக் காட்டுமலம் என்பார்கள்.

அன்றியும் அக் குழவி பிறக்குமுன் தாய்க்கு இரு தன பாரங்களில் பால் சுரக்க அருள்புரிகின்றான்.

சைகிள், மோட்டார், பஞ்சாலை முதலிய இயந்திரங்கட்கு அடிக்கடி கிரீஸ் போடுகின்றார்கள். இல்லையேல் அவைகள் எளிதாக இயங்கா. நமது உடம்பில் முழங்கால்கள், முழங்கைகள், மணிக்கட்டுகள், விரல்கள் இவைகளின் இடையே யார் 'கிரீஸ்' விடுகின்றார்கள்? இவைகள் பிறந்தநாள் தொட்டு இறக்கும்வரை வளைந்து வளைந்து எளிதாகத் தொழில்புரிய, ஒருவகைப் பசை அவைகளுக்குள் உண்டாகுமாறு இறைவன் அமைத்திருக்கின்றான். இந்தக் கருணையை நாம் நினைக்கின்றோமா? இவ்வண்ணம் இறைவன் அருளவில்லையானால் இந்தக் கைகளால் நாம் ஒரு வேலை செய்ய முடியுமா? நடக்க முடியுமா? இருக்க முடியுமா? நன்கு சிந்தியுங்கள். அவன் கருணையை நினைக்க வேண்டாமா? நினைத்து உருகவேண்டாமா?

கள்ளுருகு மலர்மணம்போல் கலந்தெங்கும்
கலந்தோய்நின் கருணைக்கு அந்தோ
முள்ளுருகும் வலியபராய் முருடுருகும்
உருகாத முறைசேர் கல்லும்

வள்ளுருகும் மலையுருகும் மண்ணுருகும்
　　மரமுருகும் மதியி லேன்தன்
உள்ளுருகும் வகையிலை என் செய்கேன் நான்
　　ஏன் பிறந்தேன் ஓதிய னேனே.

என்று இராமலிங்க அடிகளார் கூறும் இந்த இனிய பாடலைப் பலமுறை படியுங்கள். எத்துணை உணர்ச்சியில் இந்தப் பாடல் எழுந்தது என்று சிந்தியுங்கள்.

இறைவனுடைய கருணைத் திறத்தில் மற்றொன்றைக் கூறுகின்றேன்.

இந்த உடம்பை அமைத்து அதில் உயிரையும் தங்குமாறு அமைத்துள்ளார். ஒன்பது ஓட்டைக்குள் பிராணவாயு சென்று சென்று திரும்புகின்றதே? இது யார் செய்த திறம்? நாம் பிராணவாயுவை விடும்போது மீளவும் அதனைக் கவன மாகவா உள்ளுக்குச் செலுத்துகின்றோம்? உரையாடும் போதும் உறங்கும்போதும் தொழில் புரியும்போதும் அந்த மூச்சு சென்று சென்று திரும்புகின்றதே! வெளிப்பட்ட மூச்சு அப்படியே போய்விடலாந்தானே! அவன் அருளால் அல்லவா அது பெயர்ந்தும் உடலுக்குள் மீளுகின்றது. மூச்சும் பேச்சும் அவன் அருளால் இயங்குகின்றன. பரம கருணாநிதியாகிய எம்பெருமான் நம்மை வாழ்விக்கும் பொருட்டு இந்தப் புன்புலால் யாக்கையுள் தானும் புகுந்து இருந்து இதனை இயக்கிக்கொண்டிருக்கின்றான். அதனால் அவன் இயவுள் எனப்படுகின்றான்.

"புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
　　பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலா முருக்கி எளியையா யாண்ட
　　ஈசனே மாசிலா மணியே."

என்ற திருவாசகத்தைப் படியுங்கள்.

இன்னும் ஒரு திருக்கருணையை நினையுங்கள்.

இந்த உடம்பை ஆண் பெண் இருபாலார்கட்கும் வேறு வேறு விதமாகவே உலகந் தோன்றிய நாள்தொட்டுப் படைக்கின்றார். ஒருவர் முகம்—மூக்குப்போல் மற்றொருவ

முகம்—மூக்கு இல்லை. ஐந்து கண்டங்களிலும் உள்ள முன்னூறுகோடி மக்களுக்கும் வேறு வேறு வடிவ அமைப்பை அமைத்தார். இதற்கு என்ன காரணம்? நன்கு ஊன்றி உன்னுங்கள்.

ஒரு வேட்டி புடைவை நெய்கின்றவன் எத்தனை விதங்கள் அமைக்க முடியும்? இறைவன் வேறு வேறு முகச்சாயல் அமைக்கவில்லையானால் மனித வாழ்க்கை புனித வாழ்க்கையாக அமைய முடியுமா? எல்லாப் பெண்களுக்கும் ஒரே மாதிரியான முகமிருந்தால், அவரவர்கள் தத்தம் மனைவியை வேறு பிரித்து அறிந்து ஒழுக்கமாக வாழ இயலுமா? அவ்வண்ணமே மகளிர் தத்தம் கணவன் என்று அறிந்து கற்பு நெறியுடன் வாழ்க்கை நடத்த முடியுமா? வேட்டிகளைத் தூய்மைப்படுத்தும் ஏகாலி உடைகளுக்குச் சில குறியீடு போட்டு வைப்பான், அவரவர் உடைகளை அவரவர்பால் சேர்க்கும் பொருட்டு. இல்லையேல் ஒருவருடைய ஆடை மற்றொருவர்பால் செல்லும். அதனால் சுகாதாரங்கெடுமன்றோ? உடையை மாற்றியுடுத்ததனால் சுக்கிரருடைய மகள் தேவயானைக்கும் இடபபன்மனுடைய (விருஷபர்வா) மகள் சர்மிஷ்டைக்கும் பெரிய கலகம் வந்து இடர்ப்பட்ட வரலாறு மகாபாரதத்தில் வருகின்றது.

அதுபோல், பார்த்த மாத்திரத்தில் 'இவள் நம் மனைவி' 'இவர் நம் கணவர்' என்று அறிந்து வாழ்வதற்காகவே வேறு வேறு உருவ மாறுபாடுகளை இறைவன் அமைக்கின்றான். உலகந் தோன்றிய நாள் தொட்டு உலகம் ஒடுங்குகின்றவரை தோன்றுகின்ற அத்தனை பேருக்கும் வேறு வேறு அச்சு மாற்றிப் படைக்கின்ற இறைவனுடைய பேராற்றலையும் பெருங்கருணையையும் நினைந்தால் உள்ளம் மட்டும் உருகாது; எனபும் உருகும்.

திருமூலர் கூறுகின்றார்:

அன்புள் உருகி அழுவன் அரற்றுவன்
என்பும் உருகி இராப்பகல் ஏத்துவன்
என்பொன் மணியை இறைவனை ஈசனைத்
தின்பன் கடிப்பன் திருத்துவன் தானே.

"என்புருக இனவேல் நெடுங்கண்கள்
இமை பொருந்தா பலநாளும்"

என்கின்றார் ஆண்டாள் அம்மையார்.

"தூராத மனக்காதல் தொண்டர் தங்கள்
குழாங்குழுமித் திருப்புகழ்கள் பலவும்பாடி
ஆராத மனக்களிப்போ டமுத கண்ணீர்
மழைசோர நினைந்துருகி ஏத்தி நாளும்
சீரார்ந்த முழவோசை பாவை காட்டும்
திருவரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்
போராழி யம்மானைக் கண்டு துள்ளிப்
பூதலத்தில் என்றுகொலோ புரளும்
நாளே."

என்கின்றார் குலசேகர ஆழ்வார்.

உள்ளம் உருகி உணர்வு உருகி ஊன் உருகி என்பும் உருகினால் கண்ணீர் ஒரு துளி இருதுளியாகவா வரும்? ஆறுபோல் பெருகும். பட்டினத்துச் சுவாமிகள் கூறும் இந்த அரிய பாடலைப் பாருங்கள்:

நீறார்த்தமேனி உரோமஞ் சிலிர்த்துளம் நெக்குச்
சேறாய்க் கசிந்து கசிந்தே யுருகிநின் சீரடிக்கே
மாறாத் தியானமுற் றானந்தமேற் கொண்டு
மார்பிற்கண்ணீர்
ஆறாய்ப் பெருகக் கிடப்ப தென்றோ
கயிலாயத்தனே.

தாயுமானார் இதுபற்றி வருந்திக் கூறுகின்றார்;

"கல்லேனும் ஐய ஒருகாலத்தில் உருகும்என்
கல்நெஞ்சம் உருகவிலையே"
"என்பெலாம் நெக்குடைய ரோமஞ் சிலிர்ப்ப உடல்
இளக மனது அழலின் மெழுகாய்
இடையறாது உருக; வருமழைபோல் இரங்கியே
இருவிழிகள் நீர் இறைப்ப
அன்பினால் மூர்ச்சித்த அன்பருக்(கு) அங்ஙனே
அமிர்த சஞ்சீவிபோல் வந்து

ஆனந்த மழை பொழிவை உள்ளன்பிலாத எனை
யார்க்காக அடிமை கொண்டாய்?"

"அங்கைகொடு மலர்தூவி அங்கமது புளகிப்ப
அன்பினுல் உருகி விழிநீர்
ஆருக"

இறைவனிடத்தில் நாம் ஏதேதோ வேண்டும் என்று குறையிரந்து வேண்டுகின்ருேம்.

பொன் வேண்டும், பொருள் வேண்டும், வீடு வேண்டும், மாடு வேண்டும், பதவி வேண்டும், உதவி வேண்டும் என் றெல்லாங் கேட்கின்ருேம். எதைக் கேட்க வேண்டும் என்று நமக்குத் தெரியவில்லை. மேற் கூறியவையெல்லாம் இந்திர ஜாலம்போல் கனவு நிலைபோல் தோன்றி மறையக் கூடிய வைகள்தாமே. அவைகளால் நமது ஆன்மாவுக்கு என்ன பயன்? எத்தனை செல்வமிருந்தாலும் உண்பது நாழி, உடுப் பது நான்கு முழந்தானே? பல வீடுகள் இருப்பினும் படுப்பது ஆறடி இடத்தில்தானே?

நெசவுத் தொழில் செய்கின்ற ஒருவன் காட்டில் சென்று கடவுளை நோக்கித் தவஞ் செய்தான். அவன் கடுந்தவத் துக்கு இரங்கிக் கடவுள் தோன்றினுர். "அன்பனே! உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கடவுள் வினவினுர். அறி வில்லாத அந்த அசடன், "சுவாமி! எனக்கு எட்டுக் கைகள் வேண்டும்" என்ருன். கடவுள் சிரித்து, "ஏனப்பா! உனக்கு எட்டுக் கைகள் எதற்கு?" என்று வினவினுர். "தெய்வமே! நான் நெய்கின்றவன். எட்டுக் கரங்கள் இருந்தால் ஒரே சமயத்தில் நாலு புடவைகள் நெய்வேன். அதிக வருவாய் வரும், என வறுமை தீரும்" என்ருன். கேட்ட வரந் தரு கின்ற ஆண்டவன் அவ்வண்ணமே தந்து மறைந்தனர்.

எட்டுக் கரங்களும் ஒரே உடம்பில் இருப்பதால் ஒரு புடவைதான் நெய்ய முடியும் என்பதை அந்த மந்த மதியாளன் உணரவில்லை.

எட்டுக் கரங்கள் அவனுக்கு முளைத்தன. அவன் ஊருக்கு வந்தான். அவனைக் கண்ட ஊரவர், "இவன் ஒரு அரக்கன் போலும்; எட்டுக் கரங்களால் நமக்கு இடர்புரிவான்" என்று

கருதி அஞ்சி, எல்லோரும் ஒன்று கூடி தடி எடுத்து அடித்து அவனைக் கொன்று போட்டார்கள்.

அம் மூடன் வாங்கிய வரம் அவன் உயிருக்கு இறுதியைத் தந்தது. இப்படி நாம் விபரீதமான வரங்களைக் கேட்கக் கூடாது. பொன்னும் பொருளும் ஒரு அளவில் இருந்தால் சரி, அளவுக்கு அப்பால் போனல் அவை பெருந் துயரைத் தரும்.

* * *

குளிப்பதற்கு ஒரு ஆறு அல்லது குளத்தில் தண்ணீர் இருக்கவேண்டும். மார்பளவு இடுப்பளவு இருந்தால் அபாயம் இன்றிக் குளிக்கலாம். ஆனல் மிகுந்த ஆழமாக இருந்தால், அந்த நீரே நம்மைக் கொல்லுமல்லவா?

* * *

ஞான சூரியராக விளங்கிய அருணகிரிநாத சுவாமிகள் முருகனிடம் வரம் கேட்கின்றார். எதனைக் கேட்டார்? இதோ பாருங்கள் அவர் கேட்ட வரம்:

"முருகன் குமரன் குகன் என்று மொழிந்
துருகுஞ் செயல்தந் துணர்வென் றருள்வாய்?"
"மலர்ப் பதத்தினில் உருகவும் இனியருள்
புரிவாயே"

"இறைவனே! இளம்பூரணனே! உனது திருவடியை நினைந்து என்றும் உள்ளம் உருகுமாறு அருள்புரிவாய்" என்பதுதான் வரம்.

இவ்வாறு முதலில் ஊன் உருகி உள்ளம் உருகி உணர்வு உருகி என்பு உருகினல் இறுதியாக நம் உயிர் உருகும். இது தான் இறுதிநிலை. இறைவன் உயிர்க்கு உயிராய் விளங்கு கின்றான். நன்கு கவனியுங்கள்.

ஒரு தங்கத்தின்மீது ஒரு இரத்தினக்கல் இருக்கின்றது. அத்தங்கம் உருகினல் அம் மணி தங்கத்தில் நன்கு அழுந்திப் பதிந்து கொள்ளும். அதுபோல் நமது உயிராகிய தங்கத்தின் மீது இறைவனுகிய இரத்தின மணி விளங்குகின்றது. உயிர் உருகியவுடன் இறைவன் அந்த உயிரில் ஒன்றுபட்டுவிடு கின்றான். "நீராயுருக்கி என் ஆருயிராய் நின்றானே" என்று

இந்தக் குறிப்பை மாணிக்கவாசகப் பெருமான் நமக்கு உப தேசிக்கின்றார்.

"உள்ளம் உருகின் உடனுவர் அல்லது
தெள்ள அரியரென் றுந்தீபற
சிற்பரச் செல்வரென் றுந்தீபற"

என்பது திருவுந்தியார் திருவாக்கு.

"வெள்ளந்தாழ் விரிசடையாய் விண்ணோர்
பெருமானே எனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தா ழுறுபுனலில் கீழ்மே லாகப்
பதைத்துருகு மவர்"

"வேனில்வேள் மலர்க்கணைக்கும் வெண்ணகைச் செவ்வாய்க்கரிய
பானலார் கண்ணியர்க்கும் பதைத்துருகும் பாழ்நெஞ்சே
ஊனெலாம் நின்றுருகப் புகுந்தாண்டான் இன்றுபோய்
வானுளான் காணாய்நீ மாளாவாழ் கின்றாயே."

என்ற திருவாசத் திருப்பாடல்களைப் படியுங்கள்.

எனவே, நாம் இறைவனுடன் இரண்டறக் கலந்து இடை யறாத பேரின்பத்தைப் பெறுவதற்கு **உயர்ந்த ஒரு வழி,** இறை வனுடைய திருவருளை நினைந்து உள்ளம் முதலிய அனைத்தும் உருகி நிற்றலாம்.

## 34. வளைந்தோர் உயர்வார்

வளைந்த பொருள்களுக்கு ஒரு தனியான மதிப்பும், அழ கும் உண்டாகின்றன. உயர்வு வளைவில் விளைகின்றது.

1. புருவம் நேராக இருந்தால் அழகாக இராது. வில்லைப்போல் வளைந்த புருவம் எத்துணை அழகாக இருக் கின்றது!

2. வளைந்த யாழில்தான் என்ன என்ன மதுரகானங்கள் எழுந்து செவியில் புகுந்து உள்ளத்தைக் கொள்ளை கொள்ளு கின்றன!

3. தலைமயிர் நேராக இருந்தால் அழகு செய்யாது; வளைந்து வளைந்து, கடல் அலைபோல் சுருண்டு இருந்தால் அழகு செய்கின்றது.

4. நதி வளைந்து வளைந்து ஓடுகின்ற பொழுது எவ்வளவு அழகாக விளங்குகின்றது.

5. பூத்து வளைந்த கொடிகளைக் கண்டு மகிழாதார் யார்?

6. ஒரு பெண் நெட்டையாக நின்றால் விகாரமாக இருக்கும். சிறிது இடையைச் சாய்த்து, தலையைச் சற்று வளைத்து நின்றால், பார்வதி தேவியை யொத்திருப்பாள்.

7. நேராகத் தொங்கவிடும் பூமாலை அழகு செய்யாது; வளைத்துவிட்ட பூமாலைதான் மிகுந்த அழகு செய்கின்றது.

8. இராகங்கள், நேராக ஆரோகண அவரோகணமாக ஏறி இறங்குவதைவிட, இடைஇடையே வளைந்துவளைந்து சஞ்சாரஞ் செய்கின்றபோது, உயர்ந்த இனிமையுண்டாகின்றது.

9. வளைந்திருக்கின்ற நடராஜமூர்த்தியின் குஞ்சித பாதம், அகில லோகங்களையும் வாழ்விக்கின்றதன்றோ?

10. ஒரு கருத்தை நேர்முகமாகக் கூறுவதைவிட, வளைத்து மறைமுகமாகக் கூறுகின்றபோது, கருத்தின் உயர்வு நனி சிறப்பு அடைகின்றது.

அறிவில்லாத கீழ் மக்கள் நட்பு தீயது என்று கூறக் கருதின திருவள்ளுவர், அப்படிக் கூறினால் கேட்பவர்கள் மனதில் ஆழமாகப் பதியாது என நினைத்து, பொருள் சுவை கலந்து வளைத்துக் கூறுகின்றார். "அறிவு சிறிதும் இல்லாதவர்களுடைய நட்பு மிகவும் இனிமையானது" ஏன்? "அவர்கள் கூடிப் பிரியும்போது கவலையிராது; ஆதலின் தீயவர் நட்பு இனிமையானது" என்றார். எத்துணை இனிமை தருகின்றது இந்தத் திருக்குறள் என்று சிந்தியுங்கள்.

பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கண்
பீழை தருவதொன் றில்.

இந்தப் பத்து எடுத்துக் காட்டுக்களால் வளைவின் உயர்வை ஒருவாறு சிந்தித்தோம்.

இனி இளமையில் சிறுவர்—சிறுமிகள் அடக்கமாகப் பணிவுடன், உடம்பாலும் உள்ளத்தாலும் தாழ்வு என்ற தன்மைக்கு உரைகல்லாக வளைந்து வளர்வாராயின் (இப்படிக் கூறுவதனால் உடம்பைக் கூனலாக என்று கருதக் கூடாது), அவர்களது மேன்மை என்றென்றும் இமயமலை போல் நிமிர்ந்து நிற்கும். பணிவு என்ற ஒன்றே எல்லா நலன்களையுந் தரும்.

"காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங் கில்லை உயிர்க்கு"

என்ற திருக்குறளின் உயர்ந்த கருத்தை உன்னுக.

இளமையில் நன்றாக வளைத்துத் துன்புறுத்தியபோது வளைந்த மூங்கில், அரசன் ஏறிவரும் பல்லக்கில், அம் மன்னனுடைய மணி மகுடத்திற்குமேல் உயர்ந்து சிறப்புறுகின்றது. அவ்வாறு வளையாத மூங்கில், மூங்கிலை வீதியில் நட்டு வித்தை காட்டும் கூத்தாடியுடன் ஊர் ஊராய் அலைந்து, அவன் காலின் கீழ் மிதிபட்டு இழிவை யடைகின்றது.

வருத்தவளை* வேய் அரசர் மாமுடியின் மேலாம்
வருத்த வளையாத மூங்கில்-தரித்திரமாய்
வேழம்பர் கைப்புகுந்து மேதினியெல் லாந்திரிந்து
தாமுமவர் தம்மடிக்கீழ் தான்.

ஆதலின், இளமையில், பெற்றோரிடத்திலும் ஆசிரியரிடத்திலும் பணிவுடன் வளைந்து கல்வி பயின்ற பிள்ளைகள், உலகம் போற்ற இன்புற்று உயர்ச்சியுறுவர். வீட்டிலும், வெளியிலும் வளையாமல் திரிந்த பிள்ளைகள், கல்வியறிவும் நல்லொழுக்கமும் இன்றி வாழ்நாள் முழுவதும் துன்புற்று இகழ்ச்சியுறுவர்.

---

* வேய்—மூங்கில், வேழம்பர்—கழைக்கூத்தாடிகள்.

## 35. எல்லாம் ஈசன் செயல்

முருகப்ப செட்டியார் உப்பு வியாபாரி. சிறந்த சிவ பக்தர். சதா திரு ஐந்தெழுத்தை ஓதிக்கொண்டே இருப்பார். மாலையில் சிவாலயம் போவார். திருமுறைகளை ஓதுவார். "கைலாச நாதா, கருணைக் கடலே, தேவதேவா, மகாதேவா, நீலகண்டமூர்த்தி, என்னைக் காத்தல் நின் கடன்" என்று துதி செய்வார்.

சந்தைகள் தோறும் மாடுகள்மீது உப்பு மூட்டைகளை ஏற்றிக் கொண்டுபோய் விற்பார். அவர் மிகுந்த ஏழையுமன்று; பெரும் பணக்காரருமன்று. ஏதோ ஒரு சிறு முதலை வைத்து வியாபாரம் புரிந்து அதனால் வரும் வருவாயைக் கொண்டு, தன்னால் முடிந்தமட்டும் தானம் தருமம் புரிந்து கொண்டு, குடும்பத்தைக் கண்ணியமாக நடத்தி வந்தார். தன் வீட்டை நாடி வந்தவர்க்கு அன்னமும் நீரும் வழங்கி உபசரிப்பார். நல்ல பண்பும், நண்பும் உடைய அவர் இவ்வாறு இனிது வாழ்ந்தார்.

ஒருநாள் மாடுகளின்மீது உப்பு மூட்டைகளை ஏற்றிக் கொண்டு எட்டு மைல்களுக்கு அப்பால் உள்ள சந்தைக்குப் போய் வியாபாரம் செய்தார். அன்று அதிகமாக உப்பு விற்கவில்லை. பகுதிதான் விற்பனை நடந்தது. மீதி உள்ள உப்பு மூட்டைகளை மாடுகளின்மீது திரும்பவும் ஏற்றிக்கொண்டு, உடன் உள்ள வியாரிகளுடன் புறப்பட்டு தன் ஊருக்கு வந்து கொண்டிருந்தார். வரும்போது சிவபுராணம் பாராயணஞ் செய்து கொண்டே வந்தார்.

திடீர் என்று கருமேகங்கள் எழுந்து கனமழை கொட்டியது. மாடுகள் மீதுள்ள உப்பு மூட்டைகளெல்லாம் கரைந்துவிட்டன. முருகப்ப செட்டியார் மிக்க வருந்தி, 'சிவபெருமானே! ஏழைபங்காளா! இது என்ன சோதனை? ஆண்டவனே! உன்னைச் சதா தியானித்து வழிபடுகின்ற எனக்கு இப்படி நஷ்டத்தைக் கொடுக்கலாமா? ஐயோ! நான் என்ன செய்வேன்? கண்ணுதற் கடவுளே! உனக்குக் கருணையில்லையா? பரம கருணாநிதி! இவ்வாறு என்னைத்

துன்பத்துக்கு ஆளாக்கலாமா? இது தருமமா? இது முறையா?'' என்று சலித்துக் கொண்டார்.

சிறிது தூரம் வந்தவுடன் நல்ல இருள் சூழ்ந்து கொண்டது. மூன்று கள்வர்கள் புதரில் ஒளிந்திருந்தார்கள். வியாபாரிகள் அங்கு வந்ததும் திடீர் என்று புலிபோல் வெளிப்பட்டு, தங்கள் கையிலிருந்த துப்பாக்கியை எடுத்து இவர்களைச் சுடுவதற்கு முயன்றார்கள். மழையில் நனைந்துவிட்டபடியால் துப்பாக்கி வெடிக்கவில்லை. திருதிரு என்று திருடர்கள் விழித்தார்கள். வியாபாரிகள் ஆறு பேர்களும் துப்பாக்கியை நீட்டியவுடன் உயிர் போய்விட்டது என்று அஞ்சி ஒடுங்கி நின்றார்கள். மழையில் நனைந்து துப்பாக்கி செயல் அற்றவுடன், வியாபாரிகள் திருடர்கள்மீது பாய்ந்தார்கள். கள்ளர்கள் துப்பாக்கியை போட்டுவிட்டு ஓடி விட்டார்கள்.

வியாபாரிகளுக்கு உயிர் திரும்பியது. முருகப்ப செட்டியார், 'தெய்வமே! சற்றுமுன் உப்பு கரைந்து போனதற்கு உம்மீது சலித்துக் கொண்டேனே? மழையில்லாவிடில் துப்பாக்கி குண்டுகள் எங்கள்மீது பாய்ந்து, பொருளும் உயிரும் நீங்கியிருக்கும். உப்புக் கரைந்தாலும் உயிர் கரையாமல் இருந்தது நல்லது' என்று கடவுளைத் துதி செய்தார்.

இம் மழையினால் 2 நாட்கள் ஆற்றில் வெள்ளம் வடியவில்லை. அதனால் வெளியூரிலிருந்து உப்பு வரவில்லை. முருகப்ப செட்டியார் வீட்டில் வைத்திருந்த உப்பு மூட்டைகள் நல்ல லாபத்திற்கு விற்றன; அதனால் நனைந்த உப்பின் நஷ்டம் தேறிவிட்டது. முருகப்ப செட்டியார் எப்போதும் முன்போல் இறைவனைத் துதித்துக்கொண்டும், தான தர்மங்களை நடத்திக் கொண்டும் சுகமாக வாழ்ந்திருந்தார்.

## 36. ''காவல்காரன்''

மூவர் தேவாதிகள் தம்பிரான் முருகப் பெருமான். ஆயிரம் மறைகளாலும் துதிக்கப் பெற்ற தெய்வசிகாமணி குமாரக் கடவுள்.

"மறை ஆயிரங்களும் குமரகுரு எனவலிய
சேடன் அஞ்ச வந்திடு வோனே"

என்கின்றார் அருணகிரிநாதர்.

"படைத் தளித்தழிக்குந் த்ரிமூர்த்திகள்
தம்பிரானே".

"தேவர் சொர்க்க சக்கிரவர்த்திப் பெருமாளே"
– திருப்புகழ்.

இத்தகைய பரம்பொருள், தன்னையே நம்பி வணங்கும் உத்தமமான அடியார்கட்குக் காவல்காரனாக வந்து அருள் புரிகின்றான்.

"தொழுது வழிபடும் அடியர் காவல்காரப் பெருமாளே" என்பது பழநித் திருப்புகழ்.

பழநியிலே "முருகநாதன்" என்பவர் சிறந்த முருகனடியார். அவர் நடுத்தரமான வாழ்வில் வாழ்ந்தார். மிகப் பெரிய தனவந்தருமன்று; மிகுந்த ஏழையுமன்று. பழநியப்பனிடத்தும், பழநியாண்டவனுடைய அடியார்களிடத்தும் ஆழ்ந்த அன்பு பூண்டவர்.

தன்னால் முடிந்த மட்டும் பிறருக்கு உதவி புரிவார். நாள் தோறும் மலையேறி ஞானதண்டாயுதபாணியை உள்ளம் உருகி வழிபடுவார்.

இத்தகைய அன்பர், யாத்திரை செய்யவேண்டும் என்று கருதினார்.

"மூர்த்தி தலந் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர் வார்த்தை சொல்லச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே" என்றபடி க்ஷேத்திர தீர்த்த யாத்திரை செய்து, பாவ விமோசனம் பெற்று, பிறவிப் பெரும் பயனையடையுமாறு நினைந்தார்.

தன் வீட்டில் பிள்ளைபோல் வளர்த்த ஒரு பணியாளனைக் காவலுக்கு வைத்துவிட்டு, மனைவியுடன் ஆறுபடை வீடுகளையுந் தெரிசிக்குமாறு சென்றார்.

ரங்கன் என்ற அவன் அவரிடம் இளமையிலிருந்து வளமையாக வளர்ந்தவன். முருக நாதருடைய வீட்டில்

தனியே யிருந்தான். அவன் மனதில் சூதும் வாதும் குடி புகுந்தன. முருகநாதருடைய வீட்டில் உள்ள உடைமைகளைக் கவர்வதற்கு என்ன வழி? என்று ஆலோசித்தான். தானே எடுத்தால் உலக நிந்தைக்கு ஆளாக நேரும். ஒரு கள்ளன் மூலமாகக் கவர்ந்துவிட வேண்டும் என்று கருதித் திட்டம் இட்டான்.

பழநிக்கு அருகிலே உள்ள ஒரு மலையடிவாரத்தில் குள்ளன் என்ற கள்ளன் வாழ்ந்தான். அவனிடம் போய், "நீ இன்றிரவு (முருகநாதருடைய வீட்டு அடையாளஞ் சொல்லி) தோட்டத்துப் பக்கம் வா. நான் கதவைத் திறந்து, களவுக்கு உளவாக உதவி செய்வேன். நீ திருடிக் கொண்டு போ. பிறகு திருடியதில் எனக்குப் பாதி கொடு" என்றான்.

அவன் பஞ்சாமிர்தஞ் சாப்பிடுவது போல் நினைத்து, 'அப்படியே ஆகட்டும்' என்றான்.

அன்றிரவு 12 மணி. எங்கும் ஒரே நிசப்தம். மரங் களில் ஆந்தைகள் மட்டும் கீச்கீச் என்று கத்திக்கொண் டிருந்தன. இருள் சூழ்ந்து, உலகம் முழுவதும் மாயையில் முழுகியிருந்தது.

கள்ளனாகிய குள்ளன் புறப்பட்டான். எதிரில் அரவங் குறுக்கிட்டது. மெல்லப் பழநியம்பதியை யடைந்தான். பக்தமணியாகிய முருகநாதருடைய இல்லத்தின் தோட்டத் தின் பக்கம் வந்து நின்றான்.

ரங்கன் பின் கதவைத் திறந்தான். கள்ளன் உள்ளே நுழைந்து திருட முயன்றான். பழநியாண்டவர் இதனைத் திருவுளம் பற்றினார். பிள்ளைபோல் வளர்த்த ரங்கன் உதவி யால் நம் அன்பன் வீட்டில் கொள்ளை நடக்கிறது. அன்ப னைக் காப்பது நம் கடமை என்று திருவுள்ளத்துக் கருணை யால் நினைந்த எம்பிரான் ஞான தண்டாயுதபாணி, ஒரு சுக்குமாந்தடியுடன் கரிய திருமேனியுடன், திரண்டு உருண்ட புயத்துடன், மானிடச் சட்டை தாங்கி வந்தருளித் தெருக் கதவைத் தடதட என்று தட்டினார்.

கள்ளனும் ரங்கனும் பதறி விட்டார்கள். ரங்கன் "யார் கதவு தட்டுவது?" என்று கேட்டான். "நான், முருக நாதர் ஆள். ஐயா ஒரு அவசரத்தகவல் அனுப்பியுள்ளார். கதவைத்திற" என்று அதட்டினுர் தண்டாயுத பாணி.

உடனே ரங்கன், கள்ளனைப் பஞ்சு மெத்தையில் தலையணைபோல் சுருட்டி ஒரு மூலையில் சாத்திவிட்டு, வந்து கதவு திறந்தான்.

தடியுடன் உள்ளே நுழைந்த அந்த வீரன், "ஐயா! என்னை இந்த வீட்டு முதலாளி அனுப்பினுர். உனக்கு ஒரு தகவல் சொல்லச் சொன்னுர். அவர் இப்பொழுது திருச்செந்தூரில் இருக்கின்ருர். என்ன? எல்லாஞ் சுகந்தானே. உன்னைப்போல உத்தமமான ஒரு பணியாளன் ஐயாவுக்குக் கிடைத்தது நிரம்ப அதிர்ஷ்டம். நீ உண்டவீட்டுக்கு இரண்டகம் பண்ணுத தங்கமான மனிதன். ஆ! ஆ! உனக்கு எத்தனை விசுவாசம். ஐயா இன்னும் இருமாதங்கள் கழித்துத்தான் வருவார். உன்னை எச்சரிக்கையாக இருக்கச் சொன்னுர். ஐயா படுக்கின்ற படுக்கையில் மூட்டைப் பூச்சியிருந்ததாம். அதை நன்ருகத் தட்டி வைக்கச் சொன்னுர்" என்று கூறி, மெத்தையைச் சுருட்டிய வண்ணந் தூக்கி வாசலில் தொப் என்று போட்டு, கையில் இருந்த சுக்குமாந்தடியால் நையப்புடைத்தார்.

கள்ளனுடைய எலும்புகள் நிலைகுலைந்தன. கருணையால் அவன் உயிர் போகாமல் அடித்து, "ரங்கன்! எல்லாம் சரியாகிவிட்டது. எடுத்துப் படுக்கையை உள்ளே வை. நான் வருகிறேன்" என்று கூறித் திருவுரு மறைந்தருளினுர்.

கதவைத் தாளிட்டு வந்து ரங்கன் படுக்கையைப் பிரித்தான். கள்ளன் அவசமாகக் கிடந்தான். அவன் வாயில் தண்ணீர் வார்த்து உபசரித்தான். விடிந்தபின் மெல்ல அவனை அகற்றினுன்.

கள்ளன் உடம்பு மெல்ல மெல்லத் தேறியது, பிறகு ஒரு நாள் ரங்கன் போய், "இன்று வா, நாம் நமது காரியத்தை முடிக்கலாம்!" என்ருன்.

அதுபடியே கள்ளன் நள்ளிரவில் வந்தான். ரங்கன் தோட்டத்துக் கதவைத் திறந்தான். கள்ளன் உள்ளே வந்தான்.

"தட தட" என்று தெருக்கதவைத் தட்டும் சத்தம் எழுந்தது.

ரங்கன் கள்ளனை நெல் கொட்டும் குதிருக்குள் இறக்கி விட்டுக் கதவைத் திறந்தான். முன் வந்த அதே ஆள் ஏழு வண்டிகளில் நெல் கொணர்ந்து வந்திருப்பதைக் கண்டு திடுக்கிட்டான்.

"ஐயா! வீட்டு முதலாளி நெல் பிடித்து அனுப்பியுள் ளார். குதிரிலே கொட்டச் சொன்னார்" என்று ஒவ்வொரு அட்டையாகத் தூக்கிக் குதிரில் கொட்டலானார் வேலர். கள்ளன் நெல்லடிபட்டுத் துன்புற்றான். விடிகின்றவரை பழநியாண்டவர் நெல் அட்டைகளை கூடத்திலும் பிற இடங் களிலும் அடுக்கிவிட்டுச் சென்றார்.

ரங்கன் ஏணி வைத்துக் கள்ளனை இறக்கினான். கள்ளன் தப்பித்து ஓடி ஒளிந்தான்.

மறுநாள் முருகநாதர் இல்லத்தை யடைந்தார். எங்கும் நெல் மயமாக இருப்பதைக் கண்டார். ரங்கனைக் கேட்டார். "நீங்கள்தானே அனுப்பினீர்கள்" என்றான். இது பழநியப்ப னுடைய திருவிளையாடல் என்று எண்ணி "என்னையனே! என்னையும் ஒரு பொருளாகக் கருதி என் இடர் கெடுக்க வந்தனையோ?" என்று துதித்துத் தொழுதார்; அழுதார். ஆதலால், இளம்பூரணன் தன் அடியார்க்குக் காவற்காரனாக வந்து திருவருள் புரிவான்.

வாழ்க திருவருள்! வெல்க குருவருள்.

## 37. திருநாவுக்கரசர்

உலகங்கள் பல; அவைகளில் வாழும் உயிர்களும் எண்ணில்லாதன.

மக்களைப் பிரிவினை செய்பவர், ஆண் பெண்; கற்றவர் கல்லாதவர்; பணக்காரர் வறியவர்; என்று பிரித்துக் கூறுவார்கள்.

அகில லோகத்திலும் உள்ள உயிர்கள் அனைத்தையும் இரண்டாகப் பிரிக்க வேண்டுமாயின் எப்படிப் பிரித்துக் கூறுவது? உயிர்கள் என்றால் மனிதன் ஆடு மாடு புலி எலி ஆனை பூனை பாம்பு பல்லி தேவர் சித்தர் இப்படி எத்தனையோ வகைப்பட்ட உயிர்கள் இருக்கின்றன. அவைகள் அத்தனையும் ஒருங்கே வைத்துச் சிந்தித்து ஆன்றோர்கள் இரு பகுப்பாகப் பிரித்தார்கள்.

ஒன்று நாவினால் பேசுகின்ற உயிர்கள்; மற்றொன்று நாவினால் பேசாத உயிர்கள். பேசுகின்ற உயிர்கள் உயர் திணை; பேசாத உயிர்கள் அஃறிணை.

உயர்வு தாழ்வு என்றுதான் கூறுவது மரபு. தாழ்திணை என்று கூறவேண்டும். தாழ்ந்தவனைத் தாழ்ந்தவன் என்று கூறினால் அவன் மனம் வருந்தும். பிறர் மனம் நோகப் பேசுவது கருணையாகாது. ஆகவே உயர்வு அல்லாத திணை என்ற பொருளில் அஃறிணை யென்றார்கள்.

உயிர்களில் உயர்வு எதனால் வருகின்றது? வாய் திறந்து பேசுவதனால் வருகின்றது. மனிதன் பேசுகின்றான். அதனால் உயர்திணை யாகின்றான்.

மனிதனைவிட வலிமையுடையவை சிங்கமும் புலியும், மனிதனைவிடச் செய் தொழிலில் வல்லவை சிலந்தியும் வான் குருவியும், மனிதனைவிட நன்றியறிவுடைய நாயும்; இவை அனைத்தும் அஃறிணைகளே.

ஆகவே உயர்வு, வலிமையாலும், தொழிலாலும், அழகாலும் இல்லை; பேச்சினால் அமைகின்றது. பேசுவது வாயன்று. நா

மனிதனுடைய நாக்கு மென்மையாக வளைந்து தரும் இயல்புடையது. அதனால் மனிதன் இனிது பேசுகின்றான். நாவிலே நீர் ஊறியவண்ணம் உளது. சொல் இனிமையாக அமையவேண்டும். **எனவே உயர்வு நாவினால் ஏற்படுகின்றது.**

ஒவ்வொரு தொகுதிக்குந் தலைவன் வேண்டும். ஒவ்வொரு கட்சிக்குந் தலைவர்கள் இருக்கின்றார்கள். தலைவனை அரசன் என்பது மரபு.

| | | | |
|---|---|---|---|
| 1 | பர்வதங்கட்கு அரசன் | (இமவான்) | **மலையரசன்.** |
| 2 | மரங்களுக்கு அரசு | | **அரசமரம்.** |
| 3 | நாகங்களுக்கு அரசு | (ஆதிசேடன்) | **நாகராஜா.** |
| 4 | யானைகட்கு அரசு | (ஐராவதம்) | **கஜராஜா.** |
| 5 | தேவர்கட்கு அரசன் | (இந்திரன்) | **தேவராஜா.** |
| 6 | தியாகிகட்கு அரசன் | | **தியாகராஜா.** |
| 7 | பறவைகட்கு அரசு | (கருடன்) | **பட்சிராஜா.** |
| 8 | விலங்குகட்கு அரசு | (சிங்கம்) | **மிருகராஜா.** |
| 9 | நதிகட்கு அரசு | (கடல்) | **சமுத்திரராஜா.** |
| 10 | அகில உலகங்களிலும் உள்ள நாவுகட்கெல்லாம் அரசு | | **திருநாவுக்கரசர்.** |

இங்கே சிந்திக்கவேண்டியது ஒன்றுளது. குருநாதர் ஒருவர் உளர் என்றால், அறிவில்லாத ஒருகோடி மூடர்கட்குக் குரு என்றால், அவருக்குச் சிறப்பு கிடையாது.

பண்டிதர்களான பதினாயிரம் சீடர்கட்குக் குரு என்று இருத்தலே பெருமை.

அதுபோல் வெறும் நாவுகட்கு அரசு அன்று; சீரும் சிறப்பும் பொருந்திய திருநாவுகட்கு அரசர் ஆதலால் **திருநாவுக்கரசர்.**

உலகம் எப்பொழுது தோன்றியதோ? தெரியாது. கோடிக் கணக்கான யுகங்களாக உலகம் உளது. இந்த உலகங்கள் பல. அவைகளில் உள்ள உயிர்கள் எண்ணத் தொலையாதன. அந்த வுயிர்களில் உயர்ந்தவை உயர்திணை. உயர்திணையில் வெறுநாவுடையவர் பலர். திருநாவுடைய வர்கட்கெல்லாம் அரசராக ஒருவரே யமைந்தார். அவர் தான் தென் தமிழ்நாட்டில் திருவாமூரில் பழந்தமிழ்க் குடியில் புகழனுருக்கும் மாதினியாருக்கும் அருந்தவப் புதல்வராக அவதரித்த **மருணீக்கியார்** என அறிக.

இவருக்குத் திருநாவுக்கரசர் என்று பட்டந் தந்தது யார்? ஒரு சங்கத்தார் அன்று; அவருடைய சீடர்களன்று. அகிலவுலக நாயகராகிய சிவபெருமானே திருநாவுக்கரசு என்று அழைத்தார்.

எத்தனையோ கோடி உலகங்களில், கோடானு கோடி உயர்திணையான உயிர்கட்கெல்லாம் இவர் ஒருவரே அரசர் என்று சகலலோகநாயகன் கூறினுன் எனில், திருநாவுக்கரசரது பெருமை ஏட்டிலும் பாட்டிலும் அடங்குமோ?

அதனுல்தான் சேக்கிழார் பெருமான்,

"திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டின் நெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மைநெறி
பெருநாமச் சீர்பரவ லுறுகின்றேன் பேருலகில்
ஒருநாவுக் குறைசெய்ய எண்ணுமை யுணராதேன்."

என்று வியந்து அயர்ந்து நிற்கின்ருர்.

தேனுகத் தித்திக்கின்ற வாக்குடையவர் திருநாவுக்கரசர். அவருடைய திருவடியை மறவாமல் சிந்தித்தால் நமக்கு நாவன்மை யுண்டாகும்.

காலால் நடக்கும் நாம், நாவாலும் நடக்கவேண்டும்.

"நாமேல் நடவீர் நடவீர் இனியே"

என்கின்ருர் அருணகிரியார்.

அப்பர் பெருமான் அமுதவாக்கில் இருந்து வந்த தேனினும் இனிய செந்தமிழ்ப் பாடல்களில் ஒன்று இங்கே தருகின்றேன்.

தேனேக்கும் கிளிமழலை உமைகேள்வன்
செழும்பவளந்
தானேக்கும் திருமேனித் தழலுருவாம் சங்கரனை
வானேக்கும் வளர்மதிசேர் சடையானை
வானேர்க்கும்
ஏனேர்க்கும் பெருமானை என்மனத்தே வைத்தேனே.

கிளி கொஞ்சுவதுபோல் என்பார்கள். எம்பெருமாட்டி உமாதேவியார் கிளிபோல் கொஞ்சிக் கொஞ்சிப் பேசுவார்.

பெரிய இசை வித்வான்கள் பாடினால் இளம் இசைவாணர்கள் ஒருபுறம் இருந்து நோக்குவார்கள். ஏன்? இசை நுணுக்கங்களைத் தாமும் உணரும் பொருட்டு.

தித்திக்கின்ற சுவைப் பொருள்களுக்கெல்லாம் அரசாகிய தேன், உமையம்மையின் பேச்சினை ஒருபுறம் ஒதுங்கி நின்று நோக்குகின்றதாம். உமையம்மையாரின் மொழியில் உள்ள இனிமையைக் கண்டு வியந்து நிற்கின்றது தேன். எனவே, தேனினும் இனிய செஞ்சொல்லையுடையவர் தேவியார். இத்தகைய உமையின் கேள்வன் சிவபெருமான். எந்தப் பொருளும் சிவப்பாக இருந்தால் அழகாக இருக்கும். சிவப்பு நிறமுள்ள பெண்மணியையும் சிவப்புநிறமுள்ள ஆடவனையும் உலகம் விரும்பும்.

சிவப்பு நிறத்திற்கு அரசு பவளம். அந்தப் பவளம் வந்து பார்க்கின்றதாம் சிவபெருமானுடைய திருமேனியை; பவளத்திலும் மேலான சிவந்த திருமேனி.

"செழும்பவளந் தானோக்குந் திருமேனித்
தழலுருவாம் சங்கரன்."

சம்—சுகம். கரன்—செய்கின்றவன்; சுகத்தைச் செய்கின்ற தெய்வம் சிவமூர்த்தி.

வீட்டிலேயுள்ள இல்லறத்துக்குரிய மனைவிமார்கள், இம் மண்ணுலகத்திற்கு நாங்கள் துணைபுரிவோம் என்ற குறிப்பினைக் காட்டத் தலையில் நிலாப்பிறைபோல் நிலம்நோக்கிய வண்ணம் மலர்சூடிக் கொள்வார்கள்.

சிவபெருமான், நான் விண்ணுலகத்திற்குத் துணைபுரிவேன் என்று உணர்த்திய வண்ணம், வானோக்கிய நிலாவையே முடியில் சூடியுள்ளார். அது தேய்மதி யன்று; வளர்மதியாகும்.

"வானோக்கும் வளர்மதிசேர் சடையானை"

"அவர் வானோர்க்கும் ஏனோர்க்குந் தலைவன்". அப் பரமனைப் பலர் கட்டிச் சுருட்டிக் கக்கத்தில் வைப்பர். கருத்தில் வையார். அவர்கள் பட்டப் பகலை இரவென்று கூறிடும்

பாதகர்கள் ஆவார்கள். ஆதலால் அடியேன் அப்பரமனை என் மனத்தே வைத்தேன். நெஞ்சகமே கோயிலாக அவரை வைத்திருக்கின்றேன்.

“நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம் அன்பு
மஞ்சன நீர் பூசைகொள்ள வாராய் பராபரமே”

என்றபடி அப்புனித நாயகனை என் உள்ளத்தில் வைத்திருக்கின்றேன் என்கிறார் திருநாவுக்கரசர்.

என்ன இனிய வாக்கு! கனியமுதமன்ன கரும்பினும் தித்திக்குந் தெய்வீக வாக்கு!

## 38. பட்டினத்தார்

அறம் இரண்டு வகைப்படும். ஒன்று இல்லறம்; மற்றொன்று துறவறம்.

இந்த இரு அறங்களில் எது சிறந்தது என்ற வினாவும் எழும். இதற்குத் தாயுமானார் விடை கூறுகின்றார். “எல்லாம் இறையருளாலே நடைபெறுகின்றன; என் செயலால் யாதொன்றும் நிகழமாட்டா” என்று தன்மயமற்றுச் சிவமயமாக நிற்பாராயின் இல்லறமும் துறவறமும் இரண்டும் உயர்ந்தனவே என்றார்.

சாட்டையில் பம்பர சாலம் போலிறை
ஆட்டுவான் உலகெலாம் அறிந்து நெஞ்சமே
தேட்ட மொன்றற அருட் செயலில் நிற்றியேல்
வீட்டறந் துறவறம் இரண்டும் மேன்மையே.

துறவறநெறியில் நின்று முத்தி பெற்றவர்களில் தலை சிறந்தவர் பட்டினத்துச் சுவாமிகள்.

“பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப்
பிள்ளையைப்போல்
ஆருந் துறக்கை அரிது அரிது.”

என்கின்றார் அநுபூதிமானாகிய தாயுமானார்.

உலகிலே பலர் துறந்து போகின்றார்கள். ஆனால் அவர்கள் துறப்பதில்லை. துறக்கப்படுகின்றார்கள். கடன்பட்டுத்

துறப்பாரும், கொலை செய்து மாறுவேடம் பூண்பதற்காகத் துறப்பாரும், மனைவியின் கொடுமைக்கு ஆற்றாது துறப்பாரும் பலர் உண்டு. உண்மைத் துறவிகள் மிகமிகச் சிலரே.

ஒன்பதுகோடிப் பொன்னையும், பொருளையும், இளம் மனைவியையும், மாடமாளிகையையும், நிலபுலங்களையும் விடுத்து, ஒரு கணத்தில் துறந்தவர் பட்டினத்துச் சுவாமிகள். அவருடைய பாடல்கள் மிக்க அரும் பெரும் உண்மைகளை உணர்த்துவன.

விட்டேன் உலகம் விரும்பேன் இருவினை வீணருடன்
கிட்டேன்; அவர்உரை கேட்டும் இரேன்;
மெய்கெடாதநிலை
தொட்டேன்; சுகதுக்கம் அற்றுவிட்டேன்; தொல்லை
நான் மறைக்கும்
எட்டேன் எனும்பரம் தானே வந்தென்பால்
எய்தியதே.

இப்பாடலை உற்று நோக்குங்கள். அடிகளாருடைய நன்னிலை நன்கு விளங்கும்.

பட்டினத்துச் சுவாமிகள், காவிரிப்பூம்பட்டினத்திலே சைவ வேளாண் செட்டி மரபில், சிவநேசகுப்தருக்கும் ஞானகலையம்மைக்கும் மகனாக அவதரித்தவர். திருவெண் காடர் என்பது இவருடைய திருப்பெயர். இளமையிலே கல்வி கேள்விகளில் சிறந்தவராக விளங்கினார். தாயிடம் அளவற்ற அன்பு பூண்டு ஒழுகினார். அளவற்ற நிதிகளுடன் பெரிய வாணிபம் புரிந்து வாழ்ந்தார். இறைவன் மகன் முறையில் வந்து,

''காதற்ற ஊசியும் வாராது காணுங் கடைவழிக்கே''

என்று எழுதிய ஓலையைக் கொடுத்து மறைந்தருளினார்.

அதனைப் படித்த மாத்திரத்தில் அத்தனையும் துறந்து, கடுந்துறவியாகச் சென்றார். தாய்க் கருமங்களை மெய்யன் புடன் புரிந்தார். மந்திரி சேந்தனை வேந்தன் சிறையிலிட் டான். பட்டினத்துச் சுவாமிகள் ஒரு பாடலைப் பாடி சேந் தனாரைச் சிறையிலிருந்து விடுவித்தார்.

வடநாட்டில் உஜ்ஜைனியைப் பத்ரகிரி என்ற மன்னவன் ஆண்டுவந்தான். சுவாமிகள் வடநாட்டு யாத்திரை செய்த போது அங்கு விநாயகர் கோயிலில் அமர்ந்து நிஷ்டானுபூதியில் தன்னை மறந்திருந்தார்.

மன்னவனுடைய அரண்மனையில் பொன்னும், முத்துங் கவர்ந்துகொண்டு சென்ற கள்வர்கள், ஒரு முத்துமாலையை விநாயகருடைய கழுத்தில் வீசிச் சென்றார்கள். இருளில் அது பட்டினத்தார் கழுத்தில் விழுந்தது.

காவலர்கள், இவரைக் கள்வன் என்று மன்னனிடம் காட்டினார்கள். பத்ரகிரி மன்னன் அவரைக் கழுவில் ஏற்றுமாறு கட்டளையிட்டான். சேவகர்கள் அடிகளாரைக் கழுமரத்தின் அருகில் கொண்டுபோய் நிறுத்தினார்கள்.

அடிகளார் கழுமரத்தைப் பார்த்துப் பாடுகின்றார்:

என்செயலாவது யாதொன்றும் இல்லை இனித் தெய்வமே
உன்செயலே யென்று உணரப் பெற்றேன் இந்த ஊன்எடுத்த
பின்செய்த தீவினை யாதொன்றும் இல்லை; பிறப்பதற்கு
முன்செய்த தீவினையோ இங்ஙனே வந்துமூண்டதுவே.

என்று பாடினார். பாடி முடிந்தவுடன் கழுமரம் எரிந்து விட்டது.

அதுகண்ட பத்ரகிரி மன்னன் அவருடைய சீடனாக ஆனான். திருவிடைமருதூரில் அவனுக்கு முத்தி கிடைத்தது.

ஒருநாள், பட்டினத்துச் சுவாமிகள், ஊருக்கு வெளியில் பயிர் அறுவடையான ஒரு வயலில், வரப்பின்மீது தலை வைத்துச் சயனித்துக் கொண்டிருந்தார்.

சிறு பெண்மணிகள் நீர் எடுக்க அவ்வழி சென்றார்கள். ஒரு பெண் மற்றொரு பெண்மணியைப் பார்த்து,

"கமலா! துறவியிருந்தால் இப்படித்தானே யிருக்க வேணும். கோடீச்சுரனாகப் பஞ்சுமெத்தையில் படுத்திருந்த இவர் இன்று அறுத்த வயலில் படுத்திருக்கின்றாரே? கடுந் துறவி."

"விமலா! இவர் சிறந்த துறவிதான்; ஆனால் துறவு நிலை இன்னும் பூர்த்தியாகவில்லை. சிறிது குறைவு இருக்கிறது."

"கமலா! என்ன குறை?"

"விமலா! முன் பஞ்சுத் தலையணைமீது தலை வைத்திருந் தார். இப்போது வரப்பின்மீது தலைவைத்திருக்கின்றார். தலை யணையைத் துறந்தாரேயன்றித் தலைக்கு உயரம் வேண்டும் என்ற எண்ணத்தைத் துறக்கவில்லை."

இதனை அடிகளார் கேட்டார். அப்பெண்மணி கூறுவது உண்மைதானே. எம்பிராட்டி உமாதேவியார் அவளை உப தேசிக்குமாறு செய்தாள் என்று எண்ணி, வரப்பின்மீது தலை வைக்காமல் நடுவயலில் படுத்தார்.

நீர் முகந்துகொண்டு திரும்பி வருகின்றபோது பார்த் தார்கள்.

"கமலா! இப்போது பார்த்தனையா? முன் ஏதோ கூறி னாயே? துறவில் சிறிது குறைவு இருக்கின்றது என்றனையே. வரப்பின்மீது தலை வைத்திருக்கின்றார் என்றனையே. இப்போது நடுவயலில் படுத்திருக்கின்றார்."

"விமலா! துறவு நிலை பூர்த்தியாகிவிட்டது. ஆயினும் இன்னும் ஒரு அணுவளவு குறையுளது."

"கமலா! என்ன குறை?"

"விமலா! நம்மைப்பற்றி மக்கள் என்ன பேசுகின்றார்கள் என்று காதுகொடுத்துக் கேட்டுக் கொண்டிருக்கின்றார். ஊரவர் பேச்சைக் கேட்கும்வரை துறவு பூரணமாகாது" என்றாள்.

"பட்டினத்துச் சுவாமிகள் இதனையுங் கேட்டார். தலை யிலே ஒருதட்டுத் தட்டிக்கொண்டார். கண்ணீர் ததும்பியது. அப்போது,

"வித்தாரமும் கடம்பும் வேண்டா மடநெஞ்சே
செத்தாரைப் போலே திரி"

என்று பாடினார்.

பல தலங்கள் சென்று தரிசித்தார். ஆங்காங்குள்ள இறைவனைப் பாடினர். திருவொற்றியூரில் அவருக்குப் பேய்க் கரும்பு இனித்தது. அங்கு சிவலிங்கமாக எழுந்தருளினர்.

## 39. கச்சியப்ப சிவாச்சாரிய சுவாமிகள்

முத்தித்தலங்கள் ஏழனுள் ஒன்று **காஞ்சி**. தொண்டை நன்னாட்டிற்குத் திலகமாக விளங்குவது. செந்தமிழ்க்கு வரம்பாக விளங்குவது அத்தலம். திருக்குறிப்புத் தொண்ட நாயனரும், சாக்கிய நாயனரும் அவதரித்த தலம். இத் தலத்தைப் பற்றி முழுமுதற் கடவுளாம் முருகப் பெருமானே திருஞானவல்லியாகிய வள்ளியம்மையாரிடத்துப் புகழ்ந்து கூறுகின்றனர்.

"தரையிடங் கொளும் பதிகளில் காஞ்சியந்
தலம்போல்
வரையிடங்களிற் சிறந்தது தணிகைமால் வரையே"

இனி, சிவஞான போத மாபாடிய ஆசிரியர் மாதவச் சிவஞான யோகிகள் இருந்து, இங்குத் தவம் செய்து, இத் தலத்திற்குச் சிறந்ததொரு புராணம் பாடுவாராயின், இத்தலத்தின் பெருமை அளவிடற் கரியதன்றே?

இத்தகைய காஞ்சிமாநகரில் **காளத்தியப்ப சிவாச்சாரியர்** என்பவர் இருந்தனர். இவர் ஆதிசைவர் மரபில் தோன்றினவர். கல்வி கேள்விகளில் சாலவும் சிறந்தவர். இவர் **குமரகோட்டம்** என்னும் திருக்கோயிலில் அருச்சகராக இருந்தனர். நெடுங்காலம் மகப்பேறு இன்றி வருந்தினர். குமாரக் கடவுளை வேண்டிப் பற்பல விரதங்களை அனுஷ்டித்தனர். அவர் செய்த தவத்தின் பயனாகக் குமாரக்கடவுளின் திருவருளினல் அவருக்கு ஒரு திருமைந்தர் அவதரித்தனர்.

அம் மைந்தருக்குக் **கச்சியப்பர்** என்ற திருநாமம் சூட்டப் பெற்றது. விளையும் பயிர் முளையிலே என்றவாறு இவர் இளமையிலே வளமையாகக் கல்வி பயின்றனர். வடமொழி தென்மொழி என்ற இருமொழிகளிலும் வல்லவராகி, இரு கண்களைப் பெற்றவரைப்போல் விளங்கினர். நற்றவர்

போற்றும் கற்றவராய் நின்ற அவருக்கு, வாய்மை, தூய்மை. பொறுமை, பெருமை, அன்பு, அமைதி, அடக்கம் முதலிய இனிய குணங்கள் அணிகலன்களாகத் திகழ்ந்தன. வேதம், ஆகமம் என்ற பொது சிறப்பு நூல்களிலும், இலக்கண இலக்கியங்களிலும் வல்லவராகவும், நல்லவராகவும் விளங்கினுர்.

சமய தீக்ஷை பெற்று தேவார திருவாசகங்களை ஓதினுர். பின்னர் விசேஷ தீக்ஷையும், நிர்வாண தீக்ஷையும், ஆச்சார்ய அபிஷேகமும், பெற்றுக்கொண்டார். குமரகோட்டத்தில் எழுந்தருளியுள்ள குமாரக் கடவுளை மெய்யன்புடன் பூசித்து வந்தார்.

ஒருநாள் அவர் கனவில், மூவரும் தேவரும் அறியாத முழு முதற் பொருளாம் முருகவேள் தோன்றி, "அன்பனே! கந்த புராணத்து ஆறு சங்கிதைகளுள், சங்கர சங்கிதையின் முதற் கண்டமாகிய சிவரகஸ்ய கண்டத்தினுள்ள நமது சரித்திரத் தைத் தமிழில் விரித்துப் பெருங்காவியமாகப் பாடுக; அதற்குக் **கந்தபுராணம்** என்று பெயரிடுக" என்று கட்டளை யிட்டருளினுர்.

கச்சியப்ப சிவாச்சாரியர் கனவில் கந்தவேளைக் கை தொழுது, "கருணைக்கடலே! வேதங்களும் காணுத தேவரீ ருடைய புராணத்தைச் சிறியேன் எங்ஙனம் பாடுவேன்" என்று கூறினுர். முருகவேள், **"திகட சக்கரச் செம்முகம் ஐந்துளான்"** என்று அடி எடுத்துக் கொடுத்துப் பாடுகின்ற வன்மையும் தன்மையும் வழங்கி அருளினுர்.

கனவுதெளிந்து எழுந்த கச்சியப்பர், இறைவன் திருவருளை நினைந்து நினைந்து கண்ணீர் மல்கி, உள்ளங் கசிந்து, "செவ்வேட் பரமனே! நின் திருவருள் இருந்தவாறு என்னே! நலமொன்றும் இல்லாத நாயினேனையும் ஒரு பொருள் படுத்தித் தக்கார் பலர் இருக்க, தேவரீர் புராணத்தை எளி யேனைப் பாடுமாறு பணித்தருளினீரே! மாற்றம் மனம் கழிய நின்ற மறையோனே! ஆற்றலில்லா அடியேனுக்கு ஆற்றலை அளித்தால், ஆணையின் வண்ணம் அப்பணி புரிவேன்" என்று கூறி அப்பணியை மேற்கொண்டார். நாள்தோறும் முதல் வன் புராணத்தைப் பாடிய ஏட்டையும், எழுத்தாணியையும்

இரவு பூஜை முடிந்தபின் குமரகோட்டத்து முருகவேள் திருவடியின்கீழ் வைத்துவிட்டு, திருக்கதவம் சாத்தி, திருக்காப்பிட்டுக்கொண்டு தமது இல்லம் போவார். மறுநாள் காலையில் திருக்கோயிலைத் திறந்து ஏட்டை எடுப்பார். அதில் சில திருத்தங்கள் செய்திருப்பதைக் கண்டு பெருமகிழ்ச்சியுறுவார்.

இவ்வாறு பலநாட்கள் முயன்று கந்தபுராணத்தைப் பாடி முடித்தனர். குமரகோட்டத் திருகோயிலுள் அதனை அரங்கேற்றத் தொடங்கினர். நானுபக்கங்களிலுமுள்ள சிவனடியார்களும், நற்பெரும் புலவர்களும், வேதவேதாங்க பாரங்கதர்களும், மன்னர்களும், பெருஞ் செல்வர்களும், அன்பர்களும் மலரில் வண்டினங்கள் மொய்ப்பதுபோல் வந்து கூடினர்கள். திருவீதிகளை அலங்கரித்தார்கள்.

கச்சியப்பசிவாச்சாரியார் குமரகோட்டத்துமுருகவேளைப் பூசித்து அவர் திருமுன் மெழுகி, பீடமிட்டு, அதன்மேல் பட்டை விரித்து நறுமலர்களைத் தூவித் தூபதீபம் காட்டிக் கந்தபுராணத் திருமுறையை அதன்மீது வைத்து அருச்சித்து ஆராதனை செய்து அஞ்சலி புரிந்து வழிபட்டனர். பின்னர் அதனை எடுத்து **"திகட சக்கரச் செம்முகம் ஐந்துளான்"** என்னும் முதற் செய்யுளை ஒருமுறை வாசித்தனர். அதற்குப் பொருள்கூறும் முகத்தால் "திகழ் தசக்கர செம்முகம் ஐந்து உள்ளான்" என்று பதப்பிரிவு செய்துகொண்டு, "விளங்குகின்ற பத்து திருக்கரங்களும், செவ்விய ஐந்து திருமுகங்களும் உள்ள சிவபெருமான்" என்று பொருள் விரித்தார்.

அங்கிருந்த தமிழ்ப் புலவர்களுள் ஒருவர் "திகழ் தசம், திகடசம் என்று புணர்வதற்குத் தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களுள் விதி இல்லையே? ஆகவே இதற்குத் தக்க சமாதானம் கூறுதல் வேண்டும்" என்றார்.

கச்சியப்பர், "ஐயா! தாங்கள் கூறியது நியாயமே. இம் முதல் அடி அடியேனுடைய வாக்கன்று. செந்தமிழ்க் கடவுளாம் செவ்வேட்பரமனுடைய திருவாக்கு; அப்பெருமானே இம் முதலடியை அடியேனுக்கு அருளிச் செய்தார்" என்

றனர். அப் புலவர் புன்முறுவல் செய்து, "முருகன் மொழி யாயினும் அதற்கு ஓர் இலக்கணம் இல்லையாயின் நாங்கள் எவ்வாறு ஒப்புக்கொள்வோம். ஆகவே இதற்கோர் ஞாயம் காட்டினல் அன்றி இப்புராணம் அரங்கேற்றுதல் கூடாது" என்று மறுத்தனர். அத்துடன் அன்று புராண அரங்கேற்றம் நின்றது. அவையிலுள்ளோர் அனைவரும் பெரும் அலக்கண் உற்றனர். இது எவ்வாறுகுமோ என்று வருந்தினர்கள். ஊர் முழுவதும் இது சம்பந்தமான பேச்சாகவே இருந்தது.

கச்சியப்பசிவாச்சாரியர் செவ்வேளை தியானித்து, "தேவ தேவா! நின் திருப்புராணத்தின் அரங்கேற்றம் தடைப்பட் டதே. நின் திருவருள் யாதோ? சிறியேன் என்செய்வேன்?" என்று துதித்து, அன்று முழுவதும் உணவு உட்கொள்ளாமல் முருகனைப் பூசித்து, அன்றிரவு கோயிலுக்கு முன் தரையில் படுத்து, கண்ணீர் வடித்து உறங்கினர். அவர் கனவில் கந்த வேள் தோன்றி "அப்பனே! நாளை அரங்கேற்றந் தொடங்கு வாயாக. நாம் அங்கு வந்து தடைக்கு விடை பகர்வோம்" என்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினர்.

மறுநாள் குமரகோட்டத் திருக்கோயிலுக்கு முன் அமைத்துள்ள பந்தரில் அவை கூடியது. அவையின் நடுநாய கமாக கச்சியப்ப சிவாசாரியார் வீற்றிருந்தனர். வினவை எழுப்பிய புலவரும் எதிரில் அமர்ந்திருந்தனர். சிறிது நேரம் அவையில் அமைதி நிலவியது. ஒரு புலவர் ஒரு புத்தகத் தோடு அங்கு வந்து நின்று, "சபையோர்களே! இப்புத்தகம் வீரசோழியம் எனப்படும். இதில் சந்திப்படலத்தின் 18-ம் செய்யுளில் "திகட சக்கரம்" எனப் புணருவதற்கு விதி உளது" எனக்கூறி, அதைப் படித்துக்காட்டி, அப்புத்தகத் தைத் தந்து "ஐயம் அகன்றதா?" என்று கேட்டு, உடனே மறைந்தருளினர்.

கச்சியப்பசிவாச்சாரியாரும் அவையினரும் அதிசயமுற்று, புலவராக வந்தவர் முருகக் கடவுளே என்று உணர்ந்து அழலிடைப்பட்ட மெழுகுபோல் உருகி உரோமம் சிலிர்த்து ஆனந்தக் கண்ணீர் வடித்து, சிர மலர்மேல் கரமலர் கூப்பித் துதித்துப் பரவசம் அடைந்தார்கள்.

சபையிலுள்ளோர் கச்சியப்பரை பன்முறை பணிந்தார் கள். வினு எழுப்பிய புலவர் சிவாச்சாரியாரை நன்முறை யுடன் பன்முறை தொழுது, "சுவாமி! தேவரீருடைய பெரு மையை அறியாத நாயினேன் புரிந்த பெருங் குற்றத்தை மன்னித்தருள வேண்டும்" என்று வேண்டி நின்ருர். கச்சி யப்ப சிவாச்சாரியார் அவரைத் தழுவி, "அன்பு கெழுமிய நண்பரே! தங்களால் முருகனுடைய திருவருள் வெளிப்பட் டது. ஆதலால் தாங்கள் வினவியது திருவருளின் செயலே யாகும். வருந்தற்க" என்று கூறி ஆறுதல் செய்தார்.

புலவர்கள் அனைவரும், "இனி புராண அரங்கேற்றம் நிகழுவதாக" என்று விண்ணப்பித்தார்கள். அன்று முதல் நாள்தோறும் புராண அரங்கேற்றம் நிகழ்ந்துவந்தது. அரங் கேற்றத்தில் கலந்துகொள்ளும் அந்தணர்களுக்கும், அடியார் களுக்கும், வறியவர்களுக்கும், தொண்டை நாட்டு இருபத்து நான்கு கோட்டத்துள்ள பெருமக்கள் அன்னதானம் முதலி யன செய்து உபசரித்தார்கள்.

அரங்கேற்றம் ஓராண்டு நடந்து முடிவுபெற்றது. கந்த புராணத் திருமுறையை, விதிப்படி அருச்சித்து வழிபட்டார் கள். ஆசிரியரையும், அவ்வண்ணமே வழிபட்டார்கள். புராணத்தையும், கச்சியப்ப சிவாச்சாரியரையும், தந்தச் சிவி கையில் எழுந்தருளப் புரிந்து, வெண்சாமரம் இரட்டியும், வெண்கொற்றக் குடை பிடித்தும் மங்கல வாத்தியங்களை முழக்கியும், "**அரகர சுப்ரமண்யோம்**" என்று திசைகள் செவிடுபட ஒலித்தும், திருவீதிகளில் வாழை கமுகுகள் நாட் டியும், தோரணங்கள் பூமாலைகள் அமைத்தும், நிறைகுடங் கள் வைத்தும், நறுமலர்கள் தூவியும் நகர்வலம் செய்வித் தார்கள். குமரகோட்டக் கோவிலை அடைந்து திருமுறை யையும், ஆசிரியரையும் உள்ளே கொண்டுபோய் எண் ணில்லா உவகையுடன் ஆடியும் பாடியும் போற்றிப் புகழ்ந் தார்கள். அப்பொழுது அன்பர்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை. எல்லோரும் கச்சியப்ப சிவாச்சாரியரைப் பல முறை பணிந்து விடைபெற்று நீங்கினுர்கள்.

புலவர்கள், உச்சிமேல்கொண்டு போற்றும், கச்சியப்ப சிவாச்சாரியார், குமரகோட்டப் பெருமானை பூசை செய்து கொண்டும், ஞான நிட்டையில் இருந்தும் பலகாலம் வாழ்ந்து செவ்வேளையும் போற்றி அப் பெருமானுடைய அடிமலர் நிழலை அடைந்தனர்.

## 40. முருகவேள் திரு அவதாரம்

அவதாரம்—என்றச் சொல்லுக்கு இறங்குவது என்று பொருள். மேலிருந்து கீழே இறங்கிவருவது அவதாரமாகும்.

இறைவனுடைய சிறந்த இலக்கணங்களுக்குள் தலை சிறந்தது இறப்பு பிறப்பு இன்மையாகும்.

"பெரும்மான் முருகன் பிறவான் இறவான்" என்கின்றார் அருணகிரிநாதர்.

உயிர்கள் இறக்கும்; பிறக்கும்; இறைவனுக்கு இறப்பு பிறப்பு கிடையாது.

"பிறவா யாக்கைப் பெரியோன்"

என்று சிலப்பதிகாரங் கூறுகின்றது.

"பிறப்பிலி இறப்பிலி பிறங்கலரசன்றன் மகளார் நாதன்" என்று வில்லிபாரதம் பகர்கின்றது.

ஆதலால் முருகவேள் பிறப்பிறப்பில்லாதவர். அவர் என்றும் இளம்பூரணர்.

தேவர்கள் பொருட்டுச் சரவணப் பொய்கையில் உதித்தருளினார். அதுதான் முருகவேள் திருவவதாரம் எனப்படும்.

சூரபன்மன் 1008 அண்டங்களையும் 108 யுகங்களாக ஆண்டான். அமரர்களையும் அரமடந்தையர்களையும் சிறையில் அடைத்து அலக்கண் புரிந்தான். மாலயனாதி வானவர்களை ஏவல்கொண்டு இடர்ப்படுத்தினான்.

"நெறிதவறி அலரிமதி நடுவன்மக பதிமுளரி
நிருதி நிதி பதிகரிய வனமாலி

நிலவுமறை யவனிவர்கள் அலைய அரசுரிமைபுரி
நிருதனுர மறஅயிலை விடுவோனே”
—(அறிவழிய)திருப்புகழ்.

சூரபன்மனுடைய கொடுமைக்கு ஆற்ருத வானவர்கள், சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருக்கயிலையை யடைந்தார்கள். திருநந்தி தேவரிடம் விடைபெற்றுத் திருக்கோயிலுக்குள் சென்ருர்கள்.

சிவபெருமானைக் கண்டார்கள். அவர்களுடைய பார்வை இறைவனிடம் செல்லவில்லை. வாய்விட்டுத் துதிக்கவும் இயலவில்லை. அப் பெருமானுடைய பெருமை மனதுக்கும் அடங்கவில்லை. விம்மிதம் அடைந்து நின்ருர்கள். உடல் நடுங்கியது. உள்ளம் உருகியது! மெய்சிலிர்த்தது! விழிநீர் பெருகியது. மொழி குழறியது. ஒருவாறு தேறித் துதிசெய்கின்ருர்கள்!

நோக்கினும் நுழைகிலை நுவலு கின்றதோர்
வாக்கினும் அமைகிலை மதிப்ப வொண்கிலை
நீக்கரும் நிலைமையில் நிற்றி எந்தைநீ
ஆக்கிய மாயம் ஈது அறிகிலே மரோ.

பொருள் இரண்டு என்கின்ற துவைதம்; ஒன்றே என்கின்ற அத்வைதம்; ஒன்ருயும் இரண்டாயும் உளது என்கின்ற விசிட்டாத்வைதம் என்ற இந்த மூன்றையுங் கடந்து நின்று, அகில உலகங்களையும் படைத்த பெருமானே! உமது செயலை அரிய வேதங்களாலும் அறிய முடியுமோ?

இருமையும் ஒருமையும் இரண்டும் ஒன்றிய
ஒருமையும் அன்றென உலகம் யாவையும்
பெருமையின் இயற்றிய பெரும! நின்செயல்
அருமறை யானவும் அறிதற் பாலவோ?

பெருமானே! உமக்கு ஒரு நாமம், ஒருருவம், ஒருசெயல், ஒரு குணம் ஒன்றும் இல்லை. அத்தகைய நீர் உருவம் பேர் தொழில் இவைகளைத் தாங்கி நிற்பதன் காரணம் உயிர்கட்கு வீடுபேற்றினை வழங்கும் கருணையாலேயே யாகும். ஆ! ஆ! நின் திருக்கருணையின் திறம் செப்புந் தரத்ததோ?

உருவொடு தொழில்பெயர் ஒன்றும் இன்றியே
பரவிய நீயவை பரித்து நிற்பது
விரவிய உயிர்க்கெலாம் வீடு தந்திடும்
கருணைய தேயலால் கருமம் யாவதே.

கருணைக்கடலே! தேவரீரைத் துதிப்பதற்குச் சொற்களே இல்லை. திரிபுரம் எரித்த தேவனே! காமனை எரித்த கடவுளே! காலனை யுதைத்த சீலனே! என்று துதித்தால் அவை புகழாகுமோ? ஆகமாட்டா. ஏன்?

மிகச் சிறந்த பேராற்றல் படைத்த மற்போர் வீரனுக்கு வரவேற்பு அளிக்கும்போது,

"துரும்பினை யொடித்த தீரா! தோள்வலி மிகுதி யாலே
விரும்பியே எறும்பைக் கொன்ற வீரனே புழுவைத் தேய்த்த
இரும்பினை யனைய பாதா! இயைந்தஓர் கொசுவை மாய்த்த
பெரும்புய வாகையோனே! பெருமையோய் வாழிவாழி"

என்று பாடினால் அவ்வீரனுக்கு இது பெருமையாகுமா? அதுபோல் இறைவனே! அகிலாண்ட கோடிகளை இமைப் பொழுதில் தோற்றி நிறுத்தித் துடைக்கவல்ல தேவரீர், முப்புரத்தை எரி செய்ததும், இமயனை உதைத்ததும், மன்மதனைப் பொடி செய்ததும் உமது ஆற்றலுக்கு ஏற்றனவோ? இல்லை. ஆகவே உம்மை என்னவென்று கூறி, எப்படித் துதிக்க வல்லோம்?

புல்லிய புரம்பொடித் ததுவும் காமனை
ஒல்லென எரித்ததும் உனக்குச் சீர்த்தியோ
எல்லையில் விதிமுதல் எனைத்தும் ஈண்டு நின்
நல்லருள் ஆணையே நடாத்தும் என்கையால்.

ஆதியும் நடுவும் ஈறும் அருவமும் உருவும் ஒப்பும்
ஏதுவும் வரவும் போக்கும் இன்பமுந் துன்பும் இன்றி
வேதமுங் கடந்து நின்ற விமலஓர் குமரன் றன்னை
நீதரல் வேண்டும் நின்பால் நின்னையே நிகர்க்க என்றார்,

"ஆதியந்தமில்லாத அமலரே! ஒரு குமரனை உம்மிடத்திலிருந்தே நீர் உதவியருளவேண்டும்" என்று தேவர்கள் வேண்டி நின்றார்கள்.

மாலயனாதி வானவர்கள் வணங்கி நின்று வழுத்திக் கூறிய முறையினைச் செவிசாய்த்துக் கேட்ட சிவபெருமான், "தேவர்களே! நீங்கள் துன்புற வேண்டா. உங்கள் துயரினைக் களைகின்றோம்" என்று திருவாய் மலர்ந்தருளினார். இங்ஙனம் அருளிய செவ்வானம் போன்ற திருமேனியுடைய சிவபெருமான், உண்மை ஞானிகளால் உணர்வினால் உணரும் தமது ஆறு முகங்களையும் கொண்டருளினார்.

வந்திக்கு மலரோ னாதி வானவர் உரைத்தல் கேளாப்
புந்திக்குள் இடர் செய்யற்க புதல்வனைத் தருதும் என்னா
அந்திக்கு நிகர்மெய் யண்ணல் அருள்புரிந் தறிஞ ராயோர்
சிந்திக்குந் தனது தொல்லைத் திருமுகம் ஆறுங் கொண்டான்.

இறைவனுக்கு மூன்று திருக்கண்கள். ஆறு திருமுகங்களில் பதினெட்டு நேத்திரங்கள். நெற்றிக் கண்கள் ஆறு. அவற்றைச் சிறிது திறந்தருளினார். ஆறு அக்கினிக் கண்களிலிருந்தும் ஆறு அருட்சுடர்கள் தோன்றின. அவை எங்கும் பரவி நின்றன. அவற்றின் வெப்பத்தைத் தாங்காத தேவர்கள் திசைதொறும் ஓடினார்கள். இறைவனுடைய இடப்புறத்து இருந்த எம்பிராட்டியும் அஞ்சி ஓடினாள். அவ்வாறு ஓடிய அமரர்களுக்கு வேறு புகலிடம் இன்றி மீளவும் கயிலையை நாடி யடைந்தார்கள்.

கடலுக்கு நடுவில் உள்ள கப்பலில் இருந்த காக்கைகளை மாலுமி துரத்தினால், காக்கைகள் எங்கு செல்லும்? மீளவும் கப்பலையே நாடி வரும். அதுபோல் அமரர்கள் ஆனார்கள்.

எம்பெருமான் இமையவர்க்கு ஆறுதல் கூறி எங்கும் பரவி நின்ற அருட்சுடர்களைச் சுருக்கி வாயுவிடந் தந்தார். அவன் அதனைத் தாங்கமாட்டாது அக்கினி தேவனிடந் தந்தான். அக்கினியைச் சுட்டுவிட்டதால் அக்கினியும் அஞ்சி

அவற்றைக் கங்கையாற்றில் விடுத்தான். கங்கா நதி தன் அலைகளான கரங்களால் ஏந்திச் செல்ல, அதன் அருகில் சரவணப் பொய்கையில் சென்று, ஆறு அருட்சுடர்களும் சேர்ந்தன. அங்கு ஆயிரத்தெட்டு இதழ்த் தாமரை மலரில் முருகவேள் தோன்றி யருளினர்.

அருவமும் உருவும் ஆகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னி ரண்டுங் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங்கு உதித்தனன் உலகம் உய்ய.

## 41. முருகன்

வழிபட்டோர்க்கு எளிதில் கருணை புரியுந் தெய்வம் முருகன் எனவுணர்க.

"ஸ்கந்தஸ்ய கீர்த்திம் அதுலாம்
கலிகல்மஷ நாசினீம்!"

என்ற திருவாக்கு இதனை வலியுறுத்தும். கலியில் விளையும் வன்மையான பாவங்களைப் போக்க வல்லது, முருகவேளின் புகழ் ஒன்றேயாம் என்பது இதன் பொருள்.

குழந்தைகள், தம்பால் உள்ள விலையுயர்ந்த பொருள் களைச் சிந்திக்காமலும், கேட்போனுடைய நிலையை எண்ணு மலும், தரும் இயல்பு உடையன.

என்றும் அகலாத இளமையுடைய முருகன், தன்னை விரும்பி வழிபடும் அடியார்களின் துன்பங்களை நீக்கி, இன் பங்களை யருள வல்லான்.

ஓம் என்ற பிரணவம் அ,உ,ம. என்ற மூன்று அங்கங்களை யுடையது.

அ—சிருஷ்டிக்கின்றது.

உ—ரக்ஷிக்கின்றது.

ம—ஒடுக்குகின்றது.

இந்த மூன்றில் ரக்ஷிக்கின்ற எழுத்தாகிய உகரமே சிறந்தது. நாம் இறைவனிடம், "ஈசனே! என்னை சிருஷ்டி செய்," என்று கேட்கின்றோமா ? "ஈசனே! என்னை சம்மாரம் செய்" என்று கேட்கின்றோம்? இல்லை "என்னை ரட்சிக்கவேண்டும்" என்றுதானே வேண்டுகின்றோம். "பாஹிமாம்" என்பர் வடமொழியில்.

எனவே உகரம் ரக்ஷக எழுத்து என உணர்க. அதனால் தான் உலகங்களையும் திருத்தொண்டர்களையும் ரக்ஷிக்கின்ற நூலாகிய பெரிய புராணத்தின் தொடக்கத்தில் 'உலகெலாம்' என்று தொடங்குகின்றது.

கம்ப நாடரும் "உலகம் யாவையும்" என்று தொடங்குகின்றார். நக்கீரரும் "உலகம் உவப்ப" என்று ஆரம்பிக்கின்றார். இதனால் உகரம் எத்துணை முக்கியமுடையது என்பது நன்கு புலனாகின்றது.

ஆன்மாக்களுக்கு மூன்று நிலைகளுண்டு. கேவலம், பெத்தம், முத்தம் என்பன.

இருளும், அறியாமையும், துன்பமும் சேர்ந்த நிலையில் ஆன்மாக்கள் கிடந்தன. அது கேவல திசை.

இருளும் ஒளியும், துன்பமும் இன்பமும், அறிவும் அறியாமையும் விரவிய நிலையில் வாழ்கின்ற நிலை பெத்த திசை. இன்பமே, அறிவே, ஒளியேயாய் நின்ற நிலையில், ஆன்மா இன்புறும் நிலை முத்த திசையாகும். எனவே, ஆன்மாக்களுக்கு மூன்று நிலைகள் என வுணர்க.

முருகு—என்பது பகுதி.

அன்—ஆண்பால் ஒருமை விகுதி.

முருகு என்ற சொல்லில் ம்+உ, ர்+உ, க்+உ, என்று மூன்று உகரங்கள் வருவதை யுணர்க.

கேவல திசையிலும், பெத்த திசையிலும், முத்த திசையிலும் காக்குங்கடவுள் முருகன் என்பது இதனால் போதரும்.

இதனால், முருகன் என்ற சொல் சிறப்புடையது. இது வழி வழி வந்த மகாவாக்கியமாகும்.

"அரும் பெறல் மரபின்
பெரும் பெயர் முருக"

என்கின்ருர் நக்கீரர்.

கிழக்கே, தெற்கே, மேற்கே, வடக்கே, மேல் உலகிலே, கீழ் உலகிலே—ஆக ஆறுதிசைகளில் உள்ள ஆன்மாக்களே உய்விக்க, இந்த ஆறு திசைகளேயும் பார்த்தருளும் ஆறுமுக வுருவுடன் அப்பரமபதி விளங்குகின்ருர்.

வினைகளேக் களேயும் வேலேயும், பயங்களே யகற்றும் மயிலேயும் உடையவனுக விளங்குகின்ருர்.

சிவம்—சத்து, உமை—சித்து, முருகன் ஆனந்தம்.

இதுதான் சோமாஸ்கந்த மூர்த்தம்.

விநாயகரும் சிவபுத்திரராக இருப்பினும், சிவனுக்கும் உமைக்கும் இடையில் விநாயகமூர்த்தி யமைவதில்லே. முருக வுருவமே அமைந்துளது. இதனுல் முருகன் ஆனந்த வடிவம் என்பதும், அப் பரம்பொருளே வழிபட்டோர் ஆனந்தம் பெறுவர் என்பதும் உறுதியாகின்றது.

சத்தெனப்படும் தாவில் சிவத்தினும்
சித்தெனப்படும் தேவி யிடத்திலும்
புத்திரப் பெயர் பூண்டில தானந்த
வத்துவின் கழல் வாழ்த்தி வணங்குவாம்.

உயிர்கள் யாவும் விரும்புவது, ஆனந்தம் என்ற ஒன்றையே யாகும். இந்த ஆனந்தத்தை யருளவல்ல தெய்வம், முருக மூர்த்தி ஒன்றே யாகும்.

சுப்ரமண்ய அஷ்டோத்தர சத நாமாக்களில் "ஆனந்தாய நம:" என்று ஒரு நாமம் வருவதையும் உன்னுக.

குழந்தைகளால் வரும் இன்பம் சுதானந்தம்; முருகனுல் வரும் இன்பம் சதானந்தம்.

"ஞானம் சுரப்பமகிழ் ஆனந்த சித்தியொடே
நாளுங் களிக்க பதம் அருள்வாயே"

என்று அருணகிரிப் பெருமான் கூறுகின்ருர்.

ஆனந்தம், ஞான ஒளியால் விளையும். முருகன் ஞான ஒளி மயமானவர்.

"ஒளியில் விளைந்த உயர் ஞான பூதரத்
துச்சியின் மேல்
அளியில் விளைந்ததோர் ஆனந்தத் தேனை"

—கந்தரலங்காரம்

"பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாக"

என்கின்றார் கச்சியப்ப சிவாச்சாரிய சுவாமிகள்.

எனவே ஞானத்தை விரும்புவோர், ஒளியை விரும்புவோர்—ஆனந்தத்தை விரும்புவோர், முருகப் பெருமானையே வழிபட வேண்டும்.

முருகப் பெருமான் கலியில் கண்கண்ட தெய்வம்; கலியுக வரதன்.

ஆதலால் முருகனைக் காதலால் அனைவரும் உள்ளன்புடன் உருகி வழிபட்டு, எல்லா நலன்களையும் எளிதிற் பெறுவார்களாக.

## 42. சிவகுரு

முருகவேள் முக்கட்பெருமானுக்கு வேத முதல் மொழியாகிய பிரவணப் பொருளை உபதேசித்தருளினார். அதனால் அவர் சிவகுரு—சுவாமிநாதன்—தகப்பன்சாமி என்றெல்லாம் பேர் பெற்றனர்.

சிவன் வேறு, குகன் வேறு அன்று, "ஈசனேயவன் ஆதலால் மதலையாயினன்காண்" என்று வீரவாகுதேவர் கூறுகின்றார்.

சிவமூர்த்தியே நடராஜராகவும், தட்சிணாமூர்த்தியாகவும் காட்சி தருவதுபோல், முருக மூர்த்தியாக வந்து அருள் புரிகின்றார்.

முருகவேளைச் சிவமூர்த்தியென்று அறியாத பாவத்தினாலேயே, சூரபன்மன் அழிவுற்றான்.

ஆகவே, சிவபெருமானுக்கு முருகப்பெருமான் உபதேசித்தார் என்பதன் கருத்து யாது? என்று அறிஞர் உள்ளத்தில் ஒரு வினா எழும். அதற்கு விடை விளம்பும் கடப்

பாடு உண்டுதானே. சிவபெருமான் சனகாதி முனிவர்க்குக் கல்லாலின் புடையமர்ந்து, எல்லாமாய் அல்லவுமாய் இருந்த தனை இருந்தபடி இருந்து காட்டிச் சொல்லாமல் சொல்லி உபதேசித்தருளினர்.

உலகிலே தந்தை எப்படிச் செய்கின்ருரோ அப்படி மைந்தரும் நடக்க விரும்புவார்கள். தந்தை பாடினல் மகனும் பாடுவான். உலகத் தந்தையாகிய சிவபெருமான் குருநாதனுக நின்று உபதேசித்தபடியால், மைந்தர்களாகிய ஒவ்வொருவரும் குருவாக இருக்க விரும்புவார்கள். குருவாக இருப்பது அரிது; சீடனுக இருப்பது எளிது. ஆதலால் குரு வாக நின்று உபதேசித்த சிவபெருமான், சீடனுக நிற்கத் திருவுளங்கொண்டார். சிவபெருமானே சீடனுக, உப தேசங் கேட்டுக்கொண்டார். நாமும் குருவை நாடி, உப தேசம் கேட்டுக்கொள்ள வேண்டும் என்று உயிர்கள் விரும்பும்.

ஆதலால் அரனுர் தனக்குத்தானே மகனுகி, தனக்குத் தானே உபதேசித்துக்கொண்டார்.

தணிகைப்புராணம் கூறும் இந்த அரிய பாடலைப் பார்க்க.

தனக்குத் தானே மகனுகிய தத்துவன்
தனக்குத் தானே யொரு தாவருங் குருவுமாய்த்
தனக்குத் தானேயருள் தத்துவங் கேட்டதும்
தனக்குத்தான் நிகரினுன் தழங்கிநின் ருடினுன்''

ஒரு சமயம் திருக்கயிலை மலையில், சிவபெருமானுடைய திருக்கோயிலின் ஒரு புறத்து, நவவீரர்கள் சூழ, ஆறுமுகப் பெருமான் அமர்ந்திருந்தான்.

திருமால், இந்திரன், சந்திரன், குபேரன், சித்தர்கள், முத்தர்கள், இயக்கர், கின்னரர், கிம்புருடர் முதலியோர்கள் சிவபெருமானை வணங்கும்பொருட்டுச் சென்ருர்கள். கோயி லுக்குமுன் அமர்ந்துள்ள குகமூர்த்தியை அன்புடன் பணிந்து, கோயிலுக்குள் சென்ருர்கள்.

படைப்புத் தொழிலைச் செய்கின்ற பங்கயன் வந்தான். அவனுக்கு அன்று அஷ்டமத்தில் சனியிருந்தது போலும்.

முருகவேளைக் கண்டான். 'நான் சிருஷ்டி கர்த்தன். இவர் நேற்றைப் பாலகன்' என்று எண்ணி அகந்தையுடன் முருக வேளை வணங்காது சென்றான். உட்சென்று, சிவபெமானை யும், உமாதேவியாரையுந் தொழுது துதித்து, அருள் பெற் றுத் திரும்பினான். முருகவேளைக் கண்டும், காணாதவனைப் போல் சென்றான். இறைவன் எல்லாவற்றையும் பொறுப் பான். பொய்ம்மையைப் பொறுக்கமாட்டான்;

வீரவாகுதேவரை நோக்கி, "வீரவாகு! அவனை இங்கு அழைத்து வா" என்று பணித்தருளினார்.

வீரவாகுதேவர் பிரமனைப் பார்த்து, "ஓய்! நாலுமுகம்! ஆறுமுகம் அழைக்கின்றது" என்றார். இதனைக் கேட்டுப் பிரமன் நடுங்கினான்! வீரவாகுதேவருடைய முகம் சீறுமுக மாக இருந்தது. அழைப்பது ஆறுமுகம். அவனுக்கு மாறு முகமாயிற்று. வேறுமுகம் ஆதரவு தர ஏது? நின்றாலும் தண்டனை; சென்றாலுந் தண்டனை. குட்டுப்பட்டாலும் மோதிரக் கையன் பால் குட்டுப்பட வேண்டும்" என்று கருதி முருகனிடம் வந்தான்.

சிறிது நிமிர்ந்து நின்று கைகுவித்தான். அகந்தை கொண்ட அவனை நோக்கி, 'உனக்கு வேதம் வருமோ?' என்று வினவி யருளினார், வரும் என்றான்.

"வேதம் ஓது" என்றார்.

வேதன் வேதத்தை ஓதத் தொடங்கி 'ஓம்' என்று ஆரம் பித்தான்.

**முகத்தில்ஒன்றதா அவ்வெழுத்துடையதோர்முருகன்**
**நகைத்து முன்னெழுத்தினுக் குரை பொருளென நவில**
**மிகைத்த கண்களை விழித்தனன் வெள்கினன் விக்கித்**
**திகைத் திருந்தனன் கண்டிலன் அப்பொருள் திறனே.**

"பிரமனே! முன்னுரைத்த முதல் எழுத்துப் பொருள் கூறுதி" என்றார். வேதனை வேதனைப்படுத்தியது அவ்வினா. பிரணவப் பொருளினை அறியாது, பிரமன் எட்டுக் கண்களை யும் விழித்தான். வெட்கினான், விக்கினான், தலைகுனிந்து

நின்ருன். சிவபெருமானிடம் வேதம் பாடங் கேட்ட போது, இதனை வெற்றெழுத்து என்று கேளாமல் விட்டு விட்டேனே. இப்பொழுது முருகவேள் கேட்கின்ருரே என் சொல்வேன்? என்று நினைந்து நின்ருன்.

ஈசன் மேவரு பீடமாய் ஏனையோர் தோற்றும்
வாசமாய் எலா எழுத்திற்கும் மறைகட்கும் முதலாய்க்
காசி தன்னிடை முடிபவர்க் கெம்பிரான் கழறும்
மாசில் தாரகப் பிரமமாம் அதன் பயன் ஆய்ந்தான்.

பிரணவம் என்ற தனிமந்திரம் சிவபெருமானுக்குப் பீடம். ஏனைய தேவர்களுக்குப் பிறப்பிடம். எல்லா எழுத்துக்கும் வேதங்கட்கும் முதலாவது. காசியில் இறந்தவர்க்கு ஈசன் கூறும் தாரகமாவது. (தாரகம்—தாண்டச் செய்வது). அதன் பொருளை ஆய்ந்து நின்ருன் பிரமன்; அறியாது திகைந்தான்.

தூமறைக்கெலாம் ஆதியும் அந்தமும் சொல்லும்
ஓமெனப்படும் ஓரெழுத் துண்மையை யுணரான்
மாமலர்ப் பெருங் கடவுளும் மயங்கினன் என்ருல்
நாமினிச்சில அறிந்தனம் என்பது நகையே.

செவ்வேட் பரமன் பிரமனை நோக்கிப் புன்னகை புரிந்து, "பேதையே! நீ வேதம் ஓதிய விந்தை இதுவோ? முதல் எழுத்துக்கு உரை தெரியாத நீ படைப்புத் தொழிலைப் புரிய வல்லையோ? என்று கூறி, தலை ஒன்றுக்கு மூன்று கரங்களாக அமைத்து, பன்னிரு கரங்களாலும், நான்கு தலைகளிலும் குட்டினர்.

நான்கு மூக்குகளிலும் உதிரம் பெருகியது. தலைகளில் இருந்த குடுமி, விபூதிபோல் உதிருமாறு குட்டினர். மெல்லத்தான் குட்டினர். திருவடி தீண்டி உதைத்தருளினர்.

எட்டொணுதவக் குடிலையின் பயன் இனைத்தென்றே
கட்டுரைத் திலன்மயங்கலும் இதன் பொருள் கருதாய்
சிட்டி செய்வதித் தன்மையதோ எனுச் செவ்வேள்
குட்டினுன் அவன் நான்குமா முகங்களுங் குலுங்க.

—கந்த புராணம்

"நாலுமுகனுதி அரியோமென அதார முரை
யாத பிரமாவை விழமோதி பொருள் ஓதுகென
நாலு சிரமோடு சிகை தூளிபட தாளமிடும்
இளையோனே"

—(வாலவயதாகி) திருப்புகழ்.

நான்கு முகமுடைய பிரம்ம தேவனைக் கந்த வெற்பில் வீரவாகு தேவரைக் கொண்டு சிறையில் இட்டனர்.

முருகவேள், தாமே ஒரு திருமுகமும், நான்கு திருக்கரங்களும், ஜெபமாலையும், கமண்டலமும் ஏந்தி, வரதம் அபயம் அமைத்து படைத்தற்றொழிலைப் புரியலானார். இளம் பூரணன் படைத்தல் தொழிலைப் புரியும்போது ஆன்மாக்கள் அறநெறியில் நின்றன.

திருமால் அரவணையினின்றும் எழுந்து கயிலை சென்று, கண்ணுதற் கடவுளைக் ஙக தொழுது "பெருமானே! மூவரில் ஒருவனும் பிரமதேவனைக் குமாரக் கடவுள் சிறை செய்தனர்.

அவனை விடுவிக்குமாறு வேண்டுகின்றேன்" என்று விண்ணப்பித்தார்.

முருகவேளிடம் நந்தியெம் பெருமானை அனுப்பி சிறை தவிர்க்குமாறு கூறியருளினார். குமரவேள், "முதல் எழுத்துக்குப் பொருள் தெரியாத பிரமனுக்குச் சிருட்டித் தொழில் தந்தது முறையன்று" என்று கூறியனுப்பினார்.

சிவபெருமானே, தேவர்கள் புடைசூழ உமையம்மையாருடன் கந்தவெற்பினை யடைந்தார். முருகவேள் தாய் தந்தையருடைய தாள் வீழ்ந்து வணங்கினார்.

"முருகா! பிரமனைச் சிறையிலிருந்து விடுவாய்" என்று சிவபெருமான் கூற, கந்தவேள் கமலனைச் சிறையிலிருந்து விடுவித்தருளினார்.

"மகனே! உனக்குப் பிரணவ மந்திரத்தின் பொருள் தெரியுமோ?" என்றார் சிவபெருமான்.

சிவமூர்த்தியின் திருச்செவியில், மறை முதல் மந்திர மாம் பிரணவத்தின் பொருளை விளக்கி உபதேசித் தருளினார்.

“சிவனார் மனங்குளிர உபதேச மந்த்ர மிரு
செவிமீதி லும்பகர் செய் குருநாதா”

“ஓதுவித்த நாதர்கற்க ஓதுவித்த முனிநாண
ஓரெழுத்தில் ஆறெழுத்தை ஓதுவித்த பெருமாளே”

—திருப்புகழ்.

## 43. அவசியம்

ஆறுமுகப் பெருமானுடைய அடியார்கள் மேற்கொள்ள வேண்டிய கடமைகள் பல இருப்பினும், அவற்றுள் மிகமிக அவசியமான ஒரு கடமையுண்டு.

கடமை யுணராதது மடமை. ஒவ்வொருவருக்கும் சிறந்த ஒரு கடமையுண்டு.

முருகப் பெருமானுடைய மெய்யடியார்கட்கு இதனை வற்புறுத்திக் கூறுகின்றேன்; அன்பின் காரணமாக அறி வுறுத்துகின்றேன்.

முருகவேளின் வலப்புறத்தில் வள்ளிநாயகி; இடப்புறத் தில் தெய்வயானை; அவருடைய திருக்கரத்தில் வேலாயுதம்.

மனிதர்கட்கு இன்றியமையாத தேவைகள் மூன்று. இம்மை, மறுமை, வீடு என்பன.

(1) இந்த உலகத்தில் நல்வாழ்வு.
(2) மேல் உள்ள சுவர்க்க உலகில் இன்பவாழ்வு.
(3) அதற்குமேல் முத்திப்பேறு.

இந்த மூன்று நலன்களையுந் தரவல்ல தெய்வம் முருக வேள். எம்பெருமான் தன் வலப்பக்கத்தில் அமர்ந்துள்ள வள்ளி இம்மண்ணுலகில் அவதரித்தவர்; அவர் மூலம் இக வாழ்வைத் தருவார்.

தன் இடப்புறத்தில் அமர்ந்துள்ள தெய்வவுலக மடந் தையாகிய தெய்வயானையம்மை மூலம் பரவாழ்வு (சுவர்க்க இன்பம்) தருவார்.

தன் திருக்கரத்தில் அமர்ந்திருக்கின்ற ஞானமாகிய வேலாயுதத்தால் வீடுபேற்றினை வழங்குவார்.

நமக்கு முதலில் இம்மை நலமும், பின்னர் மறுமை நலமும், அதற்குப் பின் முத்தி நலமும் முறையே வரவேணும்.

உடம்புடன் வாழ்கின்ற நமக்கு இம்மை நலம் அவசியம் வேண்டும். வீடு, வாசல், நிலம், புலம், வண்டி, வாகனம், துணி, மணி, பொன், பொருள், ஆடை, அணிகலம், மனைவி, மக்கள் என்பனவாதி அனைத்தும் இம்மை நலங்களாம்.

இவற்றை வழங்கும் தேவி வள்ளி பிராட்டியார். வள்ளியை வழிபடுவோர்க்கு இகவாழ்வு சிறக்கும். வள்ளி நாயகியார் திரு அவதாரம் புரிந்த திருத்தலம் வள்ளிமலை.

இது தொண்டை நன்னாட்டில் இருக்கின்றது. வள்ளி பிறந்த இடம் வள்ளியூர் என்றும், நாகர் கோயிலுக்கு அருகில் உள்ள குமாரர் கோயில் என்றும் பலர் பலவாறு கூறுவார்கள். அவர்கள் அனைவரும் கந்தபுராணத்தைக் கண்ணால்கூடக் காணாதவர்கள்.

கந்தபுராணந்தான் சிறந்த பிரமாணம்; அதில் கூறுவதைக் காண்க.

திருமாலின் இருகண்களில் இரு நங்கையர் அவதரித்தனர்; ஒருத்தி அமுதவல்லி; ஒருத்தி சுந்தரவல்லி.

இம் மங்கையர் இருவரும் முருகவேளை மணஞ்செய்ய விரும்பி சரவணப் பொய்கையில் பலகாலந் தவம் புரிந்தனர். முருகவேள் தோன்றி, அமுதவல்லியை விண்ணுலகிலும், சுந்தரவல்லியை மண்ணுலகிலும் பிறந்து, தவம் புரியுமாறு பணித்தருளினார். இதன் குறிப்பு யாது? மண்ணுலகில் தோன்றும் வள்ளியம்மை மூலம் ஆன்மாக்களுக்கு மண்ணுலக நலன்களையும், விண்ணுலகத்தில் தோன்றும் தெய்வயானையம்மை மூலம் விண்ணுலக நலன்களையும் தரும் பொருட்டு என வுணர்க. இகபரம் இரண்டும் தரும் தெய்வம் எம்பிரான். அதனால் அருணகிரிநாதரும், "இகபர சௌபாக்யம் அருள்வாயே" என்று பாடுகின்றார்.

இறைவன் பணித்த வண்ணம் மூத்தவளான அமுத வல்லி தானே ஒரு குழவியாகி, சூரபன்மனுக்கு அஞ்சி மேருமலையில் ஒளிந்திருந்த இந்திரனிடம் போய் "நின் மகள் யான்" என்றாள்.

இந்திரன் சத்தியவுலகிலே மனோவதி நகரிலே கற்பக மரத்தின்கீழ் தன் ஐராவதம் என்ற தெய்வயானையால் வளர்க்கச் செய்தனன்.

இளையாளாகிய சுந்தரவல்லி மண்ணுலகிலே தொண்டை நன்னாட்டிலே மேற்பாடிக்கு அருகில் உள்ள மகாபுனிதமான வள்ளிமலையில் வந்து பன்னெடுங்காலம் தவம் புரிந்தாள்.

முற்றுணர்ந்திடு சுந்தரி என்பவள் முருகன்
சொற்ற தன்மையை உளங்கொடு தொண்டை
நன்னாட்டில்
உற்ற வள்ளியஞ் சிலம்பினை நோக்கியாங் குறையும்
நற்ற வச்சிவ முனிமக ளாகவே நடந்தாள்.

அயன் படைத்திடும் அண்டத்துக் காவியாய்ப்
பயன் படைத்த பழம்பதி என்பரால்
நயன் படைத்திடு நற்றொண்டை நாட்டினுள்
வியன் படைத்து விளங்கு மேற்பாடியே.

ஆயதொல்லை யணி நகர் ஞாங்கரின்
மீயுயர்ந்ததொர் வெற்புநிற் கின்றதால்.

—கந்தபுராணம்

பின்னர் திருமாலே, அங்கு சிவமுனிவராகத் தோன்றித் தவம் புரிந்துகொண்டிருந்தார். இலக்குமிதேவி மானுருவங் கொண்டு வந்தாள். அம்மானை, *அம்மான் பார்க்க, அப் பார்வையால் சுந்தரவல்லி மான் வயிற்றில் புகுந்தாள். மான் வள்ளிக்குழியில் குழந்தையைப் பெற்றது. திருமாலின் மற்றொரு அவதாரமாகிய உபேந்திரன் நம்பிராஜனுகப் பிறந்தான். அந்த நம்பி பிராட்டியைக் கொண்டுபோய் வளர்த்தான்.

வள்ளியென்று பேர் புனைந்த எம்பிராட்டி வள்ளிமலை யின் தினைப்புனங் காவல் புரிந்தனள்.

---

*திருமாலாகிய சிவமுனிவர்.

அத் தேவி தினைப்புனங் காத்தபோது அவள் ஆலோலப் பாடலைக்கேட்டுச் சராசரங்கள் எல்லாம் உருகின.

மையல் குறவர் குறத்தியர்கள்
மருளு மடம் போய்த் தெருளெய்த
மான்கள் பசியும் மனப் பயமும்
மறந்து சுரந்த மடிப்பாலைப்
பையப் பதுங்கும் புலிப்பிணவின்
பறழுக் கருத்திக் கொலை மறந்த
பாரப் புலிதன் முலைப்பாலைப்
பன்றிக் குருளைக் கினிதூட்டக்
கையிற் கவணில் பதித்த மணிக்
கல்லும் உருகக் கிளிகள் தினை
கவராதிருந்து கசிந்துருகக்
கனிவாய் ஆலோலம் புகலும்
தையற் குறத்தி மனம் உருக்கும்
சமர்த்தா தாலே தாலோலோ
தாமக் குவளைத் திருமலை வித்
தகனே தாலோ தாலேலோ.

—திருமலை முருகன் பிள்ளைத்தமிழ்.

இங்ஙனம் சுந்தரஞான மென் குறமாது ஞானத்தினைப் புனங் காத்திருந்தபோது, அப்பிராட்டியின் தவங் காரண மாகத் தணிகை நாயகன் வேடனாகவும் விருத்தனாகவும் வந்து, தன் வேதமுங்காணாத விமல சரணாரவிந்தங்களை வைத்துப் பலகாலும் உலாவிய இடம் வள்ளிமலை யென வுணர்க.

அருணகிரிநாதர் முடிமீது முருகன் தன் அருண சரண மலரை வைத்துச் சூட்டினான். அந்த அருமையை அவர் சுந்தரநுபூதியில் 44வது பாடலில் கூறுகின்றார்.

முருகன் திருவடியை என் சென்னிமேல் சூட்டினான். அத் திருவடி நான்கு இடங்களில் சுமழுந் தன்மையானது. அதாவது முருகன் பாதம் நான்கு இடங்களில் பட்டன என்கின்றார்.

1 முத்தி வீடு. 2 தேவர்கள் தலை.
3 வேதம். 4 வள்ளிமலை.

நம்மால் முத்தி வீட்டையும், தேவர்கள் சென்னிகளையும், வேதங்களையுங் காணமுடியாது. வள்ளிமலையைக் காணலாந்தானே? அப்பன் அடிமலர் பலகாலுந் தோய்ந்த அற்புதத் தலம் வள்ளிமலை.

சாடுந் தனிவேல் முருகன் சரணஞ்
சூடும்படி தந்தது சொல்லுமதோ
வீடுஞ் சுரர் மாமுடி வேதமும் வெங்
காடும் புனமுங் கமழுங் கழலே. —அநுபூதி

எறுழிபுலி கரடியரி கரிகடமை வருடையுழை
இரலை மரை இரவு பகல் இரைதேர் கடாடவியில்
எயின ரிடும் இதணதனில் இளகு தினை கிளிகடிய
இனிது பயில் சிறுமிவளர் புனமீதுலா வுவதும்
உபயசதுர் மறையின்முத னடுமுடிவில் மணநாறு
சீறடியே"
—சீர்பாதவகுப்பு.

"இமையவர் முடித்தொகையும் வனசரர்
பொருப்பும் என
திதயமுமணக்கும் இரு பாதச்சரோருகனும்"
—திருவகுப்பு.

கரடி புலி திரிகடிய வாரான கானில் மிகு
குளிர் கனியின் இளமரம தேயாகி நீடியுயர்
குன்றுலாவி
—திருப்புகழ்.

சுனையோடருவித் துறையோடு பசுந்
தினையோ டிதணோடு திரிந்தவனே —அநுபூதி.

இத்தகைய மகா புனிதந் தங்கிய வள்ளிமலையை ஒவ்வொரு முருகனடியாரும் தெரிசித்து நலம் பெறவேண்டியது அவசியம்.

இது ஐந்தாவது படைவீட்டைச் சேர்ந்தது.

முஸ்லிம் அன்பர்கட்கு ஐந்து கொள்கைகள் உண்டு.

1 கடவுள் நம்பிக்கை.

2 வருவாயில் இரண்டரை சதம் தங்கள் மத அறத்துக்கு வழங்கல்.

3 ஆண்டுக்கு ஒருமுறை முப்பது நாள் இரவில் உண்டு பகலில் உண்ணுது நோன்பு நோற்றல்.

4 தினம் ஐந்து வேளை தொழுதல்.

5 ஆயுளில் ஒருமுறை நபிநாயகம் அவதரித்த மெக்காவுக்குச் சென்று சேவித்தல்.

நபிநாயகம் அவதரித்த மெக்கா சகாரா பாலைவனங் கடந்து போகவேணும். முஸ்லீம் அன்பர்கள் பல்லாயிரம் மைல்கள் கடந்து குருமகான் அவதரித்த மெக்காவுக்குச் சென்று வணங்குகின்றுர்கள்.

இந்த முறையில் முருகன் அடியார்கள், எம்பிராட்டி வள்ளிதேவி அவதரித்த வள்ளிமலைக்குத் தம் ஆயுளில் ஒரு முறையாவது சென்று தெரிசிக்கவேணும். இது மிக மிக அவசியம்.

அன்றி வள்ளிமலையில் நிகழ்ந்த ஒரு அதிசயத்தையும் இங்கு கூறுகின்றேன்.

ஆறு வருடங்கட்குமுன் வள்ளிமலையில் படித்திருப்பணி நடந்துகொண்டிருந்தது. அத் திருப்பணிக்கு அடியேன் தலைவன்.

வேலூர் வைத்தியபூபதி அப்பாதுரை அவர்கள் செயலாளர். டாக்டர் அப்பாதுரை, வள்ளிமலையின் அடிவாரத்தில் தங்கித் திருப்பணியைக் கவனித்துக் கொண்டிருந்தார்.

மலையில் பாதிவரை படிவேலை நடந்தது. பாதி மலையில் பழைய நான்கு கால் மண்டபம் இருந்தது. அதைப் பெயர்க்க முயன்றனர்.

கொத்தனுர்களில் இருவர்கள் அடியில் உள்ள பழைய படிக்கல்லைப் பெயர்த்தார்கள்.

மட்டிப்பால் சாம்பிராணி புகை குபுகுபு என்று உள்ளே இருந்து வந்தது. அந்த இருவரும் வாயிலும் மூக்கிலும் உதிரம் வந்து மயங்கி விழுந்துவிட்டார்கள்.

அருகில் இருந்த சித்தாள்கள் ஓடோடியும் சென்று வைத்திய பூபதி அப்பாதுரை யவர்களிடம் கூறினுர்கள். அவர் விரைந்து சென்று பார்த்தார். படியைப் பெயர்த்த இடத்தில், மலேக்குள் பார்த்தபோது, ஒரு முனிவர் உருவம் மங்கலாகத் தெரிந்தது. அப்பாதுரை கீழே விழுந்து வணங்கி, கன்னத்தில் அடித்துக்கொண்டு, அப்படியே படிக் கல்லே வைத்து மூடிவிட்டார்.

வள்ளிமலேயில் எல்லாப் படிகளும் புதுமையாகப் போடப்பட்டன. இந்த இடத்தில் மட்டும் பழைய மண்ட பத்தை அப்படியே விடப்பட்டுளது. இதன் காரணம் பலருக்குத் தெரியாது.

இந்த அரிய நிகழ்ச்சியைத் திரு வைத்திய பூபதி என்பால் கூறினுர். இன்றும் பல அதிசயங்கள் நிறைந்த தலம் இது.

மேலும், மலேமீது சுவாமி எழுந்தருளியிருப்பது குகைக் கோயில். குகையில் இருப்பதனுல் குகன் என்று கூறுவர்.

குகைக்குமேல் தூபி கட்டியுளது. அன்றியும் மலேயின் உச்சியில் சூரியன் காணுது சுனேயுளது. கடுங்கோடையிலும் நீர்வற்ருமல், சிவஞானிகள் உள்ளம்போல் தெளிந்து, கற்பு டைய மாதர் உள்ளம்போல் குளிர்ந்து இருக்கும்.

இச்சுனேயில்தான் முருகன் வள்ளியுடன் நீராடியது.

இம்மலேயில் வள்ளியின் பரணும் வள்ளிநாயகியின் கோயிலும் இருக்கின்றன.

இன்றும் பல மாதவர்கள் தங்கித் தவம் புரிகின்ருர்கள். தவம் புரிவார்க்குத் தனிமை தரும் இனிமையான திருத்தலம்.

இத்தலம் காட்பாடி—வேலூரிலிருந்து 17 மைல் வட கிழக்கிலுள்ளது. சித்தூருக்குச் செல்லும் மற்ருெரு பாதை யில் உள்ளது. பஸ் வசதியுண்டு. வழியில் திருவலம் என்று ஒரு சிவத்தலம் உளது. தேவாரம் திருப்புகழ் பாடல்

பெற்றது. பெரிய புராணத்திலும் சேக்கிழார் இத் தலத்தைக் கூறியுள்ளார்.

நீவா நதிக்கரையில் உள்ளது திருவலம். திருவலத்திலிருந்து வடக்கே 6 கல் தொலைவில் வள்ளிமலை உள்ளது.

ஆதலால் அறுமுகன் அடியார்கள், ஆயுளில் ஒருமுறையாவது வள்ளிமலை முருகனையும், வள்ளிநாயகியையும் தரிசிப்பது அவசியம்.

அங்ஙனந் தரிசித்தோர் இம்மை நலன்களை எளிதிற் பெறுவர்.

"வள்ளி படர் சாரல் வள்ளிமலை மேவு
வள்ளி மணவாளப் பெருமானே"

## 44. நன்மை செய்!

அன்பர்களே!

கடவுதல் என்றால் செலுத்துதல் என்று பொருள். உலகங்களையும், உயிர்களாகிய நம்மையும் செலுத்துகின்ற படியால் இறைவனுக்குக் கடவுள் என்று பேர் ஏற்பட்டது. நம்மையெல்லாம் செலுத்துகின்றவர் கடவுள். ஒரு வண்டியைச் செலுத்துகின்றவன் வண்டிக்குள் இருந்து செலுத்துவதுபோல் கடவுள் உயிருக்குயிராக இருந்து செலுத்துகின்றார்.

கண்ணால் காணமாட்டாமையால் கடவுள் இல்லை என்று கூறக்கூடாது. இந்த உடம்பிலேயுள்ள உயிரை நாம் எப்போதாவது கண்ணால் கண்டதுண்டா? காணமாட்டாமையால் நாங்கள் உயிரில்லாதவர்கள் என்று கூறினால் உலகம் சிரிக்குமல்லவா? உடம்புக்குள் உயிரும், உயிருக்குள் இறையும் உறைகின்றன.

ஆகவே, கடவுள் உயிர்கள் தோறும் உறைகின்றார்; ஒன்றாகி உடனாகி வேறாகியிருக்கின்றார். எவ்வுயிரும் பராபரன் சந்நிதியதாகும். ஆதலால் எல்லா உயிர்கட்கும் நாம்

நன்மையே செய்யவேண்டும். உயிர்களுக்குச் செய்யும் நன்மை கடவுள் வழிபாடாகும்.

உயிர்களுக்கு வருகின்ற இடர்களை, முடிந்தவரை நீக்கியும், நம்மை புரிந்தும் மகிழவேண்டும். அதுவே அறிவு படைத்ததன் பயனுமாகும்.

"அறிவினு ளாகுவ துண்டோ பிறிதின் நோய்
தன்னோய்போல் போற்ருக் கடை"

என்கின்ருர் திருவள்ளுவர்.

இனி, கடவுள் எங்குமிருக்கின்ருர் என்பதனையும் மறவாமல் கருத்தில் இருத்தல் வேண்டும்.

"பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரி பூரண னந்தமே"

என்கிருர் தாயுமானுர்.

இந்த எண்ணம் இடையருது உள்ளத்தில் நிலைபெற்றிருக்க வேண்டும். ஆண்டவன் நம் உள்ளத்தில் இருக்கின்ருனுதலினுலும், நாம் செய்யும் தீமைகட்குத் தண்டனை தருவோன் அவனேயாதலினுலும், நாம் அவனையன்றிப் பிரிந்திருக்க முடியாமையினுலும், நாம் தீமைகளை நினையாமலும், சொல்லாமலும், செய்யாமலும் இருக்கவேண்டும். ஜீவ சாட்சியாக இருந்து, இறைவன் நம் எண்ணங்களையெல்லாம் அறிகின்ருர். நாம் பேசும் பேச்சுக்களையெல்லாம் கேட்கின்ருர். ஆதலினுல் நாம் நல்லனவே நினைத்து, நல்லனவே செய்யவேண்டும்.

இனி நாம் பிறர்க்குத் தீங்கு செய்வோமானுல், அது நமக்கேதான் செய்கின்ரும் என்பதை மறந்துவிடக்கூடாது. பிறருக்குச் செய்யும் நன்மையும், தீமையும் நமக்குத் திரும்ப வருகின்றன.

'நன்மையுந் திமையுந் தான்தர வருமே'. வினை அறிவில்லாத சடம். ஆதலினுல் தானே வந்து நம்மைச் சாராது. நாமும் சிற்றறிவுடையோமாதலில், நாமும் செய்த வினையையறிந்து அடைய வல்லோமல்லோம். ஆதலின் முற்றறிவும்,

பேராற்றலும் படைத்த பரம்பொருளாகிய கடவுள், அவரவர்கள் செய்த வினைகளை, அவரவர்கட்குக் காலம் இடமறிந்து ஊட்டுகின்றார்.

இனி நாம் செய்த, நல்வினை தீவினை செய்த அளவே வரா. ஒன்று ஆயிரமாகப் பெருகிவரும். வயலில் இட்ட விதை ஒன்று பலவாக வருவதுபோல், வினைகளும் பன்மடங்கு வளர்ந்து வரும். இதனை திருநந்திதேவர் என்னும் கட்டுரையில் காண்க.

## 45. திருநந்திதேவர்

**மாகேஸ்வரம்** என்ற மலை மிகவும் வளமுடையது. கனி மரங்களும், பூமரங்களும், சோதி விருட்சங்களும் மிக்க அழகாக எப்போதும் பூத்துக்கொண்டும் பழுத்துக்கொண்டும் காண்பார் கண்களையும், கருத்தையும் கவர்ந்து கொள்ளும், கவினும், மகிமையும் உடையவாய் விளங்கின; சித்தரும் முத்தரும் இருடியரும் அம்மலையில் சிவத்தை நோக்கித் தவத்தைப் புரிந்துகொண்டிருப்பார்கள். நல்ல தீர்த்தங்கள் பல அமைந்திருந்தன.

இத்தகைய மாகேஸ்வர மலையிலே ஒரு மாதவ முனிவர் பன்னெடுங்காலந் தவம் புரிந்துகொண்டிருந்தார். அவருடைய தவம் அளவிடற்கரியது. ஒருசமயம் அம்முனிவர் தமது நண்பர்களுடன் உலக யாத்திரை புரிந்தார். இடையில் யமபுரம் வர நேர்ந்தது. அறக்கடவுள் முனிபுங்கவர்களை வரவேற்று உபசரித்தனர்; முனிபுங்கவர் நரகங்களைப் பார்வையிட்டு வந்தபோது, இடையில் ஒரு கல் குன்று இருந்தது.

"அறக்கடவுளே! இக் குன்று இங்கிருக்க வேண்டிய காரணம் யாது" என்று முனிபுங்கவர் வினவினர்.

அறக்கடவுள், "சுவாமீ! பூமண்டலத்தில் தாங்கள் சிறுவராக இருந்தபோது, தங்கள் திருமனையில் வந்து அமுதுண்ட சிவஞானியின் உணவுப் பாத்திரத்தில், விளையாட்டாக ஒரு சிறு கல்லை எறிந்தீர். அச் சிவஞானி, அக்கல்லை

அன்னத்துடன் சேர்த்து உண்டார். அக் கல் இங்கு வந்து, நாளும் நாளும் வளர்ந்து கொண்டிருக்கின்றது. தாங்கள் இங்கு வரும்போது இக் குன்றை உடைத்துக் கரைத்து உம்மை உண்ணுமாறு புரிவர். நல்வினையும், தீவினையும் ஒன்றுக்கு ஆயிரமாக வளருமல்லவா? ஆகவே ஞானியின் உணவில் கல்லை எறிந்த நீர், இக் கல் குன்றை உண்டு, அவ் வினையைத் தீர்க்கவேண்டும்'' என்றார்.

இச் சொற்களைக் கேட்ட முனிபுங்கவர் நடுங்கிவிட்டார். ''அறக்கடவுளே! இவ்வினை தீர வழி ஏதேனும் உளதோ?'' என்று கேட்டனர்.

அறக்கடவுள், ''அருந்தவ அண்ணலே! வினையை விதைத் தவன் வினையை யுண்பான்; தினையை விதைத்தவன் தினையை யுண்பான். இக் குன்றுக்கு நிகரான ஒரு குன்றை மண்ணுல கில் தாங்கள் கண்டு அதனை உடைத்துக் கரைத்துக் குடித் தால் இக் குன்று இங்கே கரைந்து ஒழியும்'' என்றனர்.

முனிவர் பெருமான் அறக்கடவுளிடம் விடைபெற்றுக் கொண்டு மண்ணுலகம் அடைந்தார். தாம் நரகிற் கண்ட குன்றுபோன்ற ஒரு குன்றைத் தேர்ந்து கண்டனர். அதனைச் சிறுசிறு துண்டுகளாக்கி நாடோறும் அக் கல்லைத் தூளாக்கி நீரில் கரைத்துக் குடித்துத் தமது தவச் சித்தியால் அக் குன்றை அதம் பண்ணினர். சிலையை அதஞ் செய்ததனால் **சிலாதர்** என்ற பேர் அவருக்கு ஏற்பட்டது.

பின்னொரு சமயம் அவர் யமபுரம் போய் பார்த்தனர். அக் குன்று அங்கு மறைந்துவிட்டிருப்பதைக் கண்டு மகிழ்ந் தார். திரும்பி வருங்கால், சில ஆன்மாக்கள் நரகில் கிடந்து துன்புறக் கண்டார். திருவுளம் இரங்கினர். ''நீவிர் என்ன தீவினை புரிந்தீர்கள்? இவ்வாறு கிடந்து வேதனையுறுகின்றீர் களே?'' என்று கருணையுடன் வினவினர்.

''புண்ணியவானே! பூவுலகில் எங்கள் மரபில் வந்த சிலா தன் என்பவன் திருமணமின்றியும் புதல்வர்ப் பேறு இன்றியும் பிரமசாரியாகவே இருக்கின்றான். குலமழிகின்றது. நாங்கள் நலமழிந்து நரகிடை விழுகின்றோம்'' என்றார்கள். இதைக்

கேட்ட சிலாதர், "பிதிர்க்களே! வருந்தன்மின்; சிலாதன் என்பவன் யான்தான்; உங்கள் பொருட்டு திருமணஞ்செய்து நன்மகனைப் பெறுவேன்" என்றார். உடனே அவர்கள் அந்நரகினின்றும் நீங்கி நற்கதி பெற்றார்கள்.

சிலாதர் பூவுலகம் எய்தி, உத்தம குணம் பொருந்திய **சித்திரவதியார்** என்ற பத்தினியை மணந்துகொண்டனர். மனைவியுடன் இருந்து நித்திய நைமித்திய ஒழுக்கங்களைப் பேணி நல்லறம் புரிந்தார். திருநீறும் உருத்திராக்கமும் திருவைந்தெழுத்தும் புனைந்து, சிவார்ச்சனை புரிந்து வந்தார். ஐம்பெரும் வேள்விகளையும் புரிந்து வந்தார்.

நெடுங்காலமாகியும் மகப்பேறு வாய்க்கவில்லை. ஒரு நாள் மனைவியார் அவர் திருவடியைத் தொழுது "உயிர்த் துணைவரே! நமது குலம் விளங்க ஒரு புதல்வன் நமக்குப் பிறக்கவில்லையே. என்னிருந்து என்ன பயன்? சுதானந்தமில்லார்க்கு, சதானந்தமில்லை என்பர் ஆன்றோர். ஆதலின் தங்கள் பேர் விளங்க நமக்கு ஒரு புதல்வன் உதிக்கச் சிவமூர்த்தி கருணைபுரியவில்லை. தாங்கள் சிவபூஜையில் அப்பரமபதியை வேண்டுங்கள். 'வேண்டுவோர் வேண்டுவதே ஈவான் கண்டாய்' என்றபடி நமக்கு மக்கட் பேற்றை வழங்குவார். தட்டினால்தானே கதவு திறக்கும். அழுத குழந்தைதானே பால் குடிக்கும். கேட்டால்தானே கருணாநிதி வரமருள்வார்" என்றாள்.

சிலாதர் புன்முறுவல் செய்தார். "பெண்மணி! குலம் விளங்க மைந்தன் பிறக்கவேண்டியது அவசியந்தான். ஆனால் எப்போது கிடைக்க வேண்டுமோ அப்போதுதானே கிடைக்கும். இறைவனுக்கு நமது குறை தெரியாதா? அவர் திருவுள்ளம் அறியாதது ஒன்று உண்டோ? உனக்கு ஏன் இந்த அறியாமை? எல்லாம் அறிந்தவர் சிவபெருமான்; இரக்கமே வடிவானவர்; எல்லாம் செய்ய வல்லவர். அவர் எல்லாம் அருளவல்லவர். ஆகவே காலமறிந்து அருளுவர். கவலை வேண்டாம்" என்றார்.

"பெருமானே! தாங்கள் கூறுவது நியாயமே. எனினும், தவத்தளவேயாகுமாம் தான் பெற்ற செல்வம். மனந்

தூயார்க்கு எச்சம் நன்ருகும்" என்றெல்லாம் நீதிவாக்கியங் கள் தெரிவிக்கின்றன. ஆகவே நற்றவஞ் செய்தால், அத் தவப்பயனுகக் கற்றவர் புகழும் கான்முளே உதிப்பான்" என்ற சித்திரவதி செப்பினுள்.

மதிநலம் மிகுந்த மனேவியின் அறவுரையைக் கேட்ட சிலாதர், "அவ்வண்ணமே அரிய தவஞ் செய்வேன்" என்ருர். திருநீற்றை உடம்பெல்லாம் பூசிக்கொண்டார். ஆயிரம் உருத்திராக்க மணிந்தார். வேனிற்காலத்தில் வெய்யிலிலும், மாரிக்காலத்தில் வெட்டவெளியிலும், பனிக்காலத்தில் நீரிலும், காயும் கனியுமின்றியும், நீரும் காற்றும் இன்றியும், ஒரு காலில் நின்று, கரங்களே உயரக்கூப்பி, ஒருமைப்பட்ட மனத்துடன், திரு ஐந்தெழுத்தை ஓதிப் பல்லாண்டு தவம் புரிந்தனர்.

சிவபெருமான் விடையின்மீது தோன்றி அவருக்குக் காட்சியளித்து "அன்பனே என்ன வரம் வேண்டும்? கேள். அருள்புரிவோம்" என்று அருளிச் செய்தார்.

சிலாதர் "கண்ணுதற் கடவுளே! என் குலமும் உலகமும் உய்யவும், சிவநெறியீடேறவும், இறவாத் தன்மையுள்ள ஒரு புதல்வனே யருள் புரியவேண்டும்" என்ருர்.

உமாபதி, "அன்பனே! நீ ஸ்ரீசைலமலே சென்று புத்திர காமேஷ்டியென்ற வேள்வி புரியத் தொடங்குவாய்; நமக்குச் சமானமான சிறந்த புதல்வன் தோன்றுவான்; அவனுல் உன் குலம் புகழ் அனேத்தும் வாழும்" என்று கருணே புரிந்து கரந்தருளினுர்.

சிலாதர், சிவாக்ஞையைச் சிரமேற்கொண்டார். மனேவி யாருடன் திருப்பருப்பதஞ் சேர்ந்தார். அங்கு அநேக முனி வர்களுடன் வேள்வி புரியத் தொடங்கினுர். இதனே இதனே, இப்படி இப்படிச் செய்யவேண்டும் என்று திட்டமிட்டார். வேள்விக்கு உரிய சாதனங்களே யெல்லாம் ஆயத்தஞ் செய் தார். வைநச வாலகில்ய முனிவர்களே ரித்விக்குகளாகவும், குணி என்பவரை பிரமாவாகவும், பார்க்கவரை ஹோதா வாகவும், தும்புருவை உத்காதாவாகவும், அநமித்திரரைச்

சதசியராகவும் நியமித்தார். பல தானங்களையும் புரிந்தார். தீட்சை செய்து நியமத்துடன் ஒழுகினார். நன்னாளில் பொற் கொழு பூட்டிய கலப்பையைப் பிடித்து யாக பூமியை உழு தார். பொற்கொழுவில் ஒரு தங்கப்பெட்டி வெளிப் பட்டது. அப்பெட்டியை அங்குள்ள முனிவர்கள் அனைவருங் கண்டு அதிசயமுற்றார்கள். சிலாதர், சிவநாமஞ் சொல்லிப் பெட்டியைத் திறந்தார். கோடி சூரிய ஒளியுடன், எல்லா அணிகலங்களையும் அணிந்த ஓர் இளங்குமரன், அப் பெட்டி யில் இருக்கக் கண்டார். மலர் மழை சிந்தியது. வேதவொலி முழங்கியது. அமர துந்துபி ஒலித்தது.

புதல்வனைச் சிலாதர் எடுத்து உச்சிமோந்து முத்தமிட்டு மார்புடன் அணைத்து ஆனந்தக் கடலில் மூழ்கினார். மனைவி யார் கரத்தில் அளித்தார். சித்திரவதியார் மட்டற்ற மகிழ்ச்சியுற்றனர். மகனை மார்போடு அணைத்தனர். பால் பெருகியது. மகனுக்குப் பாலூட்டினர், தாலாட்டினர். அருமை பாராட்டினர்.

நான்முகக் கடவுள் இந்திரனை நோக்கி "இப் புதல்வன் எல்லோருக்கும் ஆனந்தத்தை யருளுவதனால் **நந்தீசன்** என்று அழைக்கப் பெறுவான்" என்றனர். "சிலாதர் மக னாதலின் இவன் **சைலாதி** என்று விளங்குவான்" என்று முனிகணங்கள் வாழ்த்தினார்கள்.

சிலாதர் வேள்வியை முற்றுவித்து, முனிவர்களை உப சரித்து விடை தந்தனுப்பினார். நந்தீசர் இனிது வளர்ந்தார்; உபநயனம் நிகழப்பெற்றார்; பிதாவிடம் விடை பெற்றுக் கொண்டு, பன்னீராண்டு குருகுல வாசஞ்செய்து, வேதா மங்களை ஐயந்திரிபு மயக்கமற ஓதியுணர்ந்தார். குருவருளும் திருவருளும் பெற்றுப் பிதா மாதாக்கள்பால் வந்து அஞ்சலி செய்தார்.

தாய் தந்தையர் தனயனை நோக்கி இன்புற்றார்கள். "சுந்தர மிகுந்த மைந்தனே! இனி நீ ஒரு குலக்கொடியை மணந்து குலத்தினை வளர்த்து எமக்கு மகிழ்ச்சியைத் தருவாய்" என்றார்கள். நந்திதேவர், "தாய்தந்தையரே! திருமணமா? பிறவிப் பெருங்கடலைக் கடக்க விரும்பிய

எனக்குத் திருமணம் எற்றுக்கு? நீந்த முயல்பவன், குழவிக் கல்லே இடுப்பில் கட்டிக் கொள்ளலாமா? பறக்க விரும்பும் பறவை சிறகைத் துணித்துக் கொள்ளலாமா? இது என்ன விந்தை? அன்புள்ள தத்தையே! தாயே! வேண்டாம்.

"மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்ருர்க்கு உடம்பு மிகை."

என்றபடி, உடம்பே எனக்கு மிகையாகத் தோன்றுகின்றது. அறுபகை யொழித்து ஐவரை அறுவராக்கி, பிறவா நலம் பெறுவேன். அரிய இப்பிறப்பை அவமே கழிக்கலாமா?

ஓதிநூல் கோடி யுணர்ந்தும் உணரார்கள்
பாதி வெண்பாவில் பகரக் கேள்—ஆதி
சிவமே பொருள் அதனைச் சேருநெறி யன்பே
பவமே பகையருளால் பார்.

எனவே நான் ஒரு கணத்தையும் வீணுக்கமாட்டேன். சிவ பெருமானே வேண்டித் தவஞ் செய்யப் போகின்றேன்" என்ருர்.

தாய் தந்தையர் அதுகேட்டு, ஒருபுறம் மகிழ்ச்சியும், மற் ெருருபுறம் வருத்தமும் அடைந்தார்கள். "எங்கள் மாதவத் தால் வந்து பிறந்த மணிவிளக்கே! தவத்திற்கு இது பருவ மன்று. உன் இளமை மிக்க திருமேனி வருந்துமே. நாங்கள் உன்னைப் பெறுவதற்குப் பலப்பல தவம் புரிந்தோம். கண் மணியனைய கான்முளையே! திருமணம் புரிந்து சிலகாலம் வாழ்ந்து பின்னர் தவஞ்செய்; இல்லற தருமம் குற்ற முடையதன்று" என்ருர்கள்.

நந்தீசர்:. "அன்புமிக்க அன்னையே! அருமைப் பிதாவே! உமது அன்புக்கு மகிழ்ச்சி, இந்த உடம்பு நிலை யில்லாதது. எந்தக் கணத்தில் மரணம் வருமோ? நிச்ச யிக்கமுடியாது. நீரிற் குமிழிக்கு நிகரானது இந்த உடம்பு. தவிர இளமையில் செய்யும் தவம், புதிய ஆடையில் சாயம் தோய்ப்பது போன்றது. ஆசாபாசம் இன்றி, அரன் திரு வடியை நினைத்துத் தவஞ் செய்தால் அருள் நலம் உண்டா கும். அதுவே பிறவிப் பயனுகும். சில காலஞ் சென்ருல்

மூப்பு வரும். பொறி புலன்கள் சோர்வு அடைந்துவிடும். அப்போது உறுதியாகத் தவஞ் செய்ய முடியாது.

"குந்தி நடந்து குனிந்தொருகை கோலூன்றி
நொந்திருமி ஏங்கி நுரைத்தேறி—வந்துந்தி
ஐயாறு வாயாறு பாயாமுன் நெஞ்சமே
ஐயாறு வாயால் அழை"

என்று ஆன்றோர் கூறுவர்.

சிவபெருமான் கருணை எல்லா நலன்களையுஞ் செய்யும். அக்கருணை மிகவும் அற்புத ஆற்றலுடையது. கரும்பையும் வண்டையும் அரும்பையுங் கொண்டு மன்மதன் எல்லோரையும் வென்று மூன்று உலகங்களிலும் ஆட்சிபுரிவது சிவன் கருணையாலன்றோ? ஈசன் கருணை பெற்றால் ஒரு சிறு துரும்பும் அண்ட கோடிகளைப் படைத்துங் காத்தும் துடைத்தும் ஆணை செலுத்தும்.

கரும்புஞ் சுரும்பும் அரும்பும் பொருபடைக் காமர் வில்வேள்
இரும்புங் கரைந்துருகச் செய்யுமால் இறும் பூதிதன்றே
விரும்பும் பெரும்புலியூர் எம்பிரான் அருள் மேவில்ஒரு
துரும்பும் படைத் தழிக்கும் அகிலாண்டத் தொகுதியையே.

ஆதலால் சிவபெருமான் திருக் கருணையைப் பெறுவதுவே இப்பிறப்பின் பயன். அதனைப் பெற முயலாது நான் ஒரு கணமுந் தரியேன். நீவிர் நெஞ்சம் கொஞ்சமும் வருந்தாமல், மகிழ்ச்சியுடன் என்னை ஆசீர்வதித்து அனுப்புங்கள்" என்றார்.

தாய் தந்தையர் மறுத்துரைக்க மாட்டாதவர்களாய் மனம் மறுகி, உள்ளம் உருகிக் கண்ணீர் பெருக, மகனை வாழ்த்தி யனுப்பினார்கள்.

நந்தீசர் தவக்கோலம் புனைந்தார். உணவையும், உறக்கத்தையுந் துறந்தார். மனத்தை யடக்கினார். அசையாத அன்புடன் அரனாரை வேண்டி, நூறு வருடம் பஞ்சாக்கினிக்கு இடையில் நின்று, கடுந் தவம் புரிந்தார். அவ

ருடைய, அரிய பெரிய தவத்தைக் கண்டு அமரரும், முனி வரும் அதிசயித்தார்கள். தவவொளி விண்ணுலகத்தையும் ஒளிமயமாக்கியது. எது குறித்து இத் தவத்தை இவர் புரிகின்ருரோ என்று கருதி மாலயனுதி வானவர் நடுங்கி ஞர்கள். தங்கள் பதவிகளைக் குறித்துத் தவம் புரிவாராயின் தம் பதம் போகுமே என்று கவன்றனர்.

வெள்ளிமலை போன்ற விடைமீது வெள்ளை நீறணிந்த விமலன் தோன்றியருளினர். "நந்தீ! உன் தவத்திற்கு உவந்தோம். வேண்டிய வரங்கேள். தருவோம்" என்று அருளிச் செய்தார்.

மூவருந் தேவருங் காணுத முழுமுதற் கடவுளைக் கண்ட நந்தீசர், ஆனந்தபரவசரானுர்; குதித்தார்; அழுதார்; தொழுதார்; ஆடினுர்; பாடினுர்; பித்தனைப் போல ஓடினுர். பன்முறை பணிந்தார். "கருணைக்கடலே! காம தகனு? அரவாபரணு! திரிபுராந்தகா! தேவாதி தேவா! சந்திர சேகரா! ஆலமுண்ட நீலகண்ட நிமலனே! உமாமகேச் சுரா! ஏழையேன் என்னென்று துதிசெய்வேன். வேதங் கட்கும் எட்டாத வித்தகனே! எனக்கு வேண்டிய பொருள் யாதொன்றுமில்லை. உமது பாத கமலத்தில் மாருத அன்பு ஒன்றே வேண்டும். திருநீற்றிலும், உருத்திராக்கத்திலும், சிவபூஜையிலும் நீங்காத ஆர்வம் வேண்டும். வேறென்றும் வேண்டாம்" என்ருர். இதனைக் கேட்ட ஏனைய தேவர்கள், தம் பதவிக்கு ஆபத்தில்லை யென்று மகிழ்ந்தார்கள். சிவ பெருமான் அகமகிழ்ந்து "அவ்வாறே யாகுக" என்று அருள்புரிந்து மறைந்தருளினர்.

நந்தீசர் மீளவும் உறுதியுடன் ஒரு நூறு வருடம் ஒப்பற்ற தவம் புரிந்தார். அத் தவத்தால் உலகங்கள் நடுங்கின. அத் தவத்திற்கு இரங்கிய சிவபெருமான் காட்சியளித்து, "நந்தீ! உனது அரிய தவத்தைக் கண்டு நாம் மிகவும் மகிழ்கின்ருேம். நீ கணுதிபனுய் விளங்குவாய். என் ஆணை எங்கும் நடப்பது போல், உன் ஆணையும் நடக்குமாறு அதிகார சக்தியையும் தந்தோம். ஆகவே **அதிகாரநந்தி**யாய் விளங்குதி" என்று கருணை புரிந்தார்.

நந்தீசர், கண்ணுதற் கடவுளைப் பலமுறை பணிந்து, "அரவாபரணா! அருளாரமுதே! வணக்கம்; வணக்கம். இருவினையின் வழி, ஆன்மாக்களுக்குத் தேவரீரது ஆணை நடப்பதுவே அமையும். சிறியேனுடைய ஆணையும் வேண்டுமோ? என்பால் தேவரீர் வைத்திருக்கும் கருணை, உலகம் உணரும்பொருட்டு சிவபூஜை, உருத்திர ஜெபம், திருநீறுங் கண்டிகையும் புனைதல் ஆகிய இவைகட்கு வேறான பூஜை, செபம், புனைவு செய்பவர் எவராயினும் அவர்களைத் தண்டிக்கவும் ஆற்றலுடையதாக அந்த ஆணை அமைவதாக" என்று வேண்டினார். "அவ்வாறே யாகுக" என்று கருணைபுரிந்து ஈசர் மறைந்தருளினார்.

நந்தீசருக்குத் தவத்திலேயுள்ள சுவை, வேறு எதிலும் உண்டாகவில்லை. தவமே தனமாகக் கருதினார். மறுபடியும் சிவபிரானை வேண்டி நூறு வருடம் தவம் புரிந்தனர். கண்ணுதற் கடவுள் கருணைமீக் கூர்ந்து காட்சியளித்தனர். நந்தீசர் பெருமானுடைய அடிமலர்மீது வீழ்ந்து கைகூப்பி நின்று, "திருமால் கண்மலரால் அர்ச்சித்த திருவடியையுடையவரே போற்றி! அமரர் உய்ய ஆலமுண்ட அண்ணலே போற்றி! உலகையழிக்க வந்த கங்காநதியைத் தாங்கிச் சடையில் அடக்கி ஆன்மாக்களுக்கு அருள்புரிந்த ஆதிமூர்த்தியே போற்றி! உயிர்கள் தோறும் இருந்து இன்னருள்புரியும் ஈசனே போற்றி! உமது திருவருளைப் பெற்றல்லவா திரிமூர்த்திகளும் முத்தொழில் புரிகின்றனர். ஆ! ஆ! தேவரீரது திருவருளின் பெருமையை அறியவல்லார் யாவர்? அதனை உன்னும்போதெல்லாம் உள்ளம் உருகி நீராய் ஓடுகின்றதே" என்று துதிசெய்தனர்.

சிவபெருமான், "நந்தீ! உன்னைப்போல் பயன் கருதாது அன்பையே கருதித் தவம்புரிந்தார் வேறு ஒருவருமில்லை. நீ எம்மைப்போல் நித்தியனாக இருந்து, யாவராலும் வணங்கப் பெறுவாய். உனக்குத் திவ்விய வடிவும், சடைமுடியும், சந்திர கலையும், நீலகண்டமும், மூன்று கண்களும், நான்குதோள்களும், மான் மழுவும், யானையுரியும், நமது பூரண அருளும் அளித்தோம்" என்று திருவாய் மலர்ந்தருளினார். மாலயனாதி வானவர்களைச் சிவபெருமான் பார்த்து, "தேவர்களே! யாம்

இந்த நந்தீசனேச் சகல கணுதிபர்களுக்கும் அதிபனுகச் செய்தோம். விநாயகன் முருகனேப்போல் இவனும் எமக்கு மகன். எல்லாத் தேவர்களாலும் இவன் பூசிக்கத் தக்கவன். இனி சிவஞானத்தைப் போதிப்பதற்கு இவனே ஆசிரியன், எமக்கு இவனே திருமேனி'' என்று திருவாய் மலர்ந்தருளினுர்.

பின்னர் அரம்பையர் ஆடவும், நாரதாதியர் பாடவும், தேவதுந்துபி முழங்கவும் மலர்மாரி பொழியவும் பிதுர்த் தேவரது மனத்தில் உதித்த சுயஜ்ஞை என்ற கன்னிகையை நந்தீசருக்குத் திருமணம் செய்வித்தனர். உலகில் உள்ள ஆன்மாக்கள் யாவும் அத் திருமணத்தைக் கண்டு உவகையுற்றன. சிவபெருமானும், உமாதேவியும், நந்தியெம் பெருமானேயும் சுயஜ்ஞா தேவியையும், தமது மகனும் மருமகளும் எனக் கொண்டு, அவ்விருவரை அழைத்துக்கொண்டு திருக்கயிலேயம்பதி சென்றனர். திருக்கயிலாயத்தில் நந்திதேவன் வேத்திரப் படை தாங்கி விடையவர் திருச் சந்நிதியில் நின்று மகிழ்வாராயினுர்.

அங்கணன் கயிலே காக்கும் அகம்படித் தொழின்மை பூண்டு
நங்குரு மரபிற் கெல்லா முதற்குரு நாத னுகி
பங்கயந் துளவ நாறும் வேத்திரப் படை பொறுத்த
செங்கையெம் பெருமான் நந்தி சீரடிக் கமலம் போற்றி.

## 46. சிரிக்கின்ருர்கள்

ஒருவனேக் கண்டு ஒருவன் சிரிக்கின்ருன் என்ருல், அதற்குத் தகுந்த காரணம் இருக்கவேண்டும்.

நம்மைக் கண்டு பெரியவர்கள் சிரிக்கின்ருர்கள்!

ஒரு சிறு குழந்தை மலசலத்தைக் கழித்து அவற்றை உடம்பில் பூசிக்கொண்டு விளேயாடுமாளுல், அக்குழந்தையைக் கண்டு சிரிப்போமல்லவா? சிரிக்கவும் செய்வோம்; வெறுக்கவும் செய்வோம்.

ஒரு சிறுவன், அசுத்தமான நீர் தேங்கியிருக்கும் நாற்றச் சேற்றில் விளேயாட்டுக்குரிய குண்டு விழுந்து விட்டதை

எடுத்துத் துடைத்துக்கொண்டு, குண்டு விளையாடுவனுயின் அந்த அசுத்தத்தை யுணராத அவன் அறியாமையைக் கண்டு நாம் சிரிப்போம்.

நாம், நாளும் நாளும் உடம்பை வளர்க்கின்ருேம்; செல்வத்தை வளர்க்கின்ருேம்; உத்யோகத்தை வளர்க்கின்ருேம். வீடு நிலபுலங்களைப் பெருக்கிக் கொள்ளுகின்ருேம்; ஆனல் நமது குணங்களை வளர்க்கின்ருேமா? அதுதான் இல்லை.

இராமாயணத்தில் வரும் பரதரைப்பற்றி இங்கு நினைவு கூர்வோம். இராமாயணமாகிய காவியத்துக்கு நாயகர் ஸ்ரீராமர். கதாநாயகனுக்கு மேற்பட்ட ஒரு பாத்திரம், அந்தக் கதையில் இருக்கக் கூடாது. ஆனல் இந்த விதிக்கு விலக்காக, பரதர் இராமரினும் மேற்பட்டு விளங்கினர்.

அயோத்தியிலே, கோசலையின் திருவுதரத்திலே, இராமர் சித்திரை மாதம் நவமி திதி, புனர்ப்பூச நட்சத்திரத்தில் கார்மேக வண்ணராக அவதரித்தார்.

ஒருபகல் நிலமெலாம் உதரத்துள் பொதிந்து
அருமறைக் குணர்வறும் அவனை அஞ்சனக்
கருமுகில் கொழுந் தெழில் காட்டு ஞ்சோதியைத்
திருவுறப் பயந்தனள் திறங்கொள் கோசலை.

அதற்கு அடுத்த நாள் தசமி திதியில், பூச நட்சத்திரத்தில் மரகத வண்ணராகப் பரதர் அவதரித்தார்.

பரதர் பிறக்கும்போது, இராமருக்கு நூறு குணம் என்ருல் பரதருக்கும் நூறு குணம் இருந்தது. இராமருக்கு 100 பரதருக்கு 99 என்று இல்லை. சமமான குணத்துடன்தான் பரதர் தோன்றினர். இதனை யார் பார்த்தது? அப்போது நேரே பார்த்த விசுவாமித்திரர் ஜனக மன்னனிடம் கூறுகின்ருர்.

தள்ளரிய பெருநீதி தனியாறு புகமண்டும்
பள்ளமெனுந் தகையானைப் பரதனெனும்
பெயரானை
எள்ளரிய குணத்தாலும் எழிலாலும் இவ்விருந்த
வள்ளலையே யனையானைக் கேகயர்கோன்
மகள்பயந்தாள்.

இராகவனுடைய குணத்துக்குச் சமானமுள்ள பரதனைக் கைகேயி பெற்ருள்.

உயர்ந்த நீதியென்ற பெரிய நதி தங்குகின்ற புள்ளமாம். பரதர் மிகப் பெரிய குணக்கடல்; அறத்தின் உருவம் அவர். அன்பின் சிகரம்; தியாகத்தின் கருவூலம்.

ஒரு மனிதனுக்குக் கல்யாணத்துக்குமுன் இருந்த குணங்கள், கல்யாணத்துக்குபின் காணப்பட மாட்டா. இது தான் உலகியற்கை.

பரதருக்குத் திருமணம் ஆனபின் மூன்று மடங்கு குணங்கள் வளர்ந்தன. இதனை யார் கண்டது? இராமனுடைய தாய் கௌசலை கூறுகின்ருள்,

தாயாரிடம் வந்த இராமர், "அம்மா! இந்த அரசு என் தம்பி பரதனுக்கு" என்ருர்.

அப்போது கௌசலை கூறுகின்ருள்.

"மகனே! இந்த மநுகுலத்து வழக்கம் அரசு மூத்தவனுக்குத் தான் உரியது. ஆனுல், பரதன் உன்னைவிட மூன்று மடங்கு நல்லவன்" என்ருள்.

"முறைமையன் றென்ப தொன்றுண்டு மும்மையின்
நிறைகுணத்தவன் நின்னிலும் நல்லனுல்"

| | |
|---|---|
| இப்போது இராமருக்கு | 100 குணம் |
| பரதருக்கு | 300 குணம் |

இப்படி மூன்று மடங்கு பரதருடைய குணம் வளர்ந்தது.

இந்த நிகழ்ச்சிக்குப் பதினைந்து தினங்களுக்குப்பின், பரதருடைய குணம், சூருவளிக்காற்று வேகத்தில் ஆயிரம் மடங்கு வளர்ந்துவிட்டது.

தாய் வரம்வேண்ட, தந்தை யரசாட்சியைத் தர, அந்த மாபெரும் பதவியைத் துகளாக எண்ணித் துறந்து, அழுத கண்ணும் தொழுத கையுமாகப் பரதர் கானகம் போனுர். வழியில் இராம பக்தன் குகன் சந்திக்கின்ருன். பரதருடைய துறவுக்கோலத்தையும் தியாக சீலத்தையுங் காண்கின்ருன்.

சிறிய பதவிகட்குப் பஞ்சு படாதபாடு படுகின்றார்கள் பலர். பெரிய பதவியைக் கந்தல் உடையைப்போல் தூக்கி எறிந்துவரும் பரதருடைய பரம கல்யாண குண நலனை நோக்கி விம்மிதம் அடைகின்றான் குகன். அவனுக்குக் கண்களையே நம்பமுடியவில்லை. கண்களை அகல மலர்த்திப் பல முறை பார்க்கின்றான். அடங்காத ஆச்சரியம். அவன் வாக்கிலிருந்து அப்போது புறப்பட்ட அருமை வாக்கியம் இது.

தாயுரை கொண்டு தாதை உதவிய தரணிதன்னைத்
தீவினை என்ன நீக்கிச் சிந்தனை முகத்தில் தேக்கிப்
போயினை என்ற போழ்து புகழினோய் தன்மை
கண்டால்
ஆயிரம் ராமர் நின்கேழ் ஆவரோ தெரியிலம்மா.

எனவே, தியாக சீலத்தால், பரதர் இராமரைப் பார்க்கிலும் ஆயிரம் மடங்கு குணநலத்தால் வளர்ந்துவிட்டார். அம்மட்டோடு அவர் அமைந்துவிடவில்லை.

பெரும் பணக்காரர்கள், இருக்கின்ற பணம் போதும் என்று சும்மா இருக்கின்றார்களா? மேலும் மேலும், நல்வழியிலும் அல்வழியிலும் பணத்தினை, இரவு பகலாக ஈட்டிக் கொண்டேயிருக்கின்றார்கள்.

அதுபோல் பரதர், மேனும் மேலும் நற்குணங்களை வளர்த்துக்கொண்டேயிருக்கின்றார்.

நந்திக் கிராமத்தில் பாதுகைக்குப் பட்டாபிஷேகம் புரிந்து, பாதுகையை வழிபட்டுக் கொண்டு, பதினான்கு ஆண்டுகள் கடுந்தவம் புரிந்தார்.

இந்திரியங்களை அவித்தார். இரவுபகல் ஒழியாது அவருடைய கண்களில் நீர் பெருகியது. இராமரை உன்னுந்தோறும் உன்னுந்தொறும் உள்ளம் உருகியது. நோக்கில் தென் திசையல்லது வேறு திசை நோக்காது, வெறுந்தரையில் படுத்து, துன்பத்தை ஒரு வடிவமாக எழுதிவைத்தது போது இருந்தார் பரதர்.

இராமர் காடு சென்றது மாசி மாதம் சுக்லபட்சத்துப் பஞ்சமி. 14 ஆண்டுகள் கழிந்தன. குறிப்பிட்ட நாளில்

இராமர் வரவில்லை; பரதர் தீ மூட்டினார். அதில் வீழ்ந்து இறந்துபோகத் துணிந்தார். நெருப்பு விண்ணளவும் கொழுந்துவிட்டு எரிகின்றது. பயங்கரமான அந்த நெருப்புக் குண்டத்தைப் பரதர் வலமாக வருகின்றார்.

இதனையறிந்த கௌசலா தேவி ஓடோடி வந்தாள். "மகனே! பரதா! உன் உயிர் பிரிந்தால், உலகத்தில் தருமமே யிருக்காது. இன்று வரவில்லையாயின், இராமன் நாளை வருவான். நீ அவசரப்பட்டு உயிரை விடாதே" என்று கூறினாள். அப்போது, கோசலை கூறுகின்றாள். முன் மூன்று மடங்கு குணத்தால் உயர்ந்தவன் பரதன் என்று கூறிய அவள், இப்போது கோடி கோடி மடங்கு பரதர் உயர்ந்தவர் என்று கூறுகின்றான்.

எண்ணில் கோடி இராமர்கள் என்னினும்
அண்ணல் நின்னருளுக்கரு காவரோ
புண்ணி யம்எனும் நின்னுயிர் போயினால்
மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ?

எண்ண முடியாத கோடிக்கணக்கில், குணநலங்களில் உயர்ந்துவிட்டார் பரதர்.

இவ்வாறு, ஒவ்வொரு மனிதனும் தத்தங் குணங்களை வளர்க்கவேண்டும். பணத்தை வளர்க்கின்றார்களே யன்றி, குணத்தை வளர்க்கின்றார்களில்லை.

ஒரு பெரியவர், தன் நண்பருடைய இல்லத்துக்குச் சென்றார். பெரியவரை அந்த இல்லத்தில் உள்ள எல்லோரும் வணங்கினார்கள். அங்கு ஐந்து வயதுச் சிறுவன் ஒருவன் நின்று கொண்டிருந்தான்.

"இவன் பெயர் யாது?" என்று பெரியவர் கேட்டார். நண்பர், இவன் என் மகன்தான். இவன் பெயர் மலையப்பன் என்றார்.

பெரியவர், "தம்பி! நீ பள்ளிக்கூடம் போகின்றாயா? ஏதாவது படி பார்ப்போம்" என்றார்.

மலையப்பன் அரிச்சுவடு எடுத்து மழலை மொழியால் "அ...ரி" "ஆ...னை"! "ஆ...டு" "ட...ப்...பி" "மா...டு!"

"எ...லி" "ஏ...ணி" என்று எழுத்துக்களைக் கூட்டிப் படித் தான்.

பெரியவர் "பேஷ், நன்ருகப் படிக்கின்ருய். இந்தா பண்டம் வாங்கிச் சாப்பிடு" என்று ஒரு ரூபாய் பரிசு தந் தார்.

பெரியவர் 12 வருடங்கட்குப் பின் அந்த வீட்டுக்குச் சென்ருர். முன்போல் எல்லோரும் அவரை வீழ்ந்து வணங் கினர்கள். மலையப்பனும் வணங்கி நின்ருன். அவனுக்கு இப்போது வயது 17.

பெரியவர் மலையப்பனை அன்புடன் பார்த்து "அப்பா! மலையப்பா, நீ நன்கு படிக்கிருயா? ஏதாவது படி" என்ருர்.

மலையப்பன் ஓடி, தன் புத்தகத்தைக் கொணர்ந்து படிக் கத் தொடங்கினுன்.

"அ...ரி""ஆ...னை" "ஆ...டு" "ட...ப்...பி""மா...டு" "எ...லி" "ஏ...ணி" என்று எழுத்தைக் கூட்டித் தடுமாறிக் கொண்டு படித்தான்.

இதைக்கேட்ட பெரியவர் பேஷ் என்ரு கூறுவர்? அவன் அசட்டுத் தன்மையைப் பார்த்துச் சிரித்தார். "அட அறி யாமைப் பிண்டமே! மக்கு மகிஷமே! பன்னிரு ஆண்டுகட்கு முன் படித்தது போலவே எழுத்தைக் கூட்டிப் படிக்கின் றனையே? உனக்கு இப்போது வயது பதினேழு ஆயிற்றே? உன் கல்வியில் ஒரு அங்குலம்கூட முன்னேற வில்லையே? இந்த நல்ல குடும்பத்தில் நீ ஏன் பிறந்தாய்? உன்னுல் இந்தக் குடும்பம் முன்னேறுமா? நீ பிறவாமல் இருந்தாலே நன்ருக இருக்குமே?" என்று எண்ணிச் சிரித் தார்.

இதுபோல் நாம் பன்னிரு ஆண்டுகட்கு அல்லது 25 ஆண்டுகட்குமுன் இருந்ததுபோல் — வாழ்ந்ததுபோல் — எழுந்ததும் காப்பி குடிப்பதும், செய்தித்தாள் படிப்பதும், சீட்டு விளையாடுவதும், வீண்வார்த்தை பேசுவதுமாக இருந்

தால்—இறைவனை நோக்கி ஜெபம், தவம், தியானம், பாரா யணம் முதலிய ஆத்மசாதனைகள் செய்யாமல் அன்று இருந் ததுபோலவே இன்றும் இருந்தால், மகான்கள் நம்மைக் கண்டு சிரிக்கின்றார்கள். மனம் நொந்து, “அட அறிவிலி களே! நீங்கள் ஏன் இந்தப் புண்ணிய பாரதபூமியில் பிறந் தீர்கள்? என்பர்.

தோன்றில் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலில் தோன்றாமை நன்று.

நீங்கள் பிறவாமல் இருந்தால் நன்றாயிருந்திருக்குமே? முனிவர்களும், சித்தர்களும், பக்தர்களும், முத்தர்களும், சிவஞானிகளும், தவசீலர்களும் அவதரித்த புண்ணிய பூமி யாயிற்றே இது. இத்தகு சந்தனத் தருக்கள் தோன்றும் இந்த ஞானபூமியில் நீங்கள் சப்பாத்திக் கள்ளி, கொடிக் கள்ளி, திருகு கள்ளிகளாக ஏன் முளைத்தீர்கள்? என்று நம் பொருட்டு வருந்திச் சிரிக்கின்றார்கள்?

## 47. குரு நிந்தை கொடிது

குரு—மன இருளைப் போக்கும் ஞான விளக்கு போன் றவர். குருநாதர் அறிவு நலத்தை அள்ளி வழங்குபவர். தாய் தந்தையர் தருவது உணவு; குருநாதர் தருவது உணர்வு. உணவு எத்துணை உயர்ந்ததாயினும் 5 மணி நேரத் தில் செரித்துவிடும். குரு தரும் உணர்வு பல பிறவிகட்கும் தொடர்ந்து வந்து உதவும்.

ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்
கெழுமையும் ஏமாப் புடைத்து.

செல்வம் தந்தை தருகின்றார். குருமூர்த்தி கல்வியைத் தருகின்றார். செல்வத்தில் பல குற்றங்கள் அடங்கியிருக் கும். ஒரு இடம் மேடானால் பல இடங்கள் பள்ளமாகும். இதுபோல் ஒருவன் பணக்காரனாக ஆவானாயின், பலர் ஏழை யாக வேண்டும். பலர் ஏழையானாலன்றி, ஒருவன் செல்வச் சீமானாக ஆக முடியாது. பலரை உழைக்க வைத்துத்தான்,

ஒருவன் தனவந்தனுக ஆகவேண்டும். பொய் புனை சுருட்டு முதலிய பிழைகள் பல செய்துதான், ஒருவன் பெரும் பணக்காரனுக ஆகின்ருன். ஆனுல் கல்விச் செல்வம் அப் படித்தன்று. பலரை மூடனுக்கி ஒருவன் அறிஞனுக ஆக வேண்டும் என்ற நியதி கிடையாது. நெல் நிலத்திலிருந்து விளைவதுபோல், கல்வி கற்பதனுல் அறிவுச்செல்வம் தானே விளைகின்றது. ஆதலால், செல்வத்திலும் மிக மிக உயர் வுடையது கல்வி நலம் எனவுணர்க. இத்தகைய கல்விப் பொருளை நமக்கு வழங்குபவர் குருநாதர்.

தன்பால் வேலை செய்யும் ஒருவன், முதலாளியாக ஆவதை ஒருவனும் விரும்பமாட்டான். தன்பால் கற்கும் மாணவன் சிறந்த அறிஞனுக ஆவதைக் கண்டு ஆசிரியர் பெருமகிழ்ச்சி யுறுகின்ருர். ஒவ்வொரு மாணவனும் பெரும் பதவிக்கு வரவேண்டும் என்று ஆசிரியர் ஆசைப்படுகின்ருர். ஆனபடியால் குருநாதனைத் தெய்வமாகக் கருதவேண்டும்.

"குருவை மனிதனுக நினைப்பவன் பெற்ற புதல்வியை நான் மணந்துகொள்ள மாட்டேன்" என்று தன் தந்தை யிடம் கூறினுர் மிருககண்டூய் என்ற முனிவர்.

"எழுத்தறிவித்தவன் இறைவனுகும்" என்று ஆன்ருேர் கூறுவர்.

எப்போதுந் தப்பாது குருநாதனை வழிபட வேண்டும். இதற்கு மாருகக் குருவை இகழ்வதும், அவமதிப்பதும், அவ ருக்கு இடர்புரிவதும், பெரும் பாவமாகும். பாவங்களுக் கெல்லாம் தலையாய பாவமாகும் குருநிந்தை. குருநிந்தை செய்பவன் கொடிய நரகமடைவான்.

வடக்கே வேதிய குலத்தில் உதித்தவர் குமாரிலபட்டர் என்பவர். இவருக்குப் பட்டபாதர், பட்ட குமாரர் முத லிய பெயர்களுண்டு. இவர் "பாட்டப் பிரதீபம்", "குமா ரிலம்" முதலிய நூல்கள் பல செய்தவர். இவர் கடவுள் கொள்கையை யுடன்படாத புத்தர்களை, அடியுடன் விலக்கத் திருவுளங் கொண்டார். இவருடைய சீடர் "மண்டன மிசிரர்" என்ற மிகப் புகழ் பெற்றவர்.

ஒரு மதத்தைக் கண்டிக்க வேண்டுமாயின் அம்மத நூலை நன்கு பயிலுதல் வேண்டும். ஆனபடியால் இவர் புத்த மாணுக்கனைப் போல் வேடம் புனைந்து, புத்த குருமார் நடத்தும் பள்ளியில் சேர்ந்து, புத்த நூல்களைப் பயின்று வந்தார். ஒருநாள் அப்பள்ளியில் கடவுள் நிந்தையும், வேத நிந்தையும், மிகுதியாகப் பேசப்பட்டன. அப்போது குமாரில பட்டர் கண்களில் நீர் பெருகியது.

இதனுல் ததாகதர் என்ற புத்த குரு, இவன் வேதங் கற்ற வேதியன் எனவுணர்ந்து, "அந்நியக் கொலை அகிம்சையே" என்ற புத்த தருமத்தின்படி, ஐந்தாவது மாடியில் இருந்து, குமாரிலபட்டரைக் கீழே தள்ளிவிட்டார். கீழே விழுகின்ற குமாரிலபட்டர், "வேதம் உண்மையேல் நான் பிழைக்க" என்ருர். அவர் கீழே விழுந்து இறவாமல் பிழைத்தார். ஆனுல் ஒரு கண் பழுதாயிற்று. "உண்மையேல்" என்று ஐயப்படக் கூறியதால் ஒரு கண் இழந்தார்.

பின்னர் அவர் அதினின்றும் வெளிப்போந்து, வலிமையாகப் புத்தமதக் கண்டனங்களைப் புரிந்து வந்தார்.

அந்த நாட்டை அரசு புரிந்த சுதந்வன் என்ன மன்னவன், புத்தர்களுக்கு ஆதரமாக இருந்தான். அதனுல் எங்கும் புத்தமதம் பரவியிருந்தது.

குமாரிலபட்டர் அரசனையணுகி, வேத நெறிகளை மிகச் சிறப்பாக விரிவுரை புரிந்தார். இவர் உரை குயிலின் குரல் போலவும், புத்தர்களின் உரை காக்கைகள் கத்துவது போலவும் இருந்தன. குமாரிலபட்டராகிய கருடன்முன், புத்தர்கள் குட்டிப் பாம்புகள்போல் அடங்கி ஒடுங்கினுர்கள்.

சுதந்வன் என்ற அரசன், புத்தர்களையும், குமாரிலபட்டரையும் பார்த்து, "உங்கள் கல்விப் போரை விடுங்கள். மலையுச்சியேறிக் கீழே குதித்து வீழ்ந்து, ஓர் இடரும் இன்றி எவர் வருகின்ருர்களோ, அவர் மதமே சிறந்தது என்று நான் நம்புவேன்" என்ருன்.

இந்த வசனத்தைக் கேட்டுப் புத்தர்கள் நடுங்கினுர்கள். சிலர் மலையுச்சியேறி வீழ்ந்து மாண்டார்கள். பலர் மௌன

மாய் ஒதுங்கினுர்கள். குமாரிலபட்டர் எல்லோரும் காணும்படி மலையுச்சியேறி, வேத நாயகராகிய சிவபெருமானைத் தியானித்து, "வேதமே பிரமாணம் என்பது உண்மையாயின் எனக்கு இடர் வராது" என்று கூறிக் குதித்தார். ஒரு சிறிதும் இடர் இன்றிப் பிழைத்தார். இந்த அற்புதச் செயலைக் கண்ட மன்னன் மனம் மாறினுன். அவன் வைதிக மதத்தைத் தழுவினுன். புத்தர்களை வெறுத்து ஒறுத்தான்.

புத்தர்கள் அரசனிடம் வந்து, மற்ருெரு பரீட்சை வைக்கவேண்டும் என்ருர்கள்.

அரசன் ஒருவருமறியாமல் கருநாகத்தைக் குடத்தில் அடைத்து மூடி, "இதற்குள் இருப்பது இன்னது என்று கூறிஞல் விடுவேன். இல்லையேல் கற்காணத்தில் இட்டு ஆட்டுவேன்" என்ருன். ஒருநாள் தவணை கொடுத்தான். அன்றிரவெல்லாம் குளத்தில் இருந்து புத்தர்கள் ஜெபஞ் செய்து உணர்ந்து, மறுநாள்காலை அரசவை வந்து, "குடத்தில் இருப்பது கருநாகம்" என்ருர்கள். குமாரிலபட்டர், நாகசயனராகிய நாராயணர் இருக்கின்ருர்" என்ருர்.

புத்தர்கள் இவர் கூறுவது உண்மையாயின் இவரே குடத்துக்குள் கைவிட்டு எடுத்துக் காட்டுவாராக"; இதில் இவர் கூறும் விஷ்ணு இருந்தால் நாங்கள் தோல்வியுற்றவராவோம். தண்டனைக்கு உட்படுகின்ருேம்" என்ருர்கள்.

பட்டபாதாசாரியர் குடத்தை வலமாக வந்து பணிந்து குடத்துக்குள் கைவிட்டு அரவணைச் செல்வராம் திருமால் விக்கிரகத்தை எடுத்தார். அது பொன்னுருவாகப் பளபள என்று காட்சியளித்தது.

புத்தர்கள் கண்டு திகைத்து நின்ருர்கள். அரசன் வியந்தான். வேதமே யுண்மையென உறுதி கொண்டான். புத்த குருவையும் புத்தர்களையும் கற்காணத்தில் இட்டு ஆட்டிக் கொன்று, புத்தமதத்தை ஒழித்துத் தீர்த்தான்.

குமாரிலபட்டர், நாடு முழுவதும் வேத நெறிகளை விளக்கிஞர். பலரைப் புலவர்களாக்கிஞர். எங்கும், வேத முழக்கம் விளங்கியது. இவருக்கு முதுமைப் பருவம் எய்

தியது. இளமையில் புத்தமதத்தைக் கற்பித்த தன் குருநாதனைக் கற்காணத்தில் இட்டு ஆட்டிக் கொல்லத் தான் காரணமாக இருந்ததை நினைத்தார். குரு நிந்தைக்குக் கழுவாய் எது என்று ஆராய்ந்தார். சிறிது சிறிதாக உடம்பு சுடப்பட வேண்டும். இதுவே குரு நிந்தைக்குப் பிராயச்சித்தம் என்று தீர்மானித்தார்.

ஒரு இடத்தில் நின்று, தன் மாணவர்களைத் தன்னைச் சுற்றி உயரமாக உமியைக் குவிக்குமாறு செய்தார். உமியில் தீ வைக்கச் சொன்னார். அது கருகிக் கருகி உடம்பைச் சுட்டு வந்தது. இது "துஷாக்கினி" எனப்படும்.

இப்படி துஷாக்கினியில் நின்று சிவத் தியானத்தில் இருந்தார் குமாரிலபட்டர். அங்கு பகவத்பாதர்—சங்கரர் சென்று அவருடை குரு நிந்தையின் பொருட்டு தானே தண்டனையை யேற்குங் குருபக்தியைக் கண்டு வியந்தார். அவருக்கு அருள்புரிந்தார். குமாரிலபட்டர் சிவயோக நெறியில் சிவபதம் பெற்றார். இதனால் குரு நிந்தை எத்துணை கொடிது என்பது நன்கு விளங்குகின்றதல்லவா?

குரு நிந்தை புரிந்தோன் துஷாக்கினியில் இறங்கவேண்டும். இல்லையேல் நரகில் பலகாலம் துன்புறுவான். ஆதலால் குரு நிந்தை கொடிது. எனவே எல்லோரும் குருவைத் தெய்வமாக மதித்துத் துதித்து உய்வு பெறுவார்களாக.

**குறிப்பு :—**

திரிபுரவாசிகளின் உறுதி குலையுமாறு, திருமால், புத்தாவதார மெடுத்து நாரதர் சீடராக வர முப்புரத்தில் தெய்வம் இலது என்று பிரசாரம் புரிந்தார். அந்த மதத்தில் சார்ந்து, கௌதம புத்தரும் எங்கும் புத்தமதத்தைப் பரப்பினர். இம்மதத்தின் அவலத்தையகற்றத் தென்னகத்தில் அவதரித்தவர் மணிவாசகர்.

"வஞ்சனையால்
மாயனிடும் புத்தஇருள் இரிந்தோட வந்தொருவர்
சேய இளம் பரிதியெனச் சிவனருளால்
அவதரித்தார்"

என்று திருவிளையாடற் புராணஞ் செப்புகின்றது.

எனவே தெற்கே மாணிக்கவாசகருங் வடக்கே குமாரில பட்டரும் புத்தமத இருளை யகற்றினர்கள்.

புத்தர் தோன்றிய இந்தியாவில் இன்று புத்தமதம் இல்லை. கடல் கடந்து இலங்கையிலும், சைனவிலும், பர்மாவிலும் இருக்கின்றது. இதற்குக் காரணம் மணிவாச கருடைய அருட்டிறமும் குமாரிலபட்டருடைய பெருந் திறனுமாகும்.

## கருணை

உலகத்திலே மக்கள் பல வகைகளிலும் பலப்பல கருத் துடையவர்களாகவே இருக்கின்றார்கள். ஒருவர் விரும்பு கின்ற உணவை மற்றொருவர் விரும்புவதில்லை; ஒருவர் விரும்புகின்ற பொருளை மற்றொருவர் விரும்புவதில்லை. ஒவ் வொருவருக்கும் ஒவ்வொரு நூலில் அளவுகடந்த விருப்பம். இப்படியாக ஒருவர் மனம்போல் மற்றொருவர் இருப்பதில்லை. கணவனுக்கும் மனைவிக்கும்கூட கருத்து வேற்றுமைகளுண்டு.

ஆனால் ஒரே ஒரு வகையில் மட்டும் யாருக்கும், எந் நாட்டவருக்கும், எக்குலத்தவருக்கும், எத்தகுதியினருக்கும் கருத்து வேற்றுமை கிடையாது. எல்லோருக்கும் அந்த ஒன்றில் மட்டும் ஒற்றுமைப்பட்ட எண்ணமுண்டு. அது எது?

துன்பமின்றி இன்பமாக இருக்க வேண்டுமென்பது. இதில் யாருக்கும் கருத்து வேற்றுமை கிடையாது. பறவை களும், விலங்குகளும் இப்படியே எண்ணுகின்றன. ஆனால், துன்பத்தைத் தொலைத்தவர்களும், இன்பத்தை யடைந்தவர் களும் எங்குங் காண்பது அரிதாகவே இருக்கின்றது. அதற்குக் காரணம் துன்பத்தை நீக்கவும், இன்பத்தைகாக்க வும் வழிவகை இன்னதென்று திட்டவட்டமாக அறிந்து கொள்ளாததே.

நாம் வயலில் என்ன விதை விதைக்கின்றோமோ, அதுவே விளைந்து வந்து நாம் உண்ணக்கூடியதாக அமை

கின்றது. அதுபோல், மனத்தாலும், வாக்காலும், காயத்தாலும் பிற உயிர்களுக்கு நன்மை செய்வோமாயின், நாமும் துன்பமின்றி இன்பமாக வாழமுடியும். அங்ஙனமின்றிப் பிற உயிர்கட்கு மனவாக்குக் காயங்களால் துன்பமே செய்வோமாயின், அவை அத்தனையும் நமக்கே வந்து சேரும்.

"பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்.
நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்"

என்பார் திருவள்ளுவர்.

நோயென்பதற்குத் துன்பமென்பது பொருள். ஆகவே, நாம் பிற உயிர்கட்குத் துன்பம் செய்வோமாயின், நமக்கே துன்பத்தைச் செய்து கொண்டவர்களாக ஆகின்றோம். எனவே துன்பமின்றி வாழ விரும்புவோமாயின், நாம் பிற உயிர்கட்கு நிச்சயமாகத் துன்பஞ் செய்யக்கூடாது. இனி உயிர்களுக்குத் துன்பஞ் செய்யாமல் இருப்பதோடு அமைந்துவிடக்கூடாது; இன்பமும் செய்யவேண்டும். பிற உயிர்கட்கு இன்பஞ் செய்வோமாயின், அது நமக்கே இன்பமாக அமையும்.

"மன்னுயிர் ஓம்பி அருளாள்வார்க்கு இல் என்ப
தன்னுயிர் அஞ்சும் வினை"

என்கின்றார் திருவள்ளுவனார். ஆகவே, எக்காலத்தும், தன்னுயிர் போல் மன்னுயிரை எண்ணி, அவைகளுக்கு வரும் இடையூற்றை நீக்கி நன்மை புரியவேண்டும்.

நம்முடன் பழகும், பசு, எருது, எருமை, ஆடு, கோழி முதலிய உயிர்கள் நமக்குப் பலவகையிலும் உதவி புரிகின்றன. எருது உழுவதற்கும், பசு பாலும் சாணமும் கொடுத்தும் பயன்படுகின்றன. ஆடுகள் கம்பளத்திற்கு ரோமமும், வயலுக்கு எருவும் தருகின்றன. கோழி மணிக்கூண்டில் அலாரம் வைத்ததுபோல் வைகறையில் நம்மைத் துயில் உணர்த்துகின்றது. இங்ஙனமாக, இந்தப் பிராணிகள் நமக்கு உதவிபுரிகின்றபோது, அவைகளுக்கு நாம் செய்கின்ற உதவி

என்ன என்பதைச் சிந்திக்கின்ருேமா? உபகாரம் செய்ய வில்லையாஞலும், அபகாரமாவது செய்யாமலிருக்கின் ருேமா?

கழுத்தில் புண் உள்ள மாட்டை வண்டியில் கட்டி ஓட்டு வதும், ஓடுகின்ற மாட்டை மேலும் வேகமாக ஓடவேண்டு மென்று இரும்பு முள்ளால் குத்துவதும், அளவுக்கு மேற் பட்ட சுமையை வண்டியில் இட்டு எருதுகளை இழுக்குமாறு இம்சிப்பதும், மாடுகளுக்குப் போதுமான புல் முதலிய உணவுகளைத் தராமல் பட்டினி போடுவதும், எல்லையின்றி அவைகளுக்குத் தொல்லைகொடுத்து வேலை வாங்குவதும், கோழிகளைத் தலைகீழாகக் கொண்டு போவதும், கொடுமை யினும் கொடுமை. இவைகளை நினைத்தால் கல்லும் கரை யுமே! சிலர் மனம், கல்லினும் வலியதாக இக்கொடுமைகளை எவ்வாறு செய்யத் துணிகின்றதோ?

உயிர்களுக்கு நாம் செய்யும் துன்பம் செய்த அளவே நம்மை வந்து சாருமென்று எண்ணக்கூடாது. நாம் செய்யும் துன்பம் பன்மடங்காக அதிகரித்து வந்து சாரும். இச்சை போல் திரியும் பசுங்கிளியைப் பன்னிரண்டு நாள் கூட்டில் அடைத்த பாவத்தினுல், மறுபிறப்பில் பன்னிரண்டாண்டு சிறைச்சாலையிலிருந்து, கோபன்ன (ராமதாஸர்) வேதனைக் கடலில் வீழ்ந்து துன்புற்றனர். இங்ஙனம் கருணையின்றிப் பிற உயிர்களுக்குத் துன்பஞ்செய்தவர்கள் பலர், ஒன்றுக்குப் பன்மடங்காகத் துன்புற்றனர்கள்.

அப்பா நான் வேண்டுதல்கேட் டருள்புரிதல்
வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம் நான் அன்புசெயல்
வேண்டும்
—இராமலிங்கர்

திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் திருவீழிமிழலை யில் தங்கியிருந்தார்கள். அப்போது வான்மழை சுருங்கி எங்கும் உணவுப் பொருள் அருகிப் பஞ்சம் பெருகியது. அதனைக் கண்ட இரு தவசீலர்களும் இறைவனிடம் படிக் காசு பெற்று, பெரிய அளவில் உணவு தயாரித்து, பறை

சாற்றி வறியார்க்கு முப்போதுந் தப்பாது உணவு அளித்தார்கள்.

திருமருகல் என்ற திருத்தலத்துக்கு ஞானப்பாலுண்ட ஞானசம்பந்த சுவாமிகள் எழுந்தருளினார். விடியற்காலை திருக்கோயிலுக்குச் செல்லுகின்றார். அங்கு ஒரு இளம் பெண் அழுது கொண்டிருந்தாள். தாவிப் படரக் கொழுகொம்பில்லாத தனிக்கொடிபோல், அம்மடவரல் "ஓ" என்று வாய் விட்டுக் கதறிப் பதறிக் கண்ணீர் வடித்து, துடித்து, துள்ளி அழுவதைக் கண்டார் ஞானசம்பந்தர்.

அவர், அறிவுடன் தொடர்பு கொண்டவர். ஞானம் என்றால் அறிவு. சம்பந்தம்—தொடர்பு கொள்வது.

அறிவின் பயன் எது? பிற உயிர் படும் துன்பத்தைக் கண்டு கருணை செய்வதுதான் அறிவினால் ஆகும் பயன்.

அறிவினா னாகுவ துண்டோ பிறிதின்நோய்
தன்நோய்போல் போற்றாக் கடை"

என்கின்றார் திருவள்ளுவர்.

ஆதரவு இன்றித் தன்னந்தனியாக ஒரு பெண்மணி அழுவதைக் கண்ட திருஞானசம்பந்தர், "நாட்டில் நாலாயிரம் நிகழ்ச்சிகள். நாம் வழிபாடு செய்யத் திருக்கோயிலுக்குப் போகின்றோம். யார் எதற்காக எங்கு அழுதால் நமக்கென்ன? ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வகையில் துன்பம். ஊழ் காரணமாக உயிர்கள் துன்புறுகின்றன" என்று கருதிக் கோயிலுக்குள் சென்றாரா? இல்லை; இல்லை!

துன்பக் கடலில் வீழ்ந்து துடிக்கின்ற அவள்பால், அப்பெருமானுக்குக் கருணைவெள்ளம் பொங்கி எழுந்தது. அவளுடைய துன்பத்தைக் களைந்த பின்னர் ஆலய வழிபாடு செய்யலாம் என்று அவர் கருதினார்.

அழுகின்ற பெண்மணியை நோக்கி, "அம்மா அழாதே. உனக்கு உற்ற இடர் யாது?" என்று தாய் போல் பரிந்து கேட்டருளினார். அவள் திருஞானசம்பந்தரைத் தொழுது அழுதுகொண்டே கூறுகின்றாள்:

"ஐயனே! வைப்பூரில் வாழ்கின்ற தாமன் என்ற வணிகர் தலைவனுடைய மகள் யான். என் தந்தைக்கு ஏழு

புதல்விகள். இவர் என் அத்தை மகன். தாய் தந்தையர் இன்றி எங்கள் வீட்டில் வளர்ந்து வந்தார். என் பிதா ஒவ்வொரு பெண்ணுக உனக்குத் தருவேன் தருவேன் என்று கூறி, சொன்ன சொல்லைக் காற்றில் பறக்கவிட்டு, தனவந்தர்கட்குக் கல்யாணம் பண்ணித் தந்தார். முடிவில் என்னையும் அவ்வாறே இவருக்குத் தருவதாக வாக்களித்து, வேறொரு தனவந்தருக்குத் தருவதாகத் தீர்மானித்தார். வாக்களித்த மாத்திரத்திலேயே யான் என் அத்தை மகனுக்கு மனைவியாகி விட்டேன். பிறகு மற்றவரை மணப்பது பெண்ணறமாகாது. ஆதலால் வாடி வருந்தியுள்ள என் அத்தை மகனும் நானும், உற்றாரையும் பெற்றோரையும் துறந்து, அயலூர் சென்று மணம் புரிந்து கொள்வோம் என்று கருதிப் புறப்பட்டு வழி நடந்து வந்தோம். இரவு இந்த மடத்துத் திண்ணையில் படுத்தோம். அரவந் தீண்டி இதோ என் எதிர்காலக் கணவனார் இறந்துவிட்டார். பெருமானே! அரவந் தீண்டியும், யான் தீண்டாது அழுகின்றேன். விதிப்படிப் பாணிக்கிரகணம் ஆகாமையால், இவரை யான் தீண்டி அழவும் இயலாதவளாகக் கலங்கி நிற்கின்றேன். தாய், தந்தை, உடன் பிறந்தார் முதலிய அனைவரையுந் துறந்து, இவரை நம்பி வந்தேன். இவர் என்னை நட்டாற்றில் விட்டு நடந்துவிட்டார். இனி எனக்கு வாழ்வு ஏது? என் முன்வினை மூண்டது போலும்" என்று கூறி முறையிட்டாள்.

திருஞானசம்பந்தர், அப் பெண்மணியின் துயரைக் கேட்டுப் பெரிதும் கருணை கொண்டார். "அம்மா! அழாதே! திருக்கோயிலில் கருணைக் கடலாயுள்ள எம்பெருமான் உன் துயரைக் களைவார். வருந்தற்க" என்று ஆறுதல் கூறியருளினார்.

அவளை அழைத்துக் கொண்டு திருக்கோயிலுக்குள் சென்றார். "இறைவனே! ஆலம் உண்ட நீலகண்டப் பெருமானே! நஞ்சரவணிந்த நம்பனே! பாம்பணையில் துயின்ற பரந்தாமனும், விதிவிலக்கு வரையும் வேதனும் போற்றும் வித்தகனே! இவள் உன்னை நாத்தழும்பேற ஏத்தி ஏத்தித் தோத்திரம் புரிகின்றாள். இவள் துயரைக் களைவாய்" என்று சுவாமியிடம் முறையிட்டார்.

"சடையா யெனுமால் சரண் நீயெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவள் உள் மெலிவே"

என்ற தேவாரப் பாடலைப் பாடியருளினர்.

அந்த அமுதப் பாடல் பாடியவுடன், இறைவன் கருணையால் மாண்ட செட்டி குமாரன் உயிர்பெற்று எழுந்தான். அப்போது, அல்லற்பட்டழுத அம்மங்கை, ஆனந்த வெள்ளத்துள் திளைத்தாள். இருவருக்கும் அக்கணமே திருமணஞ் செய்வித்தார் திருஞானசம்பந்தர்.

இறைவனுடைய கருணையை நாடிய ஞானசம்பந்தர், தானும் கருணையுடையவராகத் திகழ்ந்தார்.

* * *

குசேல முனிவர் வறுமையாகிய சிறுமையில் முழுகினவர். அப்படி வறுமைப்பிணி மூடியும், அவருடைய மனம் சதா கண்ணபிரானையே நாடியது. மனைவியின் வேண்டுகோளின் படியே கண்ணனைக் காணப் புறப்பட்டார். அவர் வாழும் அவந்திக்கும் துவாரகைக்கும் நெடுந்தூரம். குடையும் பாதரட்சையும் அவருக்கு ஏது? கடும் வெயில். அக்கினிப் பிழம்பாக ஆதித்தன் காய்கின்றான். மண் சுடுகிறது. குசேலர் இந்த வெயிலில்தான் நடக்கிறார். அவர் செல்லும் சாலையில் இரு புறங்களிலும் நல்ல நிழல் தரும் மரங்கள் குளிர்ந்த நிழலைத் தந்துகொண்டிருக்கின்றன. குசேல முனிவர், அந்த நிழலில் ஒதுங்கிச் சென்றால் வெயிலின் கொடுமை யிராது. ஆனால், அவர் நிழலில் ஒதுங்காமல் நடுச்சாலையில் செல்கின்றார். கால் சுடுகின்றது. தலை சுடுகின்றது. இரு கரங்களையும் விரித்து, தலைக்குமேல் மறைத்துக் கொண்டு, "கண்ணா! கண்ணா! தாங்கமுடியாத வெப்பமாக இருக்கின்றதே. என் செய்வேன்? இன்னும் எத்தனை தூரம் இருக்கின்றதோ?" என்று கூறிக்கொண்டே நடக்கின்றார். அவர் ஏன் நிழலில் ஒதுங்கவில்லை? காரணம் தெரிகின்றதா? ஈக்கள், எறும்புகள்,

புழுக்கள் முதலிய சிற்றுயிர்கள் கொடிய வெயிலைத் தாங்க மாட்டாது—நிழலில் ஒதுங்கியிருக்குமே? நாம் நிழலில் நடந்தால் அச்சிற்றுயிர்கள் இறந்துவிடும்'' என்று கருதினர். கருணை காரணமாகவே, நிழலில் ஒதுங்காமல், வெயிலில் நடந்து துன்புற்றார். இத்தகைய கருணை அவர்பால் இருந்த தனால், கண்ணபிரானுடைய கருணை அவர் பால் சுரந்தது.

சீத நீழற்செலில் சிற்றுயிர்த் தொகை
போதச் சாம்புமென் றெண்ணிய புந்தியான்
ஆதவன் தவழ் ஆறு நடந்திடை
காதல் அங்கை விரித்துக் கவித்தரோ.

—குசேலோபாக்கியானம்

நம் தமிழகத்தில் பிறவுயிர்க்குப் பெரிதும் இரங்கிய திரு வாளர்கள் பலர் வாழ்ந்தார்கள். ஓரறிவுடைய முல்லைக் கொடி தனியே வாடி நிற்பதைக் கண்ட பாரி மன்னன், தன் தேரை நிறுத்தி அதன்மீது கொடியைச் சுற்றி, அதற்கு உதவி புரிந்து நடந்து சென்றான். அவனுடைய கருணை எத்துணை விழுமியது!

ஒரு தலைவன் அயலூர் சென்றிருந்தான். தன் கருமம் முடிந்தது. அவன் இளைஞன். கருமம் முடிந்ததும் தன் வீட்டி லுள்ள தலைவியை நினைத்தான். காதல் வெள்ளம் கரை புரண்டு ஓடியது. தலைவியை நோக்கித் தலைவன் புறப்பட் டான். மணிகள் பூட்டிய தேரில் வருகின்றான். வழியில் இரு மருங்கிலும் பூச்செடிகள். நிரம்ப மலர்கள் குலுங்குகின்றன. அம்மலரில், வண்டுகள் தம் தம் காதல் நிறைந்த பெண் வண்டுகளுடன் அமர்ந்து தேனைக் குடிக்கின்றன. இதனைக் காண்கின்றான் தலைவன். அவன் உள்ளம் கருணை மயமானது. தேரின் மணிகள் ஒலித்தால் தேன் உண்ணும் வண்டுகள் அஞ்சியகலும்; அவைகட்கு இடையூறுகும் என்று அவ னுடைய திருவுள்ளம் எண்ணி உருகியது. தேரை நிறுத்தி னன். தேரில் உள்ள ஒவ்வொரு மணிகளின் நாக்குகளையும் அசையாவண்ணம் சிறு சிறு கயிறுகளால் கட்டினன். இப் போது மணியின் நா அசையாது நின்றது. வண்டுகட்கு இடர் விளையாது என்ற மனநிறைவு கொண்டான். தேர்

ஏறித் தன் காதலியை நாடிச் சென்றான். அப்பெருமகனின் கருணையை நினைத்தால் கல்மனமும் கரையுமே!

"பூத்த பொங்கர் துணையோடு வதிந்த
தாதுண் பறவை பேதுறல் அஞ்சி
மணி நா வார்த்த மாண்வினைத்தேரன்
உவக்காண் தோன்றும்" —அகநானூறு

ஆகவே இறைவனுடைய கருணையைப் பெற விழைகின்ற ஒவ்வொருவரும், பிறவுயிர்களிடம் கருணை காட்ட வேண்டும். எல்லாவுயிர்களிடத்திலும் இறைவனைப் பார்க்க வேண்டும். எல்லாவுயிர்களும் இறைவனுடைய கோயில்கள். ஆதலால் இறைவனை எல்லாவுயிர்களிலும் கண்டு, அவ்வுயிர் கட்கெல்லாம் கருணை செய்தல் வேண்டும். அதுவே கடைத் தேறும் வழி.

ஆகவே, துன்பமின்றி இன்பமாக வாழ நினைக்கும் ஒவ் வொருவரும், எந்த உயிர்கட்கும், எக்காலத்தும், எவ்விடத் தும், எவ்வாற்றானும் துன்பத்தை விளைக்காமல், இன்பமே செய்து இம்மைக்கும் மறுமைக்கும் நன்மை தேடுவார்களாக.

## 49. கருணையின் உயர்வு

கருணை காட்டும் திறத்தில் சில வேறுபாடுகள் உண்டு. அதன் நுட்ப திட்பத்தை யறிந்து நடப்பது கருணையாளரது கடமை. இந்த தருமத்தை விளக்குகின்றது இந்தக் கதை.

வேதவேதாங்கங்களில் வல்லவர் ஒரு வேதியர். செந் தண்மை பூண்டொழுகும் அந்தணர். அவர் இல்லறமாகிய நல்லறம் பூண்டவர். சிவபெருமானைப் பணிந்த நெஞ்சமும், தணிந்த சிந்தையும் உடையவர். உத்தமமான அந்த மறை யவர் நிறை நெஞ்சுடையவர்.

அவர் ஒருநாள், அயலூர் சென்று குடும்பத்துக்கு வேண் டிய சாதனங்களை வாங்கி மூட்டைகட்டித் தலைமீது வைத்

துக்கொண்டு, தனது ஊரை நோக்கி வந்துகொண்டிருந்தார். இடையில் அடர்ந்த காடு. மாலைநேரம். புதரில் இருந்த வரிப்புலி ஒன்று மறையவர்மீது பாய்ந்து வந்தது. வேதியர் வேகமாக ஓடி ஒரு மரத்தில் மறைந்தார். நடுவில் மரத்தை விட்டுப் புலி இரு கரங்களையும் அந்தணரைப் பற்ற நீட்டியது. பிராம்மணர் வலிமையாக அதன் இரு கரங்களையும் பற்றிக் கொண்டார். நடுவில் மரம் நிற்க புலியும் வேதியரும் மரத்தைச் சுற்றிச் சுற்றி வந்தார்கள். வேதியருக்குக் கைவலிமை குன்றியது. இறைவனை நினைந்து உள்ளம் உருகினார்.

சிப்பாய் ஒருவன், துப்பாக்கியுடன் விடுமுறை பெற்று, வீடுநோக்கி அவ்வழியே வந்துகொண்டிருந்தான். அவனைக் கண்ட அந்தணர் அகம் மகிழ்ந்தார். "அப்பா! போர் வீரனே! இந்தப் புலியைத் துப்பாக்கியால் சுட்டுவிடு" என்றார்.

சிப்பாய், "ஐயரே! ஜீவகாருண்யம் சிறந்தது. புலியும் ஒரு உயிர், நீரும் ஒரு உயிர். ஆகவே நான் புலியைச் சுட மாட்டேன்" என்றான்.

வேதியர், "அப்பா! புலி பலபேரைக் கொல்லும் கொடிய பிராணி. நான் பலருக்கு உதவி செய்யும் உத்தமப் பிராம்மணன். என்னை நம்பி மனைவி மக்கள் காத்துக்கொண்டுள்ளார்கள். ஆதலால் புலியைக் கொல். ஆறறிவு படைத்த அந்தணனும் ஐயறிவு படைத்த கொடிய விலங்கும் ஒன்றுதானா? எது உயர்வு, எது தாழ்வு என்று பகுத்தறிவினால் பார்க்கவேண்டாமா? ஆபத்து வேளையில் நீ எனக்கு உதவி செய். உனக்குக் கோடி புண்ணியம் வரும்" என்றார்.

சிப்பாய், "ஐயரே! நான் ஒருபோதும் அறநெறியை விட்டு விலகமாட்டேன். புலிக்கும் உயிர் வாழ்வில் விருப்பமுண்டு. ஆதலால் ஒரு உயிருக்காக, மற்றொரு உயிரைக் கொல்லமாட்டேன்" என்று திட்டவட்டமாக மறுத்து விட்டான்.

வேதியர், "அன்பனே! நான் உன்னை வற்புறுத்தவில்லை. புலியைச் சுடவேண்டாம். நெடுநேரமாக நான் சிறுநீர் விட

வேண்டிய துன்பத்தால் துடிக்கின்றேன். மனிதன் நின்று கொண்டே சிறுநீர் விடக்கூடாது. ஆதலால் இப் புலியின் கையைப் பிடித்துக்கொள். சிறுநீர் கழித்துவிட்டுப் பிறகு வந்து நான் பிடித்துக்கொள்வேன்" என்றார்.

சிப்பாய் அதற்கு மனம் இசைந்து, ஒருபுறம் துப்பாக்கியை வைத்துவிட்டுப் புலியின் கரங்களை அழுத்தமாகப் பிடித்துக்கொண்டான். வேதியர் ஒருபுறம் சிறுநீர் கழித்து விட்டு, மூட்டையைத் தூக்கி தலைமீது வைத்து, வீட்டை நோக்கிப் புறப்பட்டார். சிப்பாய்க்குத் தேள்கொட்டியது போல் உள்ளந் திடுக்கிட்டது. "ஐயா! ஐயா! என்ன ஐயா, அநியாயம்? ஒண்ணுக்குப் போய்வந்து பிடித்துக்கொள்ளு கின்றேன் என்று சொல்லிவிட்டு, உன்பாட்டுக்கு மூட்டையைத் தூக்கிக்கொண்டு போகின்றீரே! இது தெய்வத்துக்கு ஏற்குமா? வாரும், வாரும்" என்று அழைத்தான்.

பிராம்மணர், "அப்பா! என்னை மன்னிக்க வேணும். நான் ஆசாரசீலன். சிறுநீர் கழித்தவுடன் நீராடவேணும். அதிலும் இது சந்தியா வந்தனஞ் செய்யும் நேரம். ஆதலால் சற்றுப் பொறு. பிறருக்கு உதவிசெய்யும் கருணையுடைய உனக்கு நான் அதிகஞ் சொல்ல வேண்டாமே. ஆகவே நான் போய் என் கடமைகளைச் செய்துவிட்டு வந்துவிடு வேன்" என்றார்.

போர்வீரன், ஈனமான குரலுடன், "ஐயரே! நான் இளமையான மனைவியை நோக்கிப் போகின்றேன். அவள் என் வரவை மிக ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருப் பாள். ஐயா! உம்மைத் தலையால் வணங்கி வேண்டிக் கொள்ளுகின்றேன். இந்தத் துப்பாக்கியை எடுத்துப் புலி யைச் சுடும். நீரும் நானும் பிழைக்கலாம்; இருவரும் உய்யு மாறு புலியைச் சுட்டுவிடும்" என்றான். அந்தணர், "அப்பா! இப்போதுதான் உனக்கு நியாயம் பிறந்தது. புலியைப் பார்க்க நீ உயர்ந்தவன். புலி வாழ்ந்தால் பலருக்குத் துன்பம் விளைக்கும். நீ வாழ்ந்தால் எத்தனையோ பேருக்கு உதவி செய்வாய். ஆகவே நீதான் வாழவேண்டும். ஆனால் எனக்குச் சுடத் தெரியாது. ஆதலால் நான் புலியின்

கையைப் பற்றிக்கொள்வேன்; நீ புலியைச் சுடு" என்றார். சிப்பாயும் அதற்கு இசைந்தான். வேதியர் மூட்டையை வைத்துவிட்டுப் புலியின் கரங்களைப் பிடித்துக்கொண்டார். சிப்பாய் துப்பாக்கியை எடுத்துப் புலியைப் படார் என்று சுட்டுக் கொன்றான்.

பின்னர், சிப்பாயும், வேதியரும் அன்பாகப் பேசிக் கொண்டு அவரவர் வீடுகளுக்குச் சென்றார்கள்.

ஆதலால், உயிர்க்கருணை உயர்ந்தோர் மாட்டுக் காட்டு தல் சிறந்தது. தீயவரிடம் கருணை காட்டுதல் பிழை. பசுவுக் குப் புல் கொடுத்தால் பால்தரும்; பாம்புக்குப் பால் வார்த் தால் நஞ்சு தரும்.

## 50. பலியினால் வரும் பாவம்

எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி
இரங்கவுநின்
தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே.

கோழிகள் கூவின; கூவின பூங்குயில்; புள்ளினங்கள் வானத்தில் இனிமையாக ஒலி செய்துகொண்டு இரைதேடு தற்குச் செல்லத் தொடங்கின. சிவபெருமானைப் பணிய வந்த தேவர்களது மணிமுடிகள் ஒளிமழுங்கியதுபோல் நட்சத்திரங்கள் ஒளிமழுங்கின. கதிரவனுடைய உதயத்தின் அறிகுறியான நிமித்தங்கள் பல காணப்பட்டன. ஆலயந் தோறும் கண்டாமணிகள் கடலொலிபோல் முழங்கின. ஆலயங்களில் விடியற்காலத்திலேயே சகலவித மேளதாளங் களுடனும் பூஜை நடந்துகொண்டிருந்தது. வீதிகள்தோறும் தேவார திருப்புகழ் திருவருட்பாப் பாராயணங்கள் நடந்து கொண்டிருந்தன. திருவெம்பாவை படித்துக்கொண்டு பல அன்பர்கள் வழிபாடு செய்துகொண்டிருந்தார்கள். "இன் னும் பொங்கல் பண்டிகை 30 நாட்கள்தான் இருக்கின்றன" என்று சிலர் பேசிக்கொண்டிருந்தார்கள். அந்த ஊரில் ஒவ்வொரு வீட்டிற்கு முன்னும் பூப்பிள்ளையார் வைத்திருந் தது. அதிகாலையானபடியால் எதிரில் வரும் ஆட்கள் நன்கு

சுத் தெரியாமலிருந்தது. பெண்மக்கள் நதியில் நீராடி நீர்க் குடங்களை எடுத்துக்கொண்டு வந்துகொண்டிருந்தார்கள். அந்தவூர் நேபாளத்தைச் சார்ந்திருந்ததனுல் குளிர் மிகுதியாகவே யிருந்தது. ஜனங்கள் குளிரைப் பொருட்படுத்தாமல், மார்கழிமாத மாதலால் வைகறையிலேயே எல்லோரும் குளித்துவிட்டுத் திருநீறணிந்து, காண்பதற்கு இனியராக இருந்தார்கள்.

அந்த ஊர்க்கோடியிலுள்ள காளிகோயில் பூசாரி காளிமுத்து என்பவன், தனக்கு வருவாய் வரும் அந்தக் காலத்தில் மிகுந்த மகிழ்ச்சியுடன் காளி கோயிலில் பூசை செய்து கொண்டிருந்தான். பலர் வந்து அவனையே காளிதேவி யென்று, அவனிடம், தங்கள் குறைகளைச் சொல்லிக்கொண்டு நின்முர்கள். அவன் சிறிது நேரம் சும்மா இருந்து ஸ்...ஸ்... என்று சிறிது கண்திறந்து, காளியம்மை தன்மேல் ஆவேசித்ததாகப் பாவனைசெய்து, பையத் தலையை அவிழ்த்துக்கொண்டு ஆடி, காளியம்மை பேசுவதுபோல் வாய்க்கு வந்ததெல்லாம் பிதற்றிக் காணிக்கைகளைப் பறித்துக் கொண்டிருந்தான். மார்கழிமாத மாதலால் விடியற்காலை எழுந்து தண்ணீரில் முழுகி, காளியை பூசித்துத் தயிரன்னம் நிவேதித்து, அந்தப் பிரசாதத்தை நாள்தோறும் உண்டு வந்தான். பனியின் வேகத்தாலும், வழக்கந் தவறி விடியற்காலை குளிர்ந்த தண்ணீரில் முழுகியதாலும், தயிரன்னம் உண்டதனுலும், காளிமுத்துப் பூசாரியைச் சுரநோய்பற்றிக் கொண்டது. வருவாயை உத்தேசித்துச் சுரத்தைப் பொருட்படுத்தாமலே வழக்கப்படி அதிகாலையில் முழுகி, தெய்வமாடி வந்தனன்; அதனுல் சுரம் கடுமையாக முதிர்ந்து விட்டது. எத்தனை போர்வைகளைப் போர்த்தும் குளிர் அடங்கவில்லை. உணவின் கெடுதியால் உண்டான கேடு என்று அவனுடைய அறிவில் தோன்றவில்லை. தெய்வக்குற்றம் என்றுநினைத்தான். அவனைச் சூழ்ந்துள்ளவர்களும் "அப்பா! காளிமுத்து! ஏதோ காளி பூஜையில் குற்றம் செய்து விட்டாய். அதனுல் அம்மன் சீறி விட்டாள். அம்மனை வேண்டிக்கொண்டு பூசைபோட வேண்டும்" என்று சொன்னுர்கள்.

காளிமுத்து காளிதேவதைக்கு அபிஷேகம் செய்து, பொங்கலிட்டு, உடுக்கடித்து, ஆடிப்பாட வைத்து, இரண்டு ஆட்டுக்குட்டிகளைப் பலியிட்டான். சிலநாளில் காளிமுத்து நோய்நீங்கிப் பூரண சுகமுற்றான். பழையபடி காளிக்குப் பூசைசெய்து, சுவாமி சேவிக்க வருகின்றவர்களை ஏமாற்றிப் பொருள் பறித்து, மாலைநேரத்தில் ஆவேச நீரையும் குடித்து காலங்கழித்து வந்தான்.

* * *

அந்த நேபாளதேசத்தை அரசாளுகின்ற மன்னன் மகவின்றி தானதருமங்களைச் செய்து தவம்பல செய்துவந்தான். அப்படியே மந்திரியும் மக்கட்பேறு இன்றி வருந்தினான். சில நாட்களுக்குப் பின் அரசன் மனைவியும் மந்திரி மனைவியும் கருவுற்றார்கள். அரசனும் அமைச்சனும் ஆனந்த வாரிதியில் மூழ்கினார்கள். உரியகாலத்தில் பூ முடித்தல், சீமந்தம், பும்சவனம் முதலிய வைதிகச் சடங்குகள் நடந்தன. நல்லநாளில் அரசன் மனைவி ஓர் ஆண்மகனைப் பெற்றெடுத்தாள். எல்லா இலக்கணங்களும் பொருந்தியிருந்த அம்மைந்தனை மன்னன் கண்டு பெருமகிழ்ச்சியுற்றான். அப்படியே மந்திரிக்கும் ஆண் மகவு தோன்றியது. புத்திரோத்சவங் கொண்டாடினார்கள். அந்தணர்கட்கும் ஆதுலர்கட்கும் தானங்கள் வழங்கினார்கள். அந்தத் தேசத்திலுள்ள எல்லாக் கோவில்களிலும் அபிஷேக ஆராதனைகளைச் செய்வித்தார்கள்.

குழந்தைகளைத்தொட்டிலிலிட்டுத்தாலாட்டிக் கண்ணிற் கருமணியே போற் காப்பாற்றி வந்தார்கள். குழந்தைகள் வளர்ந்தன. பள்ளிக்குச் செல்லும் பருவமுற்றன. அரசகுமாரனும் மந்திரி குமாரனும் வேதங்களையும், ஏனைய கலைகளையும், வில்வித்தையையும், பஞ்சகதிகளையும் நன்கு ஓதியுணர்ந்தார்கள். அடக்கம், பொறுமை, அமைதி, வீரம், பணிவு, துணிவு, வாய்மை, தூய்மையாதி நற்குணங்கள் யாவும் அம்மைந்தர்களிடம் தங்கியிருந்தன. வளர்பிறை மதிபோல் வளர்ந்தார்கள். குடிகள் அனைவருடைய மனத்தையும் ஒருங்கே கொள்ளை கொண்டார்கள். அரசனும் மந்திரியும் தமது மக்களின் குணாதிசயங்களைக்கண்டு அற்புதமுற்றார்கள்.

அரசன் ஒருநாள் தனது மந்திரிகளேயும் குடிகளேயும் வர வழைத்து, "பிரஜைகளே! முதுமைப் பருவத்தால் யான் மிகவும் வருந்துகின்றேன். இனி என்னுல் பூமிபாரந் தாங்க முடியாது. இனி தவவனஞ்சென்று ஆவியீடேறுவதற்கு வழி தேடுவேன். ஆதலால், என் மைந்தனுக்கு மகுடாபிஷேகஞ் செய்ய எண்ணியிருக்கின்றேன். உங்கள் நினைவு யாது?" என்று வினவினுன். எல்லோரும் ஒரே மனதாக "சம்மதம் என்று மகிழ்ச்சியுடன் ஆரவாரித்தார்கள். நாள் குறிப்பிடப் பட்டது; நகரமெங்கும் பறையறையப்பட்டது; தோரணங் கள் நாட்டினுர்கள்; வெண் சுண்ணச்சாந்தால் வீடுகளே அலங்கரித்தார்கள்; வீதிகளில் சந்தனக் கலவைகளால் மெழுகிக் கோலமிட்டார்கள். அந்தவூர் இந்திரலோகம் போல் விளங்கியது. 108 பொற்குடங்களில் தீர்த்தத்தை வேதியர்கள் எடுத்து யானேகள்மீது வைத்து மங்கல வாத்தி யங்களுடன் கொண்டு வந்தார்கள். குறித்த காலத்தில்அரசன் தன் மைந்தனுக்கு மகுடாபிஷேகம் செய்து வைத்தான். அதே நேரத்தில் மந்திரி தன் மைந்தனுக்கு மந்திரிப்பதவி யைக் கொடுத்தான். அரசனும் மந்திரியும் பல தானதருமங் களேச் செய்து தவவனம் புகுந்து தவமேற்கொண்டார்கள்.

மன்னன் மைந்தனும், மந்திரி மைந்தனும் உலகத்தை அரசாட்சி செய்துவந்தார்கள். குடிகளிடத்தில் மிகவுங்கருணே பாராட்டினுர்கள். அவர்களுக்குப் பட்டாபிஷேகமான பிறகு பன்னிரண்டு ஆண்டுகளாக மழை பொழியவில்லே.

"விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றுங்கே
பசும்புற் றலேகாண் பரிது"

என்ற பொய்யாமொழிப்படி, ஆடு மாடுகட்குப் புல்லுங் கிடைப்பது அரிதாயிற்று. உண்ணீருமின்றி மனிதர்கள் தத் தளித்தார்கள். எங்கும் பஞ்சம் மிகுந்தது. அந்த ஊரில் எறும்புகட்கும் உணவு கிடைப்பது அரிதாக முடிந்தது. பசி யும் நோயும் மிகுந்தன. அரசகுமாரன் பல அறச்சாலேகள் வைத்து ஏழைகளின் பசியையாற்றி இன்முகங்காட்டி யுப சரித்தான். எத்துணே அன்னதானஞ் செய்தும் ஜனங்கள் "பசிபசி" என்று ஏங்கினுர்கள். சிறு குழந்தைகள் பாலின்றிப் பரதவித்தன; ஆவினங்கள் உணவின்றி அலேந்தன; பறவை

கள் இரையின்றிக் கூவின. இப்படி எங்கும் துர்பிக்ஷம் உண்டானதைக் கண்டு, மன்னன் மகன் வருந்தி, மந்திரி மகனை நோக்கி, "ஆர்வல! நம்மிருவருக்கும் முடிசூட்டிய பன்னிரண்டு ஆண்டுகளாக வானம் வழங்காதாயிற்று. சராசரங்களெல்லாம் உணவின்றி மடிகின்றன. நமது அரசாட்சியின் குற்றமோ? அல்லது வேறு குற்றமோ? அறிகிலேம். நமது கிராம தேவதையாகிய காளியம்மையை வினவி யறிவோம்; வருதி" என்று மந்திரி குமாரனை அழைத்துக்கொண்டு தேரூர்ந்து, ஊர்ப்புறத்திலுள்ள காளிகோயிலை யடைந்து, தேர்விட்டிறங்கிப் பயபக்தியுடன் கோயிலுக்குள் நுழைவாரு யினன். அக்கோயில் பூசாரியாகிய நமது (முன்கூறியபடி சுரம்வந்து சுகமுற்றவன்) காளிமுத்து, அரசகுமாரனும், மந்திரிகுமாரனும் ஆயுதபாணிகளாய்க் காளிகோயிலுக்குள் நுழைவதைக் கண்டு, உடல் நடுங்கி உள்ளம் அஞ்சி, "நாம் ஏதோ குற்றம் செய்துவிட்டோம் போலும்? நாள்தோறும் கோயிலுக்கு வருபவர்களிடம் நாம் பொய்யாக ஆவேசமாடிப் பணம் பறிப்பதை மன்னனுக்கு யாரோ தெரிவித்து விட்டார்கள் போலும்? அதனால் அரசன் சினந்து நம்மை தண்டித்து ஒறுக்க வந்துவிட்டார்" என்று எண்ணி, இன்னது செய்வது என்று தோன்றாய்க் காளியம்மைக்குப் பின்புறத் திற் பதுங்கி ஒளிந்து கொண்டான்.

அரசகுமாரன், மந்திரி மகனுடன் கோயிலுட் புகுந்து காளிதேவதையை வணங்கி, வலம்வந்து, கைகூப்பி நின்று "ஏ அகிலாண்டகோடி யீன்ற அன்னையே! தீன தயாபரி! திரிபுரசுந்தரி! கருணாகரி! எனது நாட்டில் மழைத்துளியின்றி மக்கள் வாடுகின்றனரே. இந்தப் பாவியேனுக்கு மகுடந் தரித்த பன்னிரண்டு ஆண்டுகளாக மழையில்லாத காரணம் யாது? என் மாட்டு ஏதாவது குற்றம் உளதா? எம்பெருமாட்டியே! அடியேன் அறிவுவந்த காலந்தொடங்கி மனத்தாலேனும் வாக்காலேனும் காயத்தாலேனும் பிறவுயிர்கட்குத் தீங்கு செய்யவில்லையென்பது நின் திருவுளமறியாதோ? அகிலாண்டநாயகி! கருணைக்கடலாகிய என்னிடம் கருணை காட்டாமல் வெறுத்துவிட்டால் இக்கணமே நின்

திருவடியில் என் உயிரை ஒப்பிக்கிறேன்" என்று கண்ணீர் ததும்பி நாக்குழைய கல்லுங்கரைய முறையிட்டான்.

காளியம்மை அவன் முறைக்கு இரங்கி, "அரசகுமார! நின் அறநெறிக்கும் பக்தியின் மிகுதிக்கும் மகிழ்கின்றோம். நமது சந்நிதியில் ஒரு நரபலிகொடுத்தால் மழை பொழியும்" என்று அசரீரியாக மொழிந்தாள். மன்னன் கேட்டு மகிழ்ந்து, "மதியின் மிக்க மந்திரியே! அம்பிகையின் திருமொழியினைக் கேட்டனையோ. குடிகளுக்கு நேர்ந்த இன்னலை நீக்குவது அரசன் கடமையாகும். குடிகளுக்கு அரசன் தந்தை ஆதலால், என் மக்களாகிய ஜனங்கள் சுகமுறும்பொருட்டு இக்கணமே இங்கு என்னைப் பலிகொடுத்துவிடு. நீ அரசனுக இருந்து உலகத்தை மனுநெறிதவருமல் அரசாளுதி" என்முன். மந்திரி கேட்டு மனந்துடித்து "மன்னர் மன்ன! நம் குடிகள் சுகமுறும்பொருட்டு அடியேனைப் பலியிடுவீர். அடியேன் இல்லையாஞலன்ருே வேறு யோசிக்க வேண்டும்."

"உடுக்கை யிழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு"

என்றபடி, இத்துணைநாள் உம்முடன் ஒருங்கு வளர்ந்து படித்து நட்புற்ற யான் இதற்குத் துணைசெய்யேனுயின் உடலினுலாய பயன்தான் என்ன இருக்கிறது? ஆதலால், என்னைப் பலியிடும்" என்ருன். அரசகுமாரன் "மந்திரி! என்னே நின் தகைமை? குழந்தைக்கு நோய் வந்தால் தாய் மருந்துண்பதா? அடுத்தவள் மருந்தருந்துவதா? என் மக்களாகிய பிரஜைகளின் நன்மைக்கு நானல்லவா பலியாக வேண்டும். என் ஆணையை மறுக்காதே. என்னைப் பலியிடுக" என்ருன். இப்படி இருவருக்கும் "என்னைப் பலியிடு" "என்னைப் பலியிடு" என்று வாதம் நிகழ்ந்தது. அரசகுமாரன், "மந்திரி! நில்லு. காளிதேவியைக் கேட்போம். காளி உன்னைப் பலியிடச் சொன்னுல் செய்வோம். அன்றி என்னையிடச் சொன்னுல் அதுபடி செய்வோம். அம்பிகையின் திருவுளப்படி நடப்போம். வீணில் வாதம் வேண்டாம்" என்று கூறி, காளியை நோக்கி, "அந்தரி! அகோரி! வீரி! பராத்பரி! நான் பலியாகவோ? இந்த மந்திரி பலியாகவோ நின் திருவுளம் யாது?" என்ருன்.

காளிதேவி "அரச புதல்வ! எனக்குப்பலி நீயும் ஆக வேண்டா, மந்திரியும் வேண்டா; என் பிறகே ஒளிந்திருக்கின்ற பூசாரிதான் பலியாகவேண்டும்" என்றாள். இதனைக்கேட்ட பூசாரி, இடியேறுண்ட நாகம்போல் நடுநடுங்கி வெளியே வந்து, காளியைப் பார்த்து, "அடிப்பாவி; என்னுயிர்க்குத் தானா உலைவைக்க வேண்டும்; 50 ஆண்டுகளாக உன்னைப் பூஜை செய்ததற்குப் பயன் இதுதானா? அந்தோ! என்னைப் பலிவாங்குவது உனக்குச் சம்மதமா? இதுவா நின் கருணை? பாழுந்தெய்வமே! பலிவாங்குந் தெய்வமே! நீ உலக மாதா என்று பேர்படைத்திருக்கின்றனையே? உன் குழந்தைகளில் நான் ஒருவனல்லவா! ஐயோ! என்னை வீணே பலிவாங்க எண்ணினையே: இது தகுமா? இது முறையா? இது தருமந் தானா? யாருங் கேட்பாரில்லையா?" என்று அலறினான்.

காளிதேவி "பூசாரியே! சற்று அமைதியுடன் கேள், உன்னைப் பலிவாங்க வேண்டுமென்று நான் விரும்பவில்லை; நீ செய்த பாவம் விரும்புகிறது; அறிவிலியே! சில ஆண்டுகளுக்குமுன் மார்கழி மாதம் விடியற்காலை தண்ணீரில் மூழ்கித் தயிரன்னம் அருந்தியதால் உனக்குச் சுரநோய் கண்டது. உணவின் மாறுபாட்டால் வந்த சுரநோய்க்கும் சும்மாயிருந்த ஆட்டுக்கும் என்ன சம்பந்தம்? அக்காலை நீ இரண்டு ஆடுகளைக் கொணர்ந்து பலியிட்டனை; அந்த இரண்டு ஆடுகளும் தாம் செய்த நல்வினைப்பயனால் அரச குமாரனாகவும் மந்திரி குமாரனாகவும் பிறந்து உன்னைப் பலி வாங்க வந்திருக்கின்றன. மாம்ஸ: என்ற சொல்லுக்குப் பொருள் யாது என்பதை நீ உணரவில்லைபோலும். மாம்-என்னை, ஸ:-உன்னை, "இந்தப்பிறப்பில் என்னைத் துன்புறுத்துகின்றாய்; அடுத்தப் பிறப்பில் உன்னைத் துன்புறுத்த நானே வருவேன்" என்று அந்தச் சொல்லே கூறுகிறது. மூடனே! "நீ உலக மாதாவல்லவா? உன் குழந்தைகளில் யான் ஒருவனல்லவா? என்னைப் பலிவாங்கலாமா?" என்று பிதற்றினையே! நீ எனக்குக் குழந்தையே; உன்னைப்போல் எனக்கு ஆடும் குழந்தைதானே? கோழி பன்றி எருமை முதலிய எல்லா உயிர்கட்கும் நான் தாயல்லவா! ஒரு தாயாருக்கு பல குழந்தைகளிருந்து ஒரு குழந்தை ஊமையாக இருந்தால்,

அவளுக்கு வாயில்லாக் குழந்தையின்மேல் அதிக அன்பும் ஆதரவும் இருக்குமல்லவா? அதுபோல் மனிதக் குழந்தை களைவிட ஆடு மாடு கோழி பன்றி முதலிய வாயில்லாக் குழந்தைகளிடம் அதிக அன்பு உண்டு. அந்தக் குழந்தைகளை யாருங் கேட்பாரில்லையென்று, அந்தோ! கொடும்பாவிகள் என்முன் பலியிடும்போது என் உள்ளந் துடிக்கிறது. நான் கண்டால் மிக வருந்துவேனென்று திரையிட்டுத் திரைக்கு அப்பாலிருந்து வெட்டுகிருர்கள். அப்படிப் பலியிடுகின்ற பாவிகளுக்கு நான் அந்தப் பிறப்பிலும் மறுபிறப்பிலும் தரித் திரத்தையும், குஷ்டம் க்ஷயம் குன்மம் முதலிய நோய்களை யும், குருடு செவிடு முடம் முதலிய அங்கவீனங்களையும் உண் டாக்குகின்றேன். அதனைக் கண்டும் அறிவில்லாமல் சதா என்முன் என் வாயில்லாக் குழந்தைகளைக் கதறக் கதற வெட்டிப் பலியிடுகிருர்கள். அக்கொடுமையை எண்ணுந் தோறும் என் இதயந் துடிக்கிறது. இவர்களுக்கு முற்பிறப் பிற் செய்த தீவினையால் நோய் வந்தால் ஆடு கோழிகள் என் செய்தன? அவைகளைப் பலியிடுவதனுல் வரும் பயன் யாது? பலியிடுவதனுல் உலகில் இறப்பதே இல்லையா?

ஒரு தாய் தன் மூத்த குழந்தைகள் சற்று வலியுடைய வர்களாயிருந்து, வாயில்லாத இளங்குழந்தைகளைக் கொன் ருல் அவள் பொறுப்பாளா? அது அவளுக்குத் திருப்தியைத் தருமா? ஐயோ! ஏழைப் பிராணிகளைக் கொண்டு என்பேர் வைத்துக் கொன்றுதின்று திரியும் இப்பாவிகளுக்கு இருபத் தெட்டு நரகங்களும் போதாதே? பூசாரியே! நன்கு இவை களை எண்ணிப்பார்; உனக்கே விளங்கும்.

> "பிறர்க்கின்ஞ முற்பகல் செய்யின் தமக்கின்ஞ
> பிற்பகல் தாமே வரும்."

என்ற பொதுமறையை நீ படிக்கவில்லையானுலும் கேட் டது மில்லையா? நீ செய்த வினையை நீதானே அனுபவிக்க வேண்டும்? என்னை வீணே வைது இன்னும் ஏன் பாவத்தைத் தேடிக்கொள்கின்ருய்? ஆதலால், **எந்த உயிரை எவன் கொல்லுகிருனே மறுபிறப்பில் அந்த உயிர்** அவனைக் **கொல்ல** வருகிறது. **பலியினுல்** வரும் **பாவத்தை** இப்பொழுதாவது

உணர்ந்து, இனி வருபிறப்பிலாவது கொலைத் தொழிலும் புலைப்புசிப்பும் இல்லாத தூயவனுகப் பிறக்கவேண்டும் என்று தெய்வத்தை வேண்டிக்கொள். குற்றத்தை ஒப்புக் கொண்டு, அக்குற்றத்தை நினைந்து, "தவறு செய்துவிட் டோமே" என்று வருந்தினல், அந்தப் பாவத்தின் பயன் குறைகிறது. இனியாவது நின் மனத்தில் கருணையுண்டா கட்டும்" என்று காளிதேவி சொன்னுள்.

இவற்றைக் கருத்தூன்றிக் கேட்ட காளிமுத்துப் பூசாரி உண்மையுணர்ந்து தான்செய்த பாவத்தை எண்ணி எண்ணி மனம்பதைத்து, "தாயே! ஆம், அடியேன் செய்தது பெருந் தவறு. அந்தோ! அந்தோ! கருணைமிக்க சன்மார்க்க சங்கத் தில் சேராமல் வீணே பொய்யாவேசம் ஆடி உயிர்களைப் பலி யிட்டுத் தூய தெய்வக்கோயிலையும் சுடுகாடாக்கிக் கள் குடித்து மருளாடிக் கெட்டேன். என் வரலாற்றை யறிந்தா வது இனி உலகம் உய்க. என்னைப் போன்ற மருளாடிகள் சொல்லை நம்பி இனியாவது உலகில் வாயில்லா ஊமைப் பிராணிகளைப் பலியிடாதிருக்கட்டும். குடிவெறி கொண்ட குடிகெடுக்கும் பூசாரிகள் உடுக்கடித்துத் தங்கள்மேல் தெய்வமே வந்துவிட்டதாகக் கூக்குரலிடும் பொய்ப் பித்த லாட்டத்தைக் கண்டு மக்கள் ஏமாருதிருக்கட்டும். ஐயோ! இரண்டு ஆடுகளை வெட்டியதற்கே எனக்கு இந்தக் கதி வந்த தென்ருல், கணக்கற்ற ஆடு கோழிகளைப் பலியிடும் பேதை களுக்கு மறுபிறப்பில் என்ன கதி வருமோ? மேலும் சிறு குழந்தைகளிடத்தில் தாய்க்கு அதிக அன்பு என்பது உலக மறிந்ததாயிற்றே. சிறு சிறு ஆட்டுக் குட்டிகளைப் பலியிடும் வன்கணவர் மீளாநரகுக்கு ஆளாவரே! **பலியினுல் வரும் பாவத்தைத்** தெரிந்து உலகம் பலியைவிலக்கி பார்பொங்க லிட்டு அம்பிகையின் அருளைப் பெறுக. அரசகுமாரரே! இந்தப் பாவியைத் தாமதிக்காமல் பலியிட்டு என்பாவத்தை நீக்கியருள்வீர்" என்று பணிந்து, காளிக்கு முன் தலைகுனிந்து நின்ருன்.

அரசகுமாரன் காளிதேவியின் ஆணைக்கு அஞ்சி, தனது உடைவாளால் அப்பூசாரியைப் பலியிட்டான். உடனே "அந்தோ நானும் இவனுடன் பலியாகின்றேன்" என்று

தன்னையும் வெட்டிக் கொள்ளத் துணிந்தான். அப்போது காளிதேவி பிரசன்னமாகி, அரசகுமாரனைத் தகைந்து, "அற மிகு செல்வ! நின் கருணைக்கு மகிழ்வுற்றோம்; நினக்கு வேண்டும் வரம் யாது?" என்று வினவினள். அரசகுமாரன் அம்பிகையை வணங்கி, "உலகீன்ற அன்னையே! இவன் அறியாமையாற் செய்த இப்பிழையை மன்னிக்க வேண்டும். குற்றத்தை உணர்ந்து வருந்தியபோதே பாவம் மன்னிக்கப் படுகிறதல்லவா? ஆதலால், இப்பூசாரியை எழுப்பித் தரு வதே எனக்கு முதல்வரமாக நீ கொடுத்தருளல் வேண்டும்" என்றான்.

காளியம்மை பூசாரியை எழுப்பித் தந்து மழைபொழி வித்துத் தண்ணருள் செய்து மறைந்தாள். அந்தப் பூசாரி அன்று தொடங்கிப் பலியினால்வரும் பாவத்தை எல்லோருக் கும் விளக்கிச்சொல்லுவதே தனது வாழ்க்கையின் பயனாகக் கொண்டு, பலிவிலக்குத் தொண்டு புரிந்து, முடிவில் நற்கதி யடைந்தான். அரசகுமாரன் மந்திரி குமாரனுடன் இந்த அற்புதங்களைக் கண்டு இறும்பூதுற்று, தனது குடிகளையெல் லாம் தன்னுயிர்போல் மன்னுயிரைக் காக்குமாறு செய்து, அரசாட்சி செய்துவந்தான். காலந்தோறும் வானம் வழங்கி யது. பயிர் தழைத்தது. பசியென்பது பறந்தோடியது. மிடி விலகியது. செல்வங் கொழித்தது. ஜீவகாருண்யம் அந்நாட்டில் தாண்டவமாடியது. கொல்லா விரதமே எங் கும் குடிகொண்டது. எல்லோரும் இன்புற்றிருந்தார்கள்.

"கொல்லா விரதங் குவலயம் எல்லாம் ஓங்க
எல்லார்க்குஞ் சொல்லுவது என்இச்சை
பராபரமே."
"கொல்லாமை வாழ்க குமரன்தாள் வாழ்க."

## 51. தவம்

நெடுந்தூரம் போகக் கருதிப் புறப்பட்ட ஒருவன் வழி நெடுகப் பசியின்றிச் செல்லும்பொருட்டு முன்கூட்டியே கவனமுடன் பழங்கள் பட்சணம் கட்டமுது முதலியவை களைக் கொண்டுபோவான். அங்ஙனம் கொண்டுபோக வில்லையானால் பட்டினி கிடந்து துன்புறுவான்.

300, 400, 500 கல் தொலே போவானே அவ்வாறு தக்க படி இனிய உணவுகளைக் கொண்டு போவான் எனில், இந்த உலகையும், உடம்பையும் விட்டுப் புறப்பட்டு, மிகத் தொலை வுள்ள இடத்திற்குப் போகக்கூடிய நாம், அப் பெரும் பய ணத்தில் கொண்டுபோகும் கட்டமுது எது? அதை எப்படிப் பெறுவது? என்று அதைப்பற்றிச் சிந்திக்காதவன் அறிவுடை யவன் ஆவானு? ஆகமாட்டான்.

எனவே உலகையும், உடம்பையும் விட்டு நாம் புறப் படும்போது, உடன்வரும் பெருந் துணையும், கட்டமுதும், தவமாகும். தவம் ஒன்றே ஆகும் பெருந்துணையாக, அக் காலத்தில் அழியாது வந்து உதவும்.

இதை அருணகிரிநாதர் கூறுகின்ருர்:

"மலையாறு கூறெழ வேல்வாங்கினனை வணங்கி
யன்பின்
நிலையான மாதவஞ் செய்குமினே நும்மை தேடிவருந்
தொலையா வழிக்குப் பொதிசோறும் உற்ற துணையுங்
கண்டீர்"

நாம் போக இருக்கும் தொலையாத வழிக்குக் கட்டமு தாக வந்து உதவுவது தவம் என்ற அரிய கருத்து இதன் மூலம் வற்புறுத்தப்படுகின்றது.

இனி தவம் என்ருல் எது! என்பதைச் சிந்திப்போம். தவம் என்ற உடனே யாரும் அஞ்சிவிடக்கூடாது. காட்டுக் குள் செல்வதும், பட்டினி கிடப்பதும், கனல் நடுவே நிற்பதும், ஒரு காலில் நிற்பதும் தவம் என்று கருதிவிடக் கூடாது. அவைகள் யாவும் தவத்திற்கு அங்கங்களே யன்றி நேரே தவமாகாது.

தனக்கு வருகின்ற துன்பங்களைச் சித்த சமாதானத்துடன் தாங்கிக் கொள்ளுதல்; இன்னெரு உயிர்க்குத் துன்பஞ் செய்யாதிருத்தல்; இந்த இரு தன்மைகளும் சேர்ந்த ஒரு பண்பே தவம்.

"உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு"

என்று தவத்திற்கு இலக்கணங் கூறுகின்ருர் திருவள்ளுவர்.

துன்பம் வரும்போது வருந்தி வாடித் துடிக்கக்கூடாது. 'இடுக்கண் வருங்கால் நகுக' என்ற திருவாக்கையும் இங்கு நினைவு கூர்க. பெருங்காற்றைக் கண்டு அசையாது நிற்கும் இமயமலைபோல், பண்டை வினை காரணமாக வரும் துன்பங்களைக் கண்டு அஞ்சாமலும், அல்லல்படாமலும், "வருவதெல்லாம் வரட்டும்" என்று மனச்சாந்தியுடன் இருக்க வேண்டும்.

இனி எந்த உயிர்கட்கும், அணுத்துணையுங்கூடத் துன்பஞ் செய்யா திருத்தல் வேண்டும். மனத்தாலும் வாக்காலும் செயலாலும் இந்நெறியைப் பாதுகாக்கவேணும்.

"கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு"

என்று கூறி யருளினர் தெய்வப்புலவர்.

எல்லா உயிர்களும் உலகில் வாழவே கருதுகின்றன. விரைவில் மாளவேண்டும் என்று புழுகூடக் கருதுவதில்லை. ஆகவே, அவ்வுயிர்களின் உயிர்வாழ்வைக் கெடுக்கக்கூடாது. பிற உயிர்கட்கு நாம் தீங்கு செய்வோமாயின், அத் தீங்கு பன் மடங்காகப் பெருகி, மறுபிறப்பில் நம்மிடம் வருகின்றது.

'நோயெல்லாம் நோய் செய்தார் மேலவாம்'!

என்ற பொதுமறை வாக்கால் இதனை யறிக.

ஆகவே, இத் தவநெறியை, ஒவ்வொரு மனிதனும் உறுதியாகக் கடைப்பிடிக்கவேணும்.

தவநெறியை விடுத்து அவநெறியை அடுத்துப் பலர் அல்லல் படுகின்றனர்.

"தவநெறிதனை விடு தாண்டு காலியை" என்று அருணகிரிநாதர் கூறுகின்றனர்.

வாணிபத்தால் தனம் வரும். விவசாயத்தால் தானியம் வரும். தான தருமத்தால் புகழ் வரும். கல்வியால் அறிவு வரும். உணவு நியதியால் ஆரோக்யம் வரும். தவத்தால் சிவம் வரும்.

ஆகவே தவத்தால் சிவத்தைப் பெற்று, பவப்பிணியை மாற்றி உலகம் இன்புறுவதாக.

## 52. "அவர் உள்ளம் ஆர் அறிவார்?"

கஞ்சனூரில் அவதரித்தார் அரதத்த சிவாசாரியர். அவர் சைவசமயத்தை நிலை நிறுத்தியவர். காய்ந்த இரும்புப் படியின்மீது நின்று சிவபரத்துவம் கூறினார். கல் நந்தியைப் புல்லருந்தச் செய்தவர். அவர் ஒரு சமயம் உடல் நலமின்றி மூன்றுநாள் சிவாலயம் போகவில்லை. நான்காவதுநாள் நீராடினார். மாலை சிவாலயஞ் சென்றார்.

கோயிலில் ஒரு இளம் பெண்மணியாகிய தேவதாசியைத் தூணில் கட்டி, கோயில் தலைவர், "நேற்று ஏன் நீ கோயிலுக்கு வரவில்லை" என்று கேட்டு அடித்துக் கொண்டிருந்தார். இதனைக் கண்ட அரதத்தர், "அந்தோ!" என்று வாய்விட்டலறி அழுதார். விம்மி விம்மி அழுவாராயினார்.

அவர் ஏன் இப்படி அழுகின்றார் என்ற கருத்தை அங்குள்ளவர்களால் எளிதில் அறிய முடியவில்லை.

இந்தப் பெண்ணை அடிப்பதைக் கண்டு, "இவர் ஏன் இவ்வாறு அழுகின்றார்" என்ற வினா அக்கூட்டத்தில் எழுந்தது.

"கருணையால் இப்படி அழுகின்றார் போலும்" என்றார் ஒருவர்.

"இவளுக்கும் இவருக்கும் தொடர்பு இருக்கலாம். இல்லையேல் இவள் அடிபடுவதை நோக்கி விம்மியழமாட்டார்தானே" என்றார் ஒருவர்.

"அழகிய பெண் அடிபடுவதனால் அழுகின்றார் போலும்" என்றார் ஒருவர்.

இப்படிப் பலர் பலவண்ணம் பேசிக்கொண்டார்கள். முடிவில் ஒரு சிறந்த அறிஞர் அரதத்தரை வணங்கி, "சுவாமீ! இந்த மங்கையைக் கோயில் தலைவர் அடித்தால் தாங்கள் ஏன் அழுகின்றீர்?" என்று கேட்டார்.

அரதத்தர், "ஐயன்மீர்! இந்த அம்மாள் நேற்று கோயிலுக்கு வரவில்லையென்பதற்காக, இவர் கட்டி அடிக்கின்

ருரே! நான் மூன்று நாட்களாகக் கோயிலுக்கு வரவில்லை. இவரைக் கட்டி அடிப்பதுபோல் என்னையுங் கட்டியடிக்க ஆளில்லையே? கோயிலுக்கு வராத குற்றத்திற்காக இவ்வாறு கட்டியடித்தால்தானே உய்வுபெற முடியும். ஆகவே என்னை அடிக்கவில்லையே என்று எண்ணி அழுகின்றேன்" என்ருர்.

இதனைக் கேட்டவுடனே, அங்குள்ளோர் ஐயந்தீர்ந்தனர். "அவர் உள்ளம் ஆரறிவார்?". அவர் சொன்ன பின்னரே அறிந்து மகிழ்ந்தனர்.

ஃ ஃ ஃ

தூய அன்னை சாரதாமணிதேவியார், பேலூர் மடத்தில் இராமகிருஷ்ணர் மறைவுக்குப்பின் மாணவர்களின் அறியாமையை நீக்கி, அறிவுப்பசியை யாற்றி, அருட்கடலாய் விளங்கிக் கொண்டிருந்தார். அவர் வாழ்வு அடியார் பொருட்டே அமைந்திருந்தது. பலப்பல மாணவர் அன்னையின் அடிமலர் பணிந்து பலப்பல சந்தேகங்களை நீக்கிக் கொண்டார்கள். ஆ! அன்னையாருடைய வாக்கு, அமுதமயமாக அமைந்து அனைவரையும் ஆட்கொண்டது.

ஒருநாள் மாணவி மாணவக் குழாத்துள், ஒரு மாணவி சாரதாமணியம்மையின் படம் ஒன்றைக் கொணர்ந்து, அன்னை சாரதாமணியாரிடம் காட்டினுள். அதனைக் கண்ட அன்னை முகமலர்ந்து, அப்படத்தைத் தொட்டு கை தொழுதார்.

இதனைக் கண்ட மாணவி சிரித்தாள். "அன்னையே! உமக்கென்ன பித்தமா? உம்முடைய படத்தை நீரே தொழுகின்றீரே? தன்னைத்தானே கும்பிட்டுக் கொள்ளலாமா?" என்று சிரித்துக்கொண்டே கேட்டாள்.

அன்னை கூறுகின்ருர். "பெண்ணே! பித்தம் எனக்கல்ல; உனக்குத்தான். நீ அறியாமையால் சிரிக்கின்ருய்? என் கருத்தையறிய உனக்கு வன்மையில்லை.

"என் உள்ளத்தில் பரமஹம்சர் வீற்றிருக்கின்ருர். அவர் இடையருது எனது உள்ளக் கோயிலில் எழுந்தருளியிருக்

கின்றார். ஆகவே இந்த எனது படத்திற்குள்ளும் அவர் இருக்கின்றார். எனவே, உள்ளுணர்வில் விளங்கும் பரமஹம்சரைக் கண்டு வணங்கினேன்" என்றார்.

அந்த விடையைக் கேட்ட அம் மாணவி நாணமுற்றாள். அது மட்டுமன்று; அன்னையின் உள்ளக் கமலத்தில் பரமஹம்சர் வீற்றிருக்கின்றார் என்பதையும், படத்தைக் கண்டதும் அன்னையின் பார்வை படத்தை ஊடுருவி உள்ளுணர்வாயுள்ள பரமஹம்சரைக் காண்கின்ற அருமையையும், அவர் பரமஹம்சர்பால் வைத்திருக்கின்ற அன்பின் பெருக்கையும் உன்னி உவகையுற்றாள்; விம்மிதமுற்றாள். அன்னையின் அடிமலர்மீது வீழ்ந்து, "கருத்தறியாது சிரித்த என்னை, மன்னிக்க வேண்டும்" என்று தொழுதாள். அன்னை அன்புடன் அணைத்து ஆசி கூறினார்.

ஃ ஃ ஃ

அடியேன் ஒரு சமயம் ஒரு அன்பர் வீட்டிற்குச் சென்றிருந்தேன். அது சமயம் அங்கு ஒரு அடிகளாரும் வந்திருந்தார். அந்தப் பேரன்பர் அடிகளாரை அஞ்சலி செய்து, பால் பழம் நல்கி, ஒரு பதினைந்து ரூபாயைத் தமது கரத்தில் ஏந்தி, அவரை எடுத்துக்கொள்ளுமாறு செய்தார்.

இங்ஙனமே அவர் பலமுறை பல அடியார்களிடம் செய்யக் கண்டேன்.

அவர் கருத்து—உள்ளம் எனக்கு விளங்கவில்லை. சிந்தித்தேன். ஒன்றும் புரியவில்லை. அவரையே மெல்ல வினவினேன்.

"ஐயா! ஒரு சிறு சந்தேகம். தாங்கள் ஒவ்வொருமுறையும் பத்து, பதினைந்து, இருபது என்ற தொகைகளைக் கையில் ஏந்தி, அவர்களை எடுத்துக்கொள்ளுமாறு செய்கின்றீரே. அதற்கு என்ன காரணம்?" என்று கேட்டேன்.

அவர் சொன்னார், "தருகின்ற கை மேலே இருக்க வேணும், பெறுகின்றவன் கை கீழே இருக்கவேணும். அதனால்தான் நான் அப்படிச் செய்கின்றேன்" என்றார்.

N. Latha



நான் "ஐயா! நீங்கள்தான் பத்து, பதினைந்து அவர்கட்குத் தருகின்றீர். தருகின்ற கை தங்கள் கை. பெறுகின்ற கை அவர்கள் கை. ஆகவே தங்கள் கருத்து யாது?" என்றேன்.

அவர் மெல்லச் சிரித்தார். "ஓ ஓ! உங்கட்கு விளங்கவில்லையா? நான் கையில் ஏந்தும் பொருள் அழிவது. அடியார்கள் தருவது அருள். பொருள் அழியும். "பொருட்செல்வம் பூரியார் கண்ணும் உள" என்பர் வள்ளுவர்.

நான் பொருளை யீந்து, அருளைப் பெறுகின்றேன். ஆகவே அவர்கள் கை அருளைத் தருகின்ற கை. என் கை அருளைப் பெறுகின்ற கை. அதனால் என் கை கீழும் அவர்கள் கை மேலுமாக இருப்பது முறைதானே" என்றார். அவருடைய ஆழமான கருத்தை அறிந்து அதிசயமும் மகிழ்ச்சியும் அடைந்தேன், 'ஆரறிவார் அவருள்ளம்':

## 63. இராமரது எளிமை

இராமச்சந்திரமூர்த்தி, இளமையில் ஒரு ஏழைமகனுடன் விளையாடிக் கொண்டிருந்தார். அவன் பேர் ஸ்ரீநிவாசன்.

"அடேய் சீனு!" என்று இராமர் அழைப்பார்.

"அடே ராமா!" என்று அவன் அழைப்பான். குழந்தைப் பருவத்தில், அரசன் மகனும், ஆண்டி மகனும் ஒன்றுதானே!

இராமர், வசிட்ட முனிவரிடம் கலை பயின்று தாடகை வதம் புரிந்து, சீதாகல்யாணம் முடிந்தபின், கானகஞ் சென்றார்.

ஏழைமகன் ஸ்ரீநிவாசன், அயலூர் சென்று அலைந்து திரிந்து அயோத்தியை யடைந்தான்.

"எங்கே என் நண்பன்? ராமர் எங்கே?" என்று வினவினான்.

கானகம் சென்ருர் என்று உணர்ந்தான், அழுதான். "அந்தோ! ராமா! நீ கானகம் சென்றனையா? உனக்கு யார் துணை? மழை வெயில் பனி முதலியவற்ருல் நீ துன்புறு வாயே. நான் வந்து உனக்குத் துணை செய்வேன்" என்று தனக்குள் கூறிக்கொண்டான்.

காட்டை யடைந்தான். "ராமா! ராமா!" என்று கூவி யழைத்த வண்ணம் பித்தனைப்போல் அலைந்தான். உலைந் தான்; காடெல்லாம் தேடினான்; நாடினான்; ஓடினான். எம் பெருமான் சென்ற கானகத்தை, அவனால் அறிய இயல வில்லை.

பதினான்கு ஆண்டுகள் உருண்டு ஓடி மறைந்தன.

ஏழைமகன் அயோத்தியை யடைந்தான்.

அன்றுதான் முடிசூட்டுவிழா.

"அரியணை அநுமன் தாங்க
அங்கதன் உடைவாள் ஏந்த
பரதன் வெண்குடை கவிழ்க்க
இருவரும் கவரி வீச
விரை செறி குழலி ஓங்க
வெண்ணெயூர்ச் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுப்ப வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌலி"

என்றபடி மகுடாபிஷேகம் நிகழ்ந்தது. வேதியர்கள் வேத கீதமும், மாதர்கள் மங்கல நாதமும் முழக்கினார்கள். முனி வர்கள் மந்திராட்சதை தெளித்தார்கள். ஒரே கோலாகலம். மன்னர் குழாங்கள் கைகூப்பி வணங்கி நின்ருர்கள்.

அங்கே வந்தான் ஏழை ஸ்ரீநிவாசன். காவல்காரனை நோக்கி, "அடே! ராமன் வந்துவிட்டானா?" என்று கேட்டான்.

"ஆம் வந்துவிட்டார், மகுடாபிஷேகம் நடக்கின்றது" என்ருன் காவல்காரன்.

அவனுக்கு அளவற்ற மகிழ்ச்சி யுண்டாகியது. தனக்கே மகுடாபிஷேகம் ஆகின்ருப்போல் உள்ளம் கிளுகிளுத்தது.

ஒரே ஓட்டமாகத் துள்ளி ஓடினுன். இரத்தின சிங்காசனத்தில் வீற்றிருக்கின்ற சக்ரவர்த்தித் திருமகனைக் கண்டான். இளமையில் அழைத்த நாப்பழக்கம்.

"அடே ராமா! காட்டுக்குச் சென்றுயே! எப்படா வந்தாய்?" என்றுன்.

இந்தச் சொற்கள் அந்த அரச அவையைக் குலுங்க வைத்தது. சபையில் ஒரு பெரிய பரபரப்பு உண்டாகியது.

இலட்சுமணரின் கண் சிவந்தது. இவன் தலையைத் தள்ளுவேன் என்று எடுத்தார் கோதண்டம்.

பரத சத்ருக்னர் சீற்றமுற்றுர்கள். அனுமந்தர் வாலை எடுத்தார்; "இவனைக் கட்டி ஏழு கடலுக்கும் அப்பால் எறிவேன்" என்றுர். வசிட்டமுனிவர் "ரகுநாதனுக்கு நான்தான் பேரிட்டேன்; எனினும் நானே ராமா என்று அழைப்பதில்லை. ராகவேந்திரா? ராமச்சந்திரா! என்று தானே அழைக்கின்றேன். இந்த மூடன் அடே ராமா என்று அழைத்தானே, இவனை விட்டுவைக்கலாமா" என்று சினந்து தருப்பைக் கட்டை எடுத்து ஓங்கினுர். ஆ! ஆ! என்ற ஒலி எங்கும் எழுந்தது.

ஸ்ரீ ராமர் பளிச்சென்று எழுந்து ஓடினுர். "அவர் முதலில் அடிக்கட்டும்; பின்னர் எல்லோரும் சேர்ந்து அடிப்போம்; இவன் வாயைக் கிழிப்போம்" என்று எண்ணினுர்கள் மற்றவர்கள்.

ஸ்ரீ ராமர் ஓடி அவனைத் திருமார்புடன் தழுவி, "அன்பனே! நேற்றுத்தான் வந்தேன். உன்னைக் காண வேண்டும் என்று துடித்தேன். நல்ல காலத்துக்கு நீ வந்துவிட்டாய்; மிக்க மகிழ்ச்சி. வருக, வருக" என்று அழைத்துக்கொண்டு போய் அரியணைமீது, தன்னுடன் அமர்த்திக்கொண்டார். சபையில் பரபரப்பும் அதிசயமும் ஏற்பட்டன.

இராமர் சபையோர்களைக் கருணையுடன் பார்த்துக் கூறுவார் :

"குருநாதா! தம்பி பரதா! இலட்சுமணா! சத்ருக்னா! ஆஞ்சநேயா! மன்னர்களே! எனக்குப் பதினான்கு ஆண்டுகளாக ஒரு தீராத கவலையிருந்தது. அது இன்றுதான் தீர்ந்தது.

சித்திரகூட பருவதத்தின் அருகில், மந்தாகினி நதிக் கரையில் நான் தங்கியிருந்தபோது, தம்பி பரதன் வந்து தந்தையார் பொன்னுலகம் புகுந்தார் என்று புகன்றான்.

என் அருமைத் தந்தையார், எனக்கு முடிசூட்டி மகிழ விரும்பினார். இந்த முடிசூட்டு விழாவில் தந்தையார் இருந்து சிந்தை மகிழ்வதற்கு இல்லையே என்று எண்ணி எண்ணி வருந்தினேன். எல்லோரும் என்னை ராகவேந்திரா! ரகுநாதா! என்றெல்லாம் அழைப்பார்கள். அப்பா ஒருவர் தான் அடே ராமா என்று அன்பு கனிய அழைப்பார். எனவே என் மனக்கவலை மாற, 'அடே ராமா!' என்று அன்பு கனிய அழைத்த இவர் என் பிதாவாகும். தந்தையார் இந்த வடிவில் வந்து அழைத்து என் மனக் கவலையை மாற்றி விட்டார்" என்று அன்புக் கண்ணீர் சிந்திக் கூறினார். இதைக் கேட்ட அத்தனை பேரும் இராமருடைய கருணையின் எளிமையை எண்ணி அதிசயித்தார்கள். தசரதர் என்று எண்ணி அந்த ஏழையை இறைஞ்சினார்கள்.

## 54. இராமாயணம்

இராமாயணம் என்ற சொல், இராம அயனம் என்று பிரியும்; அயனம்—உறைவிடம்; இராமனுடைய இனிய குணங்கட்கு உறைவிடமாகத் திகழ்வது இராமாயணம்.

நார அயனம்—நாராயணம் என வருவதும் காண்க. நாரம்—அன்பு; அயனம்—உறைவிடம். அன்புக்கு உறைவிடம் ஆனவர் நாராயணர்.

ரகரத்திற்குப்பின் வரும் நகரம் ணகரமாகத் திரியும். இது வடமொழியின் விதி. சர—வனம் என்பது சரவணம் என்று வருவதையும் காண்க.

இராம சரிதையில் நாம் அறிய வேண்டிய உண்மைகள் பல உண்டு.

## 1. தந்தை சொல் கேட்டல்

ஸ்ரீராமர், தன் தந்தை சொல்லை நிறைவேற்றும் பொருட்டு, வெயில் மழை காற்று பனி குளிர் பசி தாகம் முதலிய எல்லா விதமான துன்பங்களையும் தாங்கிக் கொண்டு, பதினான்கு ஆண்டுகள் கானகஞ் சென்றார்.

## 2. உடன்பிறந்தாரது ஒற்றுமை

ராமர், பரதர், இலக்குமணர், சத்ருக்னர் என்ற நால்வர்களும் மிகுந்த ஒற்றுமையாக இருந்தனர். ஒருவருக்கு வந்த இன்பதுன்பங்களை, மற்றொருவர் தமக்கு வந்ததாகக் கருதினார்கள்; பரதருடைய ராமபக்தி, இமயவரையினும் உயர்ந்தது.

## 3. சொல் தவறாமை

சொன்ன சொல்லை, இறுதிவரை உறுதியுடன் காப்பாற்றுதல். வாய்மை காத்து, தயரதர் தன் உயிரையே தியாகம் புரிந்து விட்டார்.

இராமர் வாய்மையைக் காத்து நின்றார்.

"புறந்தூய்மை நீரானமையும் அகந்தூய்மை
வாய்மையால் காணப் படும்"

என்ற திருவள்ளுவரது திருமொழிக்கு இலக்கியமாக வாழ்ந்தார்.

"ஒகமாட ஒகபாண ஒகபத்நி வ்ருதுடௌ"

ஒரு சொல்; ஒரு வில்; ஒரு இல் என்று தமிழில் கூறலாம்.

## 4. ஏகபத்நீ விரதம்

இராமர், ஒரே மனைவியிடன் வாழ்ந்து உலகிற்கு ஏக பத்னி விரதத்தின் இன்றியமையாமையைக் காட்டினார். பிறன்மனை நயத்தல் என்பது ஒரு பெரிய பாவம்.

"அறன்கடை நின்ருருள் எல்லாம் பிறன்கடை
நின்ருரிற் பேதையார் இல்."

என்பார் திருவள்ளுவர்.

இக்கொடிய பாவச் செயலாகிய பரதாரகமனத்தைப் புரிந்த வாலியையும், இராவணனையும், இராமர் தருமத்தின் வடிவாகிய தன் கோதண்டத்திஞல் கொன்ருர்.

## 5. எல்லோரையும் உடன்பிறந்தோர் எனக் கொள்ளல்.

இராமர் கானகத்தில் கால் வைத்த அன்றே, கங்கைக் கரையில் வாழ்ந்த, ஓடம் விடும் வேடனைத் தன் தம்பியாகக் கருதிஞர். குகன் பரம ஏழை. அநாசாரமுடையவன். கல்வி கேள்விகள் இல்லாதவன். அவனை அன்பாகத் தழுவிக் கொண்டார்.

குரங்கின் தலைவனுகிய சுக்ரீவனையும் தம்பியெனக் கொண்டனர். இனி இலங்கையில் வாழ்ந்த வீடணனையும், தன் தம்பி யென்று கொண்டு மகிழ்ந்தார். கங்கை வட கோடி; இலங்கை தென்கோடி. கங்கையிலே ஒரு தம்பி; இலங்கையிலே ஒரு தம்பி என்ருல் இடையில் உள்ளவர்களும் தம்பிகள் என்பது தானே பொருள். முதல் எழுத்தும் கடைசி எழுத்தும் எழுதி ப-ர் என்ருல் பத்திராதிபர் என்றும், ந-ர் என்ருல் நமது நிருபர் என்றும் படித்துக் கொள்வது போல், கங்கை வேடனையும், இலங்கை வீடணனையும் தம்பிகள் என்ருல், ஏனையோர்கள் யாவரும் தம்பிகள் தானே.

"குகனெடும் ஐவரானேம் முன்புபின் குன்று
சூழ்வான்
மகனெடும் அறுவரானேம் எம்முழை பண்பில் வந்த
அகனமர் காதல் ஐய! நின்னெடும் எழுவரானேம்
புகலரும் கானம் தந்து புதல்வரால் பொலிந்தான்
உந்தை"

என்கின்ருர் கம்பர்.

## 6. ஒன்ருகக் காண்பதுவே காட்சி

ஔவையார் கூறியது “ஒன்ருகக் காண்பதுவே காட்சி” என்பது. இராமர், நாட்டையும் காட்டையும் ஒன்று போல் பார்த்தனர். “இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள் துன்பம் உறுதல் இலன்” என்ற வள்ளுவர் வாக்குக்கு எடுத்துக் காட்டாக, ஒரு வரைத்தூண் போல் நின்றனர்.

மெய்த் திருப்பதம் மேவென்ற போதிலும்
இத்திருத்துறந் தேகென்ற போதிலும்
சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை
ஒத்திருந்த முகத்தினை உன்னுவாள்.

இப் பாடல், சீதை, அசோக வனத்தில் இருந்து தன் கணவனுரை நினைக்கின்ற நினைவை விளக்குகின்றது.

நாடு உனக்கு என்ற போதும், காடு உனக்கு என்ற போதும் இராமருடைய திருமுகம் சித்திரத்தில் எழுதிய செந்தாமரையைப் போல், மலராமலும், குவியாமலும் இருந்தது என்று கம்பர் கூறுகின்ருர்.

இத்தகைய அரிய பெரிய நற்குணங்கள் எல்லாவற்றையும், தனக்கு அணிகலமாகப் பூண்டவர் ஸ்ரீ ராமர்.

இராமாயணம், இவ்வாறு பல அறங்களை நமக்கு உணர்த்துகின்றது. எல்லோரும் இராமாயணத்தைப் படித்து, தமது வாழ்க்கையோடு இணைத்து, அறத்தினைக் கடைப் பிடித்து வாழ்க.

## 55. கம்பர் கவிநயம்

கம்பநாடர் ஒரு சிறந்த கவியரசர். புவியரசர் போற்றும் புலவர் வேந்தர். அவர் உலக அநுபவம் நிறைந்தவர்.

தயரத மன்னர் அரசு புரிகின்ற சிறப்பை அவர் கூற வருகின்ருர். சுருங்கிய சொற்களால், விரிந்த கருத்துக்களை விளக்குகின்ருர்.

ஒரு பெருந் தனவந்தன். அவனுக்கு நூறு ஏக்கர் நிலம். அப் பெரும் பணக்காரன் தனது நிலங்களை நன்கு பேண மாட்டான். பேணினாலும் நிலங்களில் பல பகுதிகள் பாழாகக் கிடக்கும். அவனால் நிலம் முழுவதையும் பார்க்க இயலாது; நேரமும் காணாது.

ஒரு வறியவன். பெருங் குடும்பம். உழைத்தால் தான் உணவு. அவனுக்கு ஒரே ஏக்கர் நிலம். அந்த ஏழை ஒரு ஏக்கர் நிலத்தில் ஒரு பகுதியேனும் சும்மா விடுவானா? அதில் ஒரு பகுதியில் பயிர் ஏறாமல் இருந்தால் அவன் குடும்பம் பட்டினி கிடக்க நேருமல்லவா? அன்றியும், இரவும் பகலு மாக, அந்த நிலத்தைச் சுற்றி நன்கு உழைத்துப் பயிரிட்டுப் பாதுகாப்பான்.

தயரதர், பூமண்டல முழுவதும் எவ்வாறு ஆள்கின்றார். அந்த வறியவன், தன் ஒரு ஏக்கர் நிலத்தை கண்ணுங் கருத்துமாக எப்படிக் காப்பாற்றுவானோ, அப்படி உலகை ஆள்கின்றார் அரசர்.

"வையக முழுவதும் வறிஞன் ஓம்புமோர்
செய்யெனக் காத்தினிது அரசு செய்கின்றான்"

என்பது கம்பர் திருவாக்கு. அவர் கூறும் உவமை, எத் துணை அருமையும், சுவையும், எளிமையும், இனிமையும் உடையது என்பதை உற்று நோக்குங்கள்.

தயரதர் பூமண்டல முழுவதும், பலமுறை சுற்றி, ஏழை அந்த ஒரு ஏக்கர் நிலத்தைப் பழுதுறாமல் காப்பதுபோல்; உலகைக் காத்து இனிது அரசு புரிகின்றார் என்று அழகாகக் கூறுகின்றார்.

இன்னொரு இடம்:

தாடகை என்ற கொடிய அரக்கி பூமியைப் பேர்த்து எடுப்பாள். கடலை வாரிக் குடிப்பாள். விண்ணுலகை இடிப் பாள். மலைகளைப் பொடிப்பாள். உலகிலேயுள்ள பாவங் கள் அனைத்தும் திரண்டு ஒரு பெண்ணுருவங் கொண்டது போன்றவள்.

"மண்ணுருத் தெடுப்பினும் கடலை வாரினும்
விண்ணுருத் திடிப்பினும் வேண்டிற் செய்கிற்பாள்
எண்ணுருத் தெரிவரும் பாவம் ஈண்டியோர்
பெண்ணுருக் கொண்டெனத் தெரியும் பெற்றியாள்"

இப் பாடலின் ஓசை நயம், சொல்லழகு, நடையழகு, தொடையழகு, எதுகை நயம் இவைகளை நோக்குங்கள்.

இத் தாடகை என்ற அரக்கி, அவள் உறையும் அழகான சோலை வனத்தை ஒரே நாளில் அழித்துப் பாலைவனமாக்கி விட்டாள். செடி கொடி மரம் முதலிய அனைத்தையும் அழித்து விட்டாள். அழிந்த பொருள்கள் பல; அழித்தவள் ஒருத்தி.

இவ்வாறு அழிந்த பாலைவனத்தைப்பற்றிப் பேசுகின்றார் கவிச்சக்ரவர்த்தி. வனத்தின் வளப்பமெல்லாவற்றையும் அரக்கி அழித்ததற்கு ஒரு உவமை கூறுகின்றார். இராமாயணமா பாடுகின்றார்? இல்லை. இராமாயணம் என்ற பேரால் உலகிற்கு அறத்தை வற்புறுத்தி உபதேசிக்கின்றார்.

ஒரு மனிதனிடத்திலே பல தீயகுணங்கள் இருப்பினும், அள்ளிக் கொடுக்கும் உள்ளன்பாகிய தருமகுணம் இருப்பின் அத்தனை துர்க்குணங்களையும் அது மறைத்துவிடும். உலகம் அவனைப் புகழும். அவன் கொடைக்குணத்தைப் பாராட்டும். இதற்குச் சான்று கர்ணன். பொதுவாக நல்லவன் அல்லன். ஒரு துரியோதனன் கெட்டதற்குக் காரணம் கர்ணன்தான். துரியோதனன் செய்த கொடுமைகளுக்கெல்லாம் கர்ணன் உடந்தையாக இருந்தான். ஆனால், அவனிடம் இருந்த கொடைக்குணம் பிற தீமைகளை யெல்லாம் மறைத்துவிட்டது. அவனைக் கொடையாளி என்று உலகம் உயர்த்தியது; வாழ்த்தியது. ஆகவே பல தீயகுணங்களைத் தரும குணம் ஒன்று மறைத்துவிடும்.

## 56. உலோபம்

மனிதனிடமுள்ள தீய குணங்களில் மிகவும் கொடிய—தலையாய தீக்குணம் உலோபம். ஒருவனிடத்தில் ஆயிரம் நற்குணங்கள் இருந்து, உலோப குணமும் உடன் இருக்கு

மாயின், அத்தனை நற்குணங்களையும் கீழே அழுத்தி, உலோப குணம் மேல் நின்று அவனை உலகம் பழிக்கச் செய்யும்.

தாடகை என்ற கொடிய அரக்கி ஒருத்தியே, வளமையான மருதவனம் முழுவதையும், அழித்துவிட்டாளாம். அது எது போல்? உலோபகுணம் ஒன்றே சகல நற்குணங்களையும் அழிப்பது போலாகும்.

இதனைக் கம்ப நாடர் மிக அழகாகத் தமக்கே உரிய அரிய இனிய தமிழால் கூறுகின்றார்.

உளப்பரும் பிணிப்புரு உலோபம் ஒன்றுமே
அளப்பருங் குணங்களை அழிக்கு மாறுபோல்
கிளப்பருங் கொடுமைய அரக்கி கேடிலா
வளப்பரு மருதவைப் பழித்து மாற்றினாள்.

வானளாவி ஓங்கி வளமையுடன் வளர்ந்துள்ள மூங்கில் காட்டில் நெருப்பு தோன்றி, அவ்வளமை மிக்க மூங்கில் வனத்தை யழிப்பதுபோல, ஒருவனிடத்திலே தோன்றிய உலோபம், அவனை முழுவதும் அழித்துவிடும்.

உலோப குணம் ஒன்றினாலே அடியுடன் அழிந்தவன் துரியோதனன்.

ஓங்கி உலகளந்த உத்தமன்—கண்ணபிரான், கையேந்தி ஐந்து வீடுகள் மட்டும் கேட்டார்.

ஆற்றோரமாக வேகாத செங்கல் வைத்து, உளுத்துப் போன மூங்கிலை மேலே போட்டு ஓடு வேய்ந்து ஐந்து வீடுகளை அமைத்துத் தந்திருந்தால், அவன் குலத்துடன் அழிந்திருக்க மாட்டான். பாதி ராஜ்யம் தரக் கடமைப்பட்ட அவன், ஐந்து வீடு தந்திருக்கலாந்தானே? அந்த மூடன் உலோப குணத்தால் "ஊசி குத்துகின்ற இடமேனும் தர மாட்டேன்" என்றான். அதனால் அழிந்தான். அவன் மட்டுமா மாண்டான்? ஒரு அக்ஷரோணி சேனை 2,18,700 இரண்டு லட்சத்துப் பதினெண்ணாயிரத்து எழுநூறு வீரர்கள் கொண்டது. இத்தகைய எண்ணிக்கையுடைய பதினொரு அக்ஷரோணி சேனைகளுடனும், உடன்பிறந்த தொண்ணூற்

றென்பது தம்பியருடனும், தன் உறவினருடனும் மாய்ந் தான். என்ன அவலம்? ஐந்து சிறு வீடுகளைத் தந்திருந்தால் இந்த அழிவு அவனுக்கு வந்திராது அல்லவா?

எனவே, நற்குணங்கள் எத்தனை எத்தனை யிருப்பினும், உலோப குணம் இருப்பின், அத்தனை நற்குணங்களையும் அழுத்தி, அவனை அடியுடன் அழிக்கும்.

நன்கு செந்தமிழைத் தேர்ந்த புலவர் ஒருவர், முத்து நாகப்பன் என்ற பெருந் தனவந்தனிடம் போனார். வந்த வரை "வாரும், இரும், உணவு அருந்தும்" என்று கூறாமல், ஒரு குவளைத் தண்ணீரும் தராமல், அந்த உலோபி அவரை அசட்டை செய்தான். உடனே புலவர் பெருமானுக்குச் சீற்றம் பொங்கியது. அவர் மலர் வாயிலிருந்து ஒரு தமிழ்க் கவி வெளி வந்தது. அதுதான் இது:

உரகத்திலே கிடப்பான் சக்ரபாணி உயர்ந்தகும்ப
கரகத்திலே கிடப்பான் குறுமாமுனி கன்னியர்கள்
விரகத்திலே கிடப்பான் காமராசன் மிகுந்தஎழு
நரகத்திலே கிடப்பான் கொழுமூர்முத்து நாகப்பனே.

இனி ஒருவனிடத்தில் ஆயிரம் ஆயிரம் தீக்குணங்கள் இருந்து, அள்ளி வழங்கும் வள்ளன்மை என்ற ஒரு நற்குணம் இருக்குமாயின், அத்தனை தீக்குணங்களையும் வெளிக்காட்டா மல், தருமகுணம் மேலோங்கி நின்று, அவனுக்குப் புகழ் தேடிக் கொடுக்கும். பொன்னையும், பொருளையும், நிலங் களையும், தோட்டங்களையும் வறியார்க்கு வழங்கினார்கள் பலர். பாரி முன்னூறு கிராமங்களைப் பரிசிலர்க்குத் தந்தான். தன் பொற்றேரை முல்லைக் கொடிக்கு ஈந்தான்.

தனக்கு அன்னியமான பொருள்களைக் கொடுக்க மனம் இசையும். ஆனால் தான் இனிது வளர்த்த உடம்பைத் தர மனம் இசையாது. தன்பால் அடைக்கலம் புகுந்த, கேவலம் ஒரு புறுவுக்காகச் சிபி என்ற வேந்தன், தன் உடலின் தசை களை யறுத்து அறுத்து துலையில் வைத்துத் தானே அத்துலை யில் ஏறினான். இந்த வள்ளன்மையைக் கண்டு இமையவர் வியந்தனர்.

"எள்ளறு சிறப்பின் இமையவர் வியப்ப
புள்ளுறு புன்கண் தீர்த்தோன்"

என்று கண்ணகி சிறப்பித்துக் கூறினள்.

இதனினும் மேலாக ஒருவர் செய்தார். அவரை நாம் எங்கே சிந்திக்கின்றோம்? ஆ! ஆ! எத்துணைப் பெரிய தியாகம்!

அன்புக்கு உறைவிடமான ததீசி முனிவர், அமரர்கட்கு என்புந் தந்து புகழ் பெற்றார்.

ததீசி முனிவர் தன் உடம்பை ஒரு பொருளாக மதித்தாரில்லை. பாலுந் தேனும் பழமும் பாயசமும் வேளை தவறாமல் உண்டு இந்த உடம்பை வளர்க்கின்றோம். விதம் விதமான ஆடைகள், பளபளக்கும் அணிகலன்கள், எத்தனை அழகுகள் செய்து நிலைக்கண்ணாடியில் கண்டு களிக்கின்றோம். இத்தகைய உடம்பை, நம்முடையதென்று நாம் எண்ணுகின்றோம். அதே நேரத்தில் இதனை நாய் நமது என்று கூறுகின்றது: நரி நமது என்று நவில்கின்றது; இமயன் என்னது என்று இயம்புகின்றான்; பேயும் நோயும் தமது என்று பேசுகின்றன. ஆதலால் இவ்வுடம்பு யாருக்குச் சொந்தம்?

"நாய்நம தென நரி நமதெனப் பிதா
தாய்நம தென நமன் தனதெனப்பிணி
பேய்நம தெனமனம் மதிக்கும் பெற்றிபோ
லாய்நம தெனப்படும் யாக்கை யாரதே?

"நடுத்தயா விலார்தமை நலியத் துன்பநோய்
அடுத்தயா வருந்திரு அடைய யாக்கையைக்
கொடுத்தயா அறம்புகழ் கொள்வனே எனில்
எடுத்தயாக் கையின்பயன் இதனில் யாவதே."

என்று, ததீசி முனிவர் இனிக்கச் சொல்லி, உவந்து அன்புடன் என்பை ஈந்தருளினர்.

இதனைத்தான் திருவள்ளுவர்,

" அன்பிலார் எல்லாம் தமக்குரியர்; அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு "

என்று கூறியருளினுர். இத்திருக்குறளில் ததீசிமுனிவர் இமை யவர்க்குத் தமது முதுகு எலும்பை வழங்கிய குறிப்புளது. ததீசி முனிவர் தந்த முதுகு எலும்பை இந்திரன் வஜ்ராயுத மாகச்செய்து, அசுரரைவென்று பெரிதுமுவந்து வாழ்ந்தான்.

கொடைக்குணம் பல தீமைகளை மறைத்துவிடும் என்று முன்னே சிந்தித்தோம். உடம்பிலே உள்ள படை, சொறி முதலிய குற்றங் குறைகளை ஒரு பட்டுச்சட்டை மறைத்து விடுமாப்போல், தீமைகள் யாவையும், தரும குணம் மறைத்துவிடும் என்பதற்குச் சான்ருக நின்றவன் கர்ணன்.

கர்ணன் நல்லவன் அல்லன். துரியோதனன், பாண்ட வர்களைப் பல கொடுமைகள் செய்தான். பீமனைக் கயிற்றில் கட்டிக் கங்கையில் எறிந்தான். தூங்கும்பொழுது அரவினங் களை ஏவிக் கடிப்பித்தான். உண்ணும் உணவில் நஞ்சு கலந்து கொடுத்தான். ஆற்றில் கழுநிறைத்துக் குதிக்குமாறு செய்தான். குடியிருக்கும் வீட்டில் கொள்ளி வைத்தான். சூது ஆடினுன். மாது நல்லாளை மானபங்கம் புரிந்தான். இத்தனை கொடுமைகள் செய்த துரியோதனனை, ஒருமுறை யேனும் கர்ணன் தடுத்து அறவுரை பகர்ந்தானில்லை. அக் கொடுமைகள் அனைத்துக்கும் உடன் இருந்து உதவி செய் தான்.

அரசவையில் அபலையாக நின்று அழும் பத்தினி யைப் பார்த்து, “திரௌபதையே! உன் கணவர்கள் அடிமை களாகி விட்டார்கள். இங்குள்ள மன்னர்களில் ஒருவனை நீ கணவனுக வரித்துக்கொள்” என்று வாய் கூசாமல் கூறினுன்.

எனவே, பலப்பல தீக்குணங்கள் நிறைந்த கர்ணனை உலகம் புகழ்கின்றது. என்ன காரணம்? அவன் வரையாது வழங்கினுன். பொன்னும் பொருளும் ஈந்து அவன் இரு கரங் களும் சிவந்தன. தன் உயிர்க்கு ஆதாரமாக இருந்த கவச குண்டலங்களை ஈந்தான். ஆதலால் கொடைக்குணம், கர்ண னுடைய தீமைகளை மறைத்துவிட்டது.

ஆதலால் பல நற்குணங்களை மறைப்பது, உலோபம்.

பல தீக்குணங்களை மறைப்பது ஈகை. எனவே மக்கள் உலோபத்தை விடுத்து, ஈகையை மேற்கொண்டு, புகழும் புண்ணியமும் பெற்று, இகபர நலன்களைப் பெறுவார்களாக.

## 57. மூளும் வினை

உயிர்களாகிய நாம் செய்த வினை, தீ சிறிதுசிறிதாகக் கனைந்து பெருகி மூண்டு எரிந்து துன்பஞ் செய்வதுபோல் மூண்டு, நம்மைத் துன்புறுத்தும்.

அதனால் வினைக்கு 'மூளும் வினை' என்று ஒரு பேரும் உண்டு. செங்கல் சூளை மூண்டெரிவதுபோல் வினை மூண் டெரியும். "மூளும் வினைசேர" என்கின்றார் அருணகிரி நாதர்.

"முன் செய்த தீவினையோ இங்ஙனே வந்து
மூண்டதுவே"

என்கின்றார் பட்டினத்தடிகள்.

நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம்
நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர் —திருக்குறள்

இந்த வகையில் சாமானிய உயிர்கட்குச் செய்த துன்பம் மறுபிறப்பில் வந்து எய்தும்.

சிறந்த சிவஞானிகட்குச் செய்த வினை அப் பிறப்பி லேயே மூளும் என வுணர்க.

கோசல நாட்டை யாண்ட தயரதன் என்ற மன்னன், ஒரு நாள், தன் பரிசனர் சூழ, யானை வேட்டையாடச் சென்றான்.

பகலில் யானைகள் கிடைக்கவில்லை. இரவில் நீர் பருகும் போது யானைகளைக் கொல்லக் கருதி, ஒரு நதித்துறையில், ஒரு புதரில் மறைந்து, "சப்தவேதி" என்ற கணையை வில்லில் தொடுத்து நின்றான்.

காசிபன் மகன் விருத்தசேனன். விருத்தசேனனுடைய மகன் சலபோசனன்.

சல போசன முனிவரும், அவர் மனைவியும் கண்ணில்லாதவர்கள். அவர்களுடைய மைந்தன் சுரோசனன்.

தாய் தந்தையரைக் காவடியாகச் சுமந்து வந்தான். தாய் தந்தையர்கள் நீர் வேண்டினர்கள். ஒரு மணல் மேட்டில் அவரை அமர்த்தி, சிறு வாயுள்ள கமண்டலத்தை நதியில் அழுத்தினன். குறுகிய வாயில் நீர் குட குட என்ற ஒலியுடன் சென்றது.

அவ்வொலியைக் கேட்ட தயரதன் யானை நீர் பருகுவதாக நினைத்துப் பாணத்தை யெய்தான். அக்கணை சுரோசனன் மார்பில் பட்டது. "சிவ, சிவா" என்று அலறி நிலத்தில் வீழ்ந்தான்.

இளம்பாலகனுடைய அழுகுரலைக் கேட்ட மன்னன் திடுக்கிட்டான். அந்தோ! கெட்டேன் என்று கூறி வில்லை எறிந்து விட்டு ஓடி, அச் சிறுவனை எடுத்து மார்மீது அணைத்து, முகத்தில் நீர் தெளித்து, ஆடையினல் விசிறி உபசரித்தான்.

சுரோசனன் மெல்லக் கண் விழித்து "ஐயா! கண்ணில்லாத் தாய் தந்தையர்க்குத் தண்ணீர் எடுக்க வந்த என்னை யாரோ ஒரு பாவி பாணம் எய்து கொன்ருன். உயிர் பிரியும் போது தாய் போல் தண்ணளியுடன் ஆதரவு புரியும் தாங்கள் யார்?" என்று, தழுதழுத்த குரலில் ஈனசுரத்துடன் கேட்டான்.

அச்சிறுவனுடைய துயரத்தைக் கண்ணுற்ற தயரதனது கண்கள் நீர் பொழிந்தன. உள்ளந் துடித்தது.

"மைந்தா! நான் அயோத்தி மன்னன்; தயரதன். யானை வேட்டையாட வந்தேன். பகலில் யானைகள் கிடைக்கவில்லை. இரவில் நதியில் நீர் குடிக்க வரும் என்று கருதி, புதரில் மறைந்து வில்லில் கணை தொடுத்து நின்றேன். நீ தண்ணீர் முகந்த போது உண்டாய ஒலியை யானை என்று மாறியுணர்ந்து கணையை விட்டேன். அறியாமல் நேர்ந்த பிழை. என்னை மன்னிக்க வேண்டும்" என்ருன்.

"வேந்தே! என்வினை என்னைக் கொன்றது. தங்களை யான் நோவமாட்டேன். கண்ணற்ற பிதா மாதாக்களை நினைந்து வருந்துகின்றேன்."

"குழந்தாய்! உன் பிதா மாதாக்களைக் கண்ணை இமை காப்பது போல் நான் காத்தருளுவேன். நீ வருந்தற்க."

'சிவ சிவ' என்று அம் மைந்தன் வாய் முணுமுணுத்தது. ஆவி பிரிந்தது.

தயரதன் கமண்டல நீரை எடுத்துக்கொண்டு, சுரோசனனுடைய அடிச்சுவட்டைப் பின்பற்றிக் கொண்டு, சலபோசன முனிவர் இருக்குமிடம் போய் வணங்கினான்.

"மகனே! ஏன் இத்தனை நேரம்?"

"தபோதனரே! அடியேன் தயரதன். அயாத்தியை ஆள்பவன். யானை வேட்டையாட வந்தேன். இரவில் நதித் துறையில் நீர் பருகும்போது கொல்லலாம் என்று பதுங்கியிருந்தேன். தங்கள் திருக்குமாரர் நீர் முகப்பதைக் கேட்டு யானையெனக் கணை விட்டுவிட்டேன். அறியாமல் நிகழ்ந்த இந்தப் பெரும்பிழையை மன்னித்தருள வேண்டும். தங்கள் தவப் புதல்வர் வானுலகம் போந்தார். கருணைக் கடலே! என்னைப் பொறுத்தருளும்."

முனிவர் அந்தோ என்று அலறினார். மன்னன் காவடியாக அவர்களைச் சுமந்து மகனுடைய உடலின் அருகில் விடுத்தான். மகனுடைய உடம்பைத் தடவித் தடவிப் பெரிதும் புலம்பி யழுதார்கள். "மகனே! இன்றுதான் எங்கள் கண் போயிற்று. எங்களை இரவு பகலாகக் காத்து உதவினாயே. கண்மணி! இனி எப்பிறப்பில் உன்னைக் காண்போம்? ஆ! ஆ! எங்களை விடுத்துச் சென்றுவிட்டனையோ?

"அரசனே; நாங்கள் அந்தணர். உன்னைச் சீறுவதில் பயன் யாது? சிலகாலம் சென்றால், உனக்கு நான்கு புதல்வர்கள் பிறப்பார்கள். எந்தப் புதல்வன்மீது அதிகப் பிரியம் கொண்டிருக்கின்றாயோ அப் பிரிய மகன் பிரிய, நின் உயிர் பிரியும். புத்திரசோகத்தை அப்போது நீ நுகர்வாய்" என்று கூறி, முனிவரும் முனிவருடைய மனைவியும் விண்ணுலகெய்தினார்கள்.

அதுகண்டு, மன்னன் தாங்கமுடியாத வேதனையடைந்தான்.

நெடுங்காலத்துக்குப் பின் ராமர், பரதர், லட்சுமணர், சத்ருக்னர் என்ற புதல்வர்களைப் பெற்றான்.

ராமர் பிரிவினால் பெருந்துயருற்று மாண்டான். வினை மூண்டது.

* * *

பாண்டு மன்னன் தன் மனைவியர்கள் குந்தியுடனும், மாத்திரியுடனும் வேட்டையாடச் சென்றான்.

மனைவியருடன் வேட்டையாடிக் கொண்டிருந்த அவன் மட்டற்ற மகிழ்ச்சியால் மயங்கியிருந்தான்.

கிந்தம முனிவர் தன் மனைவியுடன் பொருந்த விரும்பி, மான் உருவம் எடுத்துப் பொருந்திக் கொண்டிருந்தார்.

பாண்டு மான்மீது கணை தொடுத்தான். மானின் மார்பில் கணைபட்டது. மிகப் பெருந் துன்பமுற்று மான் வடிவத்தை விடுத்து முனிவர் உருவங்கொண்டு, "ஏ பாண்டு மன்னனே! நீ வேட்டை யறத்தை விடுத்தனை. அறத்தினைக் கெடுத்தனை. இளங்குழவியான விலங்குகளையும், புணர்கின்ற விலங்குகளையும், கிழப்பருவமுள்ள விலங்குகளையும், நோய் வாய்ப்பட்ட விலங்குகளையும் கொல்லக் கூடாது என்பது வேட்டை யறம். இதனை மறந்த நீ, என் மனைவியுடன் நான் மான் உருவங்கொண்டு இன்புறும்போது, என்னை வீணாக அம்பு விட்டுக் கொன்றாய். நீ உன் மனைவியுடன் இன்புறுங் கால் உன் உயிர் பிரியும்" என்று கூறி மாண்டார். அவர் மனைவியாருடைய ஆவியும் பிரிந்தது.

பாண்டு நடுங்கி ஒடுங்கி அஞ்சினான். அவனுடைய வாழ்வின் சிகரம் இடிந்தது. தன்னுடைய ஆடம்பரமான அணிகலன்கள் ஆடைகளைக் களைந்து தன் பரிசனர்களிடம் தந்து நகருக்கு அனுப்பினான்.

பாண்டுவின் துறவை யறிந்து திருதராஷ்டிரன் முதலியோர் வருந்தினார்கள்.

பாண்டு முனிவனாக ஆனான். அவனுடைய மனைவியரும் துறவுக்கோலம் பூண்டு அவனுடைய தவநிலைக்கு உதவி செய்

தார்கள். அவன் ஒரு மரத்தடியில் நிற்பான். பால் கறக்கும் நேரம் நிற்பான். தானே கனி உதிர்ந்தால் உண்பான். இல்லையேல் அடுத்த மரத்தடியில் நிற்பான். இப்படி எட்டு மரங்களிடம் போவான். எட்டு மரங்களிலும் கனியுதிர வில்லையானால், ஒன்பதாவது மரத்திடம் போகமாட்டான். எட்டுக் கவளம் உண்பான். ஒருவேளையே உண்பான். அவனுடைய மனம் பற்றற்று நின்றது.

புறப்பகையை வென்ற அவன் அகப் பகையையும் வென்றான். பின்னர் தேவானுக்கிரகத்தினால் குந்திக்கும் மாத்திரிக்கும் ஐந்து மைந்தர்கள் பிறந்தார்கள். தருமர் பிறந்த பதினாறாவது ஆண்டில் விதி வயப்பட்டு அவன் ஒரு நாள் மாத்திரியை மருவினான். அந்தக் கணமே மாண்டான். வினை மூண்டுவிட்டது.

* * *

இராமதாசர் என்ற சிறந்த திருமாலடியார் பன்னிரு வருடங்கள் சிறையில் இருந்து வேதனையுற்றார். ஏன்? முற்பிறப்பில் ஒரு கிளியைப் பற்றி, சிறகையரிந்து பன்னிரண்டு நாட்கள் கூட்டில் அடைத்து வைத்தார். அவ்வினை மூண்டு மறுபிறப்பில் பன்னிரு ஆண்டுகள் சிறைத் துன்பம் உற்றார். ஆதலால் அவரவர் செய்த வினை அவரவரைச் சாரும்.

செய்வினை மூண்டு உரிய காலத்தில் திருவருள் நெறிப்படி செய்தவனை யடையும். இதுதான் நியதி.

ஆதலால் ஒவ்வொருவரும், மனத்தாலும், வாக்காலும், காயத்தாலும் யாருக்கும் எந்த இடரும் புரியக்கூடாது.

## 58. அரச தருமம்

### இது திருதராஷ்டிரனுக்குக் கணிகர் என்ற அமைச்சர் கூறியது

அரசர்களுக்கு நான்குவகையான தருமங்கள் சொல்லப் பட்டிருக்கின்றன. அவை சாம தான பேத தண்டம் எனப் படும்.

"சரச சாம தான பேத தண்ட சதுர" என்று தியாகையரவர்கள் ஸ்ரீராமரைக் குறித்துப் பாடுவதனுலும் அறிக.

உபாயந் தெரிந்த அரசன் அபாயமின்றி வாழ்வான். இந்த உபாயத்தைப்பற்றி அடியில் வரும் நரியின் உபாக்கியானத்தைக் கூறுகின்றேன்.

ஒரு கானகத்தில் கூறிய மதிநலம் உடைய நரி வாழ்ந்தது. அது மிக்க சாமர்த்தியமும், தன்னலத்தில் அதிகக் கவனமும் உடையது. புலி, எலி, செந்நாய், கீரிப்பிள்ளை என்ற நான்கு பிராணிகளை நண்பர்களாகக் கொண்டு, மிக்க மகிழ்ச்சியுடன் அந்த நரி நாட்டில் சுகமாக இருந்தது. அக்காட்டில் அழகிய மான் கூட்டத்துக்கு அரசு போன்ற ஒரு மானை நரி தனது நண்பர்களுடன் கண்டது. மான் வேகமாக ஓடுந்திறமையுடையது. கடவுள் ஒவ்வொரு பிராணிக்குந் தற்காப்புக்காக ஒவ்வொரு திறமையைத் தந்துள்ளார். சாதுவான மானுக்கு ஓடுந்திறமை யதிகம்; அம்மானைக் கொல்லுமாறு புலியைத் தூண்டியது. புலி பலமுறை முயன்றது. மான் காற்று வேகத்தில் ஓடி ஒளிந்துகொள்ளும்.

நரி புலியைப் பார்த்துக் கூறுகின்றது; "அன்புள்ள புலியே! இந்த மானைக் கொல்வதற்கு நீ பன்முறை முயன்றும் முடியவில்லை. இது இளமையானது; மிகுந்த வேகமுள்ளது; அறிவுள்ளது. ஆதலால் வலிமை நிறைந்த உன்னால் இம் மானைக் கொல்ல முடியாமலிருக்கின்றது; இதற்கு நான் ஒரு உபாயத்தைக் கண்டுபிடித்திருக்கின்றேன். பகைவனுக்கு எந்தவகையில் பெருமை கூடியிருக்கின்றதோ அந்த வகையைக் குறைத்து விடவேண்டும். அதுதான் பகைவரை வெல்லும் உபாயம். மானுக்கு ஓட்டந்தான் ஒப்பற்ற திறமை. ஓட்டம் காலில் அமைந்துள்ளது. ஆகவே காலுக்கு ஊனஞ் செய்யவேண்டும். இந்த மான் தூங்கும்போது, நண்பா! எலியே! நீ மெல்லக் கால்களைக் கடித்துப் புண்ணுக்கிவிடு. கால் புண்ணுகிய மான் அதிகம் ஓட முடியாது. அப்போது புலி பிடித்துக் கொல்லட்டும். நாம் நால்வரும் ஒன்றுகூடி இளம் மானின் இறைச்சி யுண்டு மகிழ்வோம்" என்றது.

அந்த ஆலோசனையின்படி மான் உறங்கும்போது, எலி மானின் கால்களைக் கடித்துப் புண்ணுக்கியது. ஓடுந் திறன் குன்றிய மானைப் புலி பிடித்துக் கொன்றது.

நரி இதனைக் கண்டு களித்தது. பிறரைக் கொண்டு பெருங் காரியத்தைச் சாதித்தது. தான் தனியே இருந்து மானின் இறைச்சியைப் புசிக்கவேண்டும் என்று மனதுக்குள் சிந்தித்தது.

"நண்பர்களே! நமக்கு இன்று நல்லகாலம்; இளம் மான் கறி கிடைத்திருக்கின்றது. நீங்கள் நீரில் முழுகிவிட்டு வாருங்கள்; நான் இதனைக் காவல் செய்துகொண்டிருக்கின்றேன். உயர்ந்த உணவைக் குளித்துவிட்டு உண்பது நல்லது" என்று கூறியது.

புலியும் எலியும் செந்நாயும் கீரிப்பிள்ளையும் நதிக்குச் சென்று நீராடின. புலி முதலில் வந்தது. நரி ஏதோ பெரிய ஆழ்ந்த சிந்தனையில் இருப்பதைக் கண்டு, "நண்பனே! ஏன் ஒரு மாதிரி கலக்கமுற்று இருக்கின்ருய்? நீ நல்ல அறிவாளியாயிற்றே, வா; இதனை உண்போம்; உண்டு விளையாடுவோம்" என்று புலி கூறியது.

நரி, "புலியே! சிறந்த வல்லமையுடைய வீரனே! நான் நண்பரிடம் எதையும் ஒளிக்கக்கூடாது. எலி என்னிடம் இரகசியமாகக் கூறியது. இந்தப் புலி எனது துணையைக் கொண்டுதானே மானின் இறைச்சியை உண்ணப்போகின்றது. நான் மானின் கால்களைக் கடிக்காதிருந்தால் புலிக்கு இது உணவாகக் கிடைத்திருக்குமா? ஆகவே புலியின் வலிமை இழிவானது. என் உதவியே புலிக்கு ஆதாரமாகின்றது என்று எலி கூறியது" என்றது"

வீரமுள்ள புலி இதனைக் கேட்டு வீரச்சிரிப்பு செய்து, "நண்பா! எனக்குச் சரியான நேரத்தில் நீ இதனைத் தெரிவித்தாய், "போனகம் என்பது தான் உழந்துண்டல். என் தோள் வலிமையைத் துணையாகக் கொண்டு வேட்டையாடிப் புசிப்பதுவே எனக்குப் பெருமை. அற்பப் பிராணியாகிய எலியின் உதவியைக் கொண்டு நான் ஜீவிக்கமாட்

டேன். அது என் பெருமைக்கு இழுக்கு. ஆதலால் நான் காட்டிற் சென்று வேறு விலங்குகளைக் கொன்று உண்பேன்'' என்று கூறி வீர நடையுடன் காட்டுக்குள் புகுந்தது. **இது சாமம்.**

பின்னர் எலி வந்தது. நரி எலியைப் பார்த்து, ''அன்பனே! உனக்கு உண்மை உரைப்பது என் கடமை; இப்போது கீரிப்பிள்ளை வந்தது; 'இந்த இறைச்சியில் நஞ்சு கலந்திருக்கின்றது. நான் இதனை உண்ணமாட்டேன். எனக்குப் பசியதிகம். வேறு உணவைத் தேடவும் நேரம் இல்லை. எலியைத் தின்ன விரும்புகின்றேன். நீ அனுமதி கொடு' என்று என்னைக் கேட்டது. நான் தடுத்தும் அது கேட்கவில்லை'' என்றது. உடனே எலி நடுங்கி, வளைக்குள் புகுந்துகொண்டது. **இது பேதம்.**

அதற்குப்பின் அங்கே செந்நாய் நீராடிவிட்டு இறைச்சியைத் தின்னும் விருப்பத்துடன் நாவில் நீர் ஒழுக ஆசையுடன் வந்தது.

நரி ''நண்பா! நண்பா! உத்தமமான அன்பன், நீ. உன்னிடம் நான் எதையும் மறைத்து வைக்கக்கூடாது. என்ன காரணமோ? எனக்குத் தெரியவில்லை. புலி உன்மீது கோபித்துக்கொண்டிருக்கின்றது. அவசியம் உன்னைக் கொல்லவேண்டும் என்று திட்டம் இட்டிருக்கின்றது; மனைவியை அழைத்து வரச் சென்றிருக்கின்றது. அரிய நண்பனாகிய உனக்கு ஆயுள் முடிகின்றதே என்று நான் மன வருத்தமடைகின்றேன்'' என்றது. உடனே செந்நாய் உடம்பைச் சுருக்கிக்கொண்டு காட்டுக்குள் ஓடிவிட்டது. இதுவும் **பேதம்.**

நரி தனக்குள் நகைத்துக்கொண்டு கீரிப்பிள்ளையின் வரவை நோக்கிக் காத்துக்கொண்டிருந்தது. அதற்குப்பின் கீரிப்பிள்ளை வந்தது; நரி ''கீரிப்பிள்ளையே! என் புய வலிமையால் புலியையும் எலியையும் செந்நாயையும் வென்றேன். அவைகள் தோல்வியுற்று ஓடிவிட்டன. ஆகவே நீ என்னுடன் போர் செய்து வென்றபின் இந்த மானைப் புசிக்கலாம்'' என்றது.

கீரிப்பிள்ளை, "நரியே! வீரனான புலியையும், அறிவுடைய எலியையும், திறமையுடைய செந்நாயையும் வென்ற நீ மதிக்கத்தக்கவன். உன்னுடன் போர் செய்ய என்னால் இயலாது; நான் இதை விட்டுப் போகின்றேன்" என்று ஓடிவிட்டது. **இது தண்டம்.**

இப்படியாக அறிவுள்ள அரசன் வீரனைக் கும்பிடுவதனாலும், அச்சம் உள்ளவனை அச்சங் காட்டியும், ஒத்த வலிமையுள்ளவனையும், பொருளாசையுள்ளவனையும் பொருள் கொடுத்தும், குறைந்த வலிமையுள்ளவனைத் தன் வலிமையாலும் அகற்றி ஒதுக்கவேண்டும். இது அரச தருமம் என்று கூறினார்.

அரசன் ஒற்றர்களைக் கண்ணாகக் கொள்ளவேண்டும். காதினால் பொருள்களைக் காணவேண்டும். இனிக் கண்ணினால் பேசவேண்டும். பகைவரை முளையில் களையவேண்டும். களையும்போது மிச்சம் வைக்காமல் அடியுடன் பகையை அழிக்கவேண்டும். மன்னவன் காலத்தையும் இடத்தையும் அறியவேண்டும். பகலில் காக்கை கூகையை வெல்லும்; இரவில் காக்கையைக் கூகை வெல்லும். ஓடம் நீரில் ஓடும்; நிலத்தில் ஓடாது. வண்டி நிலத்தில் ஓடும், நீரில் ஓடாது. அதுபோல் காலத்தையும் இடத்தையும் அறிந்து காரியத்தை வெளியிடாமல் இரகசியமாக முடிக்கவேண்டும்.

அரசன் ஆழமாகச் சிந்திக்கவேண்டும். சிந்தனையாளர்களைத் தன் அருகில் அமைத்துக்கொள்ளவேண்டும்.

பலாப்பழத்தை நறுக்கக் கத்தியிருந்தால் மட்டும் போதாது; நல்லெண்ணெயும் வேண்டும். அதுபோல் பகைவரை யழிக்கச் சேனையிருந்தால் மட்டும் போதாது. அச்சேனைகளிடம் அரசனுக்கு அளவற்ற அன்பு இருக்கவேண்டும். கத்தியில் நல்லெண்ணெயைத் தடவிப் பலாப்பழத்தை நறுக்குவதுபோல், சேனைகளிடம் அன்பைக் காட்டி, அச்சேனைகளைக் கொண்டு பகைவரை அழிக்கவேண்டும்.

## 59. அதனுல் அவர் ஆசையுடையவர்

துருபதன் என்ற பாஞ்சாலதேசத்து மன்னன் இளமையில் துரோணருடன் சேர்ந்து அங்கிவேச முனிவரிடம் வில்வேதம் பயின்ருன். துரோணர் துருபதனுக்கு அநேக நுட்ப திட்பங்களைச் சொல்லிக்கொடுப்பார். அதனுல், துரோணரிடம் அதிக அன்பு வைத்திருந்தான் துருபதன். "நான் அரச பதவியேற்றபின் தங்கட்குப் பாதி ராஜ்யந் தருவேன்" என்ருன். "பிராமணனுகிய எனக்கு ராஜ்யம் ஏன்?" என்ருர் துரோணர்.

வித்தை கற்று முடிந்தபின் அங்கிவேச முனிவரை வணங்கியும், துரோணரைத் தொழுதும், மிக்க அன்பான வார்த்தைகளைமொழிந்தும், பிரியாவிடைபெற்றுத் துருபதன் தன் பாஞ்சாலநகரை அடைந்தான். அவன் தந்தை புருஷத மன்னன் மகனுடைய கலைநலத்தைக் கண்டு களி கூர்ந்தான்.

மகனுக்கு முடி சூட்டி அரச பதவியைத் தந்துவிட்டு, புருஷத வேந்தன் மாதவஞ் செய்ய வனம் புகுந்தான்.

துருபதன் அரியணையில் இருந்து அரசு புரிவானுயினன்.

துரோணர், கிருபி யென்ற கற்புக்கரசியை மணந்து கொண்டார். துரோணர் சிவபெருமானை ஆராதித்தார். சிவானுக்கிரகத்தால் கிருபி வயிற்றில் ஒரு குழந்தை பிறந்தது. பிறந்த குழந்தை குதிரையைப்போல் கனைத்தது. அதனுல் "**அசுவத்தாமா**" என்று பேரிட்டார்கள்.

அசுவத்தாமா தாய்ப்பால் இன்றி அழுதான். மாப்பாலையன்றி ஆப்பால் இல்லை. குழந்தையின் துயரை நீக்கக் கருதிய துரோணர், தன்மனைவியுடன் குழந்தையை எடுத்துக்கொண்டு ஒரு பசுவை வேண்டிப் பெறும்பொருட்டுத் துருபதனிடம் வந்தார்.

துருபதன் நட்பின் தகைமை யறியாது அவரை அவமதித்தான். மகாசபையில் தன்னை அவமதித்தது குறித்துப் பெரிதும் உள்ளம் வெந்து நொந்து துரோணர் கூறுகின்ருர்:

"துருபதனே! நீயும் நானும் அங்கிவேச முனிவரிடம் படித்தபோது என்னுடன் நீ பழகியதும், நான் உனக்கு உரைத்த கலை நலங்களையும் செல்வச் செருக்கினால் மறந்தனை போலும். இதோ இங்குள்ள ஒரு துரும்பை எடுத்து அபிமந்திரித்து விடுத்தால் அது அக்கினியஸ்திரமாகி உன்னை யும் உன் நகரையும் எரித்து சாம்பலாக்கிவிடும். ஏ அரச அதமனே! அந்தணனாகிய எனக்குக் கோபம் வரக்கூடாது. பிறர் செய்த குற்றங்களைப் பொறுப்பது என் குல தருமம். ஆதலால் நீ அரசவையில் என்னை அவமதித்த இப் பெரும் பிழையை நான் பொறுத்துக்கொண்டேன். ஆனால் உனக் குப் புத்தி புகட்டுவேன். என் மாணவனைக் கொண்டு உன் னைத் தேர்க்காலில் கட்டுவித்து அவமானஞ் செய்வேன்" என்று கூறிவிட்டு, அடிபட்ட நல்ல நாகம்போல் பெருமூச்சு விட்டுக்கொண்டு புறப்பட்டார்.

அவருடைய மைத்துனர் கிருபாச்சாரியார் அப்போது அத்தினபுரத்தில் குருகுலத்து ராஜ குமாரர்கட்கு வேதம், தநுர்வேதம் முதலிய கலைகளைப் பயிற்றுவித்துக்கொண்டிருந் தார். அங்கு சென்று மகனைக் காப்பாற்றலாம் என்று துரோணர் அத்தினபுரத்தை நாடிவந்தார். கிருபர் வீட்டில் தங்கிக் களைப்பாறினர். துரோணரதுவரவையறிந்த பீஷ்மர், அவரைச் சிறந்த முறையில் வரவேற்று, ஆடை அணிகலன் கள் தந்து, அரசவையில் அவரை ஒரு அங்கமும் வகிக்கச் செய்து, பாண்டவர்கள், துரியோதனாதிகள் என்ற இருதிறத்து மக்களையும் அவர்பால் காட்டி, கிருபருடன் சேர்ந்து சிறந்த வில் வேதத்தைப் போதிக்குமாறு நியமித்தார்.

அன்றுமுதல் அந்தக் குருகுலத்தில் ஒரு மறுமலர்ச்சி ஏற் பட்டது. இராஜ குமாரர்கள் பெரும் மன மகிழ்ச்சியுடனும் ஊக்கத்துடனும் வில்வேதம் பயின்றார்கள். அர்ச்சுனன் எல் லோரிலும் மிக்க ஊக்கத்துடனும் விடாமுயற்சியுடனும் பயின்றான். வில்பிடித்தவர்களில் அவனுக்குச் சமானம் இல்லை யென்று உலகம் புகழுமாறு தலைசிறந்த வில்லாளியாக ஆனான்.

விற்பயிற்சி முடிந்தவுடன் அரங்கேற்றம் நடைபெற்றது. எல்லோரும் துரோணரையும் அவருடைய திறமையையும் பாராட்டினார்கள்.

பின்னர் அந்த அரச குமாரர்கள் பொன்னும், மணிகளும், பொன்னுடைகளும், பழங்களும் பல தட்டுக்களில் நிறைத்துக் கொண்டு, துரோணருடைய திருமுன் வைத்து வணங்கி "எங்கட்குக் கல்விநலம் தந்து வாழ்வளித்த பெருந்தகையே! இவைகளைக் குரு தட்சிணையாக ஏற்று எங்களை ஆசீர்வதியுங்கள்" என்றார்கள்.

துரோணாச்சாரியார், "என் அருமந்த மாணவர்களே! உங்களுக்கு எல்லா நலன்களும் இறையருளால் பொருந்துக. நீங்கள் தந்த இப் பொன்னும் மணியும் ஆடையும் எனக்கு வேண்டா. எனக்கு நீங்கள் தரத்தக்க தட்சிணை ஒன்றுண்டு. பாஞ்சால தேயத்தை யாளுகின்ற துருபதனை வென்று, அவனை உயிருடன் தேர்க்காலில் கட்டிக் கொணரவேண்டும். அதுவே நான் விரும்பும் குருதட்சிணை" என்றார்.

பாண்டவர்களும் துரியோதனாதிகளும் சதுரங்க சேனைகள் சூழப் புறப்பட்டுப் போர்க் கோலத்துடன் பாஞ்சாலனுடைய நகரை யடைந்தார்கள். முதலில் துரியோதனாதிகள் போர் புரிந்தார்கள். தோல்வியடைந்து உடம்பு புண்ணாகிப் புறங் கொடுத்து ஓடி ஊர் திரும்பினார்கள்.

அர்ச்சுனன் தன் உடன் பிறந்தாருடன் சென்று கடும் போர் புரிந்தான். பீமன் சேனைகளைப் பூமியிலிட்டுத் துவையல் செய்தான். துருபதனை எதிர்த்துத் தனஞ்சயன் போர் புரிந்தான். அவனுடைய வில்லை அறுத்து, தேரையும் முறித்து, துருபதனுடைய மார்பகத்தைக் கணைகளால் தொளைபுரிந்து, தன் தேர்க்காலில் பிணித்துக்கொண்டு, வெற்றிச் சங்கம் ஊதித் திரும்பினான்.

அத்தினபுரத்தில் பெரிய அரசவையில் கொணர்ந்து துருபதனை நிறுத்தினான்.

துரோணர் புன்முறுவல் பூத்தார். அரசவை துணுக்குற்றது. ஒருவரை யொருவர் பார்த்துக்கொண்டார்கள்.

துரோணர் துருபதனைப் பார்த்து, "துருபதா! பேரரசனாகிய உன்னை இதோ இந்த இளஞ்சிறுவனான என் மாணவன் அர்ச்சுனன் வென்று தேர்க்காலிலே கட்டிக் கொணர்ந்தான். 'அர்ச்சுனா! இவனை வெட்டு' என்று நான் ஏவினால், உன் தலை பனம்பழம் போல் உருளும். அந்தண முனிவனாகிய எனக்கு அது ஏற்றதன்று. உனக்கு உன் உயிரைத் தானமாக வழங்கினேன். இனியாவது நல்லவர்கள் மனதை நோக வைக்காதே. பண்புடன் நடந்துகொள். பதவிச் செருக்கு பணச் செருக்கு இவைகளை விட்டுவிடு. நண்பனாகிய என்னுடைய ஆற்றலை இப்பொழுதாவது தெரிந்துகொள். மூடனே! ஏன் ஆந்தைபோல் விழிக்கின்றாய்? அர்ச்சுனா! இவனுடைய கட்டை அவிழ்த்துவிடு. இவன் போய்ப் பிழைத்து வாழட்டும்" என்றார்.

"அர்ச்சுனன் கட்டவிழ்த்துவிட்டான். துருபதன் மிதிபட்ட புலிபோல் சீறினான். அரசவையை நோக்கிக் கூறுகின்றான்.

"அரசர்களே! என்னை அவமானம் புரிந்த இந்த துரோணரைக் கொல்ல ஒரு மகனையும், என்னைக் கயிற்றால் கட்டிய தனஞ்சயனைத் தன் கையால் கட்டிப் பிணிக்க ஒரு மகளையும் பெறுவேன்" என்று சபதம் புரிந்து புறப்பட்டுச் சென்றான்.

துருபதன் மிக்க மனவேதனையுடன் கானகத்தில் வாழ்கின்ற முனிவர்களிடம் போய்த் தனித்தனியே வேண்டிக் கொண்டான்.

"முனிவர்களே! துரோணரைக் கொல்லக்கூடிய ஒரு புதல்வனையும், தனஞ்சயனை மணந்துகொள்ள ஒரு புதல்வியையும், வேள்வியில் உண்டாக்கித் தாருங்கள். பொன் குப்பி யணிந்த நூறு பசுக்களையும், வெள்ளி தங்கப் பாத்திரங்களையும், உயர்ந்த பட்டு விரிப்புக்களையும், பொன்னும் மணியும் தருவேன்" என்றான்.

"துருபதனே! துரோணர் உத்தமமான குணம் படைத்தவர். அவரைக் கொல்லுவதற்குரிய மகனை நாங்கள் உண்டாக்கமாட்டோம். அர்ச்சுனனுக்கு மனைவியாகும் ஒருத்

தியை யுண்டாக்குவோம்'' என்ருர்கள். எந்த எந்த முனிவரை யடுத்துக் கூறினும், அந்த அந்த முனிவர்களும் 'ஆக்கத்திற்கு நாங்கள் உதவி செய்வோம், அழிவுக்கு உதவி செய்யமாட்டோம்' என்றே கூறிவிட்டார்கள்.

துருபதன், அதனல் மேலும் வேதனையுற்ருன். ஆலாகப் பறந்து திரிந்தான். முடிவில் முருகவேள் திரு அவதாரம் புரிந்த சரவணப் பொய்கையை யடைந்தான்.

சரவணப் பொய்கையின் தென்கரையில் உபயாசன் என்ற ஒரு தவ முனிவரைக் கண்டான். அவர் பிரமதேவ ரைப்போல் தவ வொளியால் அக் கானகத்தையே விளக்கிக் கொண்டு அமர்ந்திருந்தார்.

பாஞ்சால மன்னன் அவருடைய பாதமலர்மீது வீழ்ந்து, ''தபோதனரே! தங்கட்குப் பொன் குப்பி யணிந்த ஆயிரம் பசுக்களையும், பொன் வெள்ளிப் பாத்திரங்களையும், ஆயிரம் ஆயிரம் தங்கப் பவுன்களையும், நவரத்தினங்களையும் தரு வேன். துரோணரைக் கொல்லக்கூடிய ஒரு வீர குமாரனை யும், விஜயனை வேட்க ஒரு அழகிய அணங்கினையும் வேள்வி செய்து உண்டாக்கிக் கொடும்'' என்று வேண்டினன்.

உபயாசர் உரைக்கின்ருர்: ''துருபதனே! நான் நிரா சையை உபாசிக்கின்றவன். பொன்னும் மணியும் எனக்கு வேண்டாம். பணத்திற்கு நான் அடிமையாக மாட்டேன். ஆதலால் என்னைப் பொருளால் நீ மயக்க முடியாது. அழிவு வேலையில் நான் ஈடுபடமாட்டேன். அதோ பார். இப் பொய்கையின் வடகரையில் தவம்புரிகின்ருரே, அவர் எனது தமையனர். அவர் பேர் யாஜன். அவருக்குச் சிறிது ஆசை யுண்டு என்று நான் அறிகின்றேன்.

ஒருநாள் ஒரு வனத்தில் ஒரு புறத்தில் நின்றுகொண் டிருந்தேன். ஏகாந்தமான வனம். அதில் ஒற்றையடிப் பாதை. நான் நிற்பது என் தமையனருக்குத் தெரியாது. அவர் அந்த ஒற்றையடிப் பாதையில் சென்றுகொண்டிருந் தார். அவ்வழியில் பழுத்ததும், தங்க நிறமுள்ளதும், நல்ல மணமும் சுவையும் உடையதுமான ஒரு மாம்பழம் கிடந்தது. அதனைக் கண்டதும் என் அண்ண எடுத்தார். எடுத்தபின் இது யாருடைய பழமோ? பழத்துக்கு உரியவன் இங்கு

வைத்துவிட்டு நீராடவோ, மல சலம் அகற்றவோ சென்றிருப்பான். அல்லது அவனையறியாது அவன் பையிலிருந்து நழுவியிருக்கும். உடையவன் இதைத் தேடிக்கொண்டு வந்தால் பழம் கிடைக்காது வருந்தக்கூடும். அதனால் நிச்சயம் பெறாத இப்பழத்தை எடுத்துக்கொள்வது பிழை என்று அங்கேயே எறிந்துவிட்டுச் சென்றார். அதனால் என் தமையனாரை ஆசையுடையவர் என்று நான் தீர்மானித்துக்கொண்டேன். ஏன் தெரியுமா?

பழத்தைக் கண்டவுடன் ஆசைப்பட்டு எடுத்துக்கொண்டார். பின்னர் அறிவு தலைப்பட்டு ஆராய்ந்து, எடுத்தது பிழையென்று எறிந்தார். எந்தப் பொருளை எங்குக் கண்டாலும் அதில் மனம் பற்றாதிருத்தல் அல்லவா நன்மனம் படைத்தவரது தன்மை? கண்டமாத்திரத்தில் கையால் எடுத்து, பின் ஆராய்ந்து, பிழை புரிவது கூடாது என்று சிந்தித்து, இருந்த இடத்தில் பழத்தை எறிந்துவிட்டுச் சென்றார் என் தமையனார். நிராசையுள்ளோரது செயல் அது அன்று. பழத்தைப் பார்த்து இது யாருக்கு உரியதோ என்று மனதாலும் தீண்டாமல் போவதுவே நல்லோர் நெறி. இந் நன்னெறிக்கு, என் அண்ணாவின் செயல் மாறுபட்டுவிட்டது. ஆதலால் அவரைச் சிறிது ஆசையுடையவர் என்று என் உள்ளமாகிய குறிப்பு நூலில் குறித்து வைத்துக்கொண்டேன். மன்னனே! நீ அவரிடம் சென்று உன் காரியத்தை முடித்துக்கொள்ளலாம்.”

துருபதன் அதுபடியே யாஜன் என்ற முனிவரிடம் சென்று, அவருக்குப் பொன்னும் மணியும் தந்து, புத்திர காமேஷ்டி வேள்வியைச் செய்வித்து, திருஷ்டத்துய்மன் என்ற புதல்வனையும், கிருஷ்ணை என்ற புதல்வியையும் பெற்றான்.

எந்தப் பொருளை யாவர் எங்கு எப்போது பார்த்தாலும், தமக்கு உரியதல்லாத அதனை மனத்தினாலும் தீண்டாது போகவேண்டும்.

இந்த அருமையான அறநெறியை மேற்கூறிய வரலாறு நமக்கு உணர்த்துகின்றது.

## 60. தற்புகழ்ச்சி

குருக்ஷேத்திரத்திலே, பாண்டவர்கட்கும் கௌரவர்கட்கும் கடும் போர் நடந்துகொண்டிருந்தது; உதிர நதி ஓடியது. பிணமலை குவிந்தது. கழுகும் காகமும் பேயும் நாயும் நிணங்களை யுண்டு பசியாறி மகிழ்ந்தன.

பதினேழாவது நாள் மாலை; அன்று கர்ணனை வதைக்க வேண்டும் என்பது கண்ணபிரானுடைய திட்டம். மாலை நேரம். கர்ணன் உச்சிக் காலத்துச் சூரியனைப்போல் கொதிப்புற்றுப் பாண்டவ சேனைகளை வதைத்துக்கொண்டிருக்கின்றான். தருமபுத்திரர் அவனை எதிர்த்துத் தோல்வியுற்று, உடம்பு புண்ணாகி நொந்து, பாசறை சென்று பொறுக்க முடியாத வேதனையுடன் படுக்கையில் சாய்ந்துவிட்டார்.

கண்ணபிரான் செலுத்துகின்ற தேர்மீது அர்ச்சுனன் சென்று கர்ணனைக் கண்டான். அவன் கண்ணுக்குக் கர்ணன் தன் தமையனார் தருமரைப் போல் தெரிந்தது. "கண்ணா! இது என்ன அதிசயம். இவர் என் தமையனாரல்லவா?" என்று கேட்டான். கண்ணபிரான், "அர்ச்சுனா! தருமர் பாசறையில் படுத்திருக்கின்றார்" என்றார். அண்ணனைக் காணவேண்டும் என்ற அவாவால் அர்ச்சுனன் கண்ணனுடன் பாசறை சென்றான்.

கர்ணன் விடுத்த பாணங்களால் புண்பட்டுத் துன்புற்றிருந்த தருமர், நரநாராயணர்களைக் கண்டார். கர்ணனை வதைத்துவிட்டு வந்திருக்கின்றனர் எனக் கருதினார். "தம்பி! தனஞ்சயா! கர்ணன் மாண்டனனா? அவன் என்னைப் பாணங்களால் மிகுந்த வேதனைப்படுத்தி விட்டான். அவனை வென்ற உன் வீரமே வீரம்?" என்று வினவினார்.

"அண்ணா, இன்னும் கர்ணன் மாளவில்லை. நான் தங்களைக் கண்டு போகலாம் என்று வந்தேன்" என்றான் அர்ச்சுனன்.

தருமருக்கு உடல் நோய் காரணத்தால் சிறிது சலிப்பு ஏற்பட்டது. "அர்ச்சுனா! கர்ணனை நானே கொல்லுவேன்

என்று பல காலமாக வாய்ப்பறை அறைந்தாய். பகைவனைப் போர்க்களத்திலே வைத்துவிட்டு, உனக்குப் பாசறையிலே என்ன வேலை? கர்ணனைக் கொல்லாத உனக்கு இந்தக் காண்டீபம் எதற்கு?"

அர்ச்சுனன், தன் வில்லைப் பழிப்பவர் தலையைத் தள்ளுவதாகச் சபதம் பூண்டவன். சத்தியத்தை, உயிரினும் விழுமிய நித்தியப் பொருளாகக் கொண்ட தனஞ்சயன், உடனே உடைவாளை உருவினான். தருமருடைய தலையைத் தள்ளுவதற்கு ஓங்கினான்.

கண்ணபிரான் ஓடி, அவன் கையைப் பிடித்தார். "அர்ச்சுனா! இது என்ன விபரீதம்? தந்தையினும் சாலச் சிறந்த தமையனை வெட்டத் துணிந்தனையே. நில், நில்" என்றார்.

"கண்ணா! நான் என் தமையனாரைத் தெய்வமாக நினைப்பவன். அவர் என் வணக்கத்துக்குரியவர். அவரை நான் ஒரு போதும் அவமதிக்கமாட்டேன். நான் என் வில்லைப் பழித்தவரைக் கொல்வதாகச் சபதஞ் செய்துள்ளேன். இவர் என் வில்லைப் பழித்தனர். தமையனார் என்று நான் சத்தியத்தை விடக்கூடாது. சத்தியந் தவறியவன் நரகமடைவான். ஆகவே இவரைத் தமையன் என்று கருதிக் கொல்லேனாயின், சத்தியந் தவறிய பாவத்துக்கு ஆளாவேன். அண்ணனைவிடச் சத்தியம் பெரியதல்லவா? இதற்கு நான் என் செய்யக்கடவேன்?" என்றான் காண்டீபன்.

கண்ணபிரான், "பார்த்தா! தருமர் என்பது அவர் உடம்பல்லவே. அவருடைய உள்ளம் நோவ, ஏதாவது வைவாயானால் அவரைக் கொன்றதாக ஆகும். உன் சபதமும் நிறைவேறியதாக முடியும். சத்தியந், தவறிய பாவம் உனக்கு வராது" என்றார்.

உடனே அர்ச்சுனன் வாளைக் கீழே எறிந்தான். தருமர் மனம் நோவ வைதான். எவ்வாறு வைதான். கொடிய வசனங்கள் ஒன்றும் அவன் வாயிலிருந்து வரவில்லை. ஒழுக்கமுடையார் வாக்கிலிருந்து வழுக்கியும் தீச்சொல் வராது அல்லவா?

"அண்ணு! நீ எந்தப் போருக்குப் போனுய்? உனக்கு என்ன ஆற்றல் உண்டு?" என்று இந்த இரண்டே சொற்களைத்தான் சொன்னுன். நீங்கள் என்றும், உங்களுக்கு என்றும் பன்மையிற் கூருமல், நீ உனக்கு என்று ஒருமையில் உரைத்தான். இப்படி உரைத்த மறுகணம் அர்ச்சுனன் உடைவாளை எடுத்துத் தன் கழுத்தில் வைத்தான். தற்கொலை செய்துகொள்ள முயன்ருன்.

கண்ணபிரான் திடுக்குற்ருர். இது என்ன? ஒன்று போனுல் ஒன்று வருகின்றது. ஓடி அர்ச்சுனன் கரத்தைப் பிடித்துத் தடுத்தனர். "தனஞ்சயா! உன்னை நீயே கொலை செய்துகொள்ள ஏன் துணிந்தனை?" என்று கேட்டனர்.

"வாசுதேவா! என் தமையனுர் தருமத்தின் சொரூபம். அவர் எனக்குத் தந்தையினுஞ் சிறந்தவர். அவரை நீ என்று கூறிய இந்தப் புல்லிய நாவுடன் நான் உயிர் வாழ மாட்டேன். பெருமானே! என் கையை விடு. நான் என்னையே கொலை செய்துகொள்ளப் போகின்றேன். கண்ணு! என் இதயம் வெடித்துவிடுகின்ருப் போல் இருக்கின்றது" என்ருன்.

கண்ணபிரான், "மைத்துனு, சற்று நில். என் சொல்லை நிதான புத்தியுடன் கேள். அருச்சுனன் என்பது இந்த உடம்பா? இந்த ஊன் உடம்பை உயிர் நீங்கினுல் பிணம் என்று அழைப்பர்! எவன் தன்னைத்தானே புகழ்ந்துகொள்ளுகிருனே? அவன் தற்கொலை செய்துகொண்டவனுகின்ருன். தற்புகழ்ச்சி, தற்கொலைக்குச் சமானமாகும். ஆகவே உன்னை நீயே சிறிது புகழ்ந்துகொள். தற்கொலை புரிந்துகொண்டதாகும்" என்ருர்.

உடனே அர்ச்சுனன் வாளைக் கீழே எறிந்துவிட்டு, "நான் உலகமெல்லாம் வென்றவன்; விஜயன்; பாசுபதாத்திரம் பெற்றவன்; காலகேய நிவாத கவசத்தரைக்கொன்றவன்; தேவராஜ்ய பட்டாபிஷேகம் பெற்றவன்" என்று கூறினுன். அவ்வாறு கூறி நாணினுன். தருமர் திருவடிமீது வீழ்ந்து வணங்கினுன். கண்ணீரால் அவருடைய பாதத்

தைக் கழுவினன். தருமர் அவனைத் தழுவி ஆறுதல் கூறி ஆசீர்வதித்தார்.

பின்னர் பகவான் தேர்விடத் தனஞ்சயன் போர்க்களம் சென்று கர்ணனைக் கொன்றனன்.

இதனுல் பெரியவர்களை "நீ," என்றும் "உன்" என்றும் ஒருமையில் பேசுவது பிழை என்பதும், தன்னைத் தானே புகழ்வது தற்கொலை போன்றது என்பதும் விளங்குகின்றன.

வியவற்க எஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை.

# 61. நான்கு வழிகள்

பீஷ்மர் மிகப் பெரிய ஞானி; அவர், மாதரை மனத் தாலும் தீண்டாதவர். ஜிதேந்திரியர். சிவயோக சாதனையிற் சிறந்தவர்.

இவர் பத்தாம் நாள் பாரதப் போரில் பாணங்களால் அடிபட்டு உயிர் துறக்கும் நிலையை அடைந்தனர். "தட்சிணு யணத்தில் உயிர் துறக்கக்கூடாது. உத்தராயணம் வரட்டும்" என்று பிரியும் உயிரைத் தன் யோக சத்தியால் நிறுத்தினுர்.

அர்ச்சுனன் அமைத்த சரசயனத்தில் சாய்ந்து, யோக நெறியில் அமர்ந்தனர். தருமர், முடிசூட்டிக் கொண்டபின், துணைவர்கள், கண்ணபிரான் முதலிய நண்பர்கள் புடைசூழப் பீஷ்மருடைய அருகில் அமர்ந்து அநேக அறங்களைக் கேட் டனர். அரசதருமம், ஆபத்தருமம், மோட்சதருமம் இப்படிச் சிறந்த தருமங்களைக் கேட்டு மகிழ்ந்தனர்.

இவற்றுள் அரச தருமத்தில் ஒன்று நால்வகை வழி.

மன்னர்கள் இவற்றை மேற்கொள்ள வேண்டும். சாமம், தானம், பேதம், தண்டம் என்று கூறப்படும் சதுர்வித உபா யங்கள்.

கண்ணபிரானைத் தூதுவிட நினைத்தபோதும். 'சாம பேத தான தண்ட' என்று கூறுகின்றுர்.

"சரச சாம தான பேத தண்ட சதுர" என்று தியாக ராஜ சுவாமிகள் ஒரு கீர்த்தனை பாடுகிறார்.

(1) தன்னின் மிக்க வலிமையுடையவனிடம், வணக்கம் முதலியவற்றால் சமாதானம் புரிவது.

(2) கொடிய செயல் புரிபவனிடம், பேதித்துக் காரியத்தை முடிப்பது.

(3) சமானமான வலிமையுடையானிடம், சிறிது பொருள் தந்து கருமத்தை நிறைவேற்றுவது.

(4) தன்னினும் குறைந்த வலிமையுடையவனைத் தண்டத்தால் அடக்கிச் செயல் புரிவது.

இனி ஒருவனிடத்திலேயே, இந்த நான்கையும் வகையறிந்து செய்து, செயலை முடிப்பது மதிநலமுடையாரது திறமை.

சங்கனும் சிங்கனும் ஒரு விஷயத்தில் மாறுபட்டனர். ஒருவரையொருவர் எதிர்த்து இகல்கின்றனர். இடையில் தங்கன் என்ற ஒரு பண்பாளன், இவர்களது பகையைத் தணித்து நலம் புரிய நாடினான். சிங்கனிடஞ் சென்று, "சிங்கா! உன்போன்ற சிறந்த ஒருவன், சங்கன் விஷயத்தில் மாறுபடுவது பெருந்தன்மை யாகாது. விலங்குகள்தான் ஒன்றோடொன்று மோதிக்கொள்ளும். நாம் மனிதர்கள் அல்லவா? ஒற்றுமை உயர்வைத்தரும். சங்கனிடம் நீ பகைக்க வேண்டாம். சங்கனும் நல்லவன். உன்னை அவன் நன்கு மனதில் நேசிக்கின்றான். விட்டுக்கொடுப்பதுவே தகைமை" என்று கூறுவது சாமம்.

அதற்கு அவன் சமாதானம் அடையவில்லையானால், "சிங்கா! இங்கே வா! நீ இப்படி சங்கன் விஷயத்தில் மாறுபடுவது முறைமையன்று. இந்தா ஐந்நூறு அல்லது ஆயிரத்தை வாங்கிக்கொள். வீணே வழக்கிடாதே. கோர்ட்டுச் செலவு நிரம்ப ஆகிவிடும். பல காலம் அலைய நேரிடும். மனச்சாந்தியும் போய்விடும். ஆதலால் ஒற்றுமையாகப் போ. உன்னைத் தக்கவர்கள் புகழ்வார்கள்" என்று சிலவற்றைத் தந்து கருமத்தை முடிப்பது தானம்.

இதற்கும் அவன் இணங்கானாயின், "சிங்கா! உனக்கு நான் அன்பால் உரைக்கின்றேன். சங்கனை எதிர்க்காதே. அவனுக்கு நமது முதலமைச்சர் வேண்டியவர். போலீஸ் அதிகாரிகள் நிரம்பவும் நண்பர்கள். பெரிய பெரிய லட்சாதிபதிகள் அவனுடைய உறவினர்கள். அதுமட்டுமல்ல; நீதிபதிகளும் வழக்கறிஞர்களும் அவனுடைய நெருங்கிய ஆப்த நண்பர்கள். வழக்காடி உன்னால் வெல்ல முடியாது. அன்றியும், நம்ம கோடையிடி இடியப்பப் பயில்வான் அவனுடைய உயிர்த்தோழன். அந்தப் பயில்வான் இதுவரை ஆயிரம் பேரை அடித்து உயிரை எடுத்திருக்கின்றான். கொலைக்கு அஞ்சாதவன். ஆளை இளநீர் சீவுகின்றாற்போல் சீவிவிடுவான். சங்கனுடைய விரோதி என்றால் அந்தப் பயில்வான் அவனை எமபுரத்தில் குடியேற்றிவிடுவான். சங்கனை எதிர்த்த பலர் அழிந்து போனார்கள்" என்று கூறி, அவன் மனத்தை வெருட்டி அச்சுறுத்துவது பேதம்.

இந்த மூன்று உபாயத்தாலும் சிங்கன் இணங்கவில்லையானால் தக்க சூழ்நிலையை உண்டாக்கிக்கொண்டு, கை நீட்டிக் கை—அல்லது தடி இவைகளால் பேசுவது தண்டம்.

ஒரு கானகத்தில் பெரிய யானை மாண்டு கிடந்தது, பசித்து வந்த நரி அதனைக் கண்டது. யானையை உண்டு பசியாற நினைத்தது. ஆனால் யானையின் உடம்பைக் கிழிக்க அதனால் முடியாது. என் செய்வோம் என்று எண்ணி சுற்றுமுற்றும் பார்த்தது.

அங்கு விலங்கரசராகிய சிங்கம் வந்தது. நரி அஞ்சியது. எனினும் மெல்லச் சிங்கத்தினிடம் சென்று, பணிவுடன் வணங்கி, "மிருக வேந்தரே! இதோ இந்த யானை தங்களால் அடிபட்டு மாண்டு கிடக்கின்றது. தங்கள் பணியாளனாகிய அடியேன் இதனை வேறு விலங்குகள் உண்ணாவண்ணம் பார்த்துக் கொண்டிருக்கின்றேன். தங்களின் புகழ் இக்கானக முழுவதும் பரவி நிற்கின்றது" என்று இனிமையாகக் கூறியது.

சிங்கம், "நரியே! நான் இதனைக் கொல்லவில்லை! இது வேறு ஒரு விலங்கால் கொல்லப்பட்டிருக்கவேண்டும். வீரதீர முடைய யான் சுயமாகக் கொன்ற விலங்கையே உண்பேன். தானே உழைத்து உண்கின்ற உணவுதான் சிறந்தது. பிற ருடைய உழைப்பை உண்கின்றவன் அதமன். ஆகவே நான் இதனை அருந்தேன். அருந்தேனேயாயினும் பாடுபட்டுத் தான் பருகவேணும். ஆகவே நீயே இதனை அருந்து" என்று கெம்பீரமாகக் கூறிவிட்டுச் சென்றது.

"அப்பா! பெரிய ஆபத்து அகன்றது. நல்ல காலத்திற்கு மிருகராஜா விலகிச் சென்றது" என எண்ணி மகிழ்ந்தது. தன்னினும் வலியவனை வணக்கத்தால் வென்றது நரி.

பின்னர் கொடிய புலி வந்தது. நரி அதனைப் பார்த்து மிகவும் அஞ்சியது. 'அந்தோ! சிங்கம் பெருந்தன்மையுடையது, புலி கெட்ட இயல்புடையது' என்று நினைத்து, புலியிடம் போய், "வீரமுள்ள புலியே! இதோ இந்த யானையை உலகங்களையெல்லாம் பொடியாக்கும் ஒரு பூதம் கொன்றது. என்னைக் காவல் வைத்துவிட்டு நீராடச்சென்றுளது. இந்த யானையை அருந்துவதற்குத் துணைக்கறி வேண்டுமென்றும், ஐந்து, ஆறு புலிகள் தேவையென்றும் கூறியது. புலிகளைக் கண்டால், அந்தப் பூதம் எலியை யுண்பதுபோல விழுங்கி விடுகின்றது. என்னைக் காவல் வைத்துவிட்டுச் சென்றுளது. இன்று உனக்கு ஆயுள் முடிந்துவிட்டது. உன்னை மட்டும் அந்தப் பூதம் விழுங்காது. உன் குலத்தாரையும் சேர்த்துப் பல்லில்படாது விழுங்கிவிடும். நீ எனக்கு நண்பன்; அதனால் கூறினேன். ஆ! அதோ மலைபோல் வருகின்றதே. அது தான் பூதம். அங்கே பார். பெருங்காற்று வீசுகின்றது. ஒரு கணத்தில் உன் உயிர் போகப்போகின்றது" என்றது.

இதனைக் கேட்ட புலி, நெஞ்சு படபடத்து நாற்கால் பாய்ச்சலில் ஒரே ஓட்டம் பிடித்தது. நரி இவ்வாறு துஷ்டனை பேதஞ் செய்து வென்றது.

பின்னர் ஓநாய் வந்தது. நரி மெல்ல அதனிடம் வந்து, "நண்பா! இப்படி வா! நமது அரசர் சிங்கவேந்தர் இதனைக் கொன்றுவிட்டு, தன் மனைவியை அழைத்துவரச் சென்றிருக்

கின்றார். என்னைக் காவல்புரியக் கட்டளையிட்டார். நீ ஆப்த நண்பன். உனக்கும் கடும் பசி. மிருக ராஜா வருவதற்கு முன் இதனை நீ கிழித்து ஒரு சிறிது உண்டுவிட்டுப் போய்விடு. சிங்கம் வந்துவிட்டால், இதில் உனக்கு அணுத்துணையும் கிடையாது. உன்னையும் சிங்கம் உண்ணக்கூடும்'' என்றது. உடனே ஓநாய் அவசரம் அவசரமாக யானையைக் கிழித்து, ஒரு துண்டு மாமிசத்தை உண்டது.

நரி, ''நண்பனே! அதோ விலங்கின வேந்தர் வரு கின்றார். உன்னையும் கொல்வார். உனக்கு இடம் தந்த என்னையும் கொல்வார்'' என்றது. உடனே ஓநாய் பிடித்தது ஓட்டம். தன்னால் கிழிக்கமுடியாத யானையை, ஓநாயைக் கிழிக்கவைத்து ஒரு துண்டு மாமிசத்தைத் தானஞ் செய்து பயன்பெற்றது நரி.

பின்னர் ஒரு நரி வந்தது. ''அடேய்! மூடப்பயலே! நான் யார் தெரியுமா? வீரதீர கெம்பீரன். இதோ பார். இந்த யானையைக் கொன்ற எனக்கு நீ எம்மாத்திரம்? இதோ பார் உன்னை ஒரு அறையில் கொல்கின்றேன்'' என்று கூறி ஓங்கி ஒரு அறை தந்தது. நரி ஒடுங்கி ஓடிவிட்டது. இது தண்டோபாயம்.

சாம பேத தான தண்டம் என்ற சதுர்வித உபாயங் களால் நரி, வலிய சிங்கத்தையும், கொடிய புலியையும், பெரிய ஓநாயையும், சிறிய நரியையும் வென்றது. யானை யைச் சிறிது சிறிதாகப் புசித்து மகிழ்ந்தது.

## 62. நிலைதெரியாமல் பேசாதே

''பேசப்போனாயோ சாகப்போனாயோ'' ''யாராலே கெட்டாய்? உன் நோராலே கெட்டாய்'' என்பவை நம் நாட்டுப் பழமொழிகள். பேசும்போது நிதானமாகப் பேச வேண்டும். எப்போதும் அமைதியின்றி, அவசரப்பட்டுப் பேசக்கூடாது. கறந்த பால் முலையில் ஏறாது. அதுபோல் வாயிலிருந்து வெளிவந்த சொல் ஒருபோதும் உள் திரும்

பாது. நமது உடம்பிலே எழுபத்தீராயிரம் நாடி நரம்புகள் இருக்கின்றன; மூளையிலே மட்டும் 10 கோடி நரம்புகள் இருக்கின்றன என்று உடல்நூல் வல்லார் உரைக்கின்றார்கள். இருக்க வேண்டும்.

ஆனால் நமது நாவைமட்டும் நரம்பில்லாமல் ஆண்டவன் மென்மையாகப் படைத்துள்ளான். அதுமட்டுமல்ல; ஈர முள்ளதாகவும் படைத்தான். ஈரத்துடன் பேசிப் பழக வேண்டும். பேச்சில் இனிமை தனிமையான சுவையுடன் இருக்கவேண்டும்.

"இன்சொலால் ஈரம் அளைஇப் படிறிலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்."

என்பார் திருவள்ளுவனார்.

பேசுவோர், பேசத் தொடங்குமுன், சொல்லை அளந்து நிறுத்து வகுத்தும் தொகுத்தும் பேசவேண்டும்.

பிறரிடம் தன்னைப்பற்றியே ஒழியாது பெருமைப்படுத்திப் பேசக்கூடாது. பிறர் தன்னைப்பற்றிப் புகழ்ந்து பேசும் போதும் மகிழ்ந்து கேட்டுத் தலையசைக்கக் கூடாது. எத்துணை நற்குணங்களிருப்பினும், நாவடக்கமில்லாதவன் விரைந்து கெடுவான். ஒரு சொல் பதினாயிரம் பொன்னைச் செலவழிக்கச் செய்யும். ஒரே சொல் சிறைச்சாலைக்கு அனுப்பும். நாவினால் நலிந்தார் பலர். ஐம்புலன்களை அடக்கும் ஆன்றோர் முதலில் வலிமையாக அடக்க வேண்டியது நாவையே யாகும்.

மேலே பதினாறு வலியவர்; கீழே பதினாறு வலியவர். ஆக முப்பத்திரண்டு வலியவர்களுக்கு இடையே மென்மையான நாவைப் படைத்திருக்கின்றார் இறைவர். எச்சரிக்கையாகப் பேசு என்று குறிப்பிடுகின்றார். மூன்று அங்குல நாக்கு சிலர்க்கு முன்னூறு முழம் நீண்டு, விருப்பம்போல் பேசி வேதனைப்படுகின்றது; வேதனைப் படுத்துகின்றது.

ஆக்கப் படுத்தும் அருந்தளைவாய் பெய்விக்கும்
போக்கப் படுக்கும் புலைநரகத் துய்ப்பிக்கும்
காக்கப் படுவன இந்திரியம் ஐந்தினும்
நாக்கல்ல தில்லை நனிவெல்லு மாறே. —வளையாபதி

ஆதலால் நாவை நனிகாக்க வேண்டும். நன்மைக்கும் தீமைக்கும், இன்பத்திற்கும் துன்பத்திற்கும் நாவே காரணம் என்பதை மறவாமல் மனதில் பதியவைத்துக் கொள்ள வேண்டும்.

ஆக்கமுங் கேடும் அதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு. —திருக்குறள்

துரியோதனன்; இந்திரப்பிரஸ்தத்தில் உள்ள அரசியல் அரிய மண்டபத்தில் புகுந்தபோது, குளமல்லாத இடத்தில் சிற்பியின் திறமையால் குளமென மயங்கி, ஆடையை இடை வரை தூக்கிக்கொண்டான். பெரிய சபையில், திரௌபதி "இவன் தந்தைக்குத்தான் கண்ணில்லை. இவனுக்குங் கண்ணில்லையா?" என்று கூறி நகைத்தாள். ஏற்கனவே நற்குணம் அமையப்பெறாத அவன் உள்ளத்தில், அதிக வேகத்தையும் கோபத்தையும் உண்டாக்கியது அச்சொல்; அதுகாரணமாகவே சூதாடி, திரௌபதியை மானபங்கமும் செய்ய முயன்றான்; ஆகவே நாவடக்கமின்மையால் வருந் தீங்கு அநந்தம்.

* * *

இன்னும் தன்னிலையறியாமல் பேசுவதனால் வருந் தீங்கைப் புலப்படுத்த வேறு ஒரு எடுத்துக்காட்டும் இங்குக் கூறுதும்.

ஒரு கிராமத்திற்கு அருகே அழகிய மகிழ மரத்தின் கீழே மகிழ்ச்சியாக ஒரு சேவல் அமர்ந்திருந்தது. அங்கு ஒரு நரி வந்தது. அது தந்திரத்தில் சிறந்ததன்றோ? சேவலைப் பார்த்து, "அதனைப் பிடித்துக் கொண்டுபோய், பசியாறத் தின்னவேண்டும்" என்று மனதிற்குள் நினைத்து ஒரு தந்திரத்தை மேற்கொண்டது. "சேவலே! உன் மரபு உயர்ந்தது; முருகவேளே ஆவலாகக் கொடியாகக் கொண்டனர். உன் தந்தையாரைக்கூட எனக்குத் தெரியும். உன் தந்தை பாட நான் கேட்டு மகிழ்ந்துளேன். உனக்கும் பாடத் தெரியுமா? தெரிந்தால் சிறிது பாடு. கேட்டு மகிழ்கின்றேன்" என்று புகழ்ந்து கூறியது. அப் புகழ்ச்சியில் மயங்கிய சேவல்,

“நரியே! நீ சொல்வது சரியே. நான் நன்றாகப் பாடுவேன். நான் பாடத் தொடங்கினால்தான் சூரிய உதயமேயாகும். என் பாடலைக் கேட்கும் பொருட்டு சூரியபகவானே வருவார் என்றால் அதன் உயர்வைப்பற்றிக் கேட்பானேன்? இதோ பாடுகின்றேன்” என்று கூறி, தன் கண்களை மூடிக்கொண்டு, உச்சமான குரலிலே கூவிப் பாடியது.

அது கண்களை மூடிக் கூவிக்கொண்டிருக்கும் சமயம், நரி ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து, சேவலை ஆவலுடன் தன் வாயினால் கழுத்தைக் கௌவிப் பிடித்துக்கொண்டு ஓடியது. இடையிலே வந்தவர்கள், “அந்தோ! நமக்குரிய சேவலை நரி தூக்கிக் கொண்டுபோகின்றதே” என்று கூறினார்கள்.

அதைக்கேட்ட சேவல், “நரியண்ணா! இவர்கள் கூறுவது உன் செவியில் விழவில்லையா? உனக்கு உரியவனாகிய என்னை இவர்கள் தமக்கு உரியவன் என்று நியாயமல்லாமல் கூறுகின்றார்களே. இது சரியா? நரியண்ணா! நீ வாயை மூடிக் கொண்டு போனால் அவர்கள் கூறுவதே சரியென்று உலகம் உரைக்குமே? ஆகவே நான் அவர்கள் உடைமையல்ல என்பதையும் உனக்கே சொந்தமான உடைமை யென்பதையும், அவர்கள் கேட்டுத் தெளிவடையுமாறு கூறு” என்றது.

நரிக்குத் தலைகால் தெரியாத மகிழ்ச்சி, “ஓய் ஊரவரே! என்ன உளறுகின்றீர்கள். இச் சேவல் எனக்கே உரியது; உமக்கு உரியதன்று” என்று வாய்திறந்து கூறியது; சேவல் பளிச்சென்று நரியின் வாயிலிருந்து தப்பிப் பறந்துபோய் ஒரு மரத்தின்மீது அமர்ந்து, “ஏ! நரியே! உனக்கு என்ன வெறியா? நீ கூறுவது சரியா? நான் அவர்கள் உடைமை யன்றி உன் உடைமையன்று” என்று கூறிக் கூவியது. நரி ஏமாந்து ஏங்கிச் சென்றது.

நரியின் புகழுரையைக் கேட்டு மயங்கியதால் முதலில் சேவல் இடர்ப்பட்டது. நிலையறியாமல் பேசியதால் நரி கிடைத்ததை யிழந்து ஏங்கியது.

யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. —திருக்குறள்.

## 63. அடக்கம்

மனிதனுடைய நற்குணங்களில், நனிசிறந்து விளங்கு வது அடக்கம் என்பது. கல்வி கேள்வி செல்வம் குலம் பட்டம் பதவி முதலிய பல இருப்பினும் அடக்கம் என்ற ஒன்று இல்லை யானல், அவன் சிறப்படையான். ஒரு குழம்பில் புளி, மிளகு, காயம், காரம் என்பன பல இருப்பினும் உப்பு என்ற ஒன்று இல்லையானல் உண்பதற்கு உகந்ததாக ஆகாது. உணவுக்கு உப்பு இன்றியமையாததுபோல் வாழ்வுக்கு அடக்கம் இன்றி யமையாதது.

திருவள்ளுவர் தமது சுருங்கிய நூலில் அடக்கத்திற்கு ஒரு முக்கியத்துவந் தந்து அடக்கமுடைமை என்ற அதிகாரம் அமைத்துப் பத்துக் குறள் பாடியிருக்கின்ருர்.

பணிவு என்ற இந்த அரிய குணம், அநேகருக்கு அமைவ தில்லை. பணிவுடையார் தமது வாழ்வில் சிறப்புறுவார்கள்.

தண்ணீர் இறைக்கும் ஏற்றம், பணிவதனுல், கிணற்றி லுள்ள நீரை முகக்கின்றது. அங்ஙனம் ஆன்ருேர்களிடம் பணிந்தால் அவர்கள்பால் தேங்கிக் கிடக்கும் அறிவு வெள் ளத்தை நாம் முகத்துகொள்ளலாம்.

பணிவதனுல் ஒன்றும் நமக்கு இழிவு வந்துவிடாது. அது நமது பெருமையையே புலப்படுத்தும். துலாக் கோலில் தாழ்ந்த தட்டுக்குத்தானே பெருமை? காய்த்துப் பழுத்துப் பயனுடைய மரக்கிளை தாழ்ந்து இருக்கும். காய் கனி இல்லாத கிளைகள் உயர்ந்து நிற்கும். எதற்குப் பெருமை? தாழ்ந்த கிளைக்கா? உயர்ந்த கிளைக்கா? உன்னிப் பாருங்கள்.

"எல்லார்க்கும் நன்ரும் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வந் தகைத்து"

என்பார் திருவள்ளுவர்.

### பணிவினுல் உயர்ந்தவர் ஸ்ரீராமர்

விசுவாமித்திரர், இராமரையும் இலட்சுமணரையும் அழைத்துக்கொண்டு மிதிலாபுரிக்குச் சென்று, ஜனகருடைய

அரசவையில் அமர்ந்திருக்கின்றார். ஆசிரியராகிய விசுவா மித்திரருடைய அருகில், தம்பி லட்சுமணருடன் ஸ்ரீராமர் ஓராசனத்தில் அமர்ந்திருக்கின்றார். உருத்திரருடைய வில்லைப்பற்றிச் சதானந்தர் கூறினார். அந்தப் பெரிய வில்லையும், பலர் ஒன்றுகூடிக் கொணர்ந்து ஒரு மேடைமீது வைத்தார்கள்.

"இந்த வில்லை நீ எடுத்து வளைப்பதுபோல் ஒடித்து எறிவாய்" என்று வாய்விட்டுக் கூறாமல், கண் குறிப்பினால் ஸ்ரீராமரை விசுவாமித்திரர் பார்த்தார். ஸ்ரீராமர் அந்தக் குறிப்பை யுணர்ந்து, 'இந்த வில்லை ஒடித்தெறியுமாறு நமது குருநாதர் குறிப்பினால் உணர்த்துகின்றாரே?' என்று கருதி வில்லைப் பார்க்கின்றார்.

நினைந்தமுனி பகர்ந்தவெலாம் நெறியுண்ணி
அறிவனுந்தன்
புனைந்தசடை முடிதுளக்கிப் போரேற்றின் முகம்
பார்த்தான்
வனைந்தனைய திருமேனி வள்ளலும்அம்
மாதவத்தோன்
நினைந்தவெலாம் நினைந்தந்த நெடுஞ்சிலையை
நோக்கினான்.

இது கம்பநாடருடைய திருவாக்கு.

இங்கே ஸ்ரீராமரை வனைந்தனைய திருமேனி என்று குறிக்கின்றார். என்ன பொருள்? சித்திர வல்லுனன் எழுதி வைத்த அழகிய ஓவியம் போன்றவன் என்கின்றார். நன்கு கூர்ந்து சிந்தியுங்கள்.

இந்தச் சொற்றொடர் இராகவனுடைய அழகைப் புலப் படுத்துவதற்காக வந்ததன்று; ஏன்? அப் பெருமான் ஓவியத்திற்கு அடங்காத அழகுடையவன். மணிமகுடத்தையும் அணிகலன்களையும் பட்டாடையையும் துறந்து, மரவுரியையும் சடைமுடியையும் புனைந்து நின்ற திருக்கோலத்தைக் கண்டு, வெறுத்துரைக்க வந்த வாலியே "ஓவியத் தெழுதவொண்ணா உருவத்தோய்" என்று அழைக்கின்றான். 'சித்திர வல்லுனனால் எழுதமுடியாத அழகுடையவனே' என்று கூறுகின்றான்

வாலி. அவன் இப்போது ஸ்ரீராமரிடம் மாறுபட்டவனாய்ப் பேசுகின்ற சமயம். மாறுபட்ட ஒருவனுக்குத் துறவுநிலையில் உள்ள ராமர் திருவுருவம் சித்திரக்காரனால் வனைய முடியாதது என்று தோன்றுமானால், திருமணத்திற்கு முன் சகல அணிகலன்களுடன் அரசவையில் அமர்ந்திருக்கும் திருக்கோலம் ஓவியத்தில் எழுதியது போன்றது என்றால், முன்னுக்குப் பின் முரணுமன்றோ? எனவே இதற்கு என்ன பொருள்?

நன்மாணாக்கர், ஆசிரியர் அருகில் இருக்கும்போது கைகால் மெய் இவைகளை அசைக்காமல் சித்திரம்போல் இருப்பர். இதனைக் குறிப்பிடுகின்றார் கம்பர். நன் மாணாக்கர் ஆசிரியரிடம் "சித்திரத்தகவின் வித்தகத்தடங்கி" நிற்பர் என்பது அவரியல்பு கூறவந்த இலக்கண நூல் இயம்புகின்றது. ஆகவே இங்கே ஸ்ரீராமர், குருநாதராகிய விசுவாமித்திரரது அருகில் சித்திரம்போல் அடக்கமாக, ஆடாமல் அசையாமல் இருந்தார் என்று அவருடைய அடக்க நிலையைக் கவிச்சக்கிரவர்த்தி, "வனைந்தனைய திருமேனி வள்ளல்" என்று நமக்குப் படம் பிடித்துக் காட்டுகின்றார். இந்தச் சொற்றொடரின் மாண்புதான் என்னே! ஸ்ரீராமரைச் சீடராகப் பெற்ற விசுவாமித்திரரைப் புகழ்வதா? சக்கிரவர்த்தித் திருமகன் ஓர் ஏழை சன்யாசியிடம் அடங்கியிருக்கின்ற அருமையைப் புகழ்வதா? இதனை மிக நுணுக்கமாக நமக்கு அறிவிக்கின்ற கம்பநாடரது கவித்திரத்தைப் புகழ்வதா?

## அர்ச்சுனனது அடக்கம்

பாண்டவர்களும், துரியோதனாதியரும், அத்தினபுரத்தில் கிருபாச்சாரியாரிடம் குருகுலவாசம் புரிந்து கல்வி பயின்று கொண்டிருந்தார்கள்.

கிருபாச்சாரியருடைய மைத்துனர் துரோணாச்சாரியர்; இவர் கானகத்தில் தவத்தை மேற்கொண்டு வாழ்ந்தனர். துரோணருடைய தவத்தினால் அவருடைய மனைவி கிருபியிடம் அச்வத்தாமா பிறந்தனர். அக்குழந்தை பாலின்றி வருந்தி யழுதது. குழந்தையின் நலங்கருதி துரோணர் தனது பள்ளித்தோழன் துருபதனிடஞ் சென்றார். நட்பருமை

யறியாத கயவனுகிய துருபதன் துரோணரை அவமதித்தான். அதனுல் மனம் புண்பட்ட அவர் அத்தினபுரத்தை நோக்கி வந்துகொண்டிருந்தார். நகருக்கு அருகில் மாணவர்கள் விளையாடும் இடம்.

பாண்டவர்களும், துரியோதனுதியரும் பந்து விளையாடிக்கொண்டிருந்தார்கள். பந்து ஒரு படித்துறையில்லாத கிணற்றில் விழுந்துவிட்டது. அதனை எடுக்கும் வழியறியாது இருதிறத்துப் பிள்ளைகளும் கிணற்றைச் சுற்றி நின்று திகைப்புற்றிருந்தார்கள்.

மனைவியுடனும், மகனுடனும், அழுக்குத்துணி யுடுத்து, தாடியும் மீசையுமாக வருகின்ருர் துரோணர். நகரவாசிகளும் அரச குமாரர்களுமாகிய இவர்கள் அவரை எப்படி மதிக்கக் கூடும்?

துரோணர் "குழந்தைகளே! படிக்கின்ற நீங்கள் இப்போது இக் கிணற்றைச் சுற்றி நிற்கின்ற காரணம் யாது?" என்று விஞவினுர்.

அவருடைய தோற்றம் அப்பிள்ளைகளுக்கு அவரிடம் மதிப்பை யுண்டாக்கவில்லை. "நாங்கள் எதற்காக நின்ருல் உனக்கென்ன? உன் வேலையைப் பார்த்துக்கொண்டு போ" என்று அலட்சியமாகக் கூறினுன் துரியோதனன். மற்றப் பிள்ளைகளும் துரோணரைப் பரிகசித்தார்கள். நட்சத்திரக் குழுவின் இடையில் இளம் பிறை திகழ்வது போல் திகழ்ந்த அர்ச்சுனன் மட்டும் துரோணரைத் தொழுது, "சுவாமி! வணக்கம். நாங்கள் குருகுலத்து அரசகுமாரர்கள். பந்து கிணற்றில் விழுந்துவிட்டது. அதனை எடுக்க வகையறியாது திகைக்கின்ருேம்" என்ருன்.

துரோணருக்கு, அர்ச்சுனனுடைய அடக்கமான குணம் பெருமகிழ்ச்சியைத் தந்தது. அர்ச்சுனனுடைய இனிய சொல் அவருடைய உள்ளத்தை உருக்கியது.

"தம்பீ! நீங்கள் யாரிடம் படிக்கின்றீர்கள்?"

"நாங்கள் கிருபாச்சாரியாரிடம் கல்வி பயில்கின்ருேம்."

"நல்லது; இப்படி ஒரு பொருள் கிணற்றில் தவறி விழுந்தால் அதனை எளிதாக எடுக்கும் முறையை அவர் உங்களுக்குக் கற்பிக்கவில்லையா?"

"இல்லை"

நல்லது என்று கூறி, துரோணர் அங்கு நிரம்ப முளைத்திருக்கின்ற சீவிரங் குச்சிகளை எடுத்து, அவைகளை ஒழுங்காகத் திருத்தினர். பிள்ளைகள் எல்லாம் அவர் என்ன செய்யப் போகின்றார் என்று உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

அர்ச்சுனன் காதில், அவர் ஒரு மந்திரத்தை உபதேசித்தார். அந்தச் சீவிரம் புல்லுகளை அவன் கையில் தந்து, "அர்ச்சுனா! உனக்கு நான் உபதேசித்த மந்திரத்தை உச்சரித்து, ஒவ்வொரு குச்சியையும் கிணற்றில் எறி" என்றார்.

அர்ச்சுனன் அம்மந்திரத்தைக் கூறி, ஒரு குச்சியை எறிந்தான். அது ஆழத்தில் உள்ள பந்தில் நுழைந்தது. பின்னர் ஒவ்வொரு குச்சியையும் எறிந்தான். ஒரு குச்சி மறு குச்சியின் நுனியில் தைத்துக்கொண்டே வந்தது. மேலே வந்த குச்சியைப் பிடித்துத் தூக்கினன். பந்து வெளியே எடுக்கப்பட்டது. இந்த அதிசயத்தை எல்லாப் பிள்ளைகளும் பார்த்தார்கள். "அடே! இவர் ஒரு பெரிய மந்திர வித்தைக்காரர். மிகவும் சமர்த்தர். இவரை நாம் அலட்சியஞ் செய்தோமே?' என்று கூறி, அவரைப் பணிந்து, 'சுவாமி! தாங்கள் யார்? எங்குப் போகின்றீர்?' என்று கேட்டார்கள்.

துரோணர், "குழந்தைகளே! நான் துரோணர் என்கின்ற முனிவன். உங்கள் குருநாதருடைய இல்லத்திற்குச் செல்கின்றேன்" என்று கூறிவிட்டுச் சென்றார்.

பிள்ளைகளின் வேண்டுகோளுக்கு இணங்கி, பீஷ்மாச்சாரியார் துரோணரையும் அந்தக் குரு குலத்தில் ஆசிரியராக அமர்த்தி, வில் வேதம்பயிற்றுவிக்குமாறு ஏற்பாடு செய்தார். இயல்பாகவே அடக்கமுடைய அர்ச்சுனன், துரோணரிடம் மேலும் அடக்கமாகப் பல பணிவிடைகள் புரிந்து, அவருடைய மனத்தை மட்டற்ற மகிழ்ச்சியில் ஆழவைத்தான். குருவுக்கு உகந்த சீடனாக விளங்கி, வில் வித்தையில் சமானமில்லாதவனாக ஆனான். அர்ச்சுனனுடைய முன்னேற்றத்துக்கு மூலகாரணமாக நின்று உதவியது அவனுடைய அடக்கமே.

அநுமார் சமானமில்லாத வலிமையுடைவர். அவர் ஸ்ரீராமரிடம் பேசும்போது, வணங்கிய உடம்புடனும், கையிஞல் வாயை மறைத்தும், பயபக்தி விசுவாசத்துடனும் நிற்பார்.

"வணங்கிய மேனியன் மறைத்த வாயினன்
நுணங்கிய கேள்வியன் நுவல்வ தாயினுன்"

—வீடணன் அடைக்கலப்படலம்

அறிவு உயர உயர அடக்கம் உயரவேண்டும். அடக்கம் அறிவின் மிகுதியைத் தெரிவிக்கின்ற ஓர் அடையாளம். சாரமும் ஈரமும் இல்லாத உலர்ந்த ஓலை சல சல என்று ஒலிக்கின்றது. பச்சோலை ஒலிப்பதில்லை. அன்றியும் வெண்கல மணி, அதிகமாக ஒலிக்கும்; தங்கமணி ஒலிப்பதில்லை. அதனுல் பச்சோலைக்கும் தங்கமணிக்கும் பெருமைதானே.

கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்தி முதலிய பெரும் புலவர்கள் எத்துணை அடக்கமுடையவர்களாக இருந்தார்கள் என்பதற்கு அவர்களுடைய பாடல்கள் இன்றும் சான்று பகர்கின்றன.

இந்திரஜித்து போருக்குப் புறப்பட்டான். அவனுடன் சூழ்ந்து சென்ற சேனைகள் நாற்பது வெள்ளம்; இவ்வளவுதான். இதனைக் கம்பநாடர் கூறுகின்ற அழகும் அடக்கமும் உன்னுந்தோறும் உள்ளத்தை உருக்குகின்றன.

"இந்திரஜித்துடன் சென்ற சேனைகளை அளவிட்டுச் சொல்ல யாரால் முடியும்? பிரம்ம தேவராலும் முடியாது. ஆஞல் வேதங்களில் வல்ல வால்மீகி முனிவர் நாற்பது வெள்ளம் சேனைகள் என்று கூறுகின்ருர். அவரையன்றி அச்சேனையை அளவிட வல்லார் யாவர்?" என்று கம்பநாடர் முன்னேரை மதித்து, அவர்களைப் பாராட்டிக் கூறும் அடக்கமுடைமை எத்துணை விழுமியது.

அன்னுநெடு போகிய தானை அறிந்து கூற
என்னல் அரிதெனினும் இயம்புவான் மீகி என்னும்
நன்னுன் மறையோன் அது நாற்பது
வெள்ளமென்னச்
சொன்னுன் பிறர் யார் அஃதுணர்ந்து
- தொகுக்கவல்லார்.

ஒரு சமயம் சோழமன்னன், பொய்யாமொழிப் புலவரைச் சந்தித்தான். "புலவரே!" என்று புரவலன் அழைத்தான். அதுகேட்ட பொய்யாமொழிப் புலவர், உடம்பில் மின்சாரம் பாய்ந்ததுபோல் திடுக்கிட்டு உள்ளமும் உடலும் குலுங்கிப் பதறினர்.

மன்னவன் "ஓ! ஏதோ நாம் தவருக அழைத்து விட்டோமோ? புலவர் மனம் புண்படக் கூடாதே" என்று கருதினன்.

புலவரைப் பூபாலன் தொழுது, "என்னை மன்னிக்க வேண்டும்; 'புலவர் பெருமானே' என்று அழைக்கவேண்டும் 'புலவர் ஏறே' என்று அழைத்திருக்க வேண்டும். நான் அடையின்றி வெறும் புலவரே என்று அழைத்துவிட்டேன். மன்னித்தருளும்" என்றான்.

பொய்யாமொழிப் புலவர் முன்னைக்காட்டிலும் பன்மடங்கு நடுக்கமுற்றனர். "மன்னர் பெருமானே! மற்றும் ஒருமுறை இப்படி அழைக்கவேண்டாம். இப்படி அழைப்பது எனக்கு மிகுந்த வேதனை தருகின்றது" என்றார்.

சோழமன்னருக்குப் புலவருடைய சொற்பொருள் விளங்கவில்லை; அவருடைய கருத்தும் தெளிவாகவில்லை. "புலவரே! நீர் என்ன கூறுகின்றீர் என்பதைத் தெளிவாகச் சொல்லும்" என்றார்.

"மன்னரே! மறுபடியும் மறுபடியும் என்னைப் புலவரே புலவரே! என்று அழைக்கின்றீரே! அறம் என்ற மகாபாரதத்தைப் பாடிய பெருந்தேவனுரையும் புலவர் என்று கூறி, அறம் பொருள் இன்பம் என்ற முப்பாலையும் கூறிய திருவள்ளுவரையும் புலவர் என்று கூறி, அகத்தியரையும் புலவர் என்று கூறி, அடியேனையும் புலவன் என்று கூறினல் இந்த உலகம் பொறுக்குமா?" என்று கூறிக் கண் கலங்கி நின்றார். அப்போது அவர் கூறிய பாடல் இது:

அறம்உரைத் தானும் புலவன்முப் பாலின்
திறம் உரைத் தானும் புலவன்—குறுமுனி
தானும் புலவன் தரணி பொறுக்குமோ
யானும் புலவன் எனில்?

இந்தப் பாடலை நன்கு படியுங்கள், சாபாநுக்கிரக சக்தியுடைய அப்பெரும் புலவருக்கு இந்த அடக்கம் இருந்தது.

கற்றறிவு குலமேன்மை கருணை பெரும் புகழ்செல்வம்
கைம்மா றெண்ணு
துற்றதுவுங் கொடை சீர்மை ஒழுக்க மருந் தவம்நியமம்
உறவின் கேண்மை
மற்றெதிரி லாத்திண்மை வாய்மைமிகும் தூய்மை குண
வனப்பி யாவும்
பெற்றிடினும் அடக்கமிலாப் பெருமிதத்தால் இத்தனைக்கும்
பிழையுண்டாமால்

—பிரபோதசந்திரோதயம்.

அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்

—திருக்குறள்.

## 64. மனிதன்

மனிதன் என்ற சொல்லுக்கு நினைப்பவன் என்பது பொருள். நினைக்கும் கருவி மனம்; மனத்தையுடையவன் மனிதன். தமிழில் மனிதன்; வடமொழியில் மநுஜா; ஆங்கிலத்தில் மேன். இவையெல்லாம் மன் என்ற பகுதியடியாகவே பிறந்தவை.

மனிதனுகப் பிறந்தவர் எல்லோரும் உண்மையில் மனிதனுகிவிட முடியாது. உணவைப்பற்றியோ, உலகத்தைப் பற்றியோ, வேறு மற்ற உலகப் பொருள்களைப் பற்றியோ நினைப்பவன் மனிதனுகமாட்டான். உண்பது, உறங்குவது, மக்களைப் பெறுவது, உலாவுவது முதலிய யாவும் விலங்குகளுக்கும் நமக்கும் பொது. விலங்குகளும் நிரம்ப உண்கின்றன; நாமும் உண்கின்ருேம். விலங்குகளும் மக்களைப் பெறுகின்றன; நாமும் பெறுகின்ருேம். ஆகவே மனிதர்களாகிய நாம் எந்த வகையில் விலங்குகளைவிட மேலானனர்கள்? என்ற கேள்வி எழுகின்றது.

"நான் யார்? என் உள்ளமார்? நான் எங்கிருந்து வந்தேன்? எதற்காகப் பிறந்தேன்? இந்த உடம்பு தானே வந்ததா? ஒருவன் தந்து வந்ததா? தந்தவன் தன்பொருட்டுத் தந்தானு? என் பொருட்டுத் தந்தானு? நான் எங்கே போகவேணும்? இந்த உடம்பைத் தந்த ஒருவன் தன்மை யாது? அவனையடையும் வழி யாது? அடைந்தவர்கள் யார்?" என்பனவாதி வினுக்களை உள்ளுக்குள் கேட்டுக் கொண்டு, அவைகளைப்பற்றி ஆழமாக நினைத்து, தகுந்த விடைகளை யறிந்து, அறவொழுக்கத்தில் நிற்பவன்தான் உண்மை யான மனிதன். இல்லையேல் மனிதவுடம்பெடுத்த விலங்கு தான்.

ஒரு மாவட்டத்திற்கும், மற்ருெரு மாவட்டத்திற்கும் என்ன வேற்றுமை? நடுவில் ஒரு எல்லைக்கல் இருந்து இரண்டு மாவட்டத்தையும் பிரிக்கின்றது. அதுபோல் மனிதனுக்கும் விலங்குக்கும் இடையில் இட்ட எல்லைக் கல் கடவுள் நினைவு. கடவுள் உணர்வு இல்லையானுல், அவன் எத்துணை அறிஞுயினும் விலங்கே.

"கண்ணுவா ரேனுமுனைக் கைதொழா ராயின் அந்த
மண்ணுவார் நட்பை மதியேன் பராபரமே"

திருவொற்றியூரிலே நெல்லிக்கா பண்டாரத் தெருவில் ஒரு மகான் இருந்தார். மாலையிலே ஒற்றித் தியாகப் பெருமானை வணங்கும்பொருட்டு மக்கள் போகும்போது அம்மகான், "குதிரை போகின்றது", "எருமை போகின்றது", "நாய் போகின்றது", "ஆடு போகின்றது", "புலி போகின்றது", "நரி போகின்றது", "பூனை போகின்றது", "பெருச்சாளி போகின்றது" என்று கூறுவாராம். இராமலிங்க அடிகளார் போனுல் மட்டும் "மனிதன் போகின்றுன்" என்பாராம். ஆகவே மனிதப் பண்புடையவனே உண்மை மனிதன்.

* * *

மேலை நாட்டில், ஒரு ஆன்ருேர், பகலில் விளக்கை யேந்திக்கொண்டு, தெருவில் போகின்றவரை, அவ்விளக்கைக்

கொண்டு உற்று உற்றுப் பார்த்துத் திரிந்தாராம். வீதியில் போகின்றவர்கள் இவருக்கென்ன பயித்தியமா? பட்டப் பகலில் விளக்கை ஏந்திக்கொண்டு, போகின்றவனையும், வருகின்றவனையும் உற்று உற்றுப் பார்க்கின்றாரே? இதன் கருத்து என்ன? என்று கூறிப் பரிகசித்தனர்; சிலர் சிரித்தனர். சிலர் இகழ்ந்தனர். சிலர் "ஓய் இது என்ன வேலை?" என்று வினவினார்கள்.

"ஐயா! வேறு ஒன்றுமில்லை. மனிதர் யாராவது இருக்கின்றாரா? என்று ஆராய்ந்து பார்க்கின்றேன்" என்றார். ஆகவே எல்லோரையும் மனிதராக அங்கு கருதவில்லை.

* * *

அப்பரடிகளும் உலகத்தை நோக்கி,

"மனிதர்காளிங்கே வம்மொன்று சொல்லுகேன்
கனிதந் தாற்கனி யுண்ணவும் வல்லிரே
புனிதன் பொற்கழல் ஈசனெனுங்கனி
இனிது சாலவு மேசற் றவர்கட்கே"

என்று பாடி மனிதர்களை யழைக்கின்றார்.

ஆகவே, நாம் மனிதர்களாக ஆகவேண்டும். பொன்னையும் பொருளையும் வீட்டையும் மாட்டையும் நிலபுலன்களையும் பட்டத்தையும் பதவியையுமே நினைத்து நினைத்து நெஞ்சு புண்ணாகி மடிந்துவிடக் கூடாது.

முதலில், குறிப்பிட்ட நேரங்களில் இறைவனை நினைக்க வேண்டும். பின்னர் நாள் செல்லச் செல்ல, நல்ல சாதனையால் இடையறாது இறைவனை நினைக்க வேண்டும்.

"இறைவனே! உன்னை மறந்தால் இறந்து போவேன்" என்கின்றார் அப்பர். இறைவன் நினைப்பவர்களுடைய உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டு எழுந்தருளுவான்.

ஒரு மந்திரி, வைஸ்ராய், அல்லது ஒரு கலெக்டர் நம்முடைய வீட்டிற்கு வந்து சில நிமிஷம் இருந்து சென்றால் அதனைப் பெருமையாக நினைக்கின்றோம். இறைவன் நமது உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டு உறைவானாயின்

அதைவிடப் பெருமை வேறு ஒன்று இருக்கமுடியுமா? நன்கு சிந்தியுங்கள்,

பனைக்கை மும்மத வேழ முரித்தவன்
நினைப்பவர் மனங் கோயிலாக் கொண்டவன்
அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனைத்
தினைத்தனைப் பொழுதும் மறந்துய்வனோ.

இறைவனைத் தூய சிந்தையுடன் நினைக்கவேண்டும். "ஆபாதனேனும் நாளும் நினைவது பெறவேணும்" என்று வரங் கேட்கின்றார் அருணகிரிநாதர். ஆகவே, மனிதர்களாகிய நாம் நினைக்கவேண்டிய பொருளாகிய நிமலனை, இடையறாது நினைத்துப் பிறவிப் பயனைப் பெறுவோமாக.

## 65 அந்தரங்க பக்தி

மதுரை தமிழகத்திற்கு நடுநாயகமானது. இதயம் போன்றது. துவாதசாந்தத்தலம். அத்தலத்தில் **சுகுமார** பாண்டியன் என்பான் அரசுபுரிந்து வந்தான். அவன் ஆட்சியிலும் மாட்சியிலும் சிறந்தவன். குடிகளைத் தாய்போல் கருணையுடன் பாதுகாத்து வந்தான். அவனுடைய பரிஜனங்கள் எல்லோருமே நற்குண சீலர்களாய் இருந்தார்கள்.

அவனுடைய மனைவி சிறந்த முருகபக்தியுடையவள்; நெற்றி நிறையத் திருநீறு பூசி மஞ்சள் குங்குமம் தரித்து உமையம்மையாரைப் போலே விளங்குவாள். ஒவ்வொரு நாளும் காலையில் பல்லக்கில் திருப்பரங்குன்றம் போய் முருகவேளைப் பக்தி பரவசத்துடன் வழிபடுவாள். எல்லையில்லாத அன்பு பூண்டு, இடையறாது "முருகா!" "முருகா!" என்று உள்ளம் உருகி ஓதுவாள். ஏழைகட்குத் தானதருமஞ் செய்வாள். கார்த்திகை, சஷ்டி, மாதாந்த வெள்ளி முதலிய நாள்களில் உபவாசமிருந்து ஜபதபங்கள் செய்வாள். ஒவ்வொரு நாளும் மாலையில் ஸ்ரீமீனாட்சி சுந்தரேஸ்வரர் கோயில் சென்று வழிபடுவாள்.

அம் மாதரசியின் கணவனுகிய பாண்டியன் இதற்கு நேர் மாருக இருந்தான். கோயிலுக்குப் போகமாட்டான். முருகா என்று மறந்தும் கூறமாட்டான். அரசியலை நன்ருக நடத்துவானே யன்றி அருளியலைக் கடைப்பிடித்தானில்லை.

மனைவி கணவனை நோக்கி, "அரசே! நமது உயிர்க்குயிராக விளங்கும் முருகனைத் தாங்கள் மறந்திருக்கலாமா? இன்று திருக்கார்த்திகை. திருப்பரங்குன்றத்திற்கு வாருங்கள். கலியுக வரதனைக் கண்குளிரக் கண்டு மகிழலாம்" என்ருள்.

மன்னன், "பெண்மணியே! நீ போய் தெரிசனை செய்து விட்டு வருவாயாக. உனக்கு நான் தடை கூறவில்லை. ஆனல் என்னை அழைக்காதே!" என்று கூறி மறுத்துவிட்டான்.

இவ்வாறு பன்முறை மனைவி வேண்டியும் அரசன் ஆலயம் போய் ஆறுமுகக் கடவுளைச் சேவிக்க இணங்கினனில்லை.

அரசமாதேவிக்கு அதனல் அளவற்ற கவலை. கணவனுக்குக் கடவுள் பக்தியுண்டாக வேண்டும் என்று கருதினள். "முருகா! மூவர் முதல்வா! என் கணவனுரை நீர்தான் தடுத்தாட்கொள்ள வேண்டும். அவர் வாக்கிலிருந்து முருகா என்ற சொல் வந்தால் உமக்கு ஆயிரம் பால் குடம் அபிஷேகஞ் செய்வேன். இலட்சதீபம் இட்டு விழாக் கொண்டாடுவேன்" என்றெல்லாம் வேண்டுதல் செய்து கொண்டாள்.

ஒருநாள் இரவு, மன்னனும் மன்னன் மனைவியும் பள்ளியறையில் பஞ்சணையில் படுத்திருந்தார்கள். மன்னன் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். பாண்டிமாதேவி விழித்தவண்ணம் ஏதோ சிந்தித்துக் கொண்டிருந்தாள். மன்னன் பயங்கரமான கனவு கண்டு, அலறி 'முருகா! முருகா!' என்று வாய் பிதற்றிவிட்டான். இதனைக் கேட்ட அரசிக்கு அளவற்ற மகிழ்ச்சி. "தூக்கத்திலாவது நம் கணவன் முருகா! என்ருரே. இதுபோதும். நம் தவம் பலித்துவிட்டது" என்று எண்ணி ஆறுதல் அடைந்தாள்.

விடியற்காலை எழுந்தாள். முதல் அமைச்சனை விளித்து "மந்திரி! நான் ஒரு பொருளை நாடினேன். அது சித்தியா

யிற்று: நமது மதுரையில் உள்ள சகல தேவாலயங்களிலும் அபிஷேக ஆராதனை நிகழட்டும். மீனாட்சி கோயிலிலும், திருப்பரங்குன்றம் ஆலயத்திலும் லட்சதீபம் இட்டு வழிபாடு சிறப்பாகச் செய்யுமாறு ஏற்பாடு செய். நகரத்தை அலங் கரிக்கச் செய்'' என்று கட்டளையிட்டாள். அமைச்சன் அவ்வாறே ஏற்பாடு செய்தான்.

மன்னன் விடிந்தபின் எழுந்து நீராடி சபாமண்டபத் திற்கு வந்தான். ஊரெங்கும் வாழை கமுகுகள் நாட்டி, பூமாலைகள் தொங்கவிட்டு, மாவிலைத் தோரணம் அலங்கரித் திருப்பதைக் கண்டான். நகரெங்கும், மேளம், தாளம், பஜனை முதலியன முழங்குவதைக் கேட்டான்.

''மந்திரி! இன்றைக்கு என்ன விசேடம்? எங்கு பார்த் தாலும் அலங்காரம்; பெருங் கொண்டாட்டம்; காரணம் யாது?'' என்று வினவினான்.

மந்திரி, ''மன்னர் பெருமானே! இன்றைக்கு விசேடம் ஒன்றுமில்லை. அரசமாதேவியாருடைய கட்டளைப்படி இவைகள் நிகழுகின்றன.''

அரசன் அருகில் இருக்கும் தேவியை நோக்கி, ''பெண்ணே! இன்று என்ன விசேடம்? இந்தக் கொண்டாட் டம் எதன்பொருட்டு நிகழ்கின்றது?''

''அரசே! என் நீண்டகாலத்து எண்ணம் நிறைவேறியது. அதனால் இது நிகழ்கின்றது.''

''உனது எண்ணம் யாது? அது எப்போது, எவ்வாறு நிறைவேறியது?''

''பெருமானே! தங்கள் திருவாக்கிலிருந்து ''முருகா'' என்ற சொல் வராதா? என்று எதிர்பார்த்தேன். அதற்காக ஆண்டவனிடம் வேண்டுதல் செய்தேன். அது பலித்து விட்டது.''

''பெண்ணே! என் வாயிலிருந்து அந்த நாமம் வெளிப் பட்டதா?''

"ஆம். இரவு உறங்கும்போது தாங்கள் ஏதோ பயங் கரமான கனுக்கண்டு, 'முருகா முருகா' என்று வாய் பிதற் றினீர்கள். அதுதான் என் தவம். என் தவம் நிறைவேறி யது. அதற்காகவே எங்கும் அலங்கரித்து, ஆராதனையும் அன்னதானமும் நிகழ்த்துகின்றேன்.

மன்னன் கேட்டு அப்படியே திகைத்து நின்முன். "ஆ முருகா! நான் உன்னை உள்ளத்தில் ஒரு கணமும் மறவாது தியானித்து வந்தேன். என்னுடைய முருக பக்தி உலகம் அறியக்கூடாது என்று கருதி அந்தரங்க பக்தி செய்தேன். இப்போது என் பக்தி வெளிப்பட்டுவிட்டதே. ஞான பண்டிதா? கருணைக் கடலே; பக்தி வெளிப்பட்டு என்னைப் பக்தன் என்று உலகம் அறிந்ததே. ஆ!" என்று கீழே வீழ்ந் தார். அவர் கரங்கள் குவிந்தன. கண்ணீர் சிந்தியது. அவர் சிரத்தில் இருந்து ஒரு ஜோதி புறப்பட்டு விண்வழி சென்று மறைந்தது. ஆவி பிரிந்தது.

இத்தகைய அந்தரங்க பக்திசெய்யும் உத்தமர்களை நாம் காண்பது அரிது. **"உளத்துள் அன்பினர் உறைவிடம் அறி கிலன்"** என்கின்முர் அருணகிரிநாதர். அந்தரங்க பக்தர்கள் நீறுபூத்த நெருப்புப் போல் இருப்பார்கள்.

காலாந்தரத்தில் பாண்டிமாதேவியும் பரமனடி சார்ந் தாள்.

## 66. பயபக்தி

கடவுளிடத்திலே, தொடக்கத்திலே அச்சம் இருக்க வேண்டும். ஆண்டவன் அகிலாண்ட நாயகன்; சர்வ வல்ல மைகளும் உடையவன்; நம்முடைய தலைவன். நாம் மன வாக்குக் காயங்களால் புரியும் குற்றங் குறை குணங்கள் எல்லாவற்றையும் அறிகின்முன். ஆகவே கடவுளிடத்தில் ஒவ்வொருவருக்கும் அச்சம் இருக்கவேண்டும்.

ஒரு நூறுரூபாய் சம்பளம் தருகின்ற முதலாளியிடம் தொழிலாளிக்குஅச்சம் இருக்கின்றது. ஆண்டவன் நம்மிடம் ஒரு பயனும் கருதாமலேயே இந்த உடம்பு, உலகம், கதிர்,

மதி, கனல், புனல், காற்று ஆகியவற்றைத் தந்துள்ளார். அளவில்லாத ஆற்றலுடைய இறைவன் எங்கே? ஒன்றுக்கும் பற்றாத நாம் எங்கே?

அப்பரமபதியினிடம், பயந்து நடக்கவேண்டும். அதற்கு அப்பால், அன்பு தோன்றும். இறைவனுடைய எல்லை யில்லாத கருணையை நினைத்து நினைத்து உள்ளம் உருகி, அன்பு செய்யவேண்டும்.

இறைவன் நம்பொருட்டு, மலசலம் நிறைந்த உடம்பைப் பொற்கோயிலாக நினைத்து இதில் உறைகின்றான்.

"புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்து
என்பெலாம் உருக்கி எளியையா யாண்ட
ஈசனே மாசிலா மணியே"

என்கின்ற திருவாசகத்தை உற்றுநோக்குக. குளிக்காமல் இருந்தும், ஆடுமாடுகள் உடம்பு நாறுவதில்லை. நாம் அன்றாடம் குளித்தும், இந்த உடம்பு நாறுகின்றது. ஆடுமாடுகளின் மலசலம் அதிகம் நாறுவதில்லை. மலஞ்சோரும் ஒன்பது வாயில் குடிலையாகிய, இப் புலால் உடம்பில், எம் பெருமான் நம்பொருட்டு எழுந்தருளி யிருக்கின்றான். அந்தக் கருணையை நினைத்து, அன்பு மேலிட வேண்டும்.

உலகில், குழந்தைகட்குத் தாய்தந்தையரிடம் தொடக்கத்தில் அச்சம் உண்டாகின்றது. ஏதாவது நாம் குற்றம் புரிந்தால் அப்பா அடிப்பார். அம்மா தண்டிப்பாள் என்று தான் எண்ணுகின்றன. வயது முதிர்ந்தபின் அம்மா அப்பா அடிப்பார்கள் என்ற அச்சம் ஏற்படுவதில்லை. தாய்தந்தையருக்கு முன் அச்சத்தால் அடங்கி யிருந்தவர், இப்போது அன்பினால் அடங்கியிருக்கின்றனர்.

இதுபோல் உயிர்களாகிய நாம், உயிர்க்குயிராகிய பரமபதியிடம், அச்சமும், அன்புங் கொண்டு உய்வுபெற வேண்டும்.

திருக்கோயில்களில் இரண்டு வகையான உபசாரங்கள் நடைபெறும்; ஒன்று ராஜோபசாரம். இது அச்சத்துடன்

புரிவது. மற்றொன்று தேவோபசாரம்: இது அன்புடன் புரிவது.

அச்சம், அன்பு என்ற இந்த இரண்டும், வடமொழியில் பயபக்தி எனப்படும்.

பயபக்தி ஒருவனுக்கு வந்து, உத்தமமான வழிபாடு புரிவானாயின், அதுவே முத்தியாக விளைந்துவிடும். நாள் செல்லச் செல்ல காயே கனியாவதுபோல், பக்தியே முத்தியாகின்றது. இந்த அரிய கருத்தை அருணகிரிப் பெருமான் கூறுகின்றார்.

"ஆனபயபக்தி வழிபாடுபெறு முத்தியது
வாக நிகழ்பக்தசன வாரக்காரனும்"

—திருவகுப்பு

# 67. பக்தி

யுகங்கள் நான்கு; கிருதயுகம், திரேதாயுகம், துவாபர யுகம், கலியுகம் என்பன.

கிருதயுகத்தில் ஞானத்தினால் முத்தி.

திரேதாயுகத்தில் தானத்தினால் முத்தி.

துவாபரயுகத்தில் யாகத்தினால் முத்தி.

கலியுகத்தில் பக்தியினால் முத்தி.

பக்தி என்பது வடமொழி. அன்பு என்பது தென்மொழி. கடவுள் பக்தி என்ற வலையில்தான் அகப்படுவார்.

"பத்தி வலையில் படுவோன் காண்க"—திருவாசகம்

அன்பெனும் பிடியுள் அகப்படு மலையே
அன்பெனுங் குடில்புகும் அரசே!
அன்பெனும் வலைக்குள் படுபரம் பொருளே
அன்பெனும் கரத்தமர் அமுதே
அன்பெனுங் கடத்துள் அடங்கிடுங் கடலே
அன்பெனும் உயிர் ஒளிர் அறிவே
அன்பெனும் அணுவுள் அமைந்தபே ரொளியே
அன்புருவாம் பர சிவமே.

அன்பு இல்லாத ஒருவன் மனிதன் ஆகமாட்டான். திருவள்ளுவர் அன்பிலாத ஒருவனைப்பிணம் என்றுகூடச் சொல்ல விரும்பவில்லை. பிணம் பலருக்குப் பணந் தரச்செய்து உதவுகின்றது. ஆதலால் அன்பில்லாத ஒருவனை என்புதோல் போர்த்த உடம்பு என்கிறார்.

அன்பின் வழிய துயிர்நிலை அன்பிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு.

இனி பக்திக்குச் செல்வம் குலம் ஆகிய இத்தகைய தடையில்லை.

தண்ணீர்ப்பந்தல் வைக்கவேண்டுமானால் செல்வம் வேண்டும். செல்வம் இன்றித் தொடங்கினால் இரண்டுநாள் கூட அத்தருமத்தை நடத்த முடியாது.

பக்தி, பரம தரித்திரர்களும் புரியலாம். மிக்க வறியவராகிய குசேலமுனிவர், பக்தி செய்து திருவருள் பெற்றார்.

தண்ணீர்ப் பந்தல் அமைக்கக் காலம் வேண்டும்.

ஐப்பசி மாதம் அடைமழை பொழியும்போது ஆற்றோரம் தண்ணீர்ப்பந்தல் வைத்து, "ஐயா! நல்ல மோர் பருகுங்கள்" என்றால், எவன் பருகுவான். "அட மூடனே! உனக்கு அறிவில்லையா, இந்த மழையிலா மோர் குடிப்பது?" என்பான்.

ஆதலால், தண்ணீர்ப்பந்தல் கோடைக் காலத்தில் வைக்க வேண்டும். எனவே தண்ணீர்ப்பந்தல் வைக்கக் காலம் பார்க்க வேண்டும்.

பக்தி செய்வதற்குக் காலம் தடை புரியாது. மழைக் காலம், வெய்யிற்காலம், பனிக்காலம், இரவு, பகல், காலை, மாலை எந்நேரத்திலும் பக்தி செய்யலாம்.

இருக்கினும் நிற்கும்போதும் இரவு கண் துயிலும் போதும்
பொருக்கென நடக்கும்போதும் பொருந்தியூண் துய்க்கும் போதும்
முருக்கிதழ் கனிவா யாரை முயங்கிநெஞ் சழியும் போதும்
திருக்களா வுடைய நம்பா சிந்தையுன் பாலதாமே.

N. Latha



மேலும் தண்ணீர்ப்பந்தர் இடம் பார்த்து வைக்க வேண்டும். ஒரு குன்றின்மீது வைத்துவிட்டு, சாலையில் ஒருவன் நின்று, வெய்யிலில் நடந்து களைத்துப்போன ஒருவனைப் பார்த்து, "ஐயா நீர்மோர் பானகம் வேண்டுமா?" என்றான்.

பிரயாணி "ஆம்! நாவறட்சி பொறுக்க முடியவில்லை. நீர் மோர் பானகம் எங்கே? கொஞ்சம் கொடுத்து, என் உயிரைக் காத்து உதவும்" என்றான்.

"ஐயா! அதோ அந்த மலைமீது வைத்துள்ளேன்; வாரும்" என்றான்.

"அட பாவீ! பத்துபேர் நடக்கின்ற சாலையில் வைக்கக் கூடாதா? ஐயோ! அந்த மலைமீது ஏறுவதற்குள் என் உயிர் பிரிந்து விடுமே? நீர் மோரே வேண்டாம்" என்றான்.

ஆனபடியால், இடம் நோக்கி அமைக்கவேண்டும் தண்ணீர்ப்பந்தர்.

இங்கே பக்திக்கு அந்தத் தடையும் இல்லை. எந்த இடத்திலும் பக்தி செய்யலாம். பள்ளம், மேடு, காடு, வீடு எங்கிருந்தும் பக்தி செய்யலாம்.

பக்தியில்லாமல், வெறும் துறவு பூண்டு காட்டிலிருப்பினும், காற்றைப் பருகினும், கந்தை யுடுத்து ஓட்டை யெடுப்பினும் உய்வு பெறமாட்டார்கள்.

பக்தியுடையவர்கள், தமது தரும பத்தினியுடன் வீட்டிலிருப்பினும் மெய்ஞ்ஞான வீட்டை யடைவார்கள்.

பட்டினத்துச் சுவாமிகள் கூறுகின்றார்.

காடே திரிந்தென்ன ? காற்றே புசித்தென்ன ! கந்தைசுற்றி
ஓடே எடுத்தென்ன ? உள்ளன்பிலாதவர் ஓங்கு விண்ணோர்
நாடே யிடைமரு தீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்
வீடே யிருப்பினும் மெய்ஞ்ஞான வீட்டின்பம் மேவுவரே.

இனி, பக்திக்குக் குலம் முதலிய தடையும் இல்லை. உயர் குலத்தினர் தான் பக்தி செய்யவேண்டும், இழிகுலத்தார் பக்தி செய்தல் கூடாது என்ற நியதியில்லை.

"இறைவனிடம் பக்தியில்லாதவர், பெருங்குலத்திற் பிறந்து, பெருஞ் செல்வராகி, எனக்கு மண்ணுலக வாழ்வும், விண்ணுலகரசுந் தந்து உதவி புரியினும், அவரை நான் ஒரு பொருளாக் மதிக்கமாட்டேன்; சிவபெருமானுடைய திருவடியில் அன்பு வைத்தவர், அங்கம் அழுகிய தொழுநோயராயினும் பசுவை யறுத்துண்ணும் புலையர் குலத்தில் பிறந்தாரேனும், அவர்கள் எமது வழிபடு கடவுளர் ஆவார்" என்கின்றார் திருநாவுக்கரசு சுவாமிகள்.

சங்கநிதி பதுமநிதி இரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவரேனும்
மங்குவார் அவர் செல்வம் மதிப்போ மல்லோம்
மாதேவர்க் கேகாந்த ரல்லாராகில்;
அங்கமெலாம் குறைந்தழுகு தொழு நோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக் கரந்தார்க் கன்பராகில்
அவர்கண்டீர் நாம்வணங்குங் கடவுளாரே.

அன்பைப் பெற்றுவிட்டால், அதுவே எல்லாவற்றையும் பெற்றுவிட்டதாகும்.

அன்பை யுடையார், என்பையும் பிறருக்கு வழங்குவார்கள்.

அன்பு என்ற பக்தி, சித்தியையும், முத்தியையுந் தரும். பரமனும், பக்தருக்கு வாய்த்தவராகத் திகழ்கின்றார்.

"பத்தி சித்தி காட்டி அத்தர் சித்தமீட்ட
பக்தருக்கு வாய்த்த பெருமாளே" —திருப்புகழ்

பக்தியினால் விளைந்த விளைவுகளைப் பற்றி ஆதிசங்கரர் வியந்து கூறுகின்றார்.

*(1)* மார்க்கத்தில் தேய்ந்த பழஞ் செருப்பு சிவபெருமானுடைய புருவ நடுவில் சென்றது.

*(2)* கொப்புளித்து உமிழ்ந்த நீர் அப் பரமனுக்குச் சிறந்த அபிஷேக நீராகியது.

(8) சிறிது கடித்து எச்சில் செய்த புலால் துண்டு உயர்ந்த உணவாக ஆயிற்று.

(4) வேடன் பக்தசிரோன்மணியாக ஆனுன்.

ஆகவே பக்தி எதைத்தான் செய்யாது? எல்லா உயர்வையுந் தரும்.

மார்க்கா வர்த்தித பாதுகா பசுபதே ரங்கஸ்ய
கூர்ச்சாயதே
கண்டுஷார்பு நிஷேசனம் புரரிபோர்
திவ்யாபிஷேகாயதே
கிஞ்சித் பக்ஷித மாம்ஸ சேஷ கபளம் நவ்யாப
ஹாராயதே
பக்தி: கிம் நகரோத்யஹோ வநசரோ
பக்தாவதம்சாயதே.
—சிவானந்தலஹரீ.

பக்தியுடன், பகவானுடைய திருநாமங்களை ஒருமுறை கூறினும், வினைகள் வெந்து நீருகும். சகல நலன்களும் உண்டாகும்.

நாரதர் ஒரு சமயம், வைகுண்டம் சென்ருர். விஷ்ணுமூர்த்தியை வணங்கினுர், "சுவாமீ! உலகிலே உள்ள மனிதர்கட்கு, உன் திருவடியையடைய எளிய வழி யாது?" என்று வினவினுர்.

திருமால், "நாரதா! நம்மை யடைவதற்குரிய நெறிகளில் மிக எளிமையானது பக்தி நெறியாகும்" என்ருர்.

நாரதர் "ஐயனே! அந்தப் பக்தி நெறி நின்ற பக்தர்களில் தலைசிறந்த பக்தன் யாவன்?" என்று வினவினுர். நாரதருடைய மனதில் தன்னைக் கூறுவார் என்ற நினைவு இருந்தது. தான் பெரிய பக்தன் என்ற ஒரு செருக்கும் சிறிது இருந்தது. எல்லாம் உணர்ந்த பகவானுக்கு இது தெரியுந்தானே.

"நாரதா! பூவுலகில் குப்பம் என்ற சிற்றூரிலே, பொன்னன் என்ற ஒரு குடியானவன் இருக்கின்ருன். அவன்தான் எனது பெரிய பக்தன்" என்ருர்.

இதனைக் கேட்ட நாரதருக்குப் பெரிய வியப்பு உண்டாயிற்று. நாராயணரைத் தொழுதார். "சுவாமீ! அடியேன்,

உமது திருநாமத்தை இடையருது பாராயணம் புரிபவன்; என்னைக் கூருமல் எங்கோ இனந் தெரியாத ஒருவனைப் பெரிய பக்தன் என்கின்றீரே, இது பொருந்துமா?'' என்று கேட்டார்.

''நாரதா! நீ சென்று, அவனுடைய பக்தியை நேரில் அறிந்துகொள்'' என்ருர் நாராயணர்.

நாரதர் குப்பம் போஞர். விடியற் காலையிலிருந்தே பொன்னனைக் கவனித்தார். அவன் ஏர்க்காலை எடுத்துத் தோள்மீது வைக்கும்போது ''அரிநாராயணு'' என்ருன். பின்னர் உழுவதும், நாற்று நடுவதும், களை பறிப்பதுமாகப் பல அலுவல்களில் ஈடுபட்டான். மாலையில் வீடு வந்து ஏர்க் காலை வைக்கும்போது, ''அரிநாராயணு'' என்ருன். உண்டு உறங்கிஞன்.

நாரதருக்கு அடக்கமுடியாத சீற்றம். ஓடிஞர்; வைகுண்ட வாசனைக் கண்டார். ''பெருமானே! நான் லட்சாதி லட்சம் முறை நாராயண மந்திரம் கூறுவேன். அந்தப் பொன்னன் ஏரை எடுக்கும்போது ஒருமுறை, அதனைக் கீழே எறியும்போது ஒருமுறை ஆக இருமுறைதான் நாராயணு என்று கூறிஞன். தேவரீர் அவனைப் பெரிய பக்தன் என் நீரே! இது என்ன முறை?'' என்று வினவிஞர். அவர் குரலில் ஒரு பதட்டம் இருந்தது.

''நாரதா! சற்று அவசரப்படாதே. அந்தப் பொன்னனுக்கு அதிக வேலையா?''

''ஆம் சுவாமீ!''

''அத்தனை அலுவல்களுக்கு இடையே என்னை இருமுறை மறவாமல் கூறிஞை?''

''ஆம் இருமுறை மட்டும் கூறிஞன்''.

''நாரதா! இன்று உனக்கு என்ன வேலை?''

''பொன்னன் எத்தனை முறை, தங்கள் திருநாமம் கூறுகின்ருன் என்பதைக் கவனித்துக்கொண்டிருந்தேன்''.

''நாரதா! இன்று நீ எத்தனை முறை நாமத்தினை நவின்ருய்?''

"ஒரு முறைகூடக் கூறவில்லை."

"ஓ! ஒருமுறையும் உரைக்கவில்லையா? ஏன்?"

"அவனையே, உற்றுக் கவனித்துக் கொண்டிருந்து விட்டேன்."

"நீ ஒரு வேலையை மேற்கொண்டு, அடியுடன் என்னை மறந்துவிட்டனையே? அவன் அத்தனை வேலைகளுக்கு இடையே என்னை மறவாது கூறினனே, அவன் பெரிய பக்தன்தானே" என்று விஷ்ணுமூர்த்தி விளக்கிக் கூறினர்.

நாரதர் தலைகுனிந்து நின்ருர். இதனுல் குடும்ப விவகாரங்களில் ஈடுபட்டவர்கள், இறைவனை உள்ளன்புடன் நினைத்து, அவரது திருப்பேரைக் காதலாகிக் கசிந்துகூறி அருள் நூல்களைப் பாராயணம் புரியவேண்டும்.

அந்த அன்பையும், ஆண்டவனிடம் வரமாக யாசித்துப் பெறவேண்டும்.

"இறவாத இன்ப அன்பு"

வேண்டினர் காரைக்காலம்மையார்.

வீரவாகுதேவர் முருகரிடம் வரம் கேட்கின்ருர்:

கோல நீடிய நிதிபதி வாழ்க்கையும் குறியேன்
மேலை இந்திரன் அரசினைக் கனவிலும் வெஃகேன்
மாலயன்பெறு பதத்தையும் பொருளென மதியேன்
சால நின்பதத் தன்பையே வேண்டுவன் தமியேன்.
அந்த நல்வர முத்தியின் அரியதொன் றதனைச்
சிந்தை செய்திடு தவத்தரும் பெறுகிலர் சிறியேன்
உய்ந்திடும் வகை அருள்செய வேண்டும்
என்றுரைப்ப
எந்தை கந்தவேள் உனக்கது புரிந்தனம் என்ருன்.

ஆதலால் பெறுதற்கரிய பேறு பக்தியே யாகும்.

"பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும்
வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி"

மணிவாசகரைச் சிவபெருமான் ஆட்கொண்டருளினர். எனவே பக்திநெறி வளர்க, பக்தர்கள் வாழ்க.

# 68. கந்தர் அநுபூதி

உலகம் உய்ய அவதரித்தவர் அருணகிரிநாதர். அவர் முருகப்பெருமான் ஒருவரையே பாடும் நியமம் பூண்டவர். "கற்புறு சிந்தை மாதர் கணவனையன்றி வேறோர் இற்புறத் தவரை நாடார்" என்பது தாயுமானர் திருவாக்கு. அப் பரமபதிவிரதா தருமத்தின்படி நின்ற அருணகிரிநாதர், நாம் உய்யும் பொருட்டு திருப்புகழ், திருவகுப்பு, கந்தர் அந்தாதி, கந்தர் அலங்காரம், கந்தர் அநுபூதி, வேல்மயில் விருத்தங்கள் என்ற ஞான அருள் நூல்களைப் பாடி நமக்கு வழங்கியரு ளினர். இவற்றுள் கந்தர் அநுபூதி மந்திர நூல். சுருங்கிய தும் மகத்துவ மிகுந்ததும் ஆகும். நமது உடம்பில் ஆறு ஆதாரங்கள் உண்டு. அவை மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை. இந்த ஆறு ஆதா ரங்களில் மலர்ந்துள்ள மலர் இதழ்களில், அகர முதல் க்ஷக ரம் முடிவாக ஐம்பத்தொரு அட்சரங்கள் உள.

மூலாதாரத்தில் 4, சுவாதிஷ்டானத்தில் 6, மணிபூரகத் தில் 10, அநாகதத்தில் 12, விசுத்தியில் 16, ஆக்ஞையில் 2, அதற்குமேல் 1, ஆக 51. இதை 'அகரமுதலென உரைசெய் ஐம்பத்தொரக்ஷரமும்' என்கின்ற திருப்புகழாலும் அறிக. இந்த மாத்ருகா மந்திரங்களே அநுபூதியின் ஐம்பத்தொரு பாடல்கள் என வுணர்க. இந்தக் கந்தர் அநுபூதியில், அருண கிரிநாதர் தமது அனுபவத்தை, நிரம்பவும் கூறியிருக் கின்றார். மெய்ப்பொருள் என்ற அருமையான திருமொழியை நான்கு இடத்தில் எடுத்துக் கையாண்டிருக்கின்றார்.

"அமரும் பதிகேள் அகமாம் எனும் இப்
பிமரம் கெடமெய்ப் பொருள் பேசியவா"

—8-வது பாடல்

"கூகா எனஎன் கிளை கூடியழப்
போகா வகைமெய்ப் பொருள் பேசியவா"

—11-வது பாடல்

"அரிதாகிய மெய்ப் பொருளுக் கடியேன்
உரிதா உபதேசம் உணர்த்தியவா"

—20-வது பாடல்

"கரவாகிய கல்வியுளார் கடைசென்
றிரவா வகைமெய்ப் பொருளீ குவையே"

—45-வது பாடல்

இனி மனதை விளித்து மூன்று பாடல்களில், அறவுரை பகர்கின்றார். இவை மூன்றும் மிகவும் இனிமையான உப தேசம். 7, 14, 37 எண்ணுள்ள பாடல்கள். ஏ மனமே! நீ வீணே கெடுகின்றாய். பிழைக்கும் வழி கூறுகின்றேன் கேள். வறியார்க்கு ஒளியாமல் கொடு. கொடுத்தோம், கொடுத்த உடைமை நம்முடையது, என்ற எண்ணம் வரக்கூடாது. உடைமை யாவும் முருகனுடையவை. உடம்பு, கரசரணாதி கள், மனம் முதலிய கருவி கரணங்கள் எல்லாம் அவன் தந்தவை; ஆதலால் ஏழைகட்குத் தரும்போது நான் தந்தேன் என்ற தற்செருக்கு தலைக்காட்டாமல், முருகனை நினை, மனமே! உன்னுடைய நீண்ட வேதனைகளை எல்லாம் நம் பரமபிதாவினுடைய வடிவேல் துகளாக்கிவிடும். ஆத லால் அந் நெடிய துன்பங்களைச் சுட்டுவிடு. வினைகளை எல் லாம் விட்டுவிடு.

கெடுவாய் மனனே கதிகேள் கரவாது
இடுவாய் வடிவேல் இறைதாள் நினைவாய்
சுடுவாய் நெடுவேதனை தூள்படவே
விடுவாய் விடுவாய் வினையா வையுமே.

—7-வது பாடல்

ஏ மனமே! உனக்கு உய்யும் வழி தெரியவில்லையே? நான் கூறுகின்றேன். கவனமாகக் கேட்டுக்கொள். அவாவினால் தான் எல்லாத் துன்பங்களும் விளைகின்றன.

இந்த அவா உள் புகுவதற்கு ஐந்து வழிகள் உண்டு. மெய் வாய் கண் நாசி செவி என்ற இந்தச் சாளரங்களின் வழியே, அவா என்ற கள்வன் உள்ளே புகுந்து, ஞான ரத்தி னத்தைக் களவாடுகின்றான். மனமே! ஐவாய் வழிச் செல்லும் அவாவை ஒழித்து உய்வாய்! அவாவற்றவுடனே, கையில் ஞானவேலைத் தாங்கிய முருகவேள் திருவடிக் கமலம் உனக் குக் கிடைக்கும். அதனால் உனக்கு உய்வு உண்டாகும்.

கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்று
உய்வாய் மனனே ஒழிவாய் ஒழிவாய்

மெய்வாய் விழி நாசியொடுஞ் செவியாம்
ஐவாய் வழிசெல் லும் அவாவினையே.

41-வது பாடல்

இந்தப் பாடல் பிறவிப் பிணிக்கு அரிய மருந்து.:

மற்றொன்று.-மனமே! உனக்குச் சினம் மூள்கின்றபோது அறிவு அறவே அற்றுப் போகும். ஒரே மயக்கந்தான் உண்டாகும். சீற்றம் மிகுதியாக வந்தவுடன் சொல்வன இன்ன செய்வன இன்ன என்று தெரியாத நிலை ஏற்படுகின்றது. ஆதலால் மலையே புரண்டு வந்தாலும், வானந் துளங்கி வீழினும் நிலை கலங்காதே. பொறுமையாக இரு. அப் பொறுமையான பூமியில் ஞானமாகிய மரம் முளைக்கும். அந்த ஞாலத் தருவில், அருள் பழுக்கும். இந்த அருள் பழத்தை அழிக்க ஒரு குரங்கு வரும். அதுதான் அகந்தை என்ற குரங்கு. நான் நான் என்ற அகந்தையை, ஞான வாளால் வெட்டி எறி. அங்ஙனம் அடியோடு அகந்தையைத் தொலைத்துவிட்டு, மலையைப் பிளந்த வேலாயுதக் கடவுளுக்குத் தொண்டனாக இரு. தொண்டனாகவேண்டும் என்ற ஆர்வம் மேலிடவேண்டும். அந்த விருப்பம் மிகுதியாக எழுதல் வேண்டும்.

கிரிவாய்! விடு விக்ரம வேலிறையோன்
பரிவாரம் எனும் பதம் மேவலையே
புரிவாய் மனனே பொறையாம் அறிவால்
அரிவாய் அடியோடும் அகந்தையையே.

37-வது பாடல்

இந்த மூன்று பாடல்களுக்கும் ஒரு அடையாளம் இட்டதுபோல், "வாய்" என்ற சொல்லை அமைந்திருக்கின்றார். 7 கெடுவாய், 14 கைவாய், 37 கிரிவாய்.

இம் மூன்று பாடல்களையும் அருணகிரியார் உள்ளபடியே தன்மனதை நோக்கித்தான் அறவுரை கூறிப் பாடினார் என்று எண்ணாதீர்கள். உலகில் உள்ள முந்நூறுகோடி மக்களையும் நோக்கிப் பாடியருளினார். ஆ! என்ன அரிய உபதேசம்?

சினந்திருக்கும் மனந்திருந்தி உய்யுமாறு, வள்ளல் அருணகிரிப் பெருமானார் உபதேசித்த அருள் திறத்தை மறக்கலாமா?

மேலும் கந்தரநுபூதியில் பலப்பல உண்மைகளை உரைத் திருக்கின்றார். இது சிந்தனைக்கும் வந்தனைக்கும் உரிய ஒரு நூல். அருணகிரியார் மிகவும் புகழ்ந்தோதிய திருத்தலங் கள் ஆறுபடை வீடுகள். அவருடைய அவதாரத் தலம் அருணை. அவருக்கு அருள் கிடைத்த இடம் வயலூர். ஜெப மாலை தந்த இடம் பழநி. இத்தகைய அரிய பெரிய தலங் களைப் பற்றிச் சுவாமிகள் இக் கந்தரநுபூதியில் குறிப்பிட வில்லை. திருச்செங்கோடு என்ற ஒரு தலத்தை மட்டுமே "நாகாசல" என்று குறிப்பிட்டுள்ளார்.

இனி திருமால் மருகன் என்று மிக அழகாகத் திருப்புகழி லும் கந்தர் அலங்காரத்திலும் திருவகுப்பிலும் பல இடங் களில் கூறியிருக்கின்றார். அந்த இடங்களில் இனிக்க இனிக்க நாராயணருடைய பெருமைகளைக் கூறியுள்ளார். மந்திர நூலாகிய இந்தக் கந்தரநுபூதியில் திருமால் மருகன் என்று ஒரு இடத்திலும் குறிப்பிடவில்லை. இது ஒரு சிந்தனைக்குரிய கருத்து. குமரகுருபரனாகிய குகனை குருமூர்த்தமாகக் கொண்டாலன்றி உண்மைப் பொருளை உணர முடியாது என்று, 13-வது பாடலில் திட்டவட்டமாகத் தெளிவாகத் தெரிவித்துவிட்டார்.

"முருகன் தனிவேல் முனிநங் குருவென்று
அருள்கொண்டு அறியார் அறியுந் தரமோ"

அப் பரம கருணாநிதியைக் குருவாகப் பெற்றுவிட்டால், எல்லாக் கலைகளையும், எல்லா நிலைகளையும் எளிதில் உணர லாம். தக்கவர் ஒருவர் நம் வீட்டுக்கு வரவேண்டுமாயின், அழைத்தால்தானே வருவார். அழையாதவர் இடத்துக்கு வரமாட்டார்கள். அது முறை அன்று. முருகா! என் அப் பனே! நீ எனக்குக் குருவாக வா! வந்து உபதேசம் செய். என்று நாம் எப்பொழுதாவது உள்ளம் உருகிக் கண்ணீர் பெருகி உண்மையன்புடன் அழைத்திருக்கின்றோமா? அவன் நமக்குக் குருவாக வரவேண்டும் என்ற அருள் தாகமே இன் னும் பலருக்கு வரவில்லை. தாகம் வந்தவனுக்குத் தண்ணீர் தரப்படும். விக்கினார்க்குத் தண்ணீர் விடப்படும். ஆதலால் இந்தப் புதுவருடத்திலிருந்தாவது முருகனைக் குருவாய் வரு

வாய் என்று அழைப்போமாக, நன்ருக அழைக்கத் தெரியாத நமக்கு, குகனைக் குருவாக அழைக்கும் அரிய பாடலைப் பாடித் தந்து அநுபூதியை அருணகிரிநாதர் முடிக்கின்ருர். அதுதான் இது.

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

## 69. மெய்கண்ட தேவர்

சைவம் என்பதற்குச் சிவ சம்பந்தமுடையது என்பது பொருள். சிவம் என்ருல் நன்மை எனப்படும். உலகமெல்லாம் நன்மையையே நாடுகின்றது. ஆகவே நன்மையையே நாடி, நன்மையையே கடைப்பிடித்து, நன்மையே வடிவாகிய பரம்பொருளை உள்ளும் புறமுங் கண்டு, நன்மை நினைந்து, நன்மை பேசி, நன்மை செய்வது சைவம் என்று அறிக. அங்ஙனம் இந்த நன்னெறி நின்ருர் சைவர். அத்தகைய சைவத்தின் நுட்பதிட்பங்களை எடுத்து முடிந்த முடிபாக விளக்குவது சைவ சித்தாந்தம். சைவ சித்தாந்த நூல்கள் பதினன்கு. அவற்றுள் தலைசிறந்தது **சிவஞான போதம்.** அதனை நமக்கு அருளிச்செய்த பரமாசாரியர் **மெய்கண்ட தேவர்.** அவரை நன்கு உணர்ந்து உன்னி உய்தல் வேண்டும். அது சைவர்கள் கடமையாகும். ஆதலின் மெய்கண்ட தேவருடைய இனிய வரலாற்றைப் படித்து உணர்ந்து உய்வு பெறுக.

### நாடு

தொண்டை நன்னாட்டிற்கும் சோழவள நாட்டிற்கும் இடையே உள்ள நாடு, நடு நாடு எனப்படும். அந்த நடு நாட்டில் ஒருபிரிவு **திருமுனைப்பாடி நாடு.** அது மிகவும் புனிதமான நாடு. சமயகுரவர்கள் நால்வர்களில் அப்பரும், சுந்தரரும் அவதரித்த நாடு அதுவே யாகும். என்ருல், அதன் பெருமையை யாரே அளக்கவல்லார்.

**நகரம்**

இத்தகைய திருமுனைப்பாடி நாட்டிலே **திருப்பெண்ணு கடம்** என்ற ஒரு திருத்தலம் உண்டு. அதற்குத் திருக் கடந்தை என்ற மற்ருெரு பேரும் உண்டு. அத்தலத்திலுள்ள திருக்கோயில் திருத்தூங்கானை மாடம் எனப்படும். **கலிக்கம்ப நாயனுர்** அவதரித்த திருத்தலம் அது. திருநாவுக் கரசு சுவாமிகளுக்கு அவர் வேண்டியபடி சூலக்குறியும் இட பக்குறியும் அவர் திருத்தோள்களில் பொறிக்கப்பெற்ற அருமையான தலம்.

**தந்தையார்**

இத்தகைய புண்ணியத்தலத்திலே வேளாளர் குலதிலக ராக **அச்சுத களப்பாளர்** என்பவர் தோன்றினுர். அவர் இளமையிலிருந்தே வளமையாக வாழ்ந்துவந்தார். அவர் கல்விப் பொருளும், செல்வப் பொருளும் ஒருங்கே யமையப் பெற்று, அடக்கம், பொறுமை, கருணை, அமைதி, சீலம் பண்பு முதலிய எல்லா நற்குணங்களையும் அணிகலமாகக் கொண்டு, சிவ பக்தியும் அடியாருறவும் பூண்டு ஒழுகி வந்தார்.

**மகப்பேறு வேண்டுதல்**

அவருக்கு எல்லாப் பேறுகளும் வாய்த்தும் மகப்பேறு வாய்க்கவில்லை. தாம் செய்யும் நல்லறங்களைத் தமக்குப் பின் தம்மைப்போல் கண்ணுங் கருத்துமாகச் செய்வதற்கு மதி மிக்க மைந்தனில்லையே என்று வருந்தினுர். பெண்ணுகடத் திற்கு அருகில் உள்ள திருத்துறையூர் சென்று தமது குல குருநாதராகிய சகலாகமபண்டிதர் என்று சிறப்புப்பேர் பூண்ட **அருணந்தித்தேவ**ரைத் தொழுது, மகப்பேறு இல் லாத குறையைத் தெரிவித்து, நன்மகன் பிறக்க ஆசீர் வதிக்குமாறு வேண்டினுர்.

அச்சுதகளப்பாளருடைய சொற்களைக் கேட்ட அருணந்தி சிவாச்சாரியார், "அன்பனே! வருந்தற்க, சிவ பெருமான் திருவருள் துணைபுரியும்" என்று கூறி, சிவ

மூர்த்தியை வழிபாடு செய்து, அதன் முடிவில் தேவாரத் திரு முறையை மலரிட்டுத் தூப தீபங்காட்டி வணங்கி, அதில் கயிறு சாத்துமாறு அச்சுதகளப்பாளருக்குக் கட்டளை யிட்டார். ஆசிரியர் கட்டளையைச் சிரமேற்கொண்ட அச்சுதகளப்பாளர், தேவாரத் திருமுறையின் முன் எட்டங் கங்களும் நிலத்தில் தோயும்படி வணங்கி, திரு ஐந் தெழுத்தை ஓதி, திருமுறையில் கயிறு சாத்தினர். அதில் அடியிற்கண்ட திருஞானசம்பந்தருடைய திருவெண்காட்டுப் பதிகத்தின் பாடல் வந்தது.

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினே டுள்ள நினை
வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண்டா ஒன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குள நீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந்
தீவினையே.

இதனைப் படித்து அருணந்தி சிவாசாரியார் அகமிக மகிழ்ந்தார். இத்திருப்பாடலின் பொருளை அவருக்குக் கூறி, பிள்ளைப்பேறு முதலிய வாய்க்கும் என்று இதில் கூறப்பட்டி ருக்கும் அருமையையும் அறிவித்து, திருவெண்காட்டின் பெருமையையும், முக்குளத்தில் முழுகி இறைவனை வழிபடும் முறைமையையும் கூறி திருவெண்காட்டிற்குப் போகும்படி பணித்தார்.

### திருவெண்காடு அடைதல்

அச்சுதகளப்பாளர் அவ்வண்ணமே தமது மனைவியாரு டன் திருவெண்காட்டிற்குச் சென்று, சோமகுளம், சூரிய குளம், அக்கினி குளம் என்ற மூன்று குளங்களிலும் முழுகி முக்கட் பெருமானை மனமொழி மெய்களால் வழிபட்டுச் சில காலம் அங்குத் தங்கியிருந்தார். காலந் தவருமல் ஆலயஞ் சென்று வழிபாடு புரிந்து வந்தார்.

### கனவில் அருள் பெறுதல்

ஒருநாள் இரவில் கண்ணுதற் பெருமான் அவர் கனவில் தோன்றி, "அன்பனே! உனக்கு இப்பிறவியிலே மகப்பேறு கிடைப்பது அரிதாயினும், திருவருள் மயமானதும், வினை

களை விலக்கி, விரும்பியதைத் தரவல்லதுமாகிய தேவாரத் திருப்பதிகத்தை முழுமனதுடன் நம்பிவந்து தவஞ் செய்கின்றாயாதலின், அத் தேவாரங்களைப் பாடிய திருஞான சம்பந்தனைப் போன்ற ஒரு திருமகனை உனக்குத் தந்தோம்; அவன் தேவாரத்தின் மெய்ப்பொருளை விளக்கி மெய்ந்நெறியாகிய சைவசித்தாந்தச் செந்நெறியையும் விளக்கி, உலகத்தை உய்விப்பான்'' என்று கூறி மறைந்தருளினார்.

அச்சுதகளப்பாளர் கனவு தெளிந்து எழுந்தார். கறைக் கண்டருடைய கருணையை நினைந்து காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கினார். இறைவனை இறைஞ்சினார். மனைவியாரிடம் தாம் கண்ட கனவின் தகைமையைக் கூறி, இருவரும் திருக் கோயில் சென்று முக்குளத்தில் நீராடி, திருவெண்காட்டுத் தேவதேவரைத் தணியாத அன்புடன் வழிபட்டார்கள்.

## மெய்கண்டார் அவதரித்தல்

இவ்வாறு இடையறாத சிவசிந்தையுடன் சிவ வழிபாடு செய்துவரும்போது, அம்மையார் கருக்கொண்டனர். அதை யறிந்த அச்சுதகளப்பாளர் உள்ளம் உவந்தார். திங்கள் தோறுஞ் செய்யுஞ் சடங்குகளைச் சிவாகம விதிப்படி செய்து வந்தார். தென்னாடுஞ் செந்தமிழுஞ் செய்த தவப்பயனால், சைவ சமயஞ் செழிக்குமாறு, கோள்கள் உயர்ந்துள்ள நாளில், ஒரு நன்மைந்தர் அவதரித்தருளினார். அச்சுதகளப் பாளர், அளவற்ற மகிழ்ச்சியுற்று, சிவாகமங்களில் கூறியபடி சடங்குகளைச் செய்து, பிறப்புக் குறிப்பு எழுதித் **திருவெண் காடர்** என்று பேர் சூட்டினார்.

பின்னர் சில தினங்களுக்குப் பின் இறைவருக்கும் இறைவியாருக்கும் திருமஞ்சனம் முதலியன செய்வித்து நெய் விளக்கு ஏற்றி வழிபட்டு, புதல்வருடன் தமது பிறப்பிட மாகிய திருப்பெண்ணாகடம் வந்து சேர்ந்தார். அவ்வூரிலுள் ளார்களும் அடுத்த வூரவர்களும் அச் செய்தியைக் கேட்டு அன்புடன் அச்சுதகளப்பாளர் திருமாளிகையை யடைந்து, பரமன் கருணையால் அவதரித்த பாலகரைப் பார்த்துப் பணிந்து மகிழ்ந்தார்கள்.

## திருவெண்ணெய்நல்லூர் அடைதல்

வளர்பிறைமதிபோல் திருவெண்காடர் வளர்ந்து வந்தார். திருப்பெண்ணுகடத்தை யடுத்துள்ள திருவெண்ணெய் நல்லூரில் அவருடைய தாய்மாமன் மிகப்பெருஞ் செல்வராக வாழ்ந்தார். அவர் வந்து தமது தங்கையின் தவப்புதல்வரைக் கண்டு கண்களித்து, அவரைத் தமது திருவெண்ணெய் நல்லூருக்கு அழைத்துக் கொண்டுபோய் இனிது வளர்த்து வந்தார்.

## குருவருள் பெறுதல்

திருவெண்காடருக்கு அப்போது இரண்டாவது ஆண்டு நிறைவெய்தியது. அவர் முற்பிறவியிலே சரியை கிரியை யோகம் ஞானம் என்ற நான்கு பாதங்களையும் முடிக்கப் பெற்ற சாமு சித்தராதலின், உமாமகேச்சுரரை உள்ளவாறு உணரும் மெய்யுணர்வு கைவரப் பெற்றவராய் விளங்கி யருளினர்.

திருக்கயிலாய மலையிலே சிவபெருமானுடைய திருக்கோயிலிலே காவல்பூண்ட திருநந்திதேவருடைய மரபில் சனற்குமாரமுனிவருடைய சீடர் **சத்தியஞான தெரிசனிகள்**. அவருடைய அருள்ஞானச் சீடர் **பரஞ்சோதிமாமுனிவர்**. இவர் பொதிய மலையில் எழுந்தருளியுள்ள அகத்திய மாமுனிவரைக் காணும்பொருட்டு விண்வழியே செல்லும்பொழுது, திருவெண்ணெய் நல்லூரில் திருவருட் செல்வச் செம்மலாய் அருளொளிய பிழம்பாய், தெய்வநலக் கருவூலமாய் விளங்கும் திருவெண்காடரைக் கண்டார். உடனே நிலத்தில் இறங்கி, அவருக்குச் சிவஞான போதத்தைக் கொடுத்தருளி, 'இதனைத் தமிழுலகம் உணர்ந்து உய்யும்பொருட்டு, ஏது, திருட்டாந்தங்களினல் விளங்க உரைக்கக் கடவாய்'' என்று திருவாய்மலர்ந்தருளித், தாம் தமது குருநாதராகிய சத்திய ஞான தெரிசனிகளிடம் கேட்டவாறே, சைவ சித்தாந்த மெய்ப்பொருளை உள்ளவாறு உணர்த்தி, **''மெய்கண்டார்''** என்ற தீட்சா நாமத்தையுஞ் சூட்டி, அவரை ஞானப்புதல்வராய்க் கொண்டு, ஆங்கு விடுத்து, விண்வழியே சென்றனர்.

## மெய்கண்டார் சிவஞானபோதத்தை யருளுதல்

மெய்கண்டதேவர் திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியுள்ள பொல்லாப் பிள்ளையார் திருமுன்பு நிட்டைகூடி, சிவஞானபோதத்தின் உட்பொருள்களை உள்ளவாறு தமது திருவுள்ளத்தில் உன்னி உணர்ந்து, தமிழுலகம் உய்யும் பொருட்டு, சிவஞானபோதத்தை, ஏது, திருட்டாந்தங்களினுல் உணர்த்தியருளினுர். மெய்ஞ்ஞான ஞாயிருக விளங்கும் மெய்கண்டதேவர் தம்மையடைந்த பக்குவமுற்ற மாணவர்கட்குச் சிவஞானபோதத்தை உரைத்து, அக இருளை நீக்கி, அறிவுச்சுடரை ஏற்றி, அருள் புரிந்துகொண்டிருந்தார்.

## அருணந்தி சிவாச்சாரியருக்கு அருளுதல்

மெய்கண்டதேவர் இவ்வாறு திருவெண்ணெய் நல்லூரிலே சிவஞான நூல்களின் பொருளை அறிவுறுத்திக்கொண்டிருந்ததைத் திருத்துறையூரில் வாழும் குலகுருவாகிய அருணந்தி சிவாசாரியார் கேள்வியுற்ருர். தமது மாணவர் புடைசூழத் திருவெண்ணெய் நல்லூரை யடைந்தார். திருவெண்ணெய் நல்லூரிலிருந்த அவருடைய மாணவர்களாகிய சைவப் பெருமக்கள் பலர் எதிர்கொண்டு அவரை வணங்கினுர்கள். இன்னுரை கூறினுர்கள். ஆனுல் அவருடைய மாணவருடைய புதல்வராகிய மெய்கண்டதேவர் மட்டும் அவர்களுடன் வரவில்லை. அருணந்தி சிவாசாரியார் அதனை யறிந்து மனம் அமைதியின்றிப் புழுங்கினுர். தாமே சென்று அவரைப் பார்க்க எண்ணி, மெய்கண்டதேவர் எழுந்தருளியுள்ள இடத்தை யடைந்தார். அந்த நேரத்தில் மெய்கண்டதேவர் தமது மாணவர்கட்கு ஆணவமல உண்மையைப்பற்றி உரைத்து விளக்கிக் கொண்டிருந்தார். அருணந்தி சிவாசாரியாரைக் கண்டு ஒன்றும் பேசவில்லை.

அருணந்தி சிவாசாரியாருக்கு மேலும் புழுக்கமேற்பட்டது. தாமே வந்தும் தம்மிடம் மெய்கண்டார் ஒன்றும் வரவேற்றுப் பேசாது வாளா இருத்தலைக் கண்டு உள்ளச் செருக்கோடு, "ஆணவமல வடிவம் எவ்வாறிருக்கும்?" என்று வினவினுர்.

மெய்கண்டதேவர் அந்த வினாவிற்கு விடையாக, தம் முன் செருக்குடன் நின்றுகொண்டிருந்த அருணந்தி சிவா சாரியாரையே தமது திருவிரலால் சுட்டிக்காட்டி, "இந்த வடிவாகத்தான் இருக்கும்" என்று அருளினார். அச்சொல்லே அருணந்தியாருடைய அறியாமையை யகற்றி மெய்யறிவை வழங்கியது. உடனே அவர் மெய்கண்டதேவராகிய இளம் பிள்ளைப் பெருமானுடைய திருவடி மலர்மீது வீழ்ந்து வணங்கி, "எந்தையே, அடியேனுக்கு மெய்ப்பொருளை உபதேசித்தருள வேண்டும்" என்று வேண்டினார்.

மெய்கண்டதேவர் தமது அடிமலர்மீது வீழ்ந்து வேண்டி நின்ற அருணந்தி சிவாசாரியருடைய முதிர்ந்த அறிவுநிலையை நோக்கி, அவருக்கு உண்மைப் பொருளை உபதேசித்து, தமது நாற்பத்தொன்பது மாணவர்கட்குள் முதன்மை பெற்றவ ராக ஆக்கிப் பேரருள் புரிந்தருளினார்.

அருணந்தி சிவாசாரியார் நாளும் குருநாதருக்குப் பணி விடைசெய்து, அவருடைய அமுதவாக்கைப் பருகி, அப் பெரிய மெய்ப்பொருளை விரிவாக விளக்கி முதனூலாகிய சிவஞானபோதத்திற்கு வழிநூலாகச் **சிவஞானசித்தியார்** என்ற அரிய நூலைச் செய்தருளினார். மேலும் **இருபா இருபஃது** என்ற நூலையும் செய்தருளினார்.

மெய்கண்டதேவர் சிலகாலம் சிவாநுபூதிச் செல்வராக நிட்டை கூறியிருந்து, ஐப்பசித் திங்களிலே சோதி நாளிலே எங்கும் நிறைந்த இறைவராம் சிவபெருமானுடன் இரண் டறக் கலந்து பேரின்பப் பெருவாழ்வு பெற்றனர்.

பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதனருள் மேவுநாள் எந்நாளோ.

## 70. சிற்றம்பல நாடிகள்

ஊழி பெயரினும் பெயராதது காழியம்பதி. அத் திருத் தலம் உகாந்தகாலப் பெருவெள்ளத்தில் தோணிபோல் மிதந் ததனால் தோணிபுரம் எனப் பேர் பெற்றது. இங்கு இறைவ ரும் தோணியப்பர் எனத் திருப்பெயர் கொண்டு விளங்குவர்.

திருஞானசம்பந்த சுவாமிகள் திரு அவதாரஞ் செய்த திருத் தலம் இது எனின், இதன் பெருமை அளவிடற்கரியதன்றோ?

இப் புண்ணியத் தலத்தில் அவதரித்தவர் **சிற்றம்பல நாடிகள்**. வேளாண் மரபில் உதித்தவர். பண்டைத் தவப் பயனால் பரிபக்குவமடைந்தவர்.

உமாபதி நாயனருடைய ஞானப் புதல்வராகிய அருணமச்சிவாயரிடம் உபதேசம் பெற்றவர் பஞ்சாக்கரதேசிகர்.

அருணமச்சிவாயர்பால் சிவஞான உபதேசம் பெற்ற மற்றொரு கிளை, சீகாழியிலே அமைந்திருந்தது. அப் பரம்பரையிலே வந்தவர் சிற்றம்பலநாடிகள்.

கங்கை மெய்கண்டார் என்பவரிடம் சிற்றம்பலநாடிகள் உபதேசம் பெற்றார். பதி பசு பாசம் என்ற முப் பொருள் உண்மையை நன்குணர்ந்து, இருவினையொப்பு மலபரிபாகம் சத்தினிபாதம் எய்திச் சிவயோக வாழ்வில் விளங்கினார். இடையறாத பேரன்பும், நடையறாத பெருந்துறவும் உடையவராய், இவர் பரமஞான குருமூர்த்தமாய்த் திகழ்ந்தார்.

சிற்றம்பல நாடிகள் 'சிவமே பொருள்' என்று உன்னி நிராசையுடையவராய், உயிர்கள் யாவும் உய்ய வேண்டும் என்ற பெருங் கருணையுடையவராய், எப்போதும் தியானானந்தத் திருவருட்சமாதியில் திளைத்து வீற்றிருப்பார்.

பலாப்பழத்தை நாடி ஈக்கள் வருவது போலவும், வள்ளலை நாடி வறியவர் வருவது போலவும், மலரை நாடி வண்டுகள் வருவது போலவும், பக்குவ மாணவர்கள் பலர் இவரை நாடி வந்தார்கள். இவர் திருவடிகளை வணங்கி, இவர் பால் அருளுபதேசம் பெற்றவர்கள் பலர்.

இத்தகைய மாணவர் குழாங்களுள் சிறந்தவர்கள் அறுபத்துமூன்று மாணாக்கராவார்கள். அவர்களுள் மிகச் சிறந்தவர்கள் சிவபுரம்-**தத்துவப்ரகாசர்**; சிவபுரம்-**ஞானப்ரகாசர்**; **கண்ணப்பர்** என்பவர்கள். இவர்கள் யாவரும் சிவாநுபூதிமான்களாகத் தமது ஞான குருமூர்த்திகளாகிய சிற்றம்பல நாடிகளுடைய திருவடியை விட்டகலாது இருந்து வந்தார்கள்.

மாயூரத்திற்கு அருகில் சித்தர்காடு என்ற ஒரு இடத்தில் சிவானந்த நிட்டையில் எழுந்தருளியிருந்து, சிவபூசை, குரு பூசை, மகேசுர பூசைகளேயும் நியதியாக விதிப்படி செய்து வந்தார்கள். அந்த இடம் ஒரு ஞானத் தனிச் செங்கோல் நடத்தும் ஞானராஜதானியாக அமைந்திருந்தது.

ஒருநாள் சிற்றம்பல நாடிகள், மாணவர் புடைசூழ அமுது செய்துகொண்டிருந்தார். தவசிப்பிள்ளை கை தவறுதலாக நெய்வைக்கும் இடத்தில், வேப்பெண்ணெய்யை வைத்துவிட்டனன்; நினைவு இன்றி நெய்யென்று கருதி வேப்பெண்ணெய்யை எடுத்து எல்லோருக்கும் படைத்தனன். சிற்றம்பல நாடிகள் முதல், மாணவர் யாவரும் சித்தத்தைச் சிவன்பால் வைத்தவர்கள். உண்பது பசிக்கேயன்றி ருசிக்கன்று. அதனுல் சிவசிந்தையுடன் உண்பாராயினுர்கள். அம் மாணவருள் கண்ணப்பர் மட்டும் "ஐயையோ! வேம்பு நெய் விட்டனனே? கசக்கின்றதே" என்றனர்.

அப்போது சிற்றம்பல நாடிகள் "அவிச்சுவையினும் கவிச்சுவை யினிது; கவிச்சுவையினும் தவச்சுவை யினிது; தவச்சுவை யுணர்ந்தோன், அவிச்சுவை யுணரான். நீ சிவயோகிகள் பந்தியிலிருந்து உண்ணும் தகுதிபெற்றுயில்லை. இனி இத்திருக்கூட்டத்துள் உனக்கு இடமில்லை. அகலுதி" என்று அருளிச்செய்தனர்.

கண்ணப்பர் எழுந்து, விண்ணருவியெனக் கண்ணருவி பெய்து, நடுநடுங்கி வாய் குழறி மெய் சிலிர்த்து, சிரமலர் மீது கரமலர் கூப்பி "பேயேன் பிழை பொறுத்தருளல் வேண்டும். நாயேன் நவை பொறுத்தருளல்வேண்டும். சேய் பிழையைத் தாய் பொறுத்தல் தகவன்றே? கருணைக்கடலே மன்னித்தருள வேண்டும்" என்று கூறிக் கதறி அழுதார்.

"மகனே! வருந்தற்க. மனம் பரிபக்குவம் அடையும் பொருட்டுச் சில காலம் வடநாடு சென்று யாத்திரை செய்து வா" என்று பணித்தருளினுர். கண்ணப்பர், குருதேவர் சரணமலர்மீது பன்முறை நன்முறையுடன் பணிந்து, புறங் காட்டாது பின்னுற நடந்து, தாய்ப்பசுவை விட்டுப் பிரியும்

இளங்கன்றைப்போல் வருந்தி, கண்ணீரால் நிலத்தை நனைத்துக்கொண்டு வடக்கு நோக்கிச் சென்றூர்.

சில திங்கள் கடந்தன. சிற்றம்பலநாடிகள் தம் மாணவர் குழாத்துடன் மகாசமாதி யடையத் திருவுளங்கொண்டார். அன்று சித்திரை மாதம், திருவோண நட்சத்திரம். மன்னவனை விளித்தார். ''எனக்கும் என் மாணவர் அறுபதுபேர்கட்கும் சமாதிக்குழி சமைப்பாய்'' என்று பணித்தருளினூர். அரசன் திடுக்கிட்டான். ஆன்ரூேர் அமுத வாக்கை மறுக்க அஞ்சினூன். அச் சித்தர் காட்டிலே சிற்றம்பல நாடிகளுக்கு ஒரு சமாதிக் குழியையும், அதனைச் சூழ்ந்து அறுபது சமாதிக் குழிகளையும் வெட்டி அவற்றை ஒழுங்கு செய்தான். இந்த அதிசய நிகழ்ச்சியைக் காண மக்கள் பலர் திரண்டு வந்தார்கள். உயிருடன் சமாதியில் இறங்குவது என்றூல் சாமானியமா? குறிப்பிட்ட காலம் எய்தியது. எல்லோரும் சிற்றம்பலநாடிகளை இமையாது நோக்கிய வண்ணம் நின்றூர்கள். ஆச்சாரியர் அனைவரையும் அருட்கண்ணுல் கண்டு ஆசீர்வதித்தார். எல்லோரும் கேட்க அடியில் வரும் இந்த மூன்று திருவெண்பாக்களை ஓதியருளினூர்.

சென்றறிய வேண்டாவே சேராமை வேண்டாவே
ஒன்றுபட வேண்டாவே உள்ளத்தே—நின்றநிலை
கண்டாயே எங்குங் கதிரொளிகண் காயமெல்லாம்
உண்டான தன்மைபோல் உற்று.

உற்றுணர்வுக் குள்ளே ஒளியா வுணர்வுணர்த்தப்
பெற்றூயே எவ்வுயிர்க்கும் பேறதனை—மற்றதுதான்
மாண்டதே பார்ப்பளவில் மாளா நிறைவுநம்மைப்
பூண்டதே என்றே புகழ்.

தங்களைநாம் இன்பத் தடங்கடலில் மூழ்குவித்தோம்
அங்குலகம் தீர மறப்பித்தோர்—இங்குலகில்
வாராதே வாதனையால் வந்தீரே யாமாகில்
பாராதே பாரீர் பரம்.

பின்னர் சிற்றம்பலநாடிகள் இடையில் உள்ள சமாதியில் இறங்கியருளினூர். சிவானந்த சிவயோகத்தில் சிந்முத்திரை

காட்டி அசைவற்றுச் சித்திரதீபம்போல் அமர்ந்துவிட்டார். மாணவர் அறுபதுபேரும் தனித்தனியே குருமூர்த்தியை வணங்கி ஒவ்வொரு வெண்பாவைப்பாடி தத்தமக்கு என்று அமைத்துள்ள குழியில் அமர்ந்து துரிய சமாதியில் ஆழ்ந்தார்கள். மண்ணுல் குழிகள் மூடப்பெற்றன. பார்த்தவர்கள் யாவரும் பரவசமுற்றுப் பதுமைகள்போல் நின்ருர்கள். இப் பேறு அடியவர்கள் திருக்கூட்டத்துள் கண்ணப்பருக்கு மட்டும் கிட்டிலேயே என்று சிலர் கூறிக் கவன்றனர். "ஈசன் அருள் அதுவாயின் என் செய்வது?" என்ருர்கள்.

அச்சமயம் வடக்கு நோக்கிச் சென்றிருந்த கண்ணப்பர் அங்கு வந்து சேர்ந்தார். எல்லோரும் சமாதியுற்றுச் சிவாநுபவம் பெற்றதைக் கண்டார். அவர் ஆற்றமுடியாத அலக்கணுற்ருர். "குருநாதா! குருநாதா! சிறியேன் மட்டும் இம் மண்ணில் கிடந்து உழல்வதோ! அந்தோ! அந்தோ! இது நின்கருணைக்கு அழகோ? ஏழையைத் தள்ளிவிட்டீரே. இனி யான் எங்குறுவேன்? என் செய்வேன்? எந்தையே! என் ஞான தேசிக தீபமே! உள்ளம் உருகுகின்றதே" என்று கதறியழுதார்.

"ஆண்டகுரு சிற்றம் பலவா அடியேற்கா
மீண்டும் எழுந்தருள வேண்டாவோ—நீண்டமால்
ஆரணனுங் காணுத ஆனந்த வாரிதியைப்
பூரணமாய் வையாத போது,"

என்ற திருவெண்பாவைப் பாடினுர்.

அப்போது ஆச்சாரியருடைய சமாதி பிளந்தது. சிற்றம் பலநாடிகள், "கண்ணப்பா! வா என் மடியில் வந்து இரு" என்று கரத்தை நீட்டி அழைத்தனர். கண்ணப்பர் ஆனந்தக் கண்ணீர் வடித்தார். "உய்ந்தேன்; உய்ந்தேன்" என்று துள்ளினுர். குருதேவர் அவரைத் தழுவி மடியில் வைத்துக் கொண்டருளினுர். மண் கூடி விட்டது. இந்த அதிசயத்தைக் கண்ட அனைவரும், "ஹா ஹா" என்றுகூறி ஆரவாரஞ் செய்தார்கள்.

வேந்தன் வியப்புற்றுச் சமாதிகளை யெல்லாம் செம்மையாகப் புதுக்கி வழிபாட்டுக்கு வேண்டிய நிபந்தங்களை அமைத்தான்.

சிற்றம்பலநாடிகளின் மாணவருள் ஒருவராகியசிவபுரம்-தத்துவப்ரகாசர் என்பவர் தத்துவப்ரகாசிகை என்ற ஒரு நூல் செய்தனர்.

சிற்றம்பலநாடிகள் செய்தருளிய ஞான நூல்களை ஓதி ஏனைய மாணவர்கள் உய்வு பெற்றார்கள்.

[**குறிப்பு:—** மாயவரம் புகைவண்டி நிலையத்திற்கு மேற்கே உள்ள சந்தையின் மேல்பால் சித்தர் காடு என்ற இடம் இப்போதும் உளது. அதில் இச் சிற்றம்பலநாடிகளுடைய சமாதியுளது. தரிசிக்கலாம்.]

## 71. சிவப்பிரகாசர்

### நன்றி மறவாமை

புலவர் திலகமாக விளங்கியவர் சிவப்பிரகாசர். இவருக்குக் "கவிதா சார்வபௌமர்", "கற்பனைக் களஞ்சியம்" என்ற பட்டங்கள் உண்டு. இவரைப் பாராட்டாதவர்கள் இல்லை. உலகம் புலவர்களைப் பாராட்டும்; அப்புலவர்கள் இவரைப் பாராட்டுவார்கள் என்றால் இவருடைய பெருமை அளக்கற்பாலாதோ?

கவி பாடுவதில் நிகரில்லாதவர். ஒவ்வொரு கவியும் ஆழமும் அழகும் சுவையும் நீரோட்டமும் உடையதாய் ஒளி செய்து கொண்டிருக்கும். அம்மம்ம! இவருடைய அறிவின் திறம் மிக விழுமியது.

தமிழுலகுக்கு இவர் புரிந்த உபகாரம் மிகவும் உயர்ந்தது. அதனை ஒருபோதும் மக்கள் மறக்கக் கூடாது.

இப் புலவர் கோமானைத் தமிழ் மக்கள் மேலும் அறிந்து உவந்து நன்றி பாராட்டுங் கடப்பாட்டை உண்டாக்கும் பொருட்டே இதனை எழுதுகின்றேன்.

### பிறந்த ஊர், கச்சியின் பெருமை

முத்தித் தலங்கள் ஏழு; காசி, அரித்துவாரம், (வட) மதுரை, துவாரகை, அவந்தி, அயோத்தி, காஞ்சி என்பன

வாம். இவற்றுள் ஆறு தலங்கள் வடநாட்டிலும் ஒன்று தென்னாட்டிலும் அமைந்துள்ளது. என்ன காரணம்? ஏனைய ஆறுதலங்களுக்கு உள்ள பெருமை காஞ்சி ஒன்றுக்கே யுண்டு.

தராசின் ஒரு தட்டில் ஆறு உருளைக்கிழங்குகளை வைத்து, மற்றொரு தட்டில் ஒரு உருளைக்கிழங்கை வைத்தால், அந்த ஆறு சிறு கிழங்குகட்குச் சமானம் இந்த ஒன்று என்றுதானே பொருள்.

அகில உலகங்களையுமீன்ற அன்னை உமாதேவியார் இறைவரை வழிபட்டு இடப்பாகம் வேண்டும் என்று கருதிய போது, எத்தனையோ உலகங்கள், எத்தனையோ நாடுகள், எத்தனையோ தலங்கள் இருப்ப, அவ்வம்மை இக் கச்சியம் பதியே தாம் வழிபடுவதற்கு உரியது—தகுதியுடையது என்று துணிந்து இங்கு வந்தருளி, மாவடியில் இறைவன் சேவடியை வணங்குவாராயின், இத்தலத்தின் பெருமை இத் துணைத்தென்று எம்மனோரால் இயம்புதற்கு எளிதோ?

## தந்தையார்

இத்தகைய திருத்தலமாகிய எச்சித்திகளையும் தரும் கச்சியந்தலத்திலே, குமாரசாமி தேசிகர் என்பார் ஒருவர் இருந்தார். இவர் வாழ்ந்த காலம் கி.பி. பதினேழாம் நூற்றாண்டு. இப் பெரியார் வேளாளர்கட்குத் தீட்சா குருவாக விளங்கினார்.

திருக் கார்த்திகை தரிசனத்திற்காக இவர் திருவண்ணாமலைக்குச் சென்றார். அருணைக்கு அருகில் உள்ள ஈசான்ய தீர்த்தத்தில் மாலை நீராடி அநுட்டானஞ் செய்தார். பூசைப் பேடகம் பகலில் தங்கிய ஒரு நந்தவனத்தில் தங்கிவிட்டது. சீடர்கள் எடுத்து வைக்க மறந்துவிட்டார்கள். அதனால் பெரிதும் வருந்தினார். உடனே தனது சீடர்களை அனுப்பிப் பேடகத்தைக் கொணரச் செய்து, மறுநாள் காலை வழிபட்டார்.

அங்கம் வேறு, லிங்கம் வேறாக இருத்தலினால் வந்த இடர் என்று கருதி, அப்பெரியார் அதுமுதல் சிவலிங்கத்தைத் திருமார்பிலேயே தரித்துக்கொண்டார்.

குமாரசாமி தேசிகர், கச்சியம்பதியில் சிவத்தை வழிபட்டுத் தவத்தைப் பேணி, இல்லறமாகிய நல்லறத்தில் நின்றார். இவர் செய்த பயன் கருதாத அரிய தவத்தால் அவதரித்தார் சிவப்பிரகாசர். பேருக்கேற்ப அவர் திருமுகத்தில் சிவ வொளி வீசியது.

பின்னர் இரு ஆண்மக்களும் ஒரு பெண் மகவும் தோன்றின. வேலையர், கருணைப்பிரகாசர், ஞானம்பிகை என்று பேர் சூட்டினார்.

## மும்மணிகள்

ஒரு குடும்பத்தில் சில பிள்ளைகள் தோன்றினால், ஒவ்வொருவர் ஒவ்வொரு வண்ணமாக இருப்பதுதான் உலகியல்பு. ஒருவர் சாந்தமாக இருப்பார்; ஒருவர் படபடப்பாக இருப்பார். ஒருவர் வீரராக நிற்பர். ஒருவர் புலவராக அமைவர். ஒருவர் தூயராக இருப்பர். ஒருவன் பரம காலியாக இருப்பான். இப்படித்தான் எங்கும் பார்க்கின்றோம்.

குமாரசாமி தேசிகருக்கு உதித்த மூன்று பிள்ளைகளும் ஒன்றுபோலவே அமைந்திருந்தனர். மூவரும் சிறந்த தமிழ்ப் புலவர்கள். மூவர்களும் கவிபாடுவார்கள். மும்மணிகளாக முளைத்திருந்தார்கள். இவர்கள்பால் நற்குணங்கள் முகிழ்த்திருந்தன.

## தந்தையின் பிரிவு

புதல்வர்கள் மூவருக்குந் தந்தை கல்வி பயிற்றினார். ஓரளவு இலக்கண இலக்கிய அறிவைப் புகட்டினார். தீட்சையுந் தந்து சிவலிங்க தாரணமுஞ் செய்தார். இவர்கள் இளமையாக இருக்கும்போதே தந்தையாரான குமாரசாமி தேசிகர் சிவபதம் அடைந்தனர். தந்தையுங் குருவுமாகிய அவர் பிரிவினால் மாலுமியை யிழந்த கப்பலைப்போல் புதல்வர்கள் கலங்கியழுதார்கள். 'தெய்வமே! யாங்கள் என் செய்வோம்?' என்று தொழுதார்கள். மனம்மிக ம்றுகித் திகைத்தார்கள்.

சிவப்பிரகாசர் ஒருவாறு மனதைத் திடப்படுத்திக் கொண்டார். கவிபாடும் திறம் அவருக்கு அப்போதே வாய்த்திருந்தும், மேலும் கல்வி நலத்தை நன்கு பெறவேண்டும் என்ற அவா மீதூர்ந்தது. "எங்கு செல்வோம்? யாரையடுப்போம்? கலைநிரம்பிய தலைமையாய ஆசிரியர் யார்?" என்று ஆராய்ந்தார்.

சைவத்தைக் காக்கும் நல்வேலியமைந்த திருநெல்வேலியின் மருங்கே, பொருநை நதிக்கரையில், சிந்துபூந்துறையில் இருந்த வெள்ளியம்பலத் தம்பிரான் மிகுந்த கலைநலம் படைத்தவர் என உணர்ந்தார்.

## வெள்ளியம்பலவாணர்

தருமையாதீனம் நான்காம் பட்டத்தில் விளங்கிய குருமகா சந்நிதானம் மாசிலாமணி தேசிக பரமாச்சாரியரிடம் சிவதீட்சை பெற்றவர் வெள்ளியம்பல முனிவர். இவர் முருகன் அருள்பெற்றவரும், கந்தர் கலிவெண்பா முதலிய பல நூல்களை உலகம் உய்யப் பாடியருளியவருமான குமரகுருபரரிடம் காசியிற் சென்று கல்வி பயின்றவர். தருமையாதீன முதற்குரவர் குருஞான சம்பந்தபரமாசாரியர் அருளிய முத்தி நிச்சயம் என்ற அரிய நூலுக்கு ஒரு பேருரை எழுதினர். இவ்வாறு பல நூல்களை யாத்தும், திருப்பணி பல புரிந்தும், சொற்றொண்டும், நற்றொண்டும் புரிந்து கொண்டிருந்தார்.

நல்ல தேனுள்ள மலரை வண்டு நெடுந் தொலைவிலிருந்து நாடிச் செல்லுமாப் போல், சிவப்பிரகாசர் நாற்பது காதத்துக்கு அப்பாலுள்ள ஒரு கலைத்தேன் பொழியும் திருமலரை நாடினர்.

சாலை வசதி, வாகன வசதிகள் இப்போதிருக்கின்ற வண்ணம் இல்லாத காலம் அது. அவருக்குக் கலையில் இருந்த தாகம் நெடுந்தூரத்தைப் பொருள் படுத்தாது உந்தியது.

## சோணசைல மாலை

துணைவர்களுடன், சிவப்பிரகாசர் தென்திசை நோக்கிப் புறப்பட்டனர். தந்தையார் வழிபட்ட திருவருணையை

யடைந்தார். நினைக்க முத்தியளிக்கும் புனிதமுடையது அருணாசலம். "அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவணம் அறுமே" என்கின்றார் திருஞானசம்பந்தர். முருகப்பெருமானுடைய அருட்கடலில் முழுகிய அருணகிரிநாதர் அவதரித்த அற்புதப் புண்ணியத்தலம்.

அங்கு சென்ற சிவப்பிரகாசர் சிவகங்கையில் முழுகி சிவபூஜை செய்துவிட்டு, தம்பியருடன் அண்ணாமலையை, அன்புடன் வலம் வருவாராயினர். அங்ஙனம் மலைவலம் வரும் போது சோணசைலமாலை என்ற 100 பாடல்களைக்கொண்ட ஒரு அரிய நூலைப் பாடியருளினர்.

சிவப்பிரகாசருக்குத் தமிழ்த் திருமொழியின் மீதிருந்த இனிய காதலை இந்த நூலில் ஒரு பாடல் மூலம் வெளியிடுகின்றார்.

விரைவிடை யிவரு நினைப் பிறவாமை
　　வேண்டுநர் வேண்டுக மதுரம்
பெருகுறுந் தமிழ்ச்சொல் மலர்நினக் கணியும்
　　பிறவியே வேண்டுவன் தமியேன்
இருசுடர் களுமேல் கீழ்வரை பொருந்த
　　இடையுறல் மணிக்குடக் காவைத்
தரையிடை யிருத்தி நிற்றல்நேர் சோண
　　சைலனே கைலை நாயகனே.

### துறைமங்கலம்

தலையன்புடைய நிலைவாணராகிய சிவப்பிரகாசர், தம்பியர் இருவரும் தொடர்ந்து வர இயலை, இசையும், நாடகமும் தொடர்வதுபோல் சென்றனர். இயல் இசை நாடகம் என்ற முத்தமிழுமே மூன்று வடிவெடுத்து பொதிய மலையை நோக்கிப் பிரயாணம் புரிவதுபோல் இருந்தது அந்தக் காட்சி. திருநெல்வேலியை நாடிச் செல்லுகின்ற போது, விழுப்புரந் தாண்டி, திருச்சிராப்பள்ளிக்குச் செல்லும் வழியில் பெரும்புலியூருக்கு (பெரம்பலூர்) ஆறுகல் தொலைவில் **துறைமங்கலம்** என்ற ஊர் உள்ளது.

இலிங்கா ரெட்டியார் என்பவர், துறைமங்கலத்துக்கும் அதனை அடுத்துள்ள ஊர்கட்கும் அதிபர். இவர் கி. பி. 1610 முதல் 1648 வரை வாழ்ந்தவர். இவருக்குப் பின், இவருடைய புதல்வர் அண்ணாமலை ரெட்டியார் பட்டத்துக்கு வந்தார். வெள்ளாற்றுக்கு அருகில் உள்ள முப்பது வட்டங்களை அரசுபுரிந்து வந்தார். ஒழுக்கத்தை உயிரினும் உயர்ந்ததெனஓம்பும் உயர்வுடையவர். வீரசைவ மரபினர்; குரு லிங்க சங்கம பக்தி பூண்டவர்; பாவலரைப் போற்றுங் காவலர். செந்தமிழ்ப் பற்றுடையவர். மாட்சிமை மிகுந்த ஆட்சியினர்.

துறைமங்கலத்துக்கு அருகில் ஒரு சோலையில், சிவப்பிரகாசர் தங்கி, சிவபூசை செய்து கொண்டிருந்தார். இவருடைய வரவையறிந்த அண்ணாமலை ரெட்டியார், பரிசனங்கள் புடைசூழ வந்து, எட்டுறுப்புக்களும் நலமுறவும், ஆன்மா நலமுறவும் வீழ்ந்து பணிந்தார். அவருடைய பெருமையையும், கல்வியின் அருமையையும் கண்டு, அவர்பால் மிகவும் அன்புடையராகி நின்றார்.

"எமையாள வந்த எந்தாய்! எம்மை யீடேற்றும் பொருட்டு இவ்வூரில் சில காலந் தங்கியிருத்தல் வேண்டும்" என்று பணிவுடன் வேண்டிக்கொண்டார். சிவப்பிரகாசர் அவருடைய அன்பென்னும் பிணியினால் கட்டுண்டார். ரெட்டியார் சிவப்பிரகாசருக்கென்று தனியே ஒரு திருமடம் புதுக்கி, அதில் எல்லா அனுகூலங்களும் அமைத்து உபசரித்தார்.

சில காலம் அண்ணாமலை ரெட்டியாருடைய அன்புக் கடலில் முழுகி, அவரை ஆண்டவனுடைய அருட்கடலில் முழுகவைத்து, அநேக அறநெறிகளை உபதேசித்தருளினார்.

## நெல்லையை யடைதல்

சிவப்பிரகாச சுவாமிகள் அண்ணாமலை ரெட்டியாரை நோக்கி, "அன்புமிக்குடையீர்! நாங்கள் கலைநலம் வேண்டித் தென்திசை செல்கின்றோம். திரும்புங்கால் சில காலந் தங்கி

மகிழ்வோம். இப்போது எமக்கு விடை தாரும்" என்று கூறி, அவர்பால் பிரியா விடைபெற்றுப் புறப்பட்டார்.

வீட்டை நோக்கிச் செல்லும் அறம், பொருள், இன்பம் என்ற முப்பாலைப்போல், மூவரும் மதுரைக்கு அப்பாலுள்ள நெல்லையின் எல்லையை யடைந்தார்கள். வழிநடந்த இளைப்பு இல்லை எனுமாறு இனிய தென்றல் வீசியது. பொருநை நதியின் புனிதமான குளிர்ச்சி உடலையும் உள்ளத்தையுங் குளிர்வித்தது. வெள்ளியம்பலவாணரைக் காணும் கணம் எப்போது? எப்போது? என்று துடிதுடித்துக் கொண்டு சென்றனர் சிவப்பிரகாசர்.

சிந்துபூந்துறையில் தருமபுரத்துக் கட்டளை மடத்தில் மாணவர்கட்குத் தமிழும் சைவமும் போதித்துக் கொண்டிருந்த தம்பிரான் அவர்களை, மூவருஞ் சென்று முடிகளை அடிகள்மீது வைத்து வணங்கி, கைகட்டி வாய்பொத்தி நின்றார்கள். தம்பிரானார், அவர்களுடைய பரிபக்குவ நிலையையும், பயபக்தியையும் அறிந்து மகிழ்ந்தார்.

"எங்கு வந்தீர்கள்?"

"தமிழ் பயில வந்தோம்"

"ஏற்கனவே, தமிழ் பயின்றதுண்டோ"

"ஆம், சிறிது பயின்றுளோம்"

"ஆனால் கவி பாடத் தெரியுமோ?"

"திருவருளாலும் குருவருளாலும் பாடுவதுண்டு"

"கு" என்று தொடங்கி, "கு" என்று முடிக்கவேண்டும். பாடலும் ஊருடையான் என்று வருமாறு அமைத்து நேரிசை வெண்பா ஒன்று பாடும்"

உடனே சிவப்பிரகாசர் சிறிதும் தாமதியாமல், மாமதி கொண்டு, அதி அற்புதமான இந்த வெண்பாவைப் பாடினார்.

குடக்கோடு வானெயிறு கொண்டாற்குக் கேழல்
முடக்கோடு முன்னமணி வாற்கு—வடக்கோடு

தேருடையான் தெவ்வுக்குத் தில்லையதன்
மேற்கொள்ளல்
ஊருடையான் என்னும் உலகு.*

"வடக்கோடு தேருடையான்" என்ற அழகிய சொற்றொடரைக் கேட்டவுடனே, வெள்ளியம்பல முனிவர் விம்மிதம் உற்றார்; வியந்தார். எழுந்து மாணவராகிய சிவப்பிரகாசரை இறுகத் தழுவிக் கொண்டார். "அப்பனே! இப்படி அழகாகப் பாடுந் திறமுடைய நீயா என்னிடம் பாடம் கேட்கப் போகின்றனை? இது பொருந்துமா?" என்றார்.

"சுவாமீ, அடியேனைத் தள்ளிவிடக் கூடாது. நான் என்பது விலக நானூறு கல் கடந்து வந்துளேன். என்னையும், என் எம்பியரையும் தேவரீர் தங்கள் மாணவர் குழாத்தில் சேர்த்தருளி, தமிழ் மழை பொழிந்து, எங்கள் உயிராகிய பயிரை வளர்க்கவேண்டும்" என்று நாக்குழற, விழிநீர் மல்க, மெல்லிய குரலால் விண்ணப்பம் புரிந்தார்.

நன்கு கவிபாடும் திறம்வாய்க்கப் பெற்ற அவருடைய அடக்கத்தையும், அன்பையுங் கண்ட தம்பிரானார் உள்ளம் உவந்தார். அவருக்கு ஐந்து இலக்கணங்களையும், இலக்கியங்களையும் பாடஞ் சொன்னார்.

சிவப்பிரகாசரும், அவருடைய தம்பியர் இருவரும் 15 நாளில் தொல்காப்பியம் முதலிய ஐந்திலக்கணங்களையுங் கற்றனர்.

இவ்வண்ணம் இவர் கல்வி பயின்றுகொண்டிருந்த போது, ஒருநாள் ஒருவர் வந்து 300 பொன் அடங்கிய பொற்கிழியை நீட்டினர்.

சிவப்பிரகாசர்: "இது என்ன?"

"முன்னூறு பொன்"

"கொடுத்தனுப்பினவர் யார்?"

---

*இந்த அரிய பாடலுக்குத் தெளிவான பொருள் அறிவுரை யமுது என்ற நூலில் எழுதியிருக்கின்றேன். அதில் காண்க.

"அவர் தனது பேரைச் சொல்லவேண்டாம் என்ருர்."

"பேர் சொல்லம்வண்டாம் என்றவர் செல்வம் எனக்கு வேண்டாம்."

"தான் புரியும் தருமம், பிறருக்குத் தெரியக்கூடாது என்பது கொடுத்தவருடைய கொள்கை."

"தெரியாத ஒருவரிடத்தினின்றும், பொருள் பெறக் கூடாது என்பது எனது கொள்கை."

"இதனைத் தாங்கள் ஏற்க மறுத்தால், எங்கள் வாழ்வு தொலையும். தண்ணுர் தயவுடைய அண்ணுமலை ரெட்டியார் எங்களை முனிவார்."

"ஓ! என் உழுவலன்பர், உள்ளன்புடைய வள்ளல், அண்ணுமலை ரெட்டியார் தந்தனுப்பினரா? கடுகளவு அறம் புரிவாரும் மலையளவு விளம்பரம் புரிகின்றுர்கள்; இத்துணைச் சிறந்த பொன் முடிப்பை யனுப்பிய அவர் இரகசியமாகத் தந்தனரா?

"இரத்தலும் ஈதலே போலும் காத்தல்
கனவிலுந் தேற்ருதார் மாட்டு"

என்பதற்கிணங்க இதனைப் பெறுவதே முறை" என்று சிவப் பிரகாசர் பெற்றுக்கொண்டார்.

## குரு காணிக்கை

வெள்ளியம்பல முனிவர், சிவப்பிரகாசரை நோக்கி, "அப்பனே! உனக்கும் உன் இளவல்கட்கும் கல்வி நிறைந்து விட்டது. இனி நீவிர் உமது விருப்பம்போல் சென்று தமிழன்னைக்குப் பணிபுரிக" என்று கூறி விடை தந்தனர்.

சிவப்பிரகாசர் அண்ணுமலை ரெட்டியார் அனுப்பிய 300 பொன் அடங்கிய பொன்முடிப்பைக் குருநாதன் திருவடியில் வைத்து 'ஏற்றுக்கொள்ளவேண்டும்' என்ருர்.

"அன்ப! இது உன் தகுதிக்கேற்ற காணிக்கை யன்று. நான், பொன், மண், பெண் என்ற மூவாசைகளையுந் துறந் தவன். ஆகவே, நீ எனக்குத் தரும் காணிக்கை யாது

என்ருல், திருச்செந்தூரில் ஒரு போலிப் புலவன் நம்மை நிந்தனை புரிந்துகொண்டு திரிகின்ருன். அவனை வாதில் வென்று அடக்குவதையே நான் உன்பால் பெறும் காணிக்கையாக விரும்புகிறேன்'' என்ருர்.

உடனே அவருடைய அடிமலர்மீது வணங்கினுர். ''சுவாமீ! திருவருளாகிய வில்லில், குருவருளாகிய அம்பை எய்து, அவனை அடக்கி வருவேன்'' என்று கூறிப் புறப்பட்டார் சிவப்பிரகாசர்.

## சொற் போர்

சிவப்பிரகாசர் தன் துணைவர்களுடன் திருச்சீரலைவாய் என்னுந் திருத்தலத்தை யடைந்தார். கருங்கடற்கரையில் அருட்பெருங் கடலாயெழுந்தருளியுள்ள கந்தவேளைக் கண் குளிரக் கண்டார். பலமுறை பணிந்தார். துதித்தார்.

பின்னர் தருக்குள்ள அப்புலவனைச் சந்தித்தார். அவனுடைய அடங்காமையைச் சிந்தித்தார்.

''நீர் யார்?'' என்ருன் புலவன்.

''அடியேன் தமிழ்க் கடல், வெள்ளியம்பல முனிவருடைய திருவடித் தொழும்பன்'' என்ருர் சிவப்பிரகாசர்.

வெள்ளியம்பலவாணர், என்ற உடனே அப்புலவன் வெகுண்டான். பொருமைக்கனல் பொங்கியது.

இருவருக்கும் திருச்செந்தூரில் சிறப்புடன் விளங்கும் திரிசுந்தரர்கள் (முக்காணியர்) திருச்சபையில் சொற்போர் தொடங்கியது. அறிவு நலமுடைய திரிசுந்தரரில் ஒருவர் ''நீவிர் சற்று நில்லுங்கள். உங்களுக்கு உள்ளம் ஒட்டவில்லை. ஆதலால் உதடு ஒட்டாமல் பாடுகின்ற நீரோட்டகயமக அந்தாதி பாடுங்கள். 30 பாடல்கள் பாடவேண்டும். யார் முதலில் பாடிமுடிக்கிருர்களோ அவர் வென்றவர்; பிந்தியவர் தோற்றவர். தோற்றவர் வென்றவர்க்கு அடிமையாக வேண்டும்'' என்றனர்.

இருவரும் இதற்கு இசைந்து பாடத் தொடங்கினுர்கள்.

இரண்டு இதழ்களும், ஒன்ருேடு ஒன்று பொருந்தாமலும், யமகமாகவும், அந்தாதித் தொடையாகவும் பாடுவது அப் பிரபந்த விதி. இதழகல் யமகவந்தாதி என்றுங் கூறுவர்.

பாடலில் இதழ் குவியக் கூடாது; ஊ, ஒ, ப, ம, வ இந்த எழுத்துக்கள் வரக்கூடாது.

உடனே சிவப்பிரகாசர் திருவருளை வழுத்தினர். பாடத் தொடங்கினர். அவருடைய திருவாக்கிலிருந்து புற்றீசல் போல ஒன்றன்பின் ஒன்ருகப் பாடல்கள் வந்து கொண்டேயிருந்தன. முப்பதையும் தடையின்றி விரைந்து பாடிவிட்டார். அவற்றுள் ஒரு பாடல்:

கணக்காக நாய்கடின் காய நிலையெனக் கண்ணி யென்ன
கணக்காக நானலைந் தெய்த்தே னெழிற் செந்திற் கந்தநெற்றிக்
கணக்காக ஞர்தந்த நின்றனையே யினிக் காதலினல்
கணக்காக ஞநிகர்த் தேயழி யங்கத்தின் காதலற்றே:

இதன் பொருள்:

கணக்காக நாய்கள் தின்காயம் நிலை எனக் கண்ணி—கூட்டமாகிய காகங்களும் நாய்களும் தின்கின்ற உடம்பை நிலைத்தது என்று எண்ணி, என்ன கணக்காக நான் அலைந்து எய்த்தேன்—என்ன கணக்குக்காக நான் அலைந்து அலைந்து இளைத்தேன்? எழில் செந்தில் கந்த— அழகிய திருச்செந்தூரில் எழுந்தருளிய கந்தக் கடவுளே! நெற்றிக்கண் அக்கு ஆகனர் தந்த நின்றனையே—நெற்றிக் கண்ணையும் எலும்பு மாலையைத் தரித்த திருமேனியையும் உடைய சிவபெருமான் பெற்றருளிய தேவரீரையே; இனி காதலினல் கணகா—இனி தியானிக்கும் பொருட்டு காத்தருள்; கன நிகர்த்த அழி அங்கத்தின் காதல் அற்றே—கனவை யொத்து அழிகின்ற உடம்பில் வைத்த விருப்பம் நீங்கி. சரீரத்தில் வைத்த விருப்பம் நீங்கி உம்மையே தியானிக்கும் பொருட்டு காத்தருளும்" என்பது பொருள்.

கண்ண—என்பது கண என இடைக் குறையாக 4-வது அடியில் வந்தது. கண்ணல்—கருதுதல் (தியானித்தல்)

போலிப் புலவன் ஒரு பாடல் கூடப் பாட முடியாமல் விழித்தான். திகைத்தான். நாணினான். அவருடைய அருட் புலமையைக் கண்டு அதிசயித்தான். "தோற்றேன்; உமது அடிமை" என்று கூறி, அடிமலர்மீது வீழ்ந்து அஞ்சலி செய் தான்.

சுவாமிகள், "ஐயா! நான் வெள்ளியம்பல முனிவர் பெருமானுடைய அடிமை. நீ எனக்கு அடிமையாவது பொருந்தாது; எனது குருமூர்த்திக்கு அடிமையாவதே தக்கது" என்று கூறி, அவனை அழைத்துக் கொண்டு, சிந்து பூந்துறை சென்று குருநாதர் திருவடிகளில் பணிந்தார். அப் போலிப் புலவன் வெள்ளியம்பல முனிவருடைய சீலத் தையும், கோலத்தையும் கண்டு, தருக்கடங்கி, "அடியேனை ஆட்கொள்ள வேண்டும்" என்று கூறிப் பணிந்தான்.

தனஞ்சயன், துருபதனைத் தேர்க்காலில் கட்டிக் கொணர்ந்து துரோணருக்குக் குரு காணிக்கை தந்தது போல் இருந்தது அக்காட்சி. தம்பிரான் மிகுந்த மகிழ்ச்சி யுற்றார். தனது சீடருடைய திறத்தை நினைந்து உள்ளம் உவந்தார்.

புலவனை நோக்கி, "அன்ப! சென்றதைக் கருதக் கூடாது. கற்றாரைக் கற்றார் காமுற்று, நற்றாமரைக் குளத் தில் நல்லன்னம்போல் நலமுற்று மருவி வாழ்தல் வேண்டும். நாம் அனைவரும் தமிழன்னையின் தனயர்கள். நம்மில் வேறு படக் கூடாது. வேற்றுமையால் வேதனையே வளரும். ஒற்றுமையால் உயர்வும் உவகையும் உண்டாகும். கற்பதும் கேட்பதும், மனம் அடங்குவதற்குத்தான். மனம் அடங்கிய இடத்தில், சினம் அடங்கும். பரம்பொருளை நினைத்து, இந்த மனித வாழ்வைப் புனித வாழ்வாகச் செய்து இனிது வாழ் வாய்" என்று அறவுரை கூறியருளினார்.

## வேறு நூல்கள்

குருநாதரிடம் விடைபெற்றுப் பிரிய மனம் இன்றிச் சிவப்பிரகாசர் தனது தம்பியர்களுடன் புறப்பட்டார்.

இடையில் உள்ள திருத்தலங்களைத் தரிசித்துக் கொண்டு மீளவும் துறைமங்கலம் வந்தார்.

அண்ணாமலை ரெட்டியார், அவர்களை அன்புடன் வரவேற்று இனிய உபசாரம் புரிந்தார்; அங்கு சிலகாலம் தங்கியிருந்தார். ரெட்டியாருடைய வேண்டுகோளுக்கு இணங்கி அவருடைய ஆட்சியில் அமைந்து அருகில் விளங்கும் வாலிகண்டபுரத்தின் வடமேற்றிசையில் உள்ள திருவெங்கையிலே, சிலகாலந் தங்கியிருந்தார்.

அத்தலத்தில் எழுந்தருளியுள்ள பழமலைநாதர் மீது, திருவெங்கைக் கோவை, திருவெங்கைக் கலம்பகம், திருவெங்கையுலா, திருவெங்கை யலங்காரம் என்னும் நான்கு நூல்களை இயற்றினார்.

இவ்வூர் பிடாரியின் தேர், திருமடத்திற்கு எதிரில் அடியார்க்கு உபகாரமாயிருந்த முருங்கை மரத்தை அழித்துச் சென்றது கண்டு, சுவாமிகள் ஒரு பாடல் பாடினார். பிடாரியின் தேர் அச்சு முறிந்தது.

**தம்பியர் திருமணம்**

அண்ணாமலை ரெட்டியார் அடிகளாரை நோக்கித் "திருமணம் புரிந்து இல்லறத்தை மேற்கொள்ள வேண்டும்" என்று வேண்டினார்.

சேய்கொண்டா ருங்கமலச் செம்மலுட னேயரவப்
பாய்கொண்டா னுங்காணுப் பட்டீச் சுரத்தானே
நோய்கொண்டா லுங்கொளலாம் நூறுவய
தளவிருந்து
பேய்கொண்டா லுங்கொளலாம்
பெண்கொள்ளலாகாதே.

நிட்டையிலே யிருந்துமனத் துறவடைந்த
பெரியோர்கள் நிமலன் தாளைக்
கிட்டையிலே தொடுத்துமுத்தி பெறுமளவும்
பெரியசுகம் கிடைக்குங் காம
வெட்டையிலே மதிமயங்கும் சிறுவருக்கு
மணம்பேசி விரும்பித் தாலி
கட்டையிலே தொடுத்துநடுக் கட்டையிலே
கிடத்துமட்டும் கவலை தானே.

என்ற இரு பாடல்களைக் கூறித் திருமணத்தை வெறுத்துத் துறவறம் மேற்கொண்டார்.

ரெட்டியார், வேலையரைத் திருமணத்திற்கு வேண்டினர். அவர் மௌனமாக இருந்தார். அவருடைய இளவலைக் கேட்டார். அவர்,

"நாணி யென்பதை நாரியென் றுரைத்திடு
வேணு வானது வளைந்துபோய்ப் புகுந்தது
வென்றால்
காண லாவதோர் உருவமெய்ந் நாரியைக்
கண்டால்
பூணுவார் மயல் காளையர் என்பதும் புதிதோ."

என்று பாடினர்.

பின்னர் சிவப்பிரகாச சுவாமிகள் கட்டளைப்படி வேலையருக்கும் கருணைப் பிரகாசருக்கும் திருமணம் செய்து வைத்தார்.

அப்போது சுவாமிகள் விநோதமாக ஐந்து பாடல்களைப் பாடி ஆசி கூறினர்.

## உப்பு விற்றவள்

சுவாமிகள், அங்கிருந்து புறப்பட்டுச் சிதம்பரஞ் சென்றார். அங்கு ஒரு மடத்தில் தங்கியிருந்தார். சிவப்பிரகாச விகாசம், தருக்க பரிபாஷை, சதமணி மாலை, நால்வர் நான்மணிமாலை என்னும் பிரபந்தங்களை யருளினர்.

திருத்தல யாத்திரை புரியும் பொருட்டுப் புறப்பட்டு, இடையில் உள்ள தலங்களைச் சேவித்துக்கொண்டு, திருக்காட்டுப்பள்ளியை யடைந்து, கண்ணுதற் கடவுளை வணங்கித் தங்கியிருந்தார்.

அங்கே தமிழை நன்கு பயின்ற ஒரு பெண்மணி "உப்போ ஒரு உப்பு" என்ற தேனினும் இனிய தீங்குரலுடன் தெருவில் உப்பு விற்றுக்கொண்டு சென்றாள். அவள் முகத்தில் தமிழின் தண்ணொளி வீசுவதைக் கண்ட சுவாமிகள், அவளை அருட்கண்ணால் நோக்கி ஒருபாடல் பாடினர்.

நிறைய வுளதோ வெளிதோ கொளுவோம்
பிறையை முடிக்கணிந்த பெம்மான்—
உறையும்
திருக்காட்டுப் பள்ளி திரிபாவாய் நீயிங்
கிருக்காட்டுப் பள்ளி எமக்கு.

"பிறையை முடியில் அணிந்த சிவபிரான் எழுந்தருளியுள்ள திருக்காட்டுப்பள்ளியில் திரிகின்ற பாவையே! நீ இங்கு இரு. எமக்கு உப்பை அள்ளிக் காட்டு. உன்னிடத்தில் நிரம்ப இருக்கின்றதா? அது வெண்மையாக வுளதா? நாங்கள் வாங்கிக் கொள்வோம்" என்பது இதன்பொருள்.

உடனே அப்பெண்மணி அடிகளாரைப் பணிந்தாள். அவள் பவளவாக்கிலிருந்து ஒரு முத்துப் பாடல் வெளி வந்தது. அது இது:

தென்னுேங்கு தில்லைச் சிவப்பிரகா சப்பெருமான்
பொன்னுேங்குஞ் சேவடியைப் போற்றினேம்—
அன்னேன்
திருக்கூட்டம் அத்தனைக்கும் தெண்டனிட்
டோம் தீராக்
கருக்கூட்டம் போக்கினேம் காண்.

சுவாமிகள் அவளுக்கு ஞானேபதேசம் புரிந்தருளினர்.

**சாந்தலிங்கர் சந்திப்பு**

சிவப்பிரகாசர் அங்கிருந்து புறப்பட்டு, தல யாத்திரை புரிந்து கொண்டு, தான் பிறந்த திருத்தலமாகிய காஞ்சி புரத்தை அடைந்தார். பேரூரிலிருந்து **சாந்தலிங்கர்** என்பார் அங்கு வந்தனர். அவருடன் சுவாமிகள் நட்புப் பூண்டு மகிழ்ந்தார். அவருடைய நல்லொழுக்கத்தை நோக்கித் தனது தங்கை ஞானம்பிகையை அவருக்குத் திருமணஞ் செய்வித்தார்.

சாந்தலிங்கருடன் பொம்மபுரத்தில் எழுந்தருளியுள்ள சிவஞானபாலைய தேசிகரை யடைந்து, அவரை அஞ்சலித்து, அவர்மீது பல பிரபந்தங்களைப் பாடினர். அவருடைய அருளாகிய அமுதை யுண்டு மகிழ்ந்தார்.

விருத்தாசலம் வந்து தங்கி, அங்குள்ள சுவாமியையும், அம்பிகையையும் பல பிரபந்தங்களைப் பாடி அலங்கரித்தார்.

ஒரு நாள் மணிமுத்த நதியில் நீராடி வரும் வழியில் ஒரு மாங்கனி கிடந்தது. சிவநிவேதனத்துக்கு ஆகும் என்று எடுத்தார். அதுகண்ட சோலைக்குரியவன் அடிகளாரது மகிமை அறியாது மடிபிடித்து இழுத்து இடர்ப்படுத்தினன்.

உடனே அடிகளார் வெகுண்டு அடியில் வரும் வெண்பாவைப் பாடினர்.

அடுத்துவருந் தொண்டனுக்கா அந்தகனைத் தாளால்
அடர்த்ததுவும் சத்தியமே யானல்—எடுத்த தொரு
மாங்கனிக்கா என்னை மடிபிடித்த மாபாவி
சாங்கனிக்கா தித்தன் வரத்தான்.

(சாம்—கன்னிக்கு (கன்னி வீட்டுக்கு) ஆதித்தன் வரட்டும்) உடனே அவன் வீழ்ந்து மடிந்தான்.

## கருணைப்பிரகாசர் மறைவு

மாணவர்களின் விருப்பத்துக்கு இணங்கி நல்லாற்றூரை யடைந்தார். அங்கிருக்கும் போது, வெங்கனூரில் இருந்த கடைசித் தம்பி கருணைப்பிரகாசர் சிவனடி சேர்ந்தார்.

அது குறித்துச் சுவாமிகள் பெருந்துயரமுற்றனர்.

முன்னமொரு தமிழ்ப் புலவன் தனையுண்டு
கண்ட சுவை முதிர்ச்சியாலே
தன்னியலை முழுதுமுரைத் தமையாமுன்
நினைக் கவர்ந்து தடங்காளத்தி
மன்னவ னுண்டான் எனது மாதவத்தில்
வலிதீர மண்ணின் மீதே
என்னுடன்வந் தவதரித்த இளங்கருணைப்
பிரகாசன் என்னுங் கோவே.

என்று பாடி யிரங்கினர்.

வேலைய சுவாமிகள், தன் தம்பியின் பிரிவைக் குறித்துக் கலுழ்ந்து பாடிய பாடல்.

ஆண்டதனில் எனையொவ்வாய் வித்தையினில்
தமையனினும் மதிகம் என்றே

பூண்டவுல கதனினுள்ளோர் புகல்வதுகேட்
டிருந்து மென்ன புதுமை தானே
காண்டகுகண் மணியேநல் இளங்கருணைப்
பிரகாசக் காளாய் நீதான்
மாண்டனை யென்றறிந் திருந்தும்
உயிர்தரித்தேன்
யானுமிகு வன்னெஞ் சேனே.

அதற்குப்பின் அடிகளார் பிரபுலிங்கலீலை, திருக்கூவப் புராணம் முதலிய அரிய நூல்களைச் செய்தார். சுவாமிகள் மொத்தம் 32 நூல்கள் இயற்றினர்.

ஒரு சமயம் கடற்கரையில் விரோசனத்துக்காக மருந் துண்டு இருந்தபோது, நன்னெறி என்ற நாற்பது வெண்பா வைக் கடற்கரை மணலில் எழுதினர். பிறகு மாணவர்கள் அதனை எழுதி உலகிற்கு உதவினர்கள்.

நல்லாற்றூர் என்ற ஊரிலே நிஷ்டை கூடியிருந்து மக் கட்கு அருள் உபதேசம் புரிந்து 32-ம் எயதில் புரட்டாசி மாதம் பௌர்ணமி திதியில் சிவலிங்கத்தில் கலந்தருளினர்.

சுவாமிகளுடைய சகோதரர் வேலைய சுவாமிகள் பெரி துந் துன்புற்றார். இளவல் கருணைப்பிரகாசர் 18-வது ஆண் டில் மறைந்தார்; மூத்தவர் 32-வது ஆண்டில் மறைந்தார். ஆறாத் துயரமுற்ற அவர்,

"அல்லிமலர் பண்ணவனும் ஆராய்ந் தறிகவிதை
சொல்லும் இருவரிடைத் தோன்றியயான்-முல்லை
அரும்பிற் பொலிவும் அணிமுறுவல் நல்லாய்
கரும்பிற் கணுநிகர்த்தேன் காண்"

என்று பாடினர்.

சிவப்பிரகாசருடைய உடம்பு மறைந்ததேயன்றி அவ ருடைய புகழ் மறையவில்லை. அவர் தந்த தமிழ்ச் செல்வம் எங்கும் நிறைந்து மக்களுக்கு அறிவைவளர்த்து ஆனத்தத்தை வழங்குகின்றது.

இவர் பாடிய தெளிட்டாத தெள்ளமுதத் தமிழ், பவப் பசியை மாற்றிச் சிவத்திருவை ஏற்றி வைக்கின்றது.

# 72. சங்கு சுவாமிகள்

கடலிலேயுள்ள தண்ணீரை இத்தனை படி என்று அளந்து விடலாம்! அதனில் வீசும் அலைகளையும் எண்ணிவிடலாம்; இமயமலையைத் துலையிலிட்டு இத்தனை 'டன்' என்று நிறுத்து விடலாம். வானத்தை அங்குலக்கோலால் இத்தனை அங்குலம் என்று அளந்துவிடலாம். ஆனால் ஞானிகளது பெருமையை எதனாலும், யாராலும் அளக்க முடியாது. அடியில் வரும் ஒரு ஞானியாரது பெருமையை அறிக.

திருநெல்வேலி மாவட்டத்தில் **பசுவந்தனை** என்று ஒரு தலம் உண்டு. வளமை மிகுந்த அத்தலத்தில் மக்கள் சீரும் சிறப்புமாக வாழ்ந்தார்கள்.

பயிர்த்தொழில் புரியும் ஒரு குடும்பத்தில் அவதரித்தவர் சங்கு சுவாமிகள். இவர் இளமையிலிருந்தே சிவஞான முடையவராயும், சிவானந்த அநுபவமுடையவராயும் விளங்கினார். ஆனால் அவருடைய அருமையையும், பெருமையையும், அவ்வூரில் ஒருவரும் அறிந்தாரில்லை. ஒன்றும் அறியாத உன்மத்தர் என்றும், பித்தர் என்றும் எண்ணினார்கள்.

சங்குசுவாமிகள் உலகத்தை மறந்து எப்பொழுதும் சிவ சிந்தையுடன் இருப்பார். வானத்தை நோக்கியவண்ணம் நெடுநேரம் நிற்பார். மழை பொழிந்தாலும் அசையாமல் இருப்பார். காரணமில்லாமல் சிரிப்பார். சில சமயம் அழுவார். அவர் தன்னுடைய வீடாகவே, எல்லா வீட்டையும் எண்ணுவார். யார் என்ன வேலையிட்டாலும், அன்போடு செய்வார். இரவிலே ஊருக்கு வெளியேயுள்ள தோப்புக்களிலே, தனியே உலாவுவார். நெல் அறுவடைக் காலத்திலே, அந்த ஊரவர்கள், இவர் தலையில் நெல் தாள்களைத் தூக்கிச் சுமத்துவார்கள். அவர் கழுத்து நெறியத் தூக்கிக் கொண்டு போவார். கிணற்றில் தண்ணீரை இறைக்கச் சொல்லுவார்கள். இப்படித் தங்கள் தங்கள் வீடுகளிலும், தோட்டங்களிலும், இப் பரம ஞானியைச் சிறிதும் இரக்கமின்றி, வேலை வாங்குவார்கள். அவரும் உடல் வருத்தமறி

யாது உழைப்பார். மேகத்தினுல் மறைப்புண்ட சூரியனைப் போல் இருந்தார். கிணற்றுக்குள் இருக்கும் மாணிக்கத்தை யறியாததுபோல், அவர் திருவுள்ளத்தில் இருந்த திருவருள் மணியை அவ்வூரார்கள் அறிந்து கொள்ளவில்லை.

இவ்வாறு சங்கு சுவாமிகள், முப்பாழுங் கடந்து அப் பாலைக் கப்பாலாய், வாக்கு மனங் கழிய அதீத நிலையில் திகழ்ந்தார். ஒரு நாள் விடியற்காலை, சங்குசுவாமிகளின் தம்பி அவரை நோக்கி, "அடேய்! சங்கு! போய் நமது வய லுக்கு, ஏற்றத்தில் தண்ணீர் இறைப்பாய்" என்று ஏவினுன். சங்கு சுவாமிகள், "தம்பி! நமது வயல் என்று ஒன்று தனி யாக இருக்கின்றதா? எல்லாம் நம்முடைய வயல்தானே?" என்று வினவினுர். தம்பிக்குக் கோபம் வந்துவிட்டது. "அடேய்! உனக்குப் புத்தியிருக்கின்றதா? இவ்வளவு வயது ஆகியும் நம்ம வயலைக்கூடத் தெரிந்து கொள்ளவில்லையே? பனைமரத்தில் பாதியிருக்கின்ருயே! அறிவில்லாத அசடே! வா, வயலைக் காட்டுகின்றேன்" என்று அழைத்துக் கொண்டு போய் வயலைக் காட்டி, "விடிவதற்குள் இந்த வயல் முழு வதும் தண்ணீர் பாயவேணும். தெரிகின்றதா? வேகமாக ஏற்றம் இறை" என்று கூறிவிட்டு வீட்டில் போய்ப் படுத்து உறங்கினுன்.

பற்றற்றவரும் பரம ஞானியுமாகிய சங்கு சுவாமிகள், சிவசிந்தையுடன் ஏற்றம் இறைக்கத் தொடங்கினுர். இவ ருடைய இயல்பை யறிந்த அடுத்த வயலுக்குச் சொந்தமான வன், மெல்ல தண்ணீர் மடையைத் தன் வயலுக்குத் திருப் பிக் கொண்டான். விடிவதற்குள் அந்த வயலில் நன்ருக நீர் பாய்ந்து தேங்கியது. சங்கு சுவாமிகள் தண்ணீர் இறைத்தவண்ணமாகவே யிருந்தார். பொழுது விடிந்தது. தம்பி பல்குச்சியை வாயில் வைத்துக்கொண்டு, முக்காடு போட்டுக்கொண்டு, வயலிடம் வந்து பார்த்தான். தங்கள் வயலில் நீர் ஒரு துளிகூடப் பாயவில்லை. அடுத்த வயலில் தடாகம்போல் தண்ணீர் தேங்கி யிருந்தது.

அவனுக்குக் கோபம் பொங்கி வந்தது. "ஏ மூடனே! சாம்பிராணிப் பயலே! உனக்கு ஏதாவது மூளையிருக்கின்

றதா? இத்தனை மணி நேரம் நீர் இறைத்தும் நம்ம வயலில் தண்ணீர் பாயவில்லையே" என்று வைதான். சங்கு சுவாமிகள் மலர்ந்த முகத்துடன் தண்ணீர் இறைத்துக்கொண்டே "அதுவும் நம்ம வயல்தானே?" என்றார். அவ்வளவுதான், அவனுக்கு ஆத்திரம் வந்துவிட்டது. அருகில் கிடைத்த ஒரு கோலையெடுத்து, தமையனாரும் சிறந்த சிவஞானியுமாகிய சங்கு சுவாமிகளை ஓங்கி ஓங்கியடித்தான். அடிகளார் அப்பொழுதும் சிரித்தவண்ணமாக, "தம்பீ! இப்படி ஓங்கி ஓங்கி இந்தவுடம்பை அடிக்கின்றனையே. உனக்குக் கை வலிக்குமே?" என்றார்.

உடனே அவன் தோள், தேள் கொட்டியமாதிரி வலிக்கலாயிற்று. கீழே விழுந்தான். புழுவைப்போல் துடித்தான். "ஐயோ! ஐயோ! வலி தாங்கமுடியவில்லையே" என்று கதறினான். கருணைவடிவாகிய சங்கு சுவாமிகள், "தம்பீ! வருந்தாதே. நன்றாகிவிடும்" என்றார். உடனே வலி நின்றுவிட்டது. அப்பொழுதும் அவரை ஞானமூர்த்தி யென்று, அறிந்தானில்லை. "இவன் நச்சுப்பல்லன். இவன் சொன்னால் பலிக்கின்றது. இவன் விஷயத்தில் இனி தலையிடக்கூடாது" என்றான்.

இந்தச் செய்தி ஊரெங்கும் பரவியது. அதுமுதல் அவர் விஷயத்தில் ஊரவர்கள் சிறிது அஞ்சினார்கள். அவரை ஒருவரும் வேலை தந்து இடர்ப்படுத்தவில்லை. சங்கு சுவாமிகள் தன்னிச்சைப்படி இடிந்த மண்டபம் ஒன்றில் இருந்து கண்களை மூடிச் சமாதியிலிருந்தார். ஊரார்கள், சோம்பலுடன் தூங்குகின்றார் என்று எண்ணினார்கள்.

ஆண்டுகள் சில கடந்தன. சிங்கம்பட்டி ஜமீன்தாருக்கு மகோதரம். மருத்துவர்கள் பலரும் பல மருந்துகளைத் தந்தும் நோய் தணியவில்லை. மருத்துவர்கள் இது எம்மால் தீராது என்று கைவிட்டார்கள். ஜமீன்தார் மிகவும் வருந்தினார். பலப்பல சிந்தனை செய்தனர். சிதம்பரஞ் சென்று தவங்கிடக்க வேண்டும் என்று துணிந்தார். காவலாட்களும் ஏவலாட்களும் புடைசூழப் பறப்பட்டனர். பல்லக்கிலேறிப் பலநாட்களுக்குப் பின் தில்லையின் எல்லையை யடைந்தனர்.

பல்லக்கை விட்டிறங்கினர். "பொன்னம்பலவாணு! சின்னஞ் சிறியேனை யாளாய்" என்று மண்மிசை விழிந்து வணங்கினர். கண்களில் நீர் பெருக, உள்ளம் உருக நடந்துபோய் ஆலயத்தைச் சேர்ந்தார். சிவகங்கையில் முழுகினர். கனக சபையைக் கண்டார். மெய்மறந்து நின்ருர். ஹர ஹர என்று கரமலரைச் சிரமலர்மீது கூப்பித் தொழுதார்: அழுதார், "பிறவிநோய் தீர்க்கும் பெருந்தகையே! துறவிகள் தொழவருள் துரையே! அடியவர் இடர்களை யம்பலவாணு! அடியேனுடைய மகோதரத்தை நீக்கியருள்" என்று வேண்டினர். ஆயிரங்கால் மண்டபத்தில் தங்கினர். ஆறு காலமும், ஆனந்தத் தாண்டவமூர்த்தியைச் சேவிப்பார். அபிஷேக தீர்த்தத்தைப் பருகுவார். பாலும் பழமு மட்டும் ஒருவேளை உண்பார். ஐந்தெழுத்தை ஜெபிப்பார். திருமுறைகளைப் பாராயணஞ் செய்வார்.

இவ்வாறு ஜமீன்தார் 48 நாட்கள் நடராஜமூர்த்தியின் சந்நிதியில் விரதமிருந்தார். 48-வது நாள் வந்தும் நோய் தணியவில்லை.

அன்று இரவு எங்கும் ஒரே நிசப்தம். எங்கும் இருள் தங்கியிருந்தது. கோவில் கதவு தாளிடப்பெற்றது. ஜமீன்தாருடைய வேலையாட்கள் யாவரும் தூங்கி விட்டார்கள். ஜமீன்தார் மனம் ஆருத்துயரமுற்றது.

"தேவதேவா! தில்லைவாசா! சிவகாமிநேசா? எளியேனுடைய மகோதரந் தீரவில்லையே. உன்னை நம்பிவந்த என்னை நட்டாற்றில் விடலாமா? 'கடவுளை நம்பினேர் கைவிடப்படார்' என்பது பொய்யா? கருணுகரா! உன் மனம் என்ன இரும்பா! உன்னுடைய சந்நிதிக்கு வந்து ஒரு மண்டலம் இருந்து உன்னை வழிபட்டும் நோய் தீராது ஊர் திரும்புவேனுயின் உன்னை உலகம் பழிக்காதா? ஐயனே! விடிவதற்குள் என் நோய் தீரவில்லையானுல், உன் தூக்கிய திருவடிசாட்சியாக அடியேன் சிவகங்கையிலே வீழ்ந்து மாள்வேன். இது சத்தியம்.

"நகோதரத் தறிஞற் கின்ப நல்கிய ஞான வேலோன்
சகோதரன் வணங்க முன்னல் தனிக்கனி தந்த
வள்ளால்

மகோதரன் தன்னை மாய்த்த மால்தொழும் மணியே நாயேன்
மகோதரந் தீர்த்தாட் கொள்வாய் மன்றுளே நடிக்கும் வாழ்வே.

என்று துதித்தார். அங்ஙனே அழுது தொழுது மூர்ச்சித்து விட்டார்.

கனகசபை மேவுங் கண்ணுதற் கடவுள் ஜமீன்தாருடைய கனவிலே தோன்றி, "அன்பனே! வருந்தற்க. உன்னுடைய மகோதர நோயைத் தீர்க்க என்னாலாகாது. அதனைத் தீர்க்க வல்லவன் ஒருவனுளான். பாண்டி நாட்டிலே பசுவந்தனை யென்னுந் தலத்திலே சங்குசுவாமிகள் என்று எனது அடியான் ஒருவன் இருக்கின்றான். அவன் பற்றற்ற பரம ஞானி. அவன்பால் சென்று வணங்குவாய். அவன் உன் நோயை விரைவில் தீர்ப்பான்" என்று அருளிச்செய்து மறைந்தருளினார்.

ஜமீன்தார் கனவு தெளிந்து எழுந்தார்; அம்பலவாணரது அருள் திறத்தை எண்ணி அகங் குளிந்தார். மெய் சிலிர்த்தார். கண்ணீர் மல்கினார், "எல்லாம் வல்ல எம்பெருமானால் ஆகாததும் ஒன்று உளதோ? இல்லை இல்லை. அடியார்கள் மூலம் அருள்செய்யக் கருதினார்போலும். ஆ! அயனும் மாலுங் காணாத அரனாரால் அறிமுகஞ் செய்விக்கப் பெற்ற அவர் எவ்வளவு சிறந்த பெரியவரோ? சிறியேன் இத்தனை காலமாக அவரை அறியாது கெட்டேன்; இனி உய்ந்தேன்" என்று எழுந்தார். சிவகங்கையில் முழுகினார். பொன்னம்பல நாதரைப் பொற்போடு தொழுதார். பிரியா விடை பெற்றுப் பல்லக்கில் புறப்பட்டார்,

சங்குசுவாமிகளையே நினைந்து நினைந்து நெஞ்சம் நெகிழ்ந்து, பலகாதங் கடந்து பாண்டி நாட்டை யடைந்து பசுவந்தனை வந்து சேர்ந்தார். கலகல வென்ற மணி ஓசையுடன் கூடிய பல்லக்கில் பரிவாரங்கள் சூழ ஜமீன்தார் வருவதைக் கண்ட ஊர் ஜனங்கள் அதிசயமுற்றுப் பரபரப்புடன் ஒன்று பட்டனர். அவரைச் சிலர் வணங்கி நின்றார்கள். ஜமீன்தார், "ஐயா! இங்கே சங்கு சுவாமிகள் எங்கே வீற்றிருக்கின்றனர்?" என்றார்.

“எஜமான்! சங்கு சுவாமிகள் என்று இங்கு ஒருவரும் இல்லையே. தங்கள் தேடிவரக்கூடிய தகுதியுடையவர் நிச்சயமாக இல்லை” என்று அவர்கள் கூறினார்கள்.

ஜமீன்தார், “நீங்கள் அறியாது கூறினீர்கள். இங்கே இருக்கின்றார் சங்குசுவாமிகள். நீங்கள் அவரைக் கண்டதில்லையா?” என்றார்.

ஒருவன், “எஜமான். சங்கு என்று ஒரு கேனப்பயல் இருக்கின்றான். அவன் பித்தன். சுத்த சோம்பேறி. எங்காவது தூங்கிக்கொண்டிருப்பான். சங்கு சுவாமிகள் என்று ஒருவருங் கிடையாது” என்றான்.

ஜமீன்தார், “ஐயா! நீ கூறிய அந்தப் பித்தர் எங்கே? அவர்தான் ஜீவன் முத்தர். அத்தர் கூறிய சித்தர் அவரே. காட்டுங்கள்” என்று விரைந்து வினவினார்.

சங்குசுவாமிகள் இருக்கும் பாழ்மண்டபத்தைக் காட்டினார்கள். ஜமீன்தார், முத்து முத்தாய் கண்ணீர்த்துளி சிந்தவும், அன்பு வெள்ளம் பெருகவும் ஓடி, அடிகள் திருவடிமீது வீழ்ந்தார். தட்டுக்களில் கற்கண்டும், பழங்களும் வைத்துப் பணிந்தார். “எந்தையே! எந்தையே! எனையாளவந்த தந்தையே!” என்று அழைத்தார்.

சங்குசுவாமிகள் கண்விழித்துப் பார்த்தார். “அப்பனே! நடராஜமூர்த்தி அனுப்பினாரோ? அவரால் உன் நோயைத் தீர்க்க முடியாதென்று என்பால் உன்னை ஏவினாரோ? மிகவும் அழகு. இந்தா! இந்தப் பழத்தைச் சாப்பிடு” என்று தட்டில் உள்ள பழங்களில் ஒன்றை யெடுத்துத் தந்தார். அதையுண்டதும் ஜமீன்தாருடைய மகோதரம் நெருப்பிடை வீழ்ந்த பருத்தி போல் அகன்றது. ஜமீன்தார் ஆடினார்; பாடினார். அவரை வலம்வந்து பணிந்தார். அவரைப் பல்லக்கிலேற்றி மேளதாளங்களுடன் பவனிவரச்செய்தார். ஊரார்கள் அனைவரும், இந்த அதிசயத்தைக் கண்டு உண்மையை உணர்ந்து அடிகளை அஞ்சலி செய்தார்கள்.

## 73. குலசை ஞானியார்

புண்ணியம் மிகுந்த நம் நாட்டில் பற்பல ஆன்றோர்கள் வாழ்ந்தார்கள். அவர்கள் பிறர் அறியாதவண்ணம் ஒதுங்கியும், ஆடம்பரமின்றியும் நீறுபூத்த நெருப்புபோல் வாழ்ந்தார்கள். அப்படி வாழ்ந்தவர்களை நம்மால் நன்கு அறிய முடிவதில்லை. வானத்தில் பறவை சென்ற வழியையும் தண்ணீரில் மீன் சென்ற வழியையும் எப்படிக் காண முடிவதில்லையோ அதுபோல் ஞானிகள் வாழ்ந்து சென்ற வழியையும் அறிய முடிவதில்லை. இந்த வகையில் நின்றவர்களில் ஒருவர் **குலசை ஞானியார்**. அவருடைய இனிய வரலாற்றை ஒருவாறு இங்கு குறிப்பிடுகின்றேன்.

ஆறுபடைவீடுகளில் ஒன்றாகியதும், கடற்கரையில் இயற்கை வனப்புடன் வியங்குவதும் ஆகிய திருச்செந்தூருக்குத் தென்திசையில் எட்டுக்கல் தொலைவில் உள்ளது **குலசேகரன்பட்டினம்** என்ற நகரம். அந்நகரம் மூவேந்தர்களும், கோடைக் காலத்தில் வந்து தங்கி மகிழும் பெருமையுடையது. குலசேகரபாண்டியன் இந்நகரை உயர்வுறச் செய்தபடியால் அவன் திருப்பேரால் இது வழங்கப்பெறுகின்றது. கடற்கரையில் மிக்க இனிமையாக விளங்குவது. பழைய காலத்தில் இது துறைமுகப் பட்டினமாக இருந்தது. காலச்சுழலால் பின்னர் துறைமுகமாகத் தூத்துக்குடி பெருமை பெற்றது.

காரைக்காலம்மையாருடைய கணவன் பரமதத்தன் இத்துறைமுகமாகிய குலசேகரன்பட்டினத்தில் வந்து தங்கிப் பெருவாணிபம் புரிந்தான் என்றும், மறுமணம் இங்கு புரிந்து கொண்டான் என்றும் ஆன்றோர்கள் கூறுவர்.

பாண்டிய மன்னர்களின் ஆட்சி நிலைகுலைந்தபின் பற்பல குறுநில மன்னர்கள் பாண்டி நாட்டைத் துண்டு துண்டாக ஆட்சி செய்யத் தலைபட்டார்கள். அவர்களுள் ஒருவர் **''செந்தில் காத்த மூப்பனார்''**. இவருடைய சந்ததியார்கள் இன்னும் இருக்கின்றார்கள். திருச்செந்தூரில் நாலாந் திருவிழா இவர்கள்தான் இன்றும் புரிகின்றார்கள்

செந்தில் காத்த மூப்பனரிடம் அமைச்சராக இருந்தவர் **முத்தணைந்த பெருமாள் பிள்ளை** என்பவர். இவர் கல்வி கேள்விகளில் தலைசிறந்தவர். பண்பு மிக்கவர். இவருடைய ஒப்பற்ற உயர்வைக் கண்டு யாவரும் **ஞானியார்** என்றே அழைத்தனர்.

இவர் நாள்தோறும் பகலில் அரசகாரியங்கள் அனைத்தும் புரிந்துவிட்டு, இரவில் கடற்கரை வழியே திருச்செந்தூர் சென்று அர்த்தயாம பூஜையைக் கண்டு களித்துவரும் நியதியை வழுவாது கொண்டிருந்தார்.

மலையாளத்தில் **பத்மநாபப் பிள்ளையன்** என்பவர் பூதப் பாண்டி முதலிய பகுதிகளை அப்போது ஆண்டு வந்தார். அக் காலத்தில் மந்திரவாதிகள் பலர் அங்கு இருந்தார்கள். அவர் கள் சிறுதேவதைகளை மந்திரத்தால் வசியஞ்செய்து பற்பல கருமங்களைப் புரிந்துவந்தார்கள். இத்தகைய மாந்திரீகர் களில் மிகவும் பெயர்பெற்றவர் **பொல்லாப் பிள்ளை ஆசான்** என்பவர். உள்ளபடியே பொல்லாதவர்தான் இவர். மலை யாள மன்னர் இவரை அழைத்து, "இலங்கையிலே கண்டி மன்னவருடைய புதல்வியைக் கொணர்ந்து தரவேண்டும்" என்று வேண்டினர். மந்திரவாதி அதற்கு இசைந்து சில தேவதைகளைக் கண்டிக்கு ஏவினர். அத்தேவதைகள் கண்டி சென்று, கன்னிமாடத்தில் துயின்றுகொண்டிருந்த அரச குமாரியைக் கட்டிலுடன் தூக்கிக் கொண்டு விண்வழியே சென்றுகொண்டிருந்தன.

ஞானியார், குலசேகரன் பட்டினத்தில், மூப்பனர் குளத் தில் கைகால்கள் கழுவிக்கொண்டிருந்தார். நல்ல நிலவு. வானத்தில் போகும் கட்டிலின் நிழல், நீரில் தெரிந்தது. ஞானியார் திருச்செந்தூர் சென்று இரவு பூசையைத் தெரி சித்து வந்து, அங்குள்ள பிள்ளையாரையும் வணங்குவது வழக்கம். குளத்தின் படியில் நின்றுகொண்டிருந்த அவர், இது சிறு தேவதைகளின் செயல் என்று அறிந்தார். தமது திருக்கரத்தினல் கட்டிலை இறங்குமாறு காட்டினர். தேவதை கள் அவருக்குமுன் கட்டிலுடன் அம் மாதரசியை இறக்கி வைத்தன.

ஞானியார் சிறிது ஜெபஞ் செய்தபின், கட்டிலில் துயிலும் அரசகுமாரியைக் கண்டு இரக்கமுற்ருர். நடந்த செயலைத் தமது திருவுள்ளத்தில் அறிந்துகொண்டார். அவளை மீண்டுங் கொண்டுபோய் கண்டியில் அரண்மனையில் விட்டு விடுமாறு அத் தேவதைகளுக்குக் கட்டளையிட்டார். இவருடைய அருட்டிறத்திற்கு அஞ்சிய அத்தேவதைகள் அவ்வாறே அம்மாதரசியை உரிய இடத்தில் சேர்த்துவிட்டு அஞ்சி யகன்றன.

மந்திர சத்தியால் இதைப் பொல்லாப் பிள்ளை ஆசான் அறிந்தார். பலப்பல துர்த்தேவதைகளை இவரைக் கொல்லும் பொருட்டு ஏவினுர். அக் கொடிய தேவதைகள் இவரிடம் வந்து, இவருடைய தவ வலிமையையும், முருகன் கருணைத் திறத்தையும் பார்த்துவிட்டு, நடுங்கி ஒடுங்கி வறிதே மீண்டு சென்றன.

மந்திரவாதி முடிவில் வயிரவரை ஏவினுர். வயிரவர் உக்கிர வடிவுடன் வந்தனர். ஞானியார் வயிரவரை நோக்கி "இனி நீர் அம்மந்திரவாதியிடம் போகக்கூடாது. இங்கேயே இரும்" என்று தனது வீட்டுக்குமுன் ஒரு பீடம் இட்டு அவரை அங்கேயே இருத்திவிட்டார். செந்திலாண்டவன் கருணை பெற்ற அவருடைய விருப்பப்படி வயிரவர் அங்கேயே தங்கிவிட்டார். இன்றும் இவருடைய குடும்பத்தார் இந்த வயிரவருக்கு வழிபாடு புரிந்து வருகின்ருர்கள்.

ஞானியாரைக் கொல்ல அனுப்பிய தேவதைகள் ஒன்றேனும் திரும்பி வராததைக் கண்ட பொல்லாப்பிள்ளை ஆசான் மருண்டார். மனங் கலங்கினுர். அவரும், பத்மநாபப் பிள்ளையன் என்ற மலையாள மன்னவனும் குலசை வந்து ஞானியாரைக் கண்டார்கள். ஞானியார் அவர்களை வரவேற்று இன்னுரை கூறி இனிய உணவுகளை வழங்கினுர். சிறிது நேரத்திற்குப்பின் மந்திரவாதியை அழைத்து, தமது வீட்டின் ஒரு அறையின் கதவைத் திறந்து பார்க்குமாறு கூறினுர். அவர் திறந்து பார்த்தார். அந்த அறையில் அவருடைய மனைவி மக்களைக் கண்டார். கலங்கினுர். அந்தோ என்று அலறினுர். ஞானியார் கதவை மூடி மறுபடியும் திறக்கச்

சொன்னுர். அவர்கள் அப்போது அங்கு காணப்பெற வில்லே.

பொல்லாப் பிள்ளேயாசானுக்கு ஞானியார் அறிவுரை கூறி, "உனது மனேவி மக்களே யான் மந்திரத்தால் இங்கு அழைத்ததைக் கண்டு நீ வாடி வருந்தியதுபோல் தானே கண்டி மன்னவன் மகளே அழைத்தால் அம் மன்னவன் வருந்துவான். ஆதலால் மந்திர சக்தியைத் தீயவழியில் செலுத்துவது முறையன்று. இனி அவ்வண்ணம் செய்யாதே. நல்வழியில் நடந்து நலம் பெறுவாயாக" என்று கூறி, போய் வருமாறு கட்டளேயிட்டார். வணங்கிய மன்னவனும் மந்திர வாதியும் திரும்பிச் சென்ருர்கள்.

ஞானியாருடைய பெருமை எங்கும் பரவியது. இவருடைய தளர்ந்த வயதைக் கண்ட செந்தில் காத்த மூப்பனுர், இனி இவரை அரச காரியத்தில் ஈடுபடுத்தி வருத்துவது பிழையென்று கருதி, பொன்னும் பொருளும் வழங்கி, அவரை வீட்டிலேயே இருந்து இளேப்பாறுமாறு செய்தான்.

ஞானியார் வயது முதிர்ந்து தளர்ச்சியுற்றிருந்த நாளிலும் நாள்தோறும் கடற்கரை வழியே செந்திலுக்குச் சென்று கந்தவேளே வழிபட்டு வருவதை நிறுத்தவில்லே.

ஒருநாள் இரவில் செந்திலுக்குச் சென்றுகொண்டிருந்தார். மழைக் காலம். நல்ல இருட்டு. ஞானியார் சற்று வழிதவறித் திகைப்புற்ருர். அவருக்கு முன்னே ஒருவர் விளக்கும் செயகண்டியும் கொண்டு, "ஐயா! நான் திருச்செந்தூருக்குச் செல்லுகின்றேன்; என்னுடன் வாரும்" என்று கூறி அவரை அழைத்துக் கொண்டுபோய் கோயில் ஷண்முக விலாசத்திற்கு முன்விட்டு மறைந்துவிட்டார். முருகனே வந்து தனக்கு வழிகாட்டினுர் என்று அறிந்த ஞானியார் உள்ளம் உருகினுர். "முருகா! உன் கருணேயிருந்தவாறு என்னே! மூவருந் தேவரும் காணுத உனது திருவடி ஏழையேன் பொருட்டு நிலத்தில் நடந்துவந்ததே? ஆ! ஆ! என்ன அதிசயம்! ஐயனே! இப்பாவியின் பொருட்டு நீ நடந்தனேயே! செயகண்டி தட்டிக்கொண்டு விளக்கேந்தி எட்டுக் கல் நடந்து

வந்தாயே! கருணைக் கடலே! கலியுக வரதா! பக்தி இல்லாப் பாவியேனிடம் உனக்கு இத்துணைக் கருணையிருந்ததே" என்று கூறியழுதார், அஞ்சலி செய்தார்.

கோயிலில், ஞானியார் வரவுக்காக அர்த்தயாம பூசையைச் செய்யாது காத்துக்கொண்டிருந்தனர். அவரைக் கண்டபின் அப்பூஜை நிகழ்ந்தது. ஆண்டவனை அன்புடன் வழிபட்டு அன்றிரவே ஞானியார் திரும்பிக் குலசேகரபட்டினஞ் சேர்ந்தார்.

ஒருநாள் திருச்செந்தூர்க் கோயிலில் ஞானியார் ஒரு புறம் நின்று எம்பெருமானைச் சேவித்துக் கொண்டிருந்தார். அந்த வட்டாரத்தை யாண்டுகொண்டிருந்த அரசியல் தலைவன் ஒருவன் கோயிலுக்கு வந்தான். அவனுடன் வந்த அதிகாரி ஒருவன், ஞானியாரைப் பார்த்து, அவர் பெருமையை அறியாது "ஓய்! அதிகாரி வருகின்றார். நீ ஏன் தூண் போல் நிற்கின்றாய்? விலகிப்போ" என்று கூறி அதட்டினான். ஞானியார் சற்று விலகி நின்றார். இதனை யறிந்த கோயிலில் உள்ளவர்கள் "ஐயா! அவர் ஞானியார். மிகவும் பெரியவர். அவரை விரட்ட வேண்டாம்" என்றார்கள். அதைக்கேட்ட அரச அதிகாரி, "ஓ ஞானியாரா? மழையை வரவழைப் பாரோ?" என்று கூறிப் பரிகசித்தான். சுவாமி தரிசனை முடிந்ததும் கோயிலைவிட்டுப் புறப்பட்டான்; வெளியே வந்தான். வந்தன இடியும் மழையும். அவனை அன்றிரவு, முழுவதும் வீட்டிற்குப் போகாவண்ணம் தடுத்தது. அப்போது அவன் ஞானியார் பெருமையை யுணர்ந்து அவர் பாத கமலங்களின் மீது வீழ்ந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டான்.

ஞானியாருக்கு நிரம்பவும் மூப்பு வந்துவிட்டது. செந்தில் மேய கந்தக் கடவுள் அவருடைய கனவில் சென்று, "அன்பனே! உனக்கு அதிக வயதாகிவிட்டது. நீ இனி தள்ளாடிக்கொண்டு செந்திலுக்கு வரவேண்டாம். இரவில் அர்த்தயாம பூஜை முடிந்தபின், நானே உன் வீட்டிற்கு வருவேன். என்னைத் தெரிசிப்பாயாக" என்று அருள்புரிந்தார். அது முதல் ஞானியார் இரவில் தமது பூஜை வீட்டில்

முருகனை வழிபட்டார். இவருடைய வீட்டிற்கு **முருகன் படுக்கை வீட்டுக் கோயில்** என்ற பெயர் ஏற்பட்டது. இன்றும் இது குலசையில் இருக்கின்றது. இவருடைய சந்ததியார்கள் இங்கு வழிபாடு புரிந்து வருகின்றார்கள்.

ஒரு நாள் ஞானியார் குலசையில் மிக்க தளர்ச்சியுடன் படுக்கையில் இருந்தனர். உச்சிப்பொழுது. நல்ல வெயில். அதே சமயத்தில் திருசெந்தூர்க் கோயிலில் ஞானியார் கொடிமரத்தின் அருகில் வழக்கமாக நின்று சேவிப்பது போல் செந்திலாண்டவனைச் சேவித்துக்கொண்டு நின்றார். எல்லோருங் காண அவர் திடீர் என்று மூலத்தானத்திற்குள் நுழைந்தார். "ஆ! ஆ! இது என்ன அநியாயம். இவர் மூலத்தானத்திற்குள் நுழைந்து போகின்றாரே? இது தகுமா? முறையா?" என்று அர்ச்சகர்கள் திகைத்து, அவர் பின் உள்ளே சென்றார்கள். ஞானியார் உருவம் உள்ளே முருகப் பெருமான் திருவுருவில் கலந்து மறைந்து விட்டது.

இதே சமயம் குலசேகரன்பட்டினத்தில் ஞானியாருக்கு ஆவி பிரிந்தது. பின்னர் அங்கிருந்து சிலர் அபிஷேக தீர்த்தங் கொண்டுபோகக் கோயிலுக்கு வந்து, ஞானியார் ஆன்மா சாந்தி பெற்றதாகக் கூறினார்கள். தாங்கள் அவரைக் கோயிலில் முருகன் உருவில் கலந்த காட்சியைக் கண்டதாகக் கூறி அதிசயித்து அவரைப் போற்றினார்கள். கோயில் அபிஷேக தீர்த்தங் கொண்டுபோய் ஞானியார் திருமேனிக்கு அபிஷேக ஆராதனை புரிந்து, எல்லோரும் மிக்க பயபக்தியுடன் குலசேகரன்பட்டினத்தில் ஒருபுறம் அடக்கம் புரிந்து, அங்கு சிறு சமாதிக் கோயிலும் புதுக்கினார்கள். அதற்கு இன்றும் வழிபாடு நடந்து வருகின்றது. கோயிலிலிருந்து, ஞானியார் சமாதிக் கோயிலுக்கு, முருகன் பேர் பொறித்த ஒரு குத்து விளக்கும், சில நிலங்களும் இனமாகக் கோயில் அதிகாரிகள் வழங்கினார்கள். அந்த விளக்கு இன்றும் அங்கு இருப்பதைக் காணலாம்.

இத்தகைய ஞானியார் அவர்கள் சமாதியையும், அவர் வாழ்ந்த வீடு என்ற படுக்கைக் கோயிலையும், அன்பர்கள் தெரிசித்துத் திருச்செந்தூர் முருகன் கருணையைப் பெறுவார்களாக.

## 74. வடமலையப்பப் பிள்ளையன்

இற்றைக்கு முன்னூறு ஆண்டுகளுக்குமுன் கிழக்கிந்தியக் கம்பெனியார்களாகிய ஆங்கிலேயர்களின் படை வன்மையாலும், சூழ்ச்சியாலும், தென்னாடு அவர்கள் வசப்பட்டு இருந்தது. அக்காலத்தில் அவர்களுடைய காரியஸ்தராக **வடமலையப்பப் பிள்ளையன்** என்பவர் இருந்தார். அவர் நெல்லை மாவட்ட மன்னவராக பெருமிதத்துடன் விளங்கினார்.

இவர் கார்காத்த வேளாள மரபினர்; பெரும் புலவர். தமிழ்ப்புலவர்களை ஆதரிக்கும் தயாள சிந்தையுடையவர். மச்சபுராணத்தைத் தமிழில் மொழிபெயர்த்தவர் என்றும் கூறுவர். செந்தில் மேவிய கந்த நாயகனைத் தமது குலதெய்வமாகக் கொண்டவர். இனிய பண்புகளை உடையவர். அடிக்கடி திருச்செந்தூர் சென்று, அமரர் போற்றும் குமரக் கடவுளை, மனமொழி மெய்களால் வழிபடுவார். "முருகா முருகா" என்று கூறி உருகா நிற்பார்.

அக்காலத்தில் தமிழ்நாடு, தக்க பேரரசர்களின்றி, பற்பல குறுநில மன்னர்களால், அச்சமும் குழப்பமும் மிகுந்து அமைதியின்றி இருந்தது. அப்பொழுது உலாந்தாக்காரர்கள் என்று வழங்கப்படும் டச்சுக்காரர்கள் கூட்டங் கூட்டமாக வந்து, துறைமுகங்களில் உள்ள ஊர்களில் கொள்ளையிட்டும், கடல்வழிச் செல்லும் மரக்கல மக்களுக்கு இடர் விளைவித்தும், கடற்கரையில் அமைந்துள்ள திருக்கோயில்களில் நுழைந்து மூலபண்டாரங்களையும், விக்கிரகங்களையும் கொள்ளையிட்டும் வந்தார்கள்.

ஒருமுறை இந்தக் கொள்ளைக் குழுவினர் திருச்செந்தூரில் இறங்கி, ஊருக்குள் சென்று, ஊர்நடுவே அமைந்திருக்கும் சிவக்கொழுந்தீச்சுரர் கோயிலில் கொள்ளையிட்டனர். அக்கோயிலின் முன் மண்டபத்தின் தூண்களில் மிக்க அழகுடன் அமைந்துள்ள கல் திருவுருவங்களின் கை, கால், மூக்கு முதலிய உறுப்புக்களையும் உடைத்தனர். பின்னர் கடற்கரையில் விளங்கும் முருகன் திருக்கோயிலில் நுழைந்து அங்

குள்ள பொருள்களையும் கொள்ளையிட்டனர். மூலத்தான சிலாமூர்த்தியையும் உடைத்தனர்.

பின்னர் ஆறுமுகப் பெருமானது செப்புத் திருவுருவம் அவர்களது உள்ளத்தை உருக்கியபடியால், அவ் வுருவத்திற்குத் தீங்குசெய்யாமல் தங்கள் மரக்கலங்களில் ஏற்றிக் கொண்டு புறப்பட்டனர். சிறிதுதூரம் சென்றதும், பெரும் புயலும், மழையும், இடியும், மின்னலும் தோன்றிக் கடல் கொந்தளிப்புற்றது. அதனால் மரக்கலம் தத்தளித்தது. டச்சுக்காரர் மதி கலங்கி நங்கூரமிட்டனர். அதனாலும் மரக்கலம் அமைதி பெறவில்லை. கடுங்காற்று வீசியது. மரக்கலத் தலைவன் மனம் கலங்கினான்.

திருச்செந்தூர்க் கோயிலில் நாம் எடுத்த ஆறுமுக விக்கிரகத்தின் மகிமையால் இந்த இடர் எய்தியதோ என்று கருதினான். தன்னுடைய ஏவலரை அழைத்து, "அந்த விக்கிரகத்தை எடுத்துக் கடலில் இடுக" என்று ஆணை யிட்டான். அவ்வாறு செய்தும் புயலின் கொடுமை குறையவில்லை. மரக்கலம் கடலின் கொந்தளிப்பால் தவித்தவாறே இருந்தது. மரக்கலத் தலைவன் மேலும் மருட்சியுற்று, அந்த விக்கிரகத்தைக் கடலில் எறிந்தும் இடர் நீங்கவில்லையே என்று வருந்தி மரக்கலத்தின் அடித்தட்டில் வந்து பார்த்தான். அங்கு ஆறுமுக விக்கிரகம் இருக்கக் கண்டான். வேலையாளை நோக்கிச் சினந்து, "மூடனே! நீ கடலில் திருநள்ளாற்றிலிருந்த நொண்டி விக்கிரகத்தையா எறிந்தனை? நான் இந்த ஆறுமுக விக்கிரகத்தை யல்லவா எறியச் சொன்னேன்! நீ எறிந்த விக்கிரகம் நாம் திருநள்ளாற்றில் கொள்ளையடித்த நொண்டி (நடராஜ) விக்கிரகம் ஆயிற்றே. தாமதிக்காமல் இந்த விக்கிரகத்தை எடுத்துப் போடு" என்று கட்டளையிட்டான். அவ்வாறு ஆறுமுகப் பெருமானைக் கடலில் இட்டவுடன், கடல் கொந்தளிப்பு நின்றது. டச்சுக்காரர் மரக்கலத்தைச் செலுத்திக்கொண்டு சென்றுவிட்டார்கள்.

இச்செய்தியை பிரான்ஸ் நாட்டுப் புலவர் **எம்.ரென்னல்** என்பவர் ஜெர்மன் தலைநகர் பெர்லின் நகரத்தில் ஆயிரத்து எழுநூற்று எண்பத்தைந்தாம் ஆண்டில் (1785) தான் ஒரு

டச்சு மாலுமியிடம் தெரிந்துகொண்ட ஒரு உண்மை நிகழ்ச்சியென்று வெளியிட்டிருக்கின்ருர்.

இந்த நிகழ்ச்சி 1648-ல் நிகழ்ந்ததென்றும் குறிப்பிட்டிருக்கின்ருர்.

திருச்செந்தூரிலுள்ள அடியார்களும், திரிசுதந்தராள் என்ற முக்காணியர்களும், கோயில் பூசிக்கும் போற்றிகளும், மூலத்திருவுருவம் உடைபட்டும், ஆறுமுகத் திருவுருவம் கொள்ளைக்காரரால் கவரப்பட்டும், திருவாபரணம் மூல பண்டாரங்கள் முதலியவைகள் சூறையாடப்பட்டும் இருப்பதைக் கண்டு திடுக்கிட்டார்கள். மனம் பதறினுர்கள். "முருகா முருகா" என்று கதறினுர்கள். ஊணும் உறக்கமும் துறந்து, குடும்பங்களையும் மறந்து, திருநெல்வேலிக்குச் சென்று, அங்கு பெருமிதமாக வீற்றிருக்கும் வடமலையப்பப் பிள்ளையன் அவர்களிடம் கூறி முறையிட்டார்கள்.

வடமலையப்பன் கேட்டு உள்ளம் வருந்தினுர். கண்ணீர் வடித்தார். தமது குல தெய்வமாகிய திருச்செந்தூர் முருகப் பெருமானுடைய திருக்கோயிலில் மூலத்தானத் திருவுருவம் சிலையினுலும், ஆறுமுகப் பெருமான் திருவுருவம் செம்பினுலும் உடனே செய்வதற்கு ஏற்பாடு செய்தார். சிற்ப வல்லுநர்களை அழைத்து, கல் எங்கே இருந்து எடுக்கலாம் என்று உசாவினுர். சிற்பக் கலைஞர் பொருநையாற்றின் (தாம்பிரபரணி) நடுவே உள்ள கல் சிறந்ததென்று கூறினுர்கள்.

வடமலையப்பன் அவர்களின் தாயாரை எல்லோரும் 'ஆச்சி' என்று மரியாதையாக அழைப்பர். அவ்வம்மையார் நாள்தோறும் பொருநையாற்றில் நீராடி நதியின் நடுவிலுள்ள ஒரு பாறையில் இருந்து சிவபூசை செய்வது வழக்கம். அதனுல் அப் பாறையை ஆச்சிப்பாறை என்று கூறுவர். சிற்பக் கலைஞர் கூறுவதை அறிந்த அம்மையார், புதல்வரை நோக்கி, நதியின் நடுவில் நாள்தோறும் தான் சிவபூசை செய்துவரும் பாறையிலிருந்தே சிலை எடுத்து திருவுருவம் செய்யுமாறு கட்டளையிட்டனர்.

பிள்ளையவர்கள் தாய் சொல்லைத் தலைமேற் கொண்டு, உறுதியும் வளமையுமுடைய அப் பாறையிலிருந்து சிலை

N. Latha



எடுத்துத் திருவுருவத்தைச் செய்வித்தார். பின்னர் தாயாருடைய வேண்டுகோளின்படி எஞ்சியுள்ள அப்பாறையில் முருகன் திருவுருவத்தைச் செதுக்கிவைத்தார். அது பின்னர் கோயிலாக அமைந்தது. அதுதான் இப்போது குறுக்குத்துறைக் கோயிலென்று வழங்கப்பெறுகிறது. அதுமுதல் ஆச்சிப்பாறை என்ற பெயர் மாறித் திருவுருவமாமலை என்ற திருப் பெயர் ஏற்பட்டது.

திருவுருவமாமலையிலிருந்து சிலை எடுத்து சிற்பிகள் உருவத்தைச் செய்துமுடித்தனர். செம்பினால் ஆறுமுக நயினார் திருவுருவத்தைச் செய்து முடித்தனர். இரு திருவுருவங்களையும் அலங்கரித்து மேளதாள முதலிய எல்லாவகை ஆடம்பரங்களுடன் எழுந்தருளப் புரிந்து ஊர்வலம் செய்வித்தனர். முதல் நாள் வீரராகவபுரத்தில் சாலைக் குமாரசாமி கோயிலில் திருவுருவங்களுடன் தங்கினர். மறுநாள் பாளையங் கோட்டையில் தங்கினர்.

வடமலையப்பன் அவர்கள், பரிவாரங்களுடன் அன்று இரவு துயில்புரிந்தனர். அவர் கனவில் கடலில் மூழ்கிக் கிடக்கும் செந்தில் ஆறுமுகப் பெருமான் காட்சி அளித்து, திருச்செந்தூர் கோயிலின் கிழக்கு வாயிலின் நேரே அமைந்துள்ள, வதனாரம்ப தீர்த்தக் கட்டத்தைக் காட்டி, அதற்கு நேரேயுள்ள கடலில் சிறிது தொலைவில் ஒரு பாறையின்மீது தான் படிந்து கிடப்பதையும், அதற்கு நேர் கடல் அலைமீது எலுமிச்சம்பழ மாலை ஒன்று மிதப்பதையும், அதற்குமேல் விண்ணில் இரு கருடர் வட்டமிடுவதையும் காட்டி, அங்கு வந்து தன்னை எடுத்துக் கோயிலுள் எழுந்தருளச் செய்யுமாறு கூறி மறைந்தருளினார். கனவு தெளிந்தெழுந்து முருகன் திருவருளை நினைந்து ஆடினார். கண்ணீர் மல்கினார். திசையை நோக்கித் தொழுதார். அருகில் இருந்த புலவர்களிடம் கூறி மகிழ்ந்தார். செப்புத் திருவருவத்தை அவ்விடமே வைத்துவிட்டு, மூலத்தானத் திருவுருவத்தை மட்டும் எடுத்துக்கொண்டு விரைந்து திருச்செந்தூர் வந்தார்.

பரிவாரங்களுடன் படகுகளை அமைத்துக்கொண்டு கடலில் புறப்பட்டனர். கிழக்கு நோக்கிச் சிறிது தூரம் சென்றவுடன் ஒரு இடத்தில் எலுமிச்சம் பழ மாலை மிதந்துகொண்

டிருந்தது. அதற்கு நேரே இரு கருடப் பறவைகள் வட்ட மிட்டுக்கொண்டு இருந்தன. இந்த அடையாளங்களைக் கண்டவுடன் பிள்ளையன் பிள்ளையவர்கள் "முருகா முருகா" என்று ஓலமிட்டனர். ஓடங்களை நிறுத்தி ஓடக்காரர்களை கடலில் மூழ்கித் தேடச் செய்தனர். திருவுருவம் கிடைக்க வில்லை. பிள்ளையவர்கள் திகைத்தனர். முருகனை நினைத்துக் கண்ணீர் வடித்தனர். இறுதியில் உறுதியுடன் தானே கட லில் குதித்துத் தேடினர். ஒரு திருவுருவம் தட்டுப்பட, அதனைத் தண்ணீர்க்குமேல் எடுத்தனர். அது நடராஜ மூர்த்தியாக இருந்தது. அதனை ஓரிடத்தில் வைத்துவிட்டு, மீண்டும் கடலில் மூழ்கித் தேடினர். ஆறுமுக நயினர் திருவுருவும் கிடைக்க எடுத்து, கரைக்குக் கொண்டுவந்து சேர்த்தனர்.

நடராஜமூர்த்தியையும் ஆறுமுக நயினரையும் மூலத் தான மூர்த்தியையும் கோயிலில் பிரதிஷ்டை செய்து, கொல் லம் ஆண்டு 829 தை 29 (கி.பி. 1653)ல் கும்பாபிஷேகம் செய்தனர். பல்லாயிரக்கணக்கான மக்கள் "ஹர ஹர" என்று முழக்கம் செய்து அஞ்சலி கூப்பிக் கண்ணீர் பெருக்கி வழிபட்டார்கள். நடராஜ விக்கிரக பீடத்தில் **திருநள்ளாறு நடராஜர்** என்று பொறிக்கப்பட்டு இருப்பதனல், அம் மூர்த்தி திருநள்ளாற்றிலிருந்து கொள்ளைக்காரர் கொண்டு வந்து கடலில் போட்டிருக்க வேண்டுமென்று ஊகித்துக் கொண்டனர். பிள்ளையன் பிள்ளையவர்களை எல்லோரும் கொண்டாடிப் பாராட்டினர்கள்.

பின்னர் பிள்ளையவர்கள் தாம் செய்த ஆறுமுக நயினர் செப்புத் திருவுருவத்தைப் பாளையங்கோட்டை வெங்கு பாச்சா அவர்களின் திரிபுராந்தகேசுவரர் என்ற சிவாலயத் தில் பிரதிஷ்டை செய்து, நித்திய நைமித்திகங்களுக்கு ஏற்பாடு செய்தனர். அத் திருவுருவத்தை இன்றும் அங்குக் காணலாம்.

கடலில் இருந்து ஆறுமுகப் பெருமானை எடுத்த நாள் தைமாதம் புனர்பூசமாகும். ஆதலின் திருச்செந்தூரில் நடைபெறும் மாசிப் பெருவிழாவில் ஏழாம் நாள் புனர்பூசம் கூடிய நன்னளில் ஆறுமுகப் பெருமானை எழுந்தருளப்புரிந்து

ஷண்முக விலாசத்தில் இருத்தி, அபிஷேக ஆராதனைகள் செய்து, வெட்டிவேர் விமானத்தில் எழுந்தருளச் செய்து சகலவிதமான மேள தாளங்களுடன் தூண்டி விநாயகர் கோயிலுக்கருகிலுள்ள பிள்ளையன் பிள்ளையவர்களின் மண்டபத்தில் எழுந்தருளப் புரிவார்கள். நமது ஆறுமுகப் பெருமான் அம்மண்டபத்தில் அன்று பகல் முழுவதும் இருந்து அடியார்க்கு அருள்புரிவர்.

ஆறுமுகப் பெருமான் உருத்ர மூர்த்தமாக நின்று உலகங்களை எல்லாம் அழித்தற் றொழிலைச் செய்கின்றார் என்ற குறிப்பை உணர்த்தும் பொருட்டு, ஏழாம் திருநாளன்று மாலை, பெருமானுக்குச் சிவப்புப் பட்டு, சிவப்பு மலர் புனைந்து, செம்பொன் விமானத்தில் எழுந்தருளப் புரிந்து பிள்ளையவர்கள் மண்டபத்திலிருந்து புறப்பாடு செய்து ஊர் வலம் புரிவர்.

பிரமதேவராக நின்று உலகங்களைப் படைத்தற்றொழிலை முருகப்பெருமானே செய்கின்றார் என்பதை உலகம் உணர்ந்து உய்யும்பொருட்டு, ஆறுமுகப் பெருமானை வெள்ளை விமானத்தில், வெண்பட்டு, வெண்ணிற மலர்களுடன் அலங்கரித்து, எட்டாந் திருநாளன்று விடியற்காலையில் ஊர்வலம் புரிவார்கள்.

திருமாலாக நின்று உலகங்களை எல்லாம் காத்தற் றொழிலைப் புரிபவர் அப்பரமனே என்பதை உணர்த்தும் பொருட்டு, எட்டாம் திருநாளன்று நண்பகல் பெருமானைப் பச்சை விமானத்தில் எழுந்தருளப் புரிந்து, பச்சைப் பட்டு பச்சை மாலைகள் சாத்தி, மிகுந்த கோலாகலத்துடன் மாலை திருக்கோயிலுக்குள் சேர்ப்பர். அப்பொழுது அடியார்கள், "வேல் வேல்" என்று முழக்கும் ஒலி விண்ணைப் பிளக்கும். அப்போது பெருமானுடைய காட்சி கண்கொள்ளாததாக அமைந்திருக்கும்.

பொன்னுரு வமைந்த கஞ்சப் புங்கவ னாகி நல்கும்
என்னுரு வாகிக் காக்கும் ஈசன்போ லிறுதிசெய்யும்
மின்னுரு வென்ன யார்க்கும் வெளிப்படை போலு மன்னன்
தன்னுரு மறைக ளாலுஞ் சாற்றுதற் கரிய தன்றே.

என்ற கந்தபுராணத் திருவிருத்தத்தால் அயன் அரி அரன் என்ற மூவரையும் அதிட்டித்து முத்தொழிலையும் புரிந்தருள் பரம்பொருள் முருகவேளே என்பதை உணர்க. எனவே சிவப்புச் சாத்துபடி, வெள்ளைச் சாத்துபடி, பச்சைச் சாத்து படி என்ற மூன்று அலங்காரங்களால் முறையே உருத்திரர், பிரமர், திருமால் என்ற மூவுருவும் முருகவேளே என்பதை மாசிப் பெருவிழாவிலும், ஆவணித் திருவிழாவிலும், 7-ம் 8-ம் நாட்களில் உலகிற்கு உணர்த்துகிறார்கள்.

இவ்வாறு வடமலையப்பன் பிள்ளையவர்கள் கந்தவேளைக் கடலிலிருந்து எடுத்து, பெரும் புகழும் புண்ணியமும் பெற்று நெடுங்காலம் வாழ்ந்து, முருகப் பெருமான் திருவடி சார்ந்தார்.

## 75. தெய்வீக வாழ்க்கையும் சிவானந்தரும்

சிவம்—அசையாத இமயம்; ஆனந்தம்—அசைத் தாடும் அருட்சக்திக் கங்கை. அந்தச் சிவசக்தி, சிவானந்த வெள்ளமாய், இமயத்தின் அடிவாரத்தில் பொங்கிப் பொசிந்து, உலகெங்கும் அருள் வெள்ள மாய்ப் பாய்ந்தோடி, உலகுயிரை அருள்மய மாக்கு கிறது.

எல்லாம் வல்ல இறைவன் கருணைத் திறத்தாலே, ஒரு தெய்வீக புருஷரின் பெருமைத்திறத்தை நினைவு கூற, இங்கு குழுமியிருக்கின்றோம். மனிதர்களாகப் பிறந்த நாம், எந்த நிலையில் நின்றாலும், உண்மை மனிதன் பெறத்தக்க நிலையைப் பெறவேண்டும், அதற்கே முயலவேண்டும்.

### மனிதனும் நினைப்பும்

'மனிதன்' என்ற சொல்லுக்கே, நினைப்பவன் என்பது பொருளாகும்! அவன் சிந்திப்பவன்; நினைத்தற்குரியதையே மனிதன் நினைக்கவேண்டும். அஃதன்றிப் பொன்னையே, பொருளையே, மனைவியையே, மக்களையே நினைத்து நினைத்து, வீணே அழுந்தி அழுந்திச் சாவதன்று; அது, மனிதத் தன்மை

யாகாது. உணவு, உறக்கம், அணி, மணி, ஆடல், பாடல், இவற்றில் மனதைப் பறிகொடுக்காது, கடைத்தேறும் வழிக்கு நினைக்க வேண்டியதை நினைப்பவன்தான் மனிதன்.

## பிறந்த பயன்

சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருப்பாண்டிக்கொடுமுடி என்னும் திருத்தலத்திற்குச் சென்றிருந்தார்: அங்கே சிவ பிரானைத்தொழுது, அருட்கண்ணீர் மல்க, "என்பெருமானே! இன்றைக்குத்தான் நான் பிறந்தேன்" என்றார். இதன் உட்பொருளை, நாம் சிறிது சிந்தித்துப் பார்க்க வேண்டும். சுந்தரமூர்த்தி அடிகள் அவதரித்து, அப்போது 14-ஆண்டு களுக்கு மேலாயின. அவ்வாறிருந்தும், "இன்றைக்குத் தான் நான் பிறந்தேன்" என்றார். இதன் பொருளென்ன? உடம்பு பிறந்ததாலே மட்டும், அது பிறவியாகிவிடாது; பிறந்ததன் பயன், பிரானடி சேர்தலே.

இக் கருத்தை அப்பரடிகள் அழகாக விரித்துரைக் கின்றார்.

"அருந்துணையை அடியவர்தம் அல்லல் தீர்க்கும்
அருமருந்தை அகல்ஞாலத் தகத்துள் தோன்றி
வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும் விட்டு
வான்புலன்கள் அகத்தடக்கி மடவாரோடும்
பொருந்தணைமேல் வரும்பயனைப் போக மாற்றிப்
பொதுநீக்கித் தனைநினைய வல்லோர்க் கென்றும்
பெருந்துணையைப் பெரும்பற்றப் புலியூரானை
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே."

மேலும், சுந்தரமூர்த்தி சுவாமிகள், "மற்றுப் பற்றெனக் கின்றி, நின் திருப்பாதமே மனம் பாவித்தேன்; பெற்றலும் பிறந்தேன், இனிப் பிறவாத தன்மை வந்தெய்தினேன்" என்று பெருமானை அகங்குழையப் பாடுகின்றார்.

"நின் திருப்பாதமே பாவித்தேன்; பிறவாத தன்மை வந்தெய்தினேன்" என்கின்றார் அடிகள்.

## தெய்வீக வாழ்க்கை

அருள் தன்மை கைவரப் பெறுவதே, தெய்வீக வாழ்க்கை. இந்த அருள்நெறித் தெய்வீக வாழ்க்கை, இல்லறம், துறவறம் இரண்டிலும் கைவரப் பெறலாம். அத்தகைய அருள் நெறியைப் பெற நாம் என்ன செய்ய வேண்டும்? பெரியவர்களாக வேண்டும். சிறுமையை அழிக்கவேண்டும். தன்னலத்தைத் துறக்கவேண்டும். தன்னைப் பிறரில் கண்டு, பிறரைத் தன்னில் கண்டு, சம நோக்குக் கொள்ள வேண்டும்; அதுதான் அருள் நெறி வாழ்க்கையின் அடிப்படையாகும்.

## பெரியவர் யார் ?

நாம் பெரியவர்களானுல்தான், அந்த அருள்நெறி கைவரும். நாம் படித்ததனுல் மட்டும் பெரியவர்களாகிவிட முடியாது. "கற்றதனுல் ஆய பயன் என்கொல்" என்கின்ருர் திருவள்ளுவர். மர பீரோவில் உள்ள புஸ்தகங்களை எல்லாம், இந்த மாமிச பீரோவில் ஏற்றிக் கொள்வதால் மட்டும், ஒருவன் பெரியவனுகிவிட முடியாது. பிறப்பினுலே, செல்வத்தினுலே, ஒருவன் உயர்வு பெறமுடியாது. நிறம், கல்வி, உத்தியோகம் இவற்ருலும் ஒருவன் உயர்ந்துவிட முடியாது.

உதாரணத்துக்கு ஒன்று சொல்வேன் : தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தில் ஆண்டு விழா கொண்டாடினுர்கள். மண்டபத்தின் நுழைவாயிலில் 12 அடி நீளத்தில் ஒரு தாமரை மலர்த்தோரணங் கட்ட முனைந்தனர். ஒரு குட்டையில் ஆறு அடித் தண்ணீரில் தாமரைத் தண்டு இருந்தது. அதைக் கொண்டு வந்தனர். நீளம் போதவில்லை. இருவர் அத் தண்டை நீட்ட, இரு முனையினின்றும் பிடித்திழுத்தால் தண்டு நீளுமோ? நீளாது; அறுந்து போகும். அதை நீட்டக் குட்டையில் 12 அடி உயரத்துக்குத் தண்ணீரைப் பாய்ச்சிக் கட்டவேண்டும். அப்போது, தாமரைத் தண்டு தானே உயரும், "ஏ! தாமரைத் தண்டே, நீ பன்னிரண்டு அடியாக உயர்" என்று சொல்லவேண்டும்? இதுபற்றியே திருவள்ளுவ

தேவர், "வெள்ளத் தனைய மலர் நீட்டம்; மாந்தர்க்கு உள்ளத் தனையது உயர்வு" என்கின்றனர். சிறு பிள்ளைக்குக் கூட விளங்கச் சொல்லுகின்றார். மலையாளத்தில் வெள்ளம் என்ற சொல்லுக்குத் தண்ணீர் என்று பேயர். தமிழ்ச் சொற்களெல்லாம் அங்கு புகுந்து விட்டன. எனவே வெள்ளம் உயர்ந்தால், மலர் உயரும். அதுபோலக் கள்ளமற்ற சமநோக்கால், உள்ளம் உயரும்.

**அனைத்தும் வாழ்க!**

எல்லோரும் வாழ வேண்டும் என்று நினைக்கும் உள்ளந்தான், உயர்ந்த பண்பட்ட உள்ளம். தான் மட்டும் வாழ நினைப்பது குறுகிய உள்ளம். இராமலிங்க சுவாமிகள்,

"அப்பா நான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம் நான் அன்பு செயல் வேண்டும்"

என்று, தமது உள்ளத்தின் விரிந்த மனப்பான்மையை உருகிப் பாடுகின்றார். மகாகவி பாரதியாரும், ஜாதிச் சழக்குகளுக்கெல்லாம் அப்பாற்பட்ட அன்புப் பெருக்கால், "காக்கை குருவி எங்கள் ஜாதி" என்று தமது உள்ளத்தின் விரிவை இசைக்கின்றார். பரந்த அன்பில், தன்னலம் நீங்கிய பொதுநல முனைப்பில், சமரச நோக்கில், அருளன்பில் தோய்ந்து உள்ளம் விரிய வேண்டும்.

அடுத்தவனைப் பற்றிப் பொறாமை உதாவது. பிறருடைய செல்வாக்கைக் கண்டு நாம் அழுக்காறு கொள்ளலாகாது. அடுத்தவன் பதினாயிரத்துக்குக் கார் வாங்கினால், பங்களாக் கட்டினால், அதைக்கண்டு நாம் புழுங்கிப் பெருமூச்செறிந்து அழுக்காறு எய்தலாகாது.

அழுக்காறு தொலையவேண்டும். அகங்கார மமகாரம் அறவே நீங்கவேண்டும்.

"எனதும் யானும் வேறாக எவரும் யாதும் யானாகும்
இதய பாவனாதீதம் அருள்வாயே"

என்கின்றார் அருணகிரிநாதர்.

நீ வேறு நான் வேறு என்ற அகங்கார மமகாரம் வேரற ஒழிந்தாலே மனம் விரியும். "நம" என்ற பதத்துக்கு, ம-என்னுடையது; ந-இல்லை; என்பது பொருள். "என்னுடையது இல்லை; எல்லாம் ஆண்டவனுடையது" என்ற எண்ணத்தோடு, ஆண்டவன் திருவடியில் அருச்சிக்கவேண்டும். இக் காலத்தில், இவ்வாறு பொருளறிந்து யார் அருச்சிக்கிறார்கள்? இதைப் பற்றியெல்லாம் நாள் விஸ்தாரமாய்ச் சொல்லவேண்டும். விரிவஞ்சி விடுகிறேன். உள்ளத்தையே ஆண்டவன் திருவடியில் வைத்துவிட வேண்டும்.

"பாதமலர் மீது போதமலர் தூவி
பாடுமவர் தோழத்—தம்பிரானே"

என்கின்றார் அருணகிரியார்.

## பற்றற வேண்டும்

நீங்கள், 'என்னுடையது' என்பதெல்லாம் ஆண்டவனுடையது. 'என்னுடையது' என்போர்க்கு முக்தி உலகில் இடம் கிடையாது. ஏற்றவர்க்கு இட்டது எங்காயினும் வரும்.

உதாரணத்துக்கு ஒரு சிறு கதை: ஒரு கிழவி; அவள் படுபாவி; தருமமே செய்தறியாதவள். நரகக் குழிக்குப் போய்விட்டாள். கரையேற முடியாது தத்தளிக்கிறாள். "என்னைக் கரையேற்ற உதவுங்கள்" என்று அண்டினோரை எல்லாம் கேட்கிறாள். முடிவில் ஒரு தேவதூதன் வருகிறான்.

—"அடீ கிழவி நீ ஏதாவது தருமம் செய்திருக்கிறயா?"

"இல்லை".

தேவதூதன் :—பிச்சைக்காரனுக்குக் காசு போட்டிருக்கிறயா?

கிழவி :—ஆமாம் நினைவு வருகிறது. ஒருமுறை கண்ணு தெரியாத பிச்சைக்காரன் ஒருவனுக்கு 5-காசு பிச்சை போட்டேன்; உடனே பதிலுக்கு அவன் கையிலிருந்த 50-காசை எடுத்துக் கொண்டேன்.

தேவதூதன் :—கிழவி] நீ கூட்டுப் பிரார்த்தனைக்குப் போவதுண்டா?

கிழவி—எட்டிக்கூடப் பார்த்ததில்லை! அதைச் சொன்னாலே எனக்குப் பிடிக்காது. அது வேலையில்லாத வெட்டி ஆசாமிகள் முணு முணுக்கும் கூட்டம் என்று ஒதுக்கி விட்டேன்.

தேவதூதன்:—சரி, உனக்கு மோட்சமே இல்லை; நினைத்துப்பார். வேறு ஏதாவது தான தருமம் செய்திருக்கிறாயா?

கிழவி:—ஆமாம், ஞாபகம் வருகிறது. பத்துக்காசுக்கு ஒரு சீப்பு வாழைப்பழம் 'சிப்பாக' வாங்கினேன். நல்ல பழங்களை எல்லாம் உள்ளே தள்ளி விட்டேன். ஒரே ஒரு வாழைப் பழம் பாதி அழுகியும் பாதி அழுகாமலும் இருந்தது.

அழுகிய பழம் உடம்புக்குக் கெடுதல் என நினைத்து, அதை ஒரு பிச்சைக்காரனுக்குக் கொடுத்தேன்.

தேவதூதன்;—சரி, அப்படியானால் உனக்கு விடுதலை தருகிறேன். சிறிதாவது தருமம் செய்திருக்கிறாய் அல்லவா?

கிழவி:—தங்கள் இச்சை, நடக்கட்டும்.

தேவதூதன்:—சரி இதுதானா அந்தப்பழம்? இந்தப் பழத்தின் ஒரு பாதியை நான் பிடித்துக் கொள்ளுகிறேன்; மற்றொரு பாதியை நீ பிடித்துக்கொள்; நழுவ விடாதே, உன்னைக் கரையேற்றுகிறேன்.

தேவதூதன், கிழவியை இழுத்துக் கரை ஏற்றினான். அந்த நரகக் குழியிலிருந்த மற்றும் நாலைந்துபேர், இதைப் பார்த்தனர்; கிழவியின் காலைப் பிடித்துக்கொண்டனர். தேவதூதன் தூக்க, கிழவியும் அவள் காலைப் பிடித்திருந்த பிறரும் ஒருவர் பின் ஒருவராய்த் தொங்க, மேலே சென்றனர்.

இதைப் பார்த்தாள் கிழவி. என் காலைப் பிடித்து எதற்காகத் தொங்குகிறீர்கள் என்றாள். "ஏதோ உனக்குக் கிடைக்கும் தருமத்தில் எங்களுக்கும் ஒரு துளி கிடைக்காதா" என்றுதான் என்றனர். "அது என்னுடைய பழமல்லவா? உங்களுக்குப் பங்கேது?" என்றாள் கிழவி. தேவ

தூதன் பார்த்தான். "கிழவி! இங்கே கூடவா 'எனது, உனது' என்கிறாய். நீ தருமமாய்க் கொடுத்துவிட்ட பழம் உனக்கு எப்படிச் சொந்தமாகும்? ஆதலால், நீ மீண்டும் நரகக் குழிக்கே போகக் கடவாய்" என்று கூறிப் பழத்தை விட்டுவிட்டான். கிழவி நரகத்தில் விழுந்தாள்.

ஒருவன், தான் விலைக்குவிற்ற வீட்டை, "இது என் வீடு; மூன்று வருஷத்திற்கு முன்னே விற்றுவிட்டேன்" என்பான். அவ்வளவு ஆசை; பற்று.

## அனைத்தும் நானே

இந்த, "எனது", "யான்" என்பதை விடல் வேண்டும். நமது உடம்பு, வாக்கு, உயிர், உடைமை அனைத்துமே சிவன் தந்த உடைமை. ஆண்டவனுக்கே அவை அர்ப்பணமாக வேண்டும். நான் என்ற அகங்கார மமகாரங்கள் அகல வேண்டும். சராசரம் அனைத்தும் "நானாக" பாவிக்க வேண்டும்.

அந்த அருள் நிலை வாழ்க்கைக்குத்தான், தெய்வீக வாழ்க்கை எனப் பெயர்.

## விரிந்த உள்ளம்

நமது மனைவி, மக்கள், நண்பர் சந்தோஷமாயிருந்தால், அவர்களைக் கண்டு நாமும் உவக்கிறோம். நான் வாங்கிக் கொடுக்கும் புதிய ஆடை அணிகளை மனைவியோ, மகளோ, குழந்தையோ அணிந்துகொண்டு உலாவினால், அதில் எனக்கோர் தனி இன்பம் உண்டாகிறது. அதாவது அவர்கள் சந்தோஷம் என் களிப்பாகிறது. உலகத்திலுள்ள எல்லா உயிரையும் நாமாகநினைத்துவிட்டால், துன்பமேது? துயரேது? அதுதான் விரிந்த உள்ளம் படைத்த பெரியவர்களாக வழி.

## எல்லோருக்கும் அருள்

இராமலிங்க சுவாமிகள் ஓரிரவில் நடராசப் பெருமானின் சந்நிதானத்தில் நின்று மனமுருகித் தனக்கு "அருள் கிடைக்கவில்லையே" என்று அழுதாராம். அடியார் அழ ஆண்டவன் பார்த்துக்கொண்டிருப்பானா? அழுதழுது அருட்

கண்ணீர் மல்கி, அயர்வுற்ற இராமலிங்கரை நடராஜப் பெருமான் தூக்கினார்; இராமலிங்கரின் ஊனிலே உயிரிலே உணர்விலே உடம்பிலே இரண்டறக் கலந்துவிட்டார்; ஆனால், இராமலிங்கரோ முன்னிலும் கூடுதலாய் அழுதார். "பக்தனே! ஏன் இன்னும் அழுகிறாய்" என்று கேட்டார், நடராஜப் பெருமான். "எம்பெருமானே, சிற்சபேசா! நான் பெற்ற இந்த இன்பம் பிறருக்குக் கிடைக்கவில்லையே என்றுதான் இப்போது அழுகிறேன்" என்றார் இராமலிங்கர். 'இது உங்களுக்கு எப்படித் தெரியும்? நேரில் பார்த்தீர்களா' என்று கேட்டுவிடாதீர்கள். இராமலிங்கரே அநுபவத்தைச் சொல்லுகிறார்:

"பாதி யிரவி லெழுந்தருளிப் பாவி யேனை
யெழுப்பியருட்
ஜோதி யளித்தென் னுள்ளகத்தே சூழ்ந்து கலந்து
துலங்குகின்றாய்
நீதி நடஞ்செய் பேரின்ப நிதிதான் பெற்ற
நெடும்பேற்றை
ஓதி முடியா தென்போலிவ் வுலகம் பெறுதல்
வேண்டுவனே."

### விரிந்த மனம்

'நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்று, உள்ளம் விரிவடைந்த அருட்பெரியார் எண்ணுவர். எனதும் யானும் போக வேண்டும். அவ்வாறு பற்றற்றோர் முத்தி யடைவர்.

உள்ளத்தை விரித்துக்கொண்டே பெரியோர் முத்தி யடைவர்; பிறவிப் பெருங்கடல் நீந்துவர். உள்ளத்தை விரிக்காதார், சுருங்கிய உள்ளம் படைத்தவர்கள்; பிறவிக் கடல் நீந்தமாட்டார்கள்.

### விரிதலும் குவிதலும்

நாகப்பட்டணம் துறைமுகத்தில் 12 பாய்க்கட்டிப் படகுகள் நின்றன. அவற்றில் 4 படகுகளின் பாய்மரச் சேலைகள் விரிந்திருந்தன. எஞ்சிய 8 படகுகளின் பாய்கள் சுருண்டு குவிந்திருந்தன. அப்போது காற்று ஒன்றுபோலவே

எல்லாப் படகுகளின் மீதும் வீசிற்று. விரிந்த பாயுடைய 4 படகுகளும் கடலில் நகர்ந்து பிரயாணமாயின. ஆனால், குவிந்த பாயுடைய படகுகள் இருந்த இடத்திலேயே நின்றன. நகரவில்லை. எல்லாப் படகுகளுக்கும் காற்று ஒன்று போலவே வீசிற்று. எனினும் நகர்ந்த படகுகள் நான்கு. நகராத படகுகள் எட்டு. அதற்காகக் காற்றையா கோபிப்பது?

## அருள் வாழ்க்கை

எனவே, எல்லா உயிர்களும் வாழவேண்டும்; அதில் நானும் கலந்து இன்புறவேண்டும் என்று கருதவேண்டும். விரிந்த உள்ளம்படைத்த பெரியவர்களே, பிறவிக்கடல் நீந்தி அருள் வாழ்க்கை வாழ்ந்தவராவார்கள். என் மகன், என் மனைவி, என் மக்கள், நான், நான் என்று சுயநலத்தால் உள்ளத்தை விரிப்பவர்கள், விலங்கு வாழ்க்கை வாழ்பவர் ஆவர். நமது உள்ளத்தில் ஆசை மலர்ந்து, அது அன்பாய் மாறி, அருளாய்ப் பழுக்கட்டும். ஆசை, விலங்கு வாழ்க்கை; அன்பு, மனித வாழ்க்கை; அதற்குமேல் வரும் அருள் வாழ்க்கை, தெய்வீக வாழ்க்கையாகும்.

## சிவானந்த இமய கங்கை

அசையாத இமயத்தில் அசைந்து கொண்டிருக்கிறது அருட் கங்கை. இமயம் அசைவற்றறு; நிலைத்து நிற்பது; அது அசையாத சிவம். கங்கை அசைந்தாடும் அருட் சத்தி; ஆனந்த சக்தி. ஏதாவது ஒன்றுதான் அசையவேண்டும்; மற்றொன்று அசையாதிருக்க வேண்டும். ரயில் வண்டியும், தண்டவாளமும் சேர்ந்து அசைந்தால், அதிலிருப்போரின் கதி என்னாகும்; இந்த இமய சிவம், ஆனந்த கங்கையைப் பொழியும் சிவானந்தமாய், உலகெங்கும் சுடர்விடுகிறது. இந்தச் சிவானந்தப் பெருவெள்ளம் பிறவிப் பயனைப் பெறுதற்கு உறுதுணையாய் நின்று, மாந்தரை அருளின்பத்திற்கு இட்டுச் சென்று ஈடேற்ற வல்லது.

## 76. கல்வி

கல்வி என்ற சொல், தோண்டுவது என்ற பொருளை யுடையது. கல்லுதல்—தோண்டுதல். எதனைத் தோண்டு வது? அறியாமையை அகழ்ந்து எடுப்பது கல்வியின் தன்மை.

செம்புக்குக் களிம்பு அநாதியே உண்டு. அதுபோல ஆன்மாவுக்கு அநாதியே ஆணவமல மறைப்பு உண்டு. களிம்பு நீங்கினால், செம்பு தங்கம் ஆவதுபோல, ஆணவ மல நீக்கம் பெற்றவுடன், சீவன் சிவமாகும்.

"சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அத்தன்" —திருவாசகம்

ஆன்மா, சித்துப் பொருள். சித்து—அறிவு. ஆன்மாவின் இயல்பு அறிவு. அந்த அறிவை, அறியாமை மறைத்துள்ளது. அறியாமை நீங்கிய மாத்திரத்தில், ஆன்மாவின் இயல்பு ஆகிய அறிவு வெளிப்படுகின்றது.

ஒரு உதாரணம் கூறுகின்றேன். அரிசி வெண்மையாக இருக்கவேண்டும் என்று நாம் கருதுகின்றோம். அவ்வாறு கருதிய நாம் அரிசிக்கு வெண்மை வர்ணம் பூசுகின்றோமா? இல்லை; ஏன்? அரிசியினுடைய சொந்த நிறம் வெண்மை. அந்த வெண்மை நிறத்தைத் தவிடு மறைத்திருக்கின்றது. தவிடு நீங்கினால், அரிசியின் இயற்கை நிறமாகிய வெண்மை வெளிப்படும்; நமது நோக்கம் அரிசி வெண்மையாக வேண்டு மென்பது. நாம் அதற்குச் செய்யும் முயற்சி என்ன? அரிசியை உலக்கையிட்டுத் தீட்டுகின்றோம். அவ்வண்ணம் தீட்டு வதனால், அரிசியை மறைத்திருக்கின்ற தவிடு நீங்குதலே யாகும்.

இதுபோல், ஆன்மாவை மறைத்திருக்கும் அறியாமை யாகிய தவிடு நீங்கினால், ஆன்மாவின் இயல்பாகிய அறிவுப் பிரகாசம் வெளிப்படும்.

நல்ல நூல்களைக் கற்பதனால், அறியாமை நீங்கி அறிவு தலைப்படும்.

"தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு"

என்கின்றார் திருவள்ளுவர்.

கல்விச் செல்வத்திற்குச் சமானம் எதுவும் இல்லை. ஒரு அரிய கருத்தைக் கூறுகின்றேன். ஒரு ஏழை பணக்காரனாக ஆனான். பணம் நிலத்தினின்றும் விளையவில்லை; வானத்திலிருந்தும் பொழியவில்லை. பின்னர் அவனிடம் பெரும் பணம் எவ்வாறு குவிந்தது? பலரிடம் சிறிதுசிறிதாக இருந்த பொருள் அவனிடம் மொத்தமாகக் குவிந்து சேர்ந்தது; ஒரு பக்கம் மேடாயிற்று என்றால், மற்றொரு பக்கம் பள்ளமாயிற்று என்று காண்கிறோமல்லவா? அதுபோல், ஒருவன் பெரும் தனவந்தனாக ஆனான் என்றால், பலர் வறியவர்களாக ஆனார்கள் என்று உணர்தல் வேண்டும்.

இந்த நியதி, கல்விச் செல்வத்திற்கு இல்லை. ஒருவன் முயன்று பல நூல்களைக் கற்று, அறிஞனாக ஆவான் எனில், பலர் மூடர்களாக வேண்டியதில்லைதானே. எனவே பிறருக்கு இடரின்றியே ஒருவன் கல்விச் செல்வத்தைப் பெறுகின்றான்.

துன்பம் அறியாமையால் விளைகின்றது.

இன்பம் அறிவினால் விளைகின்றது.

"அறிவை யறிபவர் அறியும் இன்பந்தனை"

என்கின்றார் அருணகிரிநாதர்.

இன்ப வடிவினன் இறைவன். சுகத்தைச் செய்கின்றவன் சங்கரன். சுக காரணன் சம்பு. ஆகவே, சுகசொரூபியாகிய சிவபரம்பொருளை அடைவதுவே கல்வியின் பயன். 'கற்றதனாலாய பயன் வாலறிவன் நற்றாள் தொழுதலே' என்கின்றார் வள்ளுவர்.

"உள்ள நிறைக் கலைத்துறைகள் ஒழிவின்றிப்
பயின்றவற்றால்
தெள்ளி வடித் தறிந்தபொருள் சிவன் கழலிற்
செறிவு"

என்கின்றார் சேக்கிழார் பெருமான்.

கல்வி கரையில; கற்பவர் நாள் சில. ஆதலின் கற்க வேண்டிய அறிவு நூல்களை ஓதி உணர்ந்து, உணர்வுபெற்று, அவ்வுணர்வின் பயனாகிய இறையன்பைப் பெறுதல் வேண்டும். அறிவு நூல்களைக் கல்லாதவரை மூடர் என்கின்றார் அருணகிரிநாதர். 'அறிவு நூல் கலா மூடர்' (திருப்புகழ்).

"கல்லாப் பிழையும் கருதாப் பிழையும் கசிந்துருகி
நில்லாப் பிழையும் நினையாப் பிழையும் நின்
அஞ்செழுத்தைச்
சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும் தொழாப்
பிழையும்
எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய்
கச்சி யேகம்பனே"

இந்தப் பிழைகளுள் முதலில் நிற்கும் பிழை கல்லாத பிழை என்பதை உணர்மின்கள்.

எனவே, மக்களனைவரும் ஞான நூல்களைக் கற்று, அன்பு நிலையையுற்று, அருளைப்பெற்று உய்வார்களாக.

## 77. நீதி

வீடு என்ற சொல் விடு என்ற முதனிலை நீண்ட தொழிற் பெயர். மழை, பனி, காற்று, குளிர் முதலிய துன்பங்களினின்றும் விடுபடச் செய்வது வீடு.

வீடுகள் பல சேர்ந்தது வீதி; வீதிகள் பல சேர்ந்தது ஊர்; ஊர்கள் பல சேர்ந்தது நாடு.

ஊர்களில் வீதியிருந்தால் பெருமை ஏற்படாது. நீதியிருக்கவேண்டும். நீதியமைந்த வீதியே நாட்டுக்கு நலத்தை நல்கும்.

முற்காலத்தில், மன்னர்கள் தங்களின் முதற்கடமை, அறம்—நீதி இவைகளை மக்களிடைப் பரப்புவதேயாகும் என்று கருதியிருந்தார்கள்.

"நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே"

என்று புறநானூறு புகல்கின்றது.

இப்போது முடியாட்சியில்லை; குடியாட்சி. ஒவ்வொரு ஊரிலும் பஞ்சாயத்து மன்றத்தின் மூலமே நீதி வழங்கப் பெறுகின்றது. நீதி வழங்கும் பஞ்சாயத்து மன்றம் மிக்க ஆற்றல் உடையது. சிறந்த கடப்பாடும் உடையது. நல்ல பணி நாட்டுக்கு ஆற்றுதல் வேண்டும்.

சிறந்த நீதி எது தெரியுமா?

தனக்கு எது துன்பம் என்று தோன்றுகின்றதோ, அதனைப் பிறருக்குச் செய்யக் கூடாது. தனக்கு எது இன்பமோ அதனைப் பிறருக்கும் புரிதல் வேண்டும்.

தன்னை யாராவது நிந்தித்தால் மனம் வருந்துகின்றது. ஆதலால் பிறரை நிந்திக்கக் கூடாது. நம் பொருளை யாராவது கவர்ந்தால் துன்பப்படுகின்றோம். நாம் பிறர் பொருளைக் கவரக்கூடாது. நமது மனைவியை ஒருவன் விரும்பிப் பார்த்தால் உள்ளம் கொதிக்கின்றது. பிறர் மனைவியை மனத்தாலும் விரும்பக்கூடாது. நம் காலில் முள் குத்தினாலும் வலிக்கின்றது; பிற உயிரைக் கொல்லுதல் கூடாது.

எனவே, பஞ்சாயத்து மன்றங்கள், தக்க விரிவுரையாளர் மூலமாகவும், துண்டுத் தாள்கள் மூலமாகவும், மக்களிடையே நீதிநெறியைப் பரப்புதல் வேண்டும்.

உலகமெல்லாம் நீதி வெள்ளம் ஓடவேண்டும். அதன் மூலம் உயிராகிய பயிர் தழைக்கவேண்டும்.

இளைஞர்களை நல்வழிப்படுத்த வேண்டும். இளைஞர் உள்ளம் பண்பட வேண்டும்.

கல்வியின் பயன் அறிவு. அறிவின் பயன் பண்பு. பண்பு இல்லாத அறிவினால் பயன் இல்லை. பண்பு இல்லாதவன் எத்துணைச் சிறந்த கூரிய அறிவு பெற்றிருப்பினும், அவன் மரத்துக்குச் சமானமானவன் என்கிறார் திருவள்ளுவர்.

**அரம்போலுங் கூர்மைய ரேனும் மரம்போல்வர்**
**மக்கட்பண் பில்லா தவர்.**

இறையுணர்ச்சி இன்றியமையாதது. இறைவன் எங்கும் உளன், எல்லாம் அறிகின்றவன் என்று கருதினுல், மன தாலும், வாக்காலும், செயலாலும் தீவினை செய்யமாட்டார்கள்.

ஒவ்வொரு உடம்புக்கும் தலையுண்டு. காலில்லாத உடம்பு உண்டு. கையில்லாத உடம்பு உண்டு. தலையில்லாத உடம்பு வாழாது. ஒரு குடும்பத்துக்கு ஒரு தலைவன் உண்டு. ஒரு பஞ்சாயத்து மன்றத்துக்கு ஒரு தலைவன் உண்டு. மாவட்டப் பஞ்சாயத்துத் தலைவர் உளர். ஒரு கட்சிக்குத் தலைவர் உண்டு. எல்லாவற்றுக்குந் தலைவர் இருப்பது போல், அகில உலகங்கட்கும் ஒரு தலைவன் உண்டு. இறைவன் ஒருவன் உண்டு. 'உண்டு என்று அறிவுடைய உலகம் எல்லாம் உரைப்பதை, ஒருவன் இல்லை யென்முல், அவனைப் பேய் என்று வைக்கவேண்டும்' என்று திருவள்ளுவதேவர் தெரிவிக்கின்முர்.

உலகத்தார் உண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும்.

'உலகம்என்பது உயர்ந்ததோர் மாட்டு' என்கிமுர் தொல்காப்பியர். ஆதலால் அறிவுடைய பெருமக்கள் எல்லோரும் உண்டு என்ற தெய்வத்தை, இல்லையென்று சில ஆசிரியர்களே, மாணவர்களின் இளம் உள்ளத்தில் நஞ்சு ஊசியை ஏற்றிக் கெடுக்கின்முர்கள். எதிர்காலம் மாணவர்களின் நல்லொழுக்க வளர்ச்சியில் இருக்கின்றது. நன் மாணுக்கர்களை உண்டாக்கும் பொறுப்பு ஆசிரியரின் தலைப்பாரம். ஆசிரியர்களையும், கல்வி நிலையங்களையும், நன்முறையில் நடத்தும் பெரும் பொறுப்பு, பஞ்சாயத்து மன்றத்தின்பால் அமைந்துள்ளது. ஆதலால், பஞ்சாயத்து மன்றங்கள் தம் கடமையை நன்கு உணர்ந்து, கல்வித் துறையைப் பண்பு வளர்க்கும் முறையில் கண்காணிக்க வேண்டும்.

மக்கள் நீதியைக் கடைப்பிடித்து வாழ்வார்களாக. யாண்டும் நீதி நிலைபெறுவதாக. இறையருள் என்றும் இனிது துணைபுரிக.

## 78. நாள் - இல்லை - வாள்

காலையில் எழுகின்றோம்; ஏதோ சுவையான உணவை யுண்கின்றோம். பின்னர் வேலை செய்கின்றோம்; உச்சி நேரத்தில் மறுபடியும் பசியாறுகின்றோம். சற்று இளைப்பாறுகின்றோம். மாலையில் சிற்றுண்டி அருந்துகின்றோம். கதிரவன் பகல் முழுவதும் காய்ந்து அயர்ச்சியுற்றவன் போல் மேற்கடலில் சாய்கின்றான். இறையுணர்ச்சி யில்லாதவருடைய உள்ளம்போல் இருள் சூழுகின்றது. கொஞ்சம் உலாவுகின்றோம். முன்னிரவில், மீளவும் வயிற்றை நிரப்புகின்றோம். களைப்பு வருகின்றது; படுத்துக் கொள்ளுகின்றோம். பாற்கடலில் சீதேவிக்கு முன்னே பிறந்தவள் வந்து நம்மிடம் உறவு செய்கின்றாள். கண்ணை மூடுகின்றோம்; பிணம்போல் கிடந்து துயில்கின்றோம்.

இப்படித்தான் ஒவ்வொரு நாளாய்க் கழிகின்றது.

இளமையில் நாம் மாடிப்படி யேறும்போது, இரண்டு இரண்டு படியாகத் துள்ளித் துடித்து ஏறினோம். இறங்கும் போது மின்னல் வேகம்; கிணற்றிலே, ஆற்றிலே குளிக்கச் சென்றால் சும்மா பொறுமையாகக் குளிப்பதில்லை. உயர்ந்த இடத்தில் ஏறிக் குதித்து நீந்தி விளையாடினோம். பழநி முதலிய மலைகளில் ஏறி இறங்கும்போது, அவற்றை இலட்சியம் பண்ணாமல் மளமளவென்று கால்மிக்க வேகத்தைக் காட்டும்; நம்முடன் நமது தோழர்கள் சேர்ந்துவிட்டால், நடப்பதே கிடையாது; எங்கும் ஒரே ஓட்டந்தான்.

இப்போது, மாடிப்படியை மெல்ல மெல்ல ஒவ்வொரு படியாக, கைப்பிடியைப் பிடித்துக்கொண்டுதான் ஆமை வேகத்தில் ஏறுகின்றோம். இறங்கும்போது எறும்பு நடை தான்.

இருந்தால், எழுந்திருப்பதற்குச் சற்று யோசனை. பல் அசைகின்றது. கண் கூர்மையான பார்வையை யிழந்து, இருள் சூழ்ந்துளது. ஒருவேளை யுண்டால், மறுவேளை யுணவை வயிறு மறுக்கின்றது. தளர்ச்சி வந்து உடம்பை உலுக்குகின்றது.

மனைவி மக்கள் நம்மைக் கண்டு, நன்கு முன்போல் மதிப்பதில்லை. நண்பர்கள் முன்போல் அன்புடன் பேசுவதில்லை. தலையில் வழுக்கை விழுந்து விகாரப்படுத்துகின்றது, ஏதேதோ சிந்தனைப் புயல் வந்து வீசுகின்றது. இன்னும் சிறிது நாள் செல்லச்செல்ல நடை தடுமாறும்.

இந்த நிலையை நினைக்கின்றார் அதிவீரராமபாண்டியர்.

"சென்றது காலம் சிதைந்தது இளமை நலம்"

என்கிறார்.

எதிரிலே வந்து மலைபோலே ஒன்று நிற்கின்றது. அது என்ன மலை? அதுதான் மரணமாகிய பயங்கரமான மலை. அந்த மலை வந்து சாய்ந்து நம்மை அழுத்தப் பார்க்கின்றது.

"நின்றது சாவு என்று நினைந்துருகி?" என்கின்றார்.

அந்தோ! இதோ! வருகின்றதே மரணம். 'நாம், பிறந்து வளர்ந்து வாழ்ந்து உண்டு உடுத்து உறங்கி உலாவி இது வரை ஒரு பயனும் பெற்றோம் இல்லையே?' என்று அறிவுடைய மனிதன் நினைக்க வேண்டும். அப்படி நினைந்து உள்ளம் உருக வேண்டும். உருகியபின், அம்பலத்தில் ஆனந்தத் தாண்டவம் புரியும் ஆண்டவனை நினைத்து, அப் பரமகருணாநிதியின் திருநாமங்களை இடையறாது கூறி உய்யுநெறி தேடவேண்டும். அப்படித் தேடாத மாந்தர்கள் படிக்கின்ற நூல்கள் அத்தனையும் பாழ்தான்.

சென்றது காலம் சிதைந்த திளமைநலம்
நின்றதுசா வென்று நினைந்துருகி-மன்றில்
நடிக்கின்ற பால்வண்ணர் நாமம்எண் ணாமாந்தர்
படிக்கின்ற நூல்எல்லாம் பாழ்.

நாம் அன்றாடம் தேதி காட்டும் (காலண்டர்) தாளைக் கிழிக்கின்றோம். கிழித்துக் கிழித்துக் கவலையின்றிப் பல்பொடி மடிக்கின்றோமே? அது தாளா? இல்லை. நமது வாழ்நாள். ஒவ்வொரு நாளாகக் கிழிக்கின்றோம். இறுதியில் நமது கடைசி நாள் ஒன்று அதில் வரும். அப்புறம் நாம் அதைக் கிழிக்கப் போவதில்லை.

"ஓடுகின்றனன் கதிரவன் அவன்பின்
ஓடுகின்றன ஒவ்வொரு நாளாய்"

என்கின்றார் இராமலிங்க அடிகள்.

'உண்டதே உண்டும் உடுத்ததே உடுத்தும்
உரைத்ததே அடுத்தடுத் துரைத்தும்
கண்டதே கண்டும் கேட்டதே கேட்டும்
கழிந்தன கடவுள் நாள் எல்லாம்''

என்று நமக்காக வருந்துகின்றார் ஞானத் தந்தையாராகிய பட்டினத்துச் சுவாமிகள்.

'அந்தோ! இப்படி மக்கள் அவமே வாணுளை வீணுக்கி மாய்கின்றார்களே' என்று துக்கப்படுகின்றார்.

என்ன அருமையான பாடல்? நமது தலையில் குட்டு கின்றாப்போல் இருக்கின்றது இத் திருப்பாடல்.

தினம் தினம், பார்த்தவற்றையேதான் திரும்பத் திரும்பப் பார்க்கின்றோம். புதிதாக ஒன்றையும் பார்க்க வில்லை. பார்க்க வேண்டும் என்ற அவாவும் இல்லை. அதில் ஒரு துடிதுடிப்பும் இல்லை.

வேறு என்ன நாங்கள் பார்க்கின்றது? பார்க்க நூதன மான காட்சி என்ன இருக்கின்றது? என்று கேட்கலாம்.

வடலூர் வள்ளல் பெருமான் அந்த வினவுக்கு விடை பகர்கின்றார்.

ஆணிப் பொன்னம் பலத்தே கண்ட காட்சிகள்
அற்புதக் காட்சியடி அம்மா!
அற்புதக் காட்சியடி.
''அங்கே என்ன கண்டீர்''
சோதிமலை யொன்று தோன்றிற்று அதில் ஒரு
வீதி யுண்டாச்சுதடி அம்மா!
வீதி யுண்டாச்சுதடி.
''சுவாமீ! அந்த வீதியில் தாங்கள் சென்றீர்களா?
அந்தத் தெருவில் கடைகள் ஓட்டல்கள் எல்லாம் நிரம்ப இருக்குமா?''
''அப்பா! அங்கே அழகான ஒரு மேடை யிருக்கின்றது''
வீதியிற் சென்றேன் அவ்வீதி நடு வொரு
மேடை யிருந்ததடி—அம்மா!
மேடை யிருந்ததடி.

மேடைமேல் ஏறினேன் மேடை நடுஒரு
கூடம் இருந்ததடி—அம்மா
கூடம் இருந்ததடி.
கூடத்தை நாட அக்கூட மேல் ஏழ்நிலை
மாடம் இருந்ததடி—அம்மா
மாடம் இருந்ததடி.

"சுவாமீ! சற்று நில்லுங்கள். அந்த ஏழடுக்கு மாடத்துக்குள் என்ன என்ன இருந்தன?

ஏழ்நிலைக்குள்ளும் இருந்த அதிசயம்
என்னென்று சொல்வனடி—அம்மா!
என்னென்று சொல்வனடி
சந்நிதியிற் சென்று நான்பெற்ற பேறது
சாமி யறிவாரடி—அம்மா!
சாமி யறிவாரடி.

என்று, தான் கண்ட அநுபவ அதிசயத்தைச் சொல்ல மொழியோ, சொற்களோ கிடைக்காமல் அவர் திகைக்கின்றனர்.

இந்த அநுபவ ரகசியத்தை அருணகிரியார் கூறுகின்ருர்:

வேலே விளங்கு கையான் செய்ய தாளினில்
வீழ்ந்திறைஞ்சி
மாலே கொளஇங்ஙன் காண்பதல்லால்
மனவாக்குச் செய
லாலே யடைதற் கரிதாய் அருவுருவாகி யொன்று
போலே இருக்கும் பொருளை எவ்வாறு
புகல்வதுவே.

இத்தகைய அற்புதக் காட்சிகளைக் காண்பதற்கு உரியது இந்த மனிதப் பிறப்பு. காமதேனுவின் பாலைக் கமரில் கவிழ்த்ததுபோல், நாம் கண்டதே கண்டும், கேட்டதே கேட்டும், வறிதே கவலையின்றிக் காலத்தைக் கழிக்கின்ருேம்.

"கழித்தால் அதைப் பற்றி நீங்கள் ஏன் கவலைப்படுகின்றீர்கள்?" என்று கேட்கின்றீர்களா?

காலனுகிய தச்சன், தன் கையில் பெரிய வாள் ஒன்று வைத்திருக்கின்றுன். அந்த வாளுக்கு முப்பது பற்கள் உண்டு. கூரிய பற்கள்.

அந்த வாளைப் போட்டு, இந்த உடம்பாகிய மரத்தை அறுத்துக் கொண்டே யிருக்கின்றுன். அக் காலத் தச்சனுக்கு விடுமுறை நாளே கிடையாது. ஞாயிற்றுக் கிழமை, பண்டிகை நாள் முதலிய ஒருநாள்கூட அவனுக்கு ஓய்வு கிடையாது. அறுத்தவண்ணமாகவே இருக்கின்றுன். அப்படி முன்னுக்கு இழுத்தால் முப்பது பற்களால் இந்த உடம்பு அறுபடுகின்றது. அது என்ன வாள் தெரியுமா? அது தான் நாள். அதற்கு பகல் முப்பது நாழிகை, இரவு முப்பது நாழிகை என்ற பற்கள் கூர்மையாக வுண்டு. இரவு பகல் என்ற இருவகையாக, நாள் என்ற வாள் கொண்டு காலனு கிய கடுந்தச்சன், இந்த உடம்பாகிய மரத்தை அறுக் கின்றுன். அப்படி அறுத்துக்கொண்டே யிருந்தால், இந்த மரம் படக்கென்று வெட்டுண்டு விழுந்துவிடும்.

மற்ற மரங்களை வெட்டினுல், அவைகள் வீடு கட்டவுத வும்; மேஜை நாற்காலி அலமாரி இவைகள் செய்யவுதவும்; மக்களுக்குப் பெரிதும் பயன்படும்.

இந்த உடம்பாகிய மரம் வெட்டுண்டு வீழ்ந்தால், ஒன்றுக்கும் உதவாது. சும்மாவாவது வைத்திருக்க முடியுமா? அதுவும் முடியாது. அழுகி நாறிப் புழுத்து முடை நாற்ற மெடுத்துவிடும். அதனுல் காதல் மனைவியும், தவப் புதல்வர் களும், நமது அரிய உறவினர்களும், இந்த மரத்தைக் கொண்டுபோய் மயானத்தில் தீ வைத்துக் கொளுத்தி விடுவர். மரத்தைக் கொளுத்தினுல், கரி மிச்சமாக நிற்கும். அந்த மரக்கரியைப் பொன் வேலை செய்பவர் பயன்படுத்திக் கொள்வர். சிலர் பஸ் முதலிய வாகனங்கட்கும், தண்ணீர் சுடவைக்கும் பாய்லருக்கும் பயன்படுத்துவர்.

இந்த வுடம்பாகிய மரத்தைச் சுட்டால், கரியாவது நிற்குமா? இல்லை. வெறும் சாம்பல்தான். அதுவும் ஒருபிடி சாம்பல்தான். கஞ்சிக்கு வழியில்லாது, பட்டினி கிடந்து மாண்ட, ஏழையின் உடம்பைச் சுட்டால் பிடி சாம்பல் ஆகும். பெரிய தனவந்தர்; தினம், ஆறுவேளை ப்பால் பழம்

அல்வா அறுசுவையுண்டி, தேன் நெய் தயிர் முதலிய உயர்ந்த உணவை யுண்டவரைச் சுட்டால் ஒருவேளை ஒரு படி சாம்பல் ஆகுமோ? இல்லை இல்லை; முடியுடை மன்னர் மாண்டாலும், அவர் உடம்பை எரித்தால் ஒரு பிடி சாம்பல்தான் ஆகும். பணக்காரரைச் சுட்டால் படி சாம்பல் என்று கருதாதே. வயிறு புடைக்க உண்டவர்க்கும், பசியால் வாடிப் பரதவித்த வறியவர்க்கும், முடிவில் மிச்சம் நிற்பது ஒரு பிடி சாம்பல்தான். இதில் சந்தேகமே இல்லை. இப்படிக் கூறுகின்றார் அருணகிரிநாதர்.

பொருபிடியுங் களிறும் விளையாடும் புனச்சிறுமான்
தருபிடி காவல் சண்முகவா எனச் சாற்றி நித்தம்
இருபிடி சோறுகொண் டிட்டுண் டிருவினை யோம்
இறந்தால்
ஒருபிடி சாம்பரும் காணாது மாய வுடம்பிதுவே.

"மன்னவர் உடம்புக்குமா இப்படி?"

"ஆம்"

"முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள் ளோரும்
முடிவிலொரு
பிடிசாம்பராய் வெந்து மண்ணாவதுங் கண்டு
பின்னும் இந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல்லால் பொன்னின்
அம்பலவர்
அடிசார்ந்து நாம் உய்ய வேண்டும் என்றே
அறிவார் இல்லையே."

என்கின்றார் பட்டினத்தார்.

வேளை தவறாமலும், வந்து கேட்ட ஏழை எளியவர்க்கு உதவாமலும், வயிறு புடைக்கப் புடைக்கப் பக்கம் அடைக்க உண்டு வளர்ந்த இந்த உடம்பு 250 ராத்தல் எடையுள்ள கனமான உடம்பு—நான்கு பேர் கழுத்துக் கனக்கச் சுமந்து சென்ற வுடம்பு, முடிவில் பிடி சாம்பராகின்றது. இந்த அவலநிலையை நேரில் நாள்தோறும் பார்த்தும், மீளமீள இந்தப் படிசார்ந்த வாழ்வையே நிசம் என்று கருதி, பொன்னம்பலவாணரது அடிசார்ந்து வாழ்ந்து உய்ய வேண்டும் என்று மக்கள் அறிகின்றார்கள் இல்லை. என்னே

இவர்களது அறியாமை? என்று அவர் இரங்குகின்ருர். இடித்து உரைக்கின்ருர். மற்றும் புகல்கின்ருர்:

கட்டி யணைத்திடும் பெண்டீரும் மக்களும் காலத்தச்சன்
வெட்டி முறிக்கும் மரம்போல் சரீரத்தை வீழ்த்திவிட்டால்
கொட்டி முழக்கி யழுவார் மயானம் குறுகியப்பால்
எட்டி அடிவைப்பரோ இறைவா கச்சி யேகம்பனே.

ஆகவே நாம் பார்க்கின்ற நாள் என்பது நாள் அன்று; அது உயிரை அறுக்கும் வாள். இதனைத் திருவள்ளுவ தேவர் இரத்தினச் சுருக்கமாகச் சொன்னர்.

நாள்என ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாள்அது உணர்வார்ப் பெறின்.

## 79. சுகாதாரம்

அன்பர்கள், பெறுதற்கரிய இம் மனித உடம்புடன், நோயின்றி, நலமாக நெடுநாள் வாழ விரும்பினுல், அடியில் கண்ட நெறிகளைக் கடைப்பிடித்து ஒழுகவும்.

1. நாள்தோறும் அதிகாலை ஐந்து மணிக்கு உறக்கத்தை விட்டு எழல்.

2. கண் விழித்து எழுந்த உடன், படுக்கையினருகில் மூடி வைத்துள்ள தண்ணீரால், வாயையும் முகத்தையும் கழுவுக.

3. சல மலம் கழிக்க.

4. மெல்லிய பற்குச்சியினுலாவது, துவர்ப்புள்ள பற்பொடியினுலாவது பல்லை விளக்கி, பற்களின் ஈறுகளை வெறும் விரலால் அழுந்தத் தேய்த்து, வாயை நன்கு கொப்புளித்து, கை கால் முகம் இவைகளைத் தூய்மை செய்யவும்.

5. பல் விளக்கினவுடன், வெறும் வயிற்றில் காலை மாலை காற்ருேட்டமுள்ள தனி இடத்திலிருந்து, உடம்புக்கும் வயதுக்கும் தக்கபடி தவருது சிறிது நேரம் பிராணு

யாமம் செய்து, அவரவர்கள் வழிபடு கடவுளை இதயத்தில் எழுந்தருளப் புரிந்து, மூலமந்திரத்தை உதடு அசையாமல் மனதால் நினைத்துத் தியானம் புரியவும்.

6. அவரவர் வயது சக்திக்கு ஏற்றவாறு உடற்பயிற்சி அல்லது ஆசனப் பயிற்சி செய்க.

7. ஆற்றுநீர், குளநீர், கிணற்றுநீர், குழாய்நீர், இவை களில் அவரவர்கள் அநுகூலத்திற்குத் தக்கவாறு நீரில் மூல மந்திரம் எழுதி அதனைச் சிவகங்கையாகப் பாவித்து, மன வாக்குக் காயங்களால் அறியாமையால் செய்த பாவங்கள் விலகுமாறு தியானித்து நீராடுக. தலை ஒழித்துக் கழுத்துடன் நீராடுவது கூடாது. தோய்த்துலர்ந்த தூய உடைகளை உடுக்கவும்.

8. அன்புடன் இறைவனை நினைத்து வழிபடுக. அருள் நூல்களைப் பாராயணம் செய்யவும்.

9. காலையில் காபி, தேநீர், கோகோ, ஓவல்டின், முதலி யவைகளைக் குடியாமல், பழஞ்சோறு, கூழ், கஞ்சி, எளிதில் செமிக்கும் இட்டலி போன்ற உணவுகளில் ஒன்று சிறிது அருந்துக.

10. அவரவர்கள் தொழில்களில் ஈடுபட்டபின் உச்சி நேரத்தில் அமைதியுடன் உணவு செய்க. நாடோறும் கீரையைச் சமைத்து உண்டல் நலம். தவிடு போகாத அரிசியைக் கஞ்சிவடிக்காமல் பதமாக வேகவைத்து உண்க. உண்ணும் பொழுது நன்ருக மென்று உண்க.

"நொறுங்கத் தின்றவன் நூறு வயது இருப்பான்"

11. எக்காரணத்தை முன்னிட்டும் பசியில்லாத பொழுது உண்ணல் கூடாது.

12. பசித்தபின் புசிக்கும் பொழுது, தண்ணீர் குடிக்க வும் சுவாசம் நன்கு போய்வரவும் சிறிது காலி இடம் இருக் கும்படி உணவு செய்க.

13. உணவு உண்ணும்பொழுது இடையிடையே தண்ணீர் குடிக்கக்கூடாது. உண்டு முடிந்தபின் தண்ணீர் பருகுக.

14. பகலில் உண்டபின் ஏதாவது இனிய கனிகளை உண்க. வாழைப்பழத்தில் நல்ல சத்துக்கள் இருப்பதாலும், எளிதில் கிடைப்பதாலும் அதனை நியதியாக உண்க. சிறிது நேரம் ஓய்வாக இருக்க.

15. ருசிக்காக உண்ணாமல், பசிக்காக உண்ணுக. சத்துவ குணங்களைத் தரும் உணவுகளையே உண்க. புலால் உணவு உடலுக்கும் உணர்வுக்கும் கேடுசெய்யும்.

16. குடும்பமாய் வாழும் உள்ளூர்வாசிகள், சிற்றுண்டிச்சாலை (காபிகடை)களுக்குச் சென்று உண்ணாதிருக்க.

17. ஒரு உணவுக்கும் மறு உணவுக்கும் இடையே அமுதமாயினும் அருந்தக்கூடாது. அவசியமாயின் தண்ணீர் பருகுக.

18. புகையிலை, பொடி, சுருட்டு, பீடி, சிகரெட்டு, வெற்றிலை, பாக்கு இவைகளைப் பழகாதிருக்க.

19. அறிவைக் கெடுத்து மயக்கத்தைத் தரும் பானங்களை அருந்தாதிருக்க.

20. மாலையில் கை கால் முகம் இவைகளைக் கழுவிச் சிறிது நேரம் தனித்திருந்து மனதை ஒருமுகப்படுத்தித் தியானம் செய்க.

21. காலை மாலைகளில் ஒன்று அல்லது இரண்டு பர்லாங் உலாவி வருக.

22. இரவு ஒன்பது மணிக்குள் எளிதில் செமிக்கக் கூடிய உணவை உண்க.

23. உண்டபின் ஒரு மணி நேரம் அறிவு நூல்களை வாசிக்க. கண்ணையும் கருத்தையும் கெடுக்கும் சினிமா முதலியவைகளைப் பார்க்காதிருக்க. பார்ப்பதனால் பீடி சிகரெட் புகைகள், நமது உடலில் புகுந்து உடல் நலத்தைக் கெடுக்கும்.

24. அருந்துதல், பொருந்துதலில் மிகவும் அளவோடிருக்க.

25. ஆடவரும் மகளிரும் இறுக்கமான உடைகளை உடுக்காமல் தூய உடைகளையே உடுக்க.

N. Latha



26. ஆசை, கவலை, சினம், அச்சம், பகை இவைகளுக்கு இடந்தராமல் மனதை அடக்கி ஆளுக.

27. மன வாக்கு காயங்களால் பிறருக்குத் தீமை செய்யாமல் நன்மையே செய்க.

28. ஆடவர் இடப்பக்கமாகவும், மகளிர் வலப்பக்கமாகவும் படுத்து உறங்குக. அதனால் ஆயுள் வளர்வதுடன் நன்றாக ஜீர்ணமாகும். வடக்கே தலைவைத்துப் படுக்கக் கூடாது. காலுக்குப் போடும் அணையைத் தலைக்குப் போடக் கூடாது. இரவு முழுவதும் இருவர் சேர்ந்து படுத்து உறங்கக் கூடாது.

29. பெண்கள் பதினெட்டு வயதுக்கு மேலும் ஆண்கள் இருபத்திரண்டு வயதுக்கு மேலும் மணஞ் செய்து கொள்க.

30. பலவகையான சிந்தனைகளைச் சிந்திக்காமலும் அமைதியுடனும் தெய்வ சிந்தையுடனும் உறங்குக.

"நோய்க்கு இடங்கொடேல்"

'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்.'

## 80. தவிர்க்க வேண்டியவை

1. காலையிலே பல்துலக்காமுன் தாம்பூலம் தரித்தல்.

2. வீட்டு முற்றத்திலும், கிணற்றங்கரையிலும், குடிநீர்க் குழாயடியிலும், ஆற்றங்கரையிலும், பூந்தோட்டத்திலும், திருவீதியிலும், எச்சில் உமிழ்தல், மலசலங்கழித்தல்.

3. கால் கழுவும் பொருட்டுப் பாத்திரத்திலே தண்ணீர் எடுத்துவைத்துக் கொள்ளாமல் மலசலங் கழித்தல்.

4. குளிக்கவும், சமைக்கவும் உபயோகமாகும் நீர் நிலைகளில் கால் கழுவுதல்.

5. கிணற்றங்கரையில் அல்லது குடிநீர்க் குழாயடியில் கால் கழுவுதல்.

6. கைகால்களைத் தூய்மை செய்தவுடனும் பல்துலக்கிய பிறகும் உணவு உண்டவுடனும், வாயைக் கொப்புளித்துக் கால் கழுவாது விடுதல்.

7. சௌளம் செய்து கொண்டாலும், துக்க வீட்டுக்குப் போய்வந்தாலும் உடுத்த ஆடையுடன் முழுகாது விடுதல்.

8. தலையொழித்துக் கழுத்துவரை நீராடுதல்; நீராடிய பின் உடுத்தியிருந்த ஆடையையே உடுத்திக் கொள்ளுதல்.

9. பாத்திரத்தை வாயுடன் கௌவித் தண்ணீர், பால், காபி முதலியன குடித்தல்.

10. உணவு கொள்ளும் கலத்தைத் தனிப்படுத்தி வைக்காமல் எல்லாவற்றுக்கும் உபயோகப்படுத்துதல்.

11. உண்ட இடத்தைத் தூய்மை செய்யாதிருத்தல்.

12. பழம், முருக்கு முதலியவைகளைக் கையில் பிடித்துக் கொண்டு கடித்துத் தின்னல்.

13. புகையிலை போடுதல்; சுருட்டு, பீடி முதலியன பிடித்தல்; பொடி போடுதல்.

14. பாண்டங்களைக் காகம், நாய் முதலியவை தீண்ட விடுதல்.

15. வீதியில் செல்லும்போது, ஓரத்திலே துப்பாமல் வழியிலே துப்புதல்.

16. தைச்சங்கராந்தியிலும், தீட்டுகளின் முடிவிலும் பழைய மட்பாண்டங்களைத் தள்ளாது விடுதல்.

17. கள், சாராயம், பிராந்தி முதலியவற்றைக் குடித்தல்.

18. கஞ்சா, அபின் முதலியன உபயோகித்தல்.

19. பிறப்பு இறப்புத் தீட்டுடையவர்கள் வீட்டில் உண்ணுதல்.

20. வெற்றிலைபாக்கு வாயில் இருக்கும் போது சயனித்தல்.

## 81. மதிநலம் படைத்த மைந்தன்

மூன்று நாட்களாக ஒழியாமல் மழை பொழிந்து கொண்டிருந்தது. பறவைகள் எல்லாம் மரங்களில் பதுங்கிக்கொண்டு, பசியுடன் உணவின்றித் தவித்துக்கொண்டிருந்தன. எங்கும் ஒரே இருள். தண்ணீர் வெள்ளமாக ஓடிக் கொண்டிருந்தது. **மங்கம்மாள்** வீடு ஊர்க்கோடியில் இருந்தது. வீடு முழுவதும் ஒழுக்கல். ஒரு மூலையில் சிறு விளக்கு மங்கலாக எரிந்துகொண்டிருந்தது. பழங்கஞ்சியைக் குடித்த **பவசேனன்** எங்கும் ஈரமாக இருந்தபடியால் படுக்க இடமின்றித் தவித்தான். "அம்மா! நான் எங்கம்மா படுப்பது? குளிர்கின்றது. போர்த்துக் கொள்ளத் துணி கொடு அம்மா" என்று கேட்டான். அவன் தாய் மங்கம்மாள், ஒரு துணியை எடுத்துக் கொடுத்து, ஈரத்தரையில் ஒரு கிழிந்த பாயைப் போட்டு, "கண்ணே! இப்படிப் படுத்துக் கொள்" என்றாள். பவசேனன், "அம்மா! இந்தத் துணி ஏதம்மா? இவ்வளவு பெரியதாக இருக்கின்றதே?" என்று கேட்டான். மங்கம்மாள் "கண்ணே! இது உங்க அப்பாவுடையது" என்றாள். பவசேனன், "அம்மா! எங்க அப்பா எங்கே? நான் ஒருநாளும் பார்க்கவே இல்லையே?" என்றான். மங்கம்மாள் வருந்திய உள்ளத்துடன், 'கண்ணே! உன் தகப்பனார் வெளியூருக்குப் போயிருக்கின்றார்' என்றாள். பவசேனன், 'அம்மா! அப்பா எப்போது வருவார்கள்? அம்மா! அம்மா! அப்பாவைப் பார்க்கவேணும் என்று எனக்கு நிரம்ப ஆசையாக இருக்கிறது' என்றான். மங்கம்மாளுக்கு அவன் கேள்விகள் பெரிய வேதனைத் தீயைத் தூண்டியது. தனது பழைய செல்வ நிலைமையும், தானுந் தன் கணவனும் பெருந்தனத்துடன் மாடி வீட்டில் வாழ்ந்த வாழ்க்கையும், குழந்தை யில்லையென்று காசி ராமேஸ்வரம் போய்த் தானதருமங்கள் செய்ததும், ஆறு மாதக் கருவுற்றிருந்தபோது தன் கணவன் மாண்டுபோனதும், தாயாதிகள் மிகுந்த வன்கண் செய்து, வீடு வாசல் நில புலங்களை யெல்லாங் கவர்ந்து கொண்டு, அடாத பழியைச் சுமத்தித் தன்னை அடித்து விரட்டியதும், தான் இப்போது

உடுக்க உடையும் உண்ண உணவுமின்றித் தவிப்பதும், ஆக இப்படித் தனது பழய பெருமைகளும் புதிய சிறுமைகளும் ஒன்றன்பின் ஒன்ருகத் தன் மனக்கண்முன் காட்சி தந்து மறைந்துகொண்டே இருந்தன. தனது துன்பத்தை உள்ளுக்குள் அடக்கிக்கொண்டு, 'அன்புள்ள அருமை மகனே! உனது அப்பா இப்போது வரமாட்டார்; நீ பெரியவனுகி நன்ருகப் படித்துக் கெட்டிக்காரனுக ஆனல்தான் வருவார்' என்ருள். இப்படித் தாயும் மகனும் பேசிக்கொண்டிருந்தனர்; மழை விட்டபாடில்லை. ஒருவாறு மகன் தூங்கிவிட்டான்; மங்கம்மாளுக்குத் தூக்கம் வரவில்லை. கணவனைக் குறித்த ஏக்கம் வந்தது. கண்ணீர் ஆறுபோல் பெருகி, மழைத் தண்ணீரோடு கலந்தது. மழைநீர் குளிர்ந்தும், கண்ணீர் வெதும்பியும் இருந்தன. எப்படியோ இரவுப்பொழுது கழிந்தது.

மறுநாள் பள்ளிக்கூட விடுமுறை. பிள்ளைகள் எல்லாம் வீதியில் மழைத் தண்ணீரில் விளையாடிக் கொண்டிருந்தனர். சில பிள்ளைகள் நீரில் மிதந்து போகும் நீர்க்குமிழியைப் பிடித்து எடுக்க முயன்றனர். சில பிள்ளைகள் மண்ணைக் குவித்து அணைபோட்டு, நீர் ஓட்டத்தை ஒருபுறம் தடுத்தனர். ஒருவர்மேல் ஒருவர் சேற்றை வாரி இறைத்தனர். பவசேனன் ஒரு கடிதத்தினல் கப்பல் செய்து ஓடுகின்ற மழைநீரில் மிதக்க விட்டனன். அது நன்ருக மிதந்து அசைந்து அசைந்து செல்வதைக் கண்டு அடங்காத ஆனந்த வெள்ளம் அவன் மனவீதியில் ஓடியது. உடனே அவன் காலையுயர்த்தி ஆடிப்பாடினன். இதனைக் கண்ட எதிர் வீட்டு நாகையன், அழகாக மிதந்து செல்லும் கப்பலை எடுத்துக் கிழித்து எறிந்து விட்டான். பவசேனனுக்குக் கோபமும் தாபமும் வளர்ந்தன. ஓடி நாகையன் கன்னத்தில் ஒரு அறை கொடுத்தான். 'என் கப்பலை ஏண்டா கிழித்தனை?' என்று சினந்து கேட்டான். நாகையன் அழுது கொண்டே அவன் தந்தையிடம்போய், 'அப்பா! எதிர்வீட்டுப் பவன் என் கன்னத்தில் ஓங்கி அடித்தான்' என்று கூறி முறையிட்டான். அவன் தந்தைக்கு உடனே பிரளயகால ருத்திரனுக்கு வருவதுபோல் கோபம் தலைக்குமீறி வந்துவிட்டது. 'பவசேனன் ஏன் உன்னை அடித்தான்?' என்று கேட்டுத் தெளியவில்லை.

ஓடி வந்தார், 'தகப்பனில்லாத தறுதலையே! என் மகனை ஏண்டா அடித்தாய்? நாதியற்ற நாசக்காரா?' என்று வைது, பவசேனன் கன்னத்தில் ஐந்தாறு அடியைத் தந்தனர். பெரியவர் அடியைச் சிறு குழந்தை தாங்குமா? கன்னங்கள் சிவந்தன! உதடு துடித்தது. பொறுக்கமுடியாத வேதனையால் கண்ணீர் சிந்தியது.

பவசேனன், 'ஐயா! ஏனையா என்னை அடிக்கின்றீர்? என் கப்பலை அவன் கிழித்துவிட்டான். அதனால்தான் நான் அடித்தேன். உண்மையை உணராமல் என்னை அடிக்கின்றீரே?" என்று அழுதான். அந்தப் பெரியவர், "ஆமாம்; உன் கப்பல் கிழிந்து போனதாலே, உங்கள் அப்பாவுடைய கப்பலே முழுகிப் போய்விட்டதோ? பேசினால் இன்னும் அடிப்பேன்" என்று அதட்டிவிட்டுத் தன் மகனை அழைத்துக் கொண்டு வீட்டிற்குள் சென்றார்.

பவசேனன் விம்மி விம்மி அழுதுகொண்டே தாயிடம் சென்று, அவள் மடியைப் பிடித்துக்கொண்டு அலறினான். மங்கம்மாள் மகனை எடுத்து அணைத்து, அவன் கண்ணீரைத் துடைத்து "கண்ணே! ஏன் அழுகின்றாய்? ஆர் உன்னை அடித்தது? ஐயோ! ஏன் உன் கன்னங்கள் இப்படி தடித்தும் சிவந்தும், இருக்கின்றன?" என்று பரிந்து கேட்டாள். பவசேனன், "அம்மா! நான் கப்பல் செய்து தண்ணீரில் விளையாடினேன்; எதிர்வீட்டு நாகையன் அதனைக் கிழித்துவிட்டான்; நான் அவனை ஒருஅடி அடித்தேன்; அவன் அப்பா வந்து என்னை வைது பலமுறை ஓங்கி அடித்தனர். அம்மா! எங்க அப்பா இருந்தால் அந்தப் பையனையும் அடிப்பாரல்லவா? நீ வேணுமென்றே அப்பாவை ஒளித்து வைத்திருக்கின்றாய். அம்மா! அப்பா எங்கே சொல்லு. அப்பாவிடம் சொல்லி நாகையனை அடிக்கச் சொல்லேன்" என்று விம்மி விம்மி அழுதுகொண்டே கூறினான். மங்கம்மாள் தனது மகனுக்குப் பதில் கூற முடியாமல் அவனை எடுத்துத் தழுவி, கண்ணீரைத் துடைத்து, தின்பண்டந் தந்து சமாதானஞ் செய்தாள்.

ஒருநாள் பள்ளியில் பிள்ளைகள் எல்லாம் தங்கள் தங்கள் பாடங்களைப் படித்துக் கொண்டிருந்தார்கள். உபாத்தியா

யர் பிள்ளைகளை நோக்கி, "ஒரு தந்தை; அவனுக்கு நான்கு மைந்தர்கள்; அவனுடைய சொத்து 77 ஆயிரம். அந்தத் தந்தைக்கு முதன் மைந்தனிடம் அளவற்ற பிரியம். தனது சொத்தைப் பகிர்ந்து பிள்ளைகளுக்குக் கொடுக்க எண்ணி னார். மூன்று பிள்ளைகளுக்கு ஆளுக்கு 11 ஆயிரம் தந்தார். மிகுதியை மூத்தவனுக்குக் கொடுத்தார். அப்படியானால் மூத்த பிள்ளைக்கு என்ன வரும்? சொல்லுங்கள்" என்று கேட்டார். பிள்ளைகள் எல்லாம், 'ஐயா; மூத்தவனுக்கு 44 ஆயிரம் வரும்' என்றார்கள். பவசேனன் மட்டும் சும்மா இருந்தான். அவனுக்குக் கணக்குத் தெரியவில்லையென்று மற்றப் பிள்ளைகள் கருதி நகைத்தனர். ஆசிரியர் "பவசேனா! நீ ஏன் சும்மா இருக்கின்றாய்? மூத்தவனுக்கு என்ன வரும்?" என்று கேட்டார். பவசேனன் எழுந்து, "ஐயா! மூத்த வனுக்கு, 'நமக்கு அதிகப் பணம் வந்துவிட்டதே' என்று அகங்காரம் வரும். பிள்ளைகளைச் சமமாகப் பார்த்துப் பங் கிடாத தந்தைக்குப் பாவம் வரும்" என்றான். ஆசிரியர் திடுக்கிட்டார். இப்படிக் கூறுவான் என்று அவர் எதிர் பார்க்கவில்லை. "பவசேனா! பேஷ்! நீ இந்த விடையை எவ் வாறு கண்டுபிடித்தனை?" என்று கேட்டார். பவசேனன், "தாங்கள் மூத்தவனுக்கு 'எவ்வளவு வரும்' என்று கேட்க வில்லை. 'என்ன வரும்' என்றுதானே கேட்டீர்கள். அந்தக் கேள்வியில் அந்த விடை நுட்பமாக அடங்கி யிருக்கின்றது" என்றான். ஆசிரியர் உள்ளுக்குள் அவன் மதிநுட்பத்தை மெச்சி மகிழ்ந்தார். ஏனைய பிள்ளைகள் வியப்புற்றனர். பின் னர் ஒரு சமயம், பரீட்சையில் பல கேள்விகளுக்கு இடையில் "மனிதனை உயர்த்துவது எது?" என்று ஒரு கேள்வி இருந் தது. அதற்குப் பிள்ளைகள் பல்வேறு விடைகள் தத்தம் மன நிலைக்குத் தக்கவாறு விடை எழுதிவைத்தார்கள்; ஒருவன், மனிதனை உயர்த்துவது பணம் என்று எழுதினான்; ஒருவன், மனிதனை உயர்த்துவது பதவி என்று எழுதினான்; ஒருவன், மனிதனை உயர்த்துவது அறிவு என்று எழுதினான்; ஒருவன், உயர்த்துவது அதிர்ஷ்டம் என்று எழுதினான்; பவசேனன், "மனிதனை உயர்த்துவது **அடக்கம்**; அடக்கம் அமருள் உய்க் கும் (திருவள்ளுவர்)" என்று எழுதினான். ஆசிரியர் எல்லா

விடைகளையுஞ் சீர்தூக்கி நோக்கினர். மனிதனை உயர்த்துவது அறிவும் அதிர்ஷ்டமும் என்றாலும், அடக்கமில்லாத அறிவும், அடக்கமில்லாதவனுக்கு வந்த அதிர்ஷ்டமும் பரிமளிக்காது. அடக்கமே சிறந்தது என்ற விடை மிகவும் சிறந்தது என்று முடிவு செய்தார். இப்படியே பவசேனன் கூறும் விடைகள் யாவும் நுட்பமும் திட்பமும் வாய்க்கப் பெற்றனவாகத் திகழும்.

இவ்வாறு பவசேனன் பள்ளியில் அன்னத்திற்கும் ஆவிற்கும் உவமையாகத் தலைமாணுக்கனாக விளங்கினன். பவசேனனுக்கு வயது பன்னிரண்டு ஆயிற்று. கலைகள் யாவும் அவனைத் தேடிக்கொண்டுவந்து அடுத்தன. நாள்தோறுங் காலையில் எழுந்து நீராடி, நீறு பூசி, இறை வழிபாடு செய்து, பசியாறி, தாயை வணங்கி விடைபெற்றுக்கொண்டு, கையில் சிறந்த நூல்களைத் தாங்கிக்கொண்டு பள்ளிக்குச் செல்லுவான்.

அந் நகரத்தையாளுகின்ற மன்னன் மந்த மதியினன்; முன் கோபி; தீர்க்காலோசனை யில்லாதவன்; அவசரக்காரன்: தற்பெருமை யுடையவன்.

ஒருநாள் இரவு பவசேனன் நெடுநேரம் தனது பாடங்களை ஆழ்ந்த சிந்தனையுடன் .படித்தான்; களைப்புற்றுப் படுத்து உறங்கினன். மறுநாள் சற்றுக் காலதாமதமாக எழுந்தான். அதனால் நீராடவும், வழிபாடு செய்யவும் போதிய நேரமில்லை. குளியாமலும் வழிபாடு செய்யாமலும் உணவு கொள்கின்ற வழக்கம் அவனிடமில்லை. அதனால் விரைவாக வாய் முகம் கை கால்களைக் கழுவி, நீறு பூசிப் புத்தகங்களை எடுத்துக்கொண்டு, விரைந்து பள்ளிக்குச் சென்றுகொண்டிருந்தான். மன்னனது மாளிகையின் பக்கமாகப் போய்க்கொண்டிருக்கும் அதே நேரத்தில், மேல் மாடியில் மன்னன் நித்திரையை விட்டெழுந்து வீதியை எட்டிப் பார்த்துத் திரும்பினன். சன்னலின் மேற்படி தனது தலையில் மோதியது. அதனால் தலையில் சிறிது அடிபட்டு உதிரங் கண்டுவிட்டது; உடனே அரசனுக்குச் சீற்றம் உண்டாகியது. இறுதியில், அமைதியின் வடிவமாகப் பள்ளிக்குச் சென்று கொண்டிருந்த பவசேனனை எழுந்தவுடன் பார்த்த

தன் பயனுகத்தான் தனது தலையில் அடிபட்டதென்றும், இன்னும் இதுபோல் நாள்தோறும் இவன் முகத்தில் விழிப்பதனுல் பலருக்குத் தன்போல் அடிபட்டுத் தீங்கு நேரும் என்றும் எண்ணினுன். உடனே ஏவலரை அழைத்து, பவசேனனைக் காட்டி, 'அவனைக் கொண்டுபோய் கொலைக்கூடத்தில் கொன்று விடுங்கள்' என்று பணித்தான். உடனே ஏவலர்கள் கட்டளையிட்டவாறு, கொலைஞர்கள், பவசேனன் கரத்தில் விலங்கிட்டு, இளங்கன்றுபோல் தெருவில் இழுத்துக் கொண்டு சென்றனர். இதனைக்கண்ட நகர ஜனங்கள் பலவாறு கூறி வருந்தினர்.

இம்மகன் யாரோ என்பார்; இவன்பிழை
யாதோ என்பார்;
அம்மகன் மனமோ மன்னற் கருமதி
யிலையோ என்பார்;
வெம்மகன் முருகன் தானே விபுதர்கோன்
மகனே என்பார்;
தெம்மகன் போலும் என்பார்; தெய்வமே
காத்தி என்பார்.

இதனைக் கேட்ட தாய் மங்கம்மாள், இடியேறுண்ட நாகம்போல நடுநடுங்கி, வயிறு புடைத்து, கண்ணருவி பொழிய, துன்பமே ஒரு வடிவுபெற்று அழுதுகொண்டு வருவதுபோல் மகனே! மகனே! என்று வாய்விட்டுப் புலம்பிக் கொண்டு வந்தாள். மகனைக் கொலைஞர்கள் அழைத்துப் போனுர்கள் என்று இடையில் உள்ளவர்கள் சொன்னுர்கள். அவள் பெற்ற வயிறு பகீர் என்று பற்றி எரியலாயிற்று. "அந்தோ! மகனே! நீ ஆறு மாதக்கருவில் தந்தையை இழந்தாய். உன்னுடைய அளவற்ற சொத்துக்களைத் தாயமார்கள் அபகரிக்க, நீ வறுமையில் வாடினுய். என் கண்ணே! உன்னைக் காணும்போதெல்லாம் என் உள்ளங் குளிருமே. உனது முத்துப் போன்ற பொன்மொழிகளைக் கேட்குந்தோறும் என் செவி குளிருமே. உனது அரிய மதி நலத்தை எண்ணுந்தொறும் என் இதயங் குளிருமே. என் மாணிக்கமே! இப்பொழுதுதானே நீ எழுந்து பள்ளிக்குப் போனுய். என்ன குற்றத்திற்காக உன்னைக் கொலைஞர்கள் கொலை செய்யக் கொண்டுபோனுர்கள். ஐயோ! நீ ஒருசிறு துரும்பையுங் கிள்ளமாட்டாயே. உன் காலின்கீழ் அகப்

பட்ட எறும்பும் நசுங்காதே. உனக்கு இந்தத் தீங்கு வந்ததே. உன்னைப் பிரிந்து பாவியாகிய நான் இந்தப் பாரில் வாழேன், என் உயிரே!

கரும்பே! பவசேனு' கண்மணியே! உள்ளம்
இரும்பேயோ! மன்னவனுக் கேதுபிழை செய்தாய்?
துரும்பே இவ்வாழ்க்கை துறந்தே னென்னுவி
விரும்பேன் விரும்பேன் விதியோ? இளஞ்சேயே!?"

என்று அழுவாள்; 'முருகா முருகா! ஏழையேன் என் செய்வேன்? அம்பிகைபாலா! ஆரணமூலா! என் குழந்தையைக் காப்பாற்று. அப்பனே! என்மகன் உனக்கு அடைக்கலம். என் ஐயனே! இன்னும் இந்த ஏழையைச் சோதிக்காதே; சோதித்ததெல்லாம் போதும். கருணைக்கடலே! கதிர் வேலாயுதக்கடவுளே!' என்று தொழுவாள்; மூர்ச்சித்து அடியற்ற மரம்போலே விழுவாள்; ஆற்றுவாருந் தேற்றுவாரும் இன்றித் தானே தேறி எழுவாள்.

அவளுடைய ஆற்ருெணுத் துன்பத்தைக் கண்ட கல்லும் உருகியது. ஊரார்கள் எல்லாம் அவளைக்கண்டு கண்ணீர் சொரிந்தனர். கொலைக்களம் ஓடிக் கொலைஞர் கால் மேல் வீழ்ந்து, "ஐயா! என்மகனைக் கொல்லாதீர்கள். அவன் என்ன குற்றஞ் செய்தான்? அவனுக்குப் பதில் என்னைக் கொன்றுபோடுங்கள். நீங்கள் மக்களைப் பெறவில்லையா? உங்களுக்குக் கோடி வந்தனம்" என்று கதறியழுது வேண்டினுள். கொலைஞர், "அம்மா! அழாதே, விதியை வென்றவர் யார்? அரசனுடைய ஆணை; அரசனுடைய கட்டளைப்படி நாங்கள் இவனைக் கொல்கின்ருேம்; இல்லையேல் எங்கள் உயிர் போய்விடும்" என்ருர்கள். பவசேனன், "ஐயா! உங்களுக்கு வணக்கம். நான் ஒரு குற்றமும் செய்யவில்லை. நிரபராதியாகிய என்னை உங்கள் அரசர் கொல்லச் சொல்வதற்கு நியாயமில்லை. அரசர் ஒருவேளை வேறு யாரையாவது கொல்லச் சொல்லி இருக்கலாம். அரசருடைய ஏவலர்கள் உங்களுக்கு மாறுபாடாக என்னைக் காட்டியிருக்கலாம். மன்னர் பெருமான் நேர்முகமாக உங்களுக்குக் கட்டளை

யிடவில்லையே. என் வார்த்தையை நீங்கள் சற்று நிதான மாக ஆராய்ந்து பாருங்கள். வேறு ஒருவனைக் கொல்லச் சொல்லியிருந்து, மாறாக என்னைக் கொன்றுவிட்டால், பின் னர் உங்கட்குப் பெரும் ஆபத்தாக முடியும். என்னை அழைத்துக் கொண்டுபோய் அரசனுக்குக் காட்டுங்கள். என்னையே கொல்லுமாறு அரசர் கூறினால், என்னைக் கொன்று போடுங்கள். அப்படி அரசனைக் கேட்டுச் செய்வத னால், ஒன்றும் தவறு இல்லை. கேளாமல் செய்தால் தவறு ஏற்பட்டாலும் ஏற்படலாம். பதறாக் காரியம் சிதறாது. அவ சரப்பட்டுக் கொன்றுவிட்டால், சென்ற உயிர் திரும்பாது. நான் சொல்வது உங்கள் மனதில் சரியென்றே படும். உங் களுக்கும் கடவுள் அறிவு படைத்திருக்கிறார்” என்றான். அவனுடைய ஆழ்ந்த கருத்துடைய அருமொழிகளைக் கேட்ட கொலைஞர், அவன் சொற்களுக்கு இணங்கினர். ‘அப்படியே உன்னை அரசரிடம் காட்டியே கொல்வோம்’ என்று, அத்திருமகனை அரசவைக்கு அழைத்து ஏகினர். இளங்கன்றின் பின் செல்லும் தாய்ப்பசுபோல் மங்கம்மாள் கண்ணீரால் வீதியை நனைத்துக்கொண்டு சென்றாள்.

அரசன் சபாமண்டபத்தில் மந்திரிகள் சூழ வீற்றிருந் தான். ஊரார்களும் இது என்ன ஆகுமோ என்று பவசேன னைத் தொடர்ந்து சென்றனர். கொலைஞர் பவசேனனை மன்னன் முன் நிறுத்தி, “அரசர் கோமானே! இவனைத் தானே கொல்லுமாறு கட்டளையிட்டீர்” என்று கேட்டார் கள். அரசன் மிகவும் சீறி, “அறிவில்லாத கசடர்களே! இன்னுமா இவனைக் கொல்லவில்லை? மூடர்களே! முன்னமே ஏவலர்கள் மூலம் கூறினேனே, ஏன் மறுபடியும் அழைத்து வந்தீர்கள்?” என்று வாய்மடித்து, பற்களைக் கடித்து மீசை துடித்து, பூமியைக் காலால் இடித்துக் கேட்டான்.

பவசேனன் பார்த்திபனைத் தொழுது, “கருணையே வடி வான காவலரே! உலகையாளும் உத்தமரே; ஒரு சிறு விண் ணப்பம். அடியேன் கலைபயிலும் மாணவன். மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் ஒருவருக்கும் ஒரு தீங்கும் செய்யாதவன். அடியேன் நாள்தோறும் அதிகாலையில்

எழுந்து குளித்து வழிபாடு செய்து உணவுசெய்துவிட்டு தாயை வணங்கிக் கொண்டு பள்ளிக்குச் செல்வது வழக்கம். பாவியேன் இரவு அதிகநேரம் கண்விழித்துப் படித்தேன். அதனால் விடிவது தெரியாமல் அயர்ந்து தூங்கிவிட்டேன். ஆதலால் எழுந்தவுடன் தாயைக்கூட வணங்காமல் பள்ளிக்குப் புறப்பட்டு வந்தேன். தாயாரை வழக்கம்போல் வணங்கிவிட்டு வராத குற்றத்தால் இந்த வினை எனக்கு வந்திருக்கும் என்று உணர்கிறேன். வேறு ஒரு குற்றமும் யான் தங்கள் செங்கோல் அறியச் செய்ததில்லை. அப்படிச் செய்திருந்தாலும் சிறு தண்டனை விதிக்காமல் கொலைத் தண்டனை விதித்தீரே. நடுநிலை தவறாத நரபதியே! கொலைத் தண்டனை விதிக்கத்தக்க குற்றம் சிறியேன் யாது செய்தேன்? அதை வெளிப்படுத்தினால், இப் பெரிய கூட்டத்தில் அக் குற்றத்தை மற்றவர்கள் செய்யாமல் நல்வழிப் பட்டு உய்ய அனுகூலமாகும். ஆதலினால் தாயனைய தயாசாகரமே! என் குற்றத்தைச் சபையறியக் கூறியருளும்" என்று கல்லும் கனியக் கதறினான். அவனுடைய சொற்சாதுரியத்தையும், பொருளாழத்தையும், இனிய முகப்பொலிவையுங் கண்ட அமைச்சரும், அவையினரும் பெரிய அதிசயமுற்றுச் சித்திரப் பாவைபோல் அசைவற்று, அரசன் முகத்தை நோக்கி இருந்தனர்.

மன்னன், "ஏ பாலகா! இன்று நான் காலை எழுந்தவுடன் வீதியை நோக்கியபோது, உன் முகத்தைப் பார்த்தேன். முகத்தை உட்பக்கம் திருப்பியவுடன் தலையில் அடிபட்டது. இதோ பார். சிறிது உதிரங்கூட வடிந்துளது. எழுந்தவுடன் உன் முகத்தில் விழித்ததன் பயனாக மண்டையில் அடிபட்டது. இதேபோல் நாள்தோறும் உன் முகத்தில் முதல்முதலாக விழித்து எத்தனை பேருக்கு அடிபட்டதோ? இனி ஒருவருக்கும் இம்மாதிரித் துன்பம்நேராமல் இருக்கும் பொருட்டு, உன்னைக் கொல்லுமாறு கட்டளையிட்டேன்" என்றான்.

பவசேனன் உள்ளுக்குள் சிரித்து, கரத்தைக் கூப்பி, "அறிவு மிக்க அரசே! தங்கள் கருணைத் திறத்தை உற்று

நோக்கிப் பெரிதும் மகிழ்கிறேன். இப்பொழுதே என்னைக் கொன்று போட உத்தரவு கொடுங்கள். ஆனால் என்னைக் கொன்றவுடன் உங்களையுங் கொன்றுபோட உத்தரவு கொடுங்கள். தங்களுக்கும் கொலைத் தண்டனை இடவேண்டிய அவசியம் ஏற்பட்டுளது" என்று அஞ்சாமல் கூறினான். சபை திடுக்கிட்டது. மன்னவன் முகம் சிவந்தது. புருவங்கள் நெரிந்தன.

"அடா பாலகா! என்ன கூறினாய்? எனக்குங் கொலைத் தண்டனை விதிக்கவேண்டுமா? ம்...என்ன?" என்று கர்ஜித்தான்.

பவசேனன், "பார்த்திபரே! கோபம் வேண்டாம். உலக நன்மைக்காக நான் கூறினேன். தாங்களோ உலக நன்மையை விரும்புபவர்; நீதிநெறி தவறாதவர்; தருமாத்மா. தங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. அடிமை கூறியதைச் சற்று நிதானமாக யோசித்துப் பார்த்தால் தங்களுக்கு அதன் கருத்து நியாயமாகத் தெரியும்" என்றான்.

மன்னன், 'மூடனே! என்ன நியாயம்? சீக்கிரம் சொல்" என்றான். பவசேனன், "உலகம் புரக்கும் உத்தமரே! என் முகத்தில், எழுந்தவுடன் தாங்கள் விழித்ததனால் தலையில் சிறிது அடிபட்டது. இதுபோல் இனி ஒருவருக்கும் என்னைப் பார்ப்பதனால் அடிபடாமல் இருக்கட்டும் என்ற கருணையால் என்னைக் கொல்லச் சொன்னீர். நிரம்பவும் நியாயம். சற்றுச் சிந்தித்துப் பாருங்கள். அடியேன் இன்று எழுந்தவுடன் நேரம் கடந்து விட்டபடியால் தாயைக்கூட வணங்காது பள்ளிக்கு ஓட்டமாக வந்தேன். வரும் வழியில் தங்களை மாடிமேல் கண்டேன். தங்கள் கரத்தில் விளங்குஞ் செங்கோலின்மேல் ஆணையிட்டுக் கூறுகிறேன். முதன்முதலாக நான் தங்கள் முகத்தில் விழித்தேன். இதன்பயனாக என் உயிருக்கே மோசம் வந்தது. என் முகத்தில் விழித்ததனால் தங்கட்குத் தலையில் சிறிது அடிபட்டது; தங்கள் முகத்தில் விழித்ததனால் என் தலையே போகின்றது. இனியும் இப்படி தங்கள் முகத்தில் முதன்முதலாக விழித்து எத்தனை பேருக்குத் தலை போகப் போகிறதோ? உலகில் உள்ள மற்றவர்க்கு

அடிபடாமல் இருக்கும்பொருட்டு என்னைக் கொல்வதுபோல், உலகிலுள்ள மற்றவர்க்கு தலைபோகாமல் இருக்கும் பொருட்டுத் தங்களையும்......” என்று மிகவும் சதுரப்பாடாகச் சொல்லும்போதே, அவையில் ஒரு கலகலப்புஏற்பட்டது.

அரசன் எழுந்து அம் மதியுள்ள மகனைக் கட்டியணைத்தான். அரசனது மதியிலுள்ள மாசினைப் பவசேனன்து சொற்களாகிய தண்ணீர் கழுவி யகற்றியது. திருந்திய அறிவு பெற்றான். அறிவுக்குப் பொருந்திய அப் புண்ணியக் கன்றின் சொற்கள் அவன் அறிவுக் கண்ணைத் திறந்து விட்டது. “அப்பா! என் அறிவுள்ள அருமகனே! நினது கூர்த்த மதிநலத்தை மிகவும் பாராட்டுகின்றேன். பிள்ளையில்லாப் பாவிபாகிய எனக்கு அறிவுப் பிள்ளையாக இது முதல் இரு. உன்னைப்போன்ற அறிவுடைய பிள்ளையை எங்கும் காண்பது அரிது; அரிது. இன்று முதல் நீ என் மகன். உன் முகத்தில் முதல்முதல் விழித்ததன் பயனாக, எனக்கு அறிவு வளமையுற்றது” என்றான்.

பவசேனன் மன்னன் கால்மேல் வீழ்ந்து, “அப்பா! முதல் முதலாக அடியேன் தங்கள் முகத்தில் விழித்ததன் பயனாக எனக்கு அரச பதவி கிடைத்தது” என்று அருமையினும் அருமையாகக் கூறினான். எல்லோருங் கரகோஷஞ் செய்து வாழ்த்தினர். அக்காட்சியைக் கண்ட மங்கம்மாளுடைய மகிழ்ச்சி இமயமலைபோல் வளர்ந்தது. “மகனே” என்று வாய் விட்டு அழைத்தாள். அரசன் அம் மாதரசியைப் பார்த்து, “தாயே இந்த நல்ல பிள்ளையைப் பெற்று, என்னிடம் தந்தனையே! நீ வாழ்க” என்று கூறினான். மங்கம்மாளும் பவசேனனும் அதுமுதல் அரண்மனையில் அரசர் திருவுடன் இன்புற்றனர். உரிய காலத்தில் பவசேனனுக்குப் பட்டாபிஷேகம் நடந்தது. அறிவுடைய அவனுக்குப் பட்டங்கட்டியவுடன் உலக மெல்லாம் இன்புற்றது. வரிகள் குறைக்கப்பட்டன; சம்பளங்கள் உயர்த்தப் பெற்றன. எங்கும் அமைதி நிலவியது. அறக்கதிர் வீசியது; அருள் வெள்ளம் பரவியது; அன்புமயமாகியது.

## 82. தலைநோய்க்கு மருந்து

தெய்வத் தமிழை உயிரினும் உயர்ந்ததாகக் கருதி ஓம்பி ஞர்கள் பண்டைக்காலத்திருந்த ஆன்ரோர்கள். தமிழ்ப்புல வர்கள் பலர் இருந்து தமிழை வளர்த்தார்கள். தமிழ்ப் புல வர்களை அரசர்கள் ஆதரித்தார்கள். அரசர்களும் தமிழைக் கற்றுத் தமிழ்ப் புலமை தாங்கி நின்ருர்கள். பல புலவர்கள் கூடிச் சங்கம் அமைத்துத் தமிழை ஆய்ந்து வளமை செய் தார்கள்.

அந்த வகையில் கடைச் சங்கம் மதுரையில் மிகச் சிறப் பாக விளங்கியது. அதில் நாற்பத்தொன்பது புலவர்கள் தெள்ளு தமிழ்த் தெய்வங்களைப் போல நடமாடினுர்கள். அவர்களுக்குள் **சீத்தலைச் சாத்தனுர்** என்பவர் ஒருவர். அவர் சிறந்த அருட்பண்பு உடையவர். ஒழுக்கமென்னும் உயர் குன்றேறி நின்றவர். என்றும் பிறர் மனம் புண்பட நடக்க மாட்டார்.

அந்தக் காலத்தில் புலவர்கள் புதிதாக ஒரு நூல் செய் தால், அதனைச் சங்கப் புலவர்கள் ஒத்துக்கொண்டால்தான் உலகம் ஒத்துக்கொள்ளும். சங்கமேருத நூல் வெளி வந்து உலவமுடியாது. இந்த நியதி அப்போது தமிழுலகில் இருந் தது. புலவர் பலர் நூல்களைச் செய்து மதிப்புரை தருமாறு சாத்தனுரிடம் வந்து படிப்பார்கள். அவ்வாறு புலவர்கள் படிக்கும் பாடலில் ஏதாவது குற்றம் இருக்குமானுல், உள்ளம் வருந்தி, பாடிய புலவர்மீது வருந்தாது, இதனைக் கேட்கு மாறு இருந்த தன்னையே நொந்து, சாத்தனுர் தனது திருக் கரத்திலுள்ள எழுத்தாணியால் தன் தலையைக் குத்திக் கொள்வார். இதைக் கண்ட புலவர்கள் அஞ்சிக் குற்றமின்றி நூல்களைச் செய்வார்கள். இவ்வாறு நாடோறும் புலவர்கள் வந்து தாம் செய்த நூல்களைப் படிக்குந்தோறும், குற்றங்கள் கண்டவுடன் தலையில் எழுத்தாணியால் குத்திக்கொள்வார். அதனுல் எப்பொழுதும் அவர் தலையில் சீழ் வடியும். ஆனபடி யால் சீத்தலைச் சாத்தனுர் எனப் பேர் பெற்ருர்.

குற்றமாகப் பாடிப் படிப்பவனை நோவாமல், தன்னை நொந்து கொள்ளும் அவருடைய பெருமிதத்தையும், தமிழ்ப் பற்றையும் உன்னும்போது நமது மனம் உருகுகின்றது.

சாத்தனுர்க்குச் சதா தலைநோய்; தீராத நோய். ஏன்? குற்றமுடைய பாடலைக் கண்டவுடனே, முன்னிருந்த புண்ணின்மேல் மீண்டும் குத்திக்கொள்ளுவார். எப்படி அந்தப் புண் ஆறும்? ஆறாத தலைப்புண். மாறாத மனப் புண்.

இத்தகைய தலைநோய்க்கு மருந்தேயில்லை. ஆனால் கடவுள் கருணை சும்மாவிருக்கவில்லை. ஒரு நோய் என்று உண்டானால் ஒரு மருந்தும் அதற்கு உண்டாக்குவது கடவுளுடைய கருணையின் திறம். சாதாரணமான தலைவலி, சீந்திற்கொடியிலிருந்து எடுத்த சர்க்கரை, சுக்கு, தேன் இந்த மூன்றையும் முறையே கூட்டி யுண்டவர்க்குத் தீர்ந்து விடும்.

திருவள்ளுவதேவர் திருவாய்மலர்ந்தருளிய திருக்குறள் சங்கமேற வந்தது. சாத்தனுர் இருந்து அதனைக் கேட்பாராயினர். ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள்களையும் அதன் உள்ளுறையுடன் பல நாட்கள் கேட்டனர். அதிலே குற்றம் இருக்கமுடியாதல்லவா? அமிர்தம் போன்ற அத்தமிழ் மறையைக் கேட்டு அவர் அளவற்ற மகிழ்ச்சி யடைந்தனர். பல நாட்களாக வேறு புலவர்களது குற்றமுடைய நூல்களைக் கேளாமல், வள்ளுவருடைய தெள்ளு தமிழையே கேட்டுக் கொண்டிருந்தபடியால், சீத்தலைச் சாத்தனுருடைய தலைப் புண்ணும், அதனால் வந்த தலைநோயும், மனப்புண்ணும் நீங்கி விட்டன.

சாத்தனுருடைய தலைநோயை அகற்றிய கைகண்ட மருந்து திருக்குறள். அது பிறவி நோயை அகற்றும். ஒவ்வொரு தமிழ் மகனும் திருக்குறளைப் படிக்க வேண்டும். திருவள்ளுவர் பிறந்த தமிழ்நாட்டில் பிறப்பதற்கு நாம் என்ன புண்ணியஞ் செய்தோமோ? என்று மனம் மகிழவேண்டும்.

சங்கப் புலவரில் ஒரு பெரிய மருத்துவர் (வயித்தியர்) இருந்தார். அவர் பேர் **மருத்துவன் தாமோதரனுர்**. அவர் அக்

காலத்தில் மருத்துவ உலகிற்குத் தலைமை பூண்டிருந்தார். அவ்வுடைய பெருமை அளவிடற்கரியது. அவர் "தலை நோய்க்கு மருந்து இது" என்றும், சாத்தனர் தலைநோய்க்கு மருந்து திருக்குறள் என்றும் கூறுகின்றார்.

சீந்திநீர்க் கண்டம் தெறிசுக்குத் தேனளாய்
மோந்தபின் யார்க்கும் தலைக்குத்தில்—காந்தி
மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலால்
தலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு.

## 83. பெண்

பெண் என்ற சொல்லுக்குப் பேணுந்தன்மை யுடையவள் என்பது பொருள்; கணவனையும், குடும்பத்தையும் மக்கள், வீடு, மாடு முதலியவைகளையும் பேணிப் பெருமைப் படுத்துகின்றவள் பெண்.

தற்காத்துத்தற் கொண்டாற் பேணித்
தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். —திருக்குறள்.

இந்த உலகத்தையே பெண்ணாக (அன்னையாக)க் கருதுவது மரபு. 'இந்தியத் தாய்', 'பாரத மாதா' என்று கூறுவது பெரு வழக்கு. கிராமத்தையும் கிராமதேவதை யென்று கூறுவர்.

இனி, செல்வத்தை லட்சுமியென்றும், கல்வியைக் கலைமகளென்றும், மண்ணைப் பூதேவி யென்றும், தண்ணீரைக் கங்காதேவி யென்றும், வானத்தை ஆகாயவாணி யென்றும், அன்னத்தை அன்னபூரணி யென்றும், பேசும் மொழியைத் தாய்மொழி யென்றும், வாழும் நாட்டைத் தாய்நாடு என்றும், இப்படி எல்லாவற்றையும் பெண்ணாகவே உருவகம் செய்து பெருமை கொள்வர்.

பெண்மையில் கற்பென்னுந் திண்மை அமைந்துளது. அது கல்லினும் வலியது. அகலிகையின்பால் கற்பின் திண்மை சிறிது குறைந்தபடியால், திண்மை மிக்க கல்லுரு

வாகுமாறு, ஐந்தவித்து ஆற்றல் மிக்க அடிகளார் கட்டளை யிட்டனர்.

விண்ணுலகத்திற்கும், மண்ணுலகத்திற்கும், உயிர்நாடி யாக விளங்குவது பெண்ணுலகமே யாகும். உலக நலன் களத்தனையும் பெண்மையில் அமைந்து கிடக்கின்றன பெண் கருணைக்கும் பொறுமைக்கும் உறைவிடமாக விளங்கு கின்ருள். அதனுலன்ருே பிள்ளைப் பேற்றை இறைவன் பெண்ணிடமே அமைத்தனன். ஞானத்தையும் பெண்ணுகக் கூறுகின்றது ஞான நூல். "சத்திதான் யாதோ வென்னில் தடையில்லா ஞானமாகும்."

இல்வாழ்க்கைக்கு அச்சாணியாக இருந்து துணை புரி பவள் பெண். இல்லினை ஆள்பவள் ஆதலின், இல்லாள் எனப் படுகின்ருள். மனைக்குரியவள் மனைவி. ஆடவனை இல்லா னென்றும், மனைவனென்றும் கூருமையாலும், "பொற்ருலி யோடு எவையும் போம்" என்ற திருவாக்காலும் பெண்ணின் பெருமை நன்கு வலியுறுகின்றது.

மேலும், இறைவனேடு இரண்டறக் கலக்கும் அத்துவித இன்பம் ஆன்மா பெண் தன்மையடைந்த காலத்தேயே கிட்டுகின்றது என்பதை உணர்க. இறைவனைத் தலைவனுக வும், ஆன்மாவைத் தலைவியாகவும் வைத்து அன்பு செய் கின்ற நெறி சன்மார்க்கமாகும். இந்நெறி நின்றே நால்வர் களும், ஆழ்வார்களும், அருணகிரிநாதரும், தாயுமானுரும் முத்தி இன்பம் பெற்றனர். அவர்களுடைய அமுதமன்ன பாடல்களால் இதனை யறிக.

உலகத்தில் தலை சிறந்தவர்கள் பத்தினிப் பெண்களும், பக்தர்களும், தத்துவஞானிகளும் ஆவார்கள். இம் மூவர் களாலேயே உலகங்கள் நிலைபெறுகின்றன. இம் முத்திறத் தார்களுள்ளும், பத்தினிகளே முதன்மையானவர்கள். "பத்தினி பக்தர்கள், தத்துவ ஞானிகள்" என்பார் திரு மூலர். "சிறப்புடைப் பொருளை முந்துறக் கிளத்தல்" என்ற சூத்திரப்படி பத்தினிப்பெண்டிர் முன்னணியில் நிற்பதைக் காண்க. பக்தர்களையும், முத்தர்களையும் பெற்று உலகிற்கு வழங்குபவர் பத்தினிகளே யாவார்கள். உத்தமிகள் உதரத்

தில் உதித்த முத்துக்களே, எத்தலமும் போற்றும் வித்தகர்களாவார்கள்.

மைத்திரேயி, காத்தியாயனி, கார்க்கி, ஔவையார், காக்கைப் பாடினியார், நச்செள்ளையார், மங்கையர்க்கரசியார், புனிதவதியார், திலகவதியார், ஆண்டாளம்மையார் முதலிய பெண்மணியர், விண்மணிகள்போல் விளங்கி உலகை உய்வித்தனர்.

கற்புடைய காரிகையர்களை மூவரும் தேவரும் போற்றுவர். கற்புடையாரைக் கண்டு கனலும் அஞ்சும். கதிரவன் வரவு தடைபடுதலும், விண் மழை பொழிதலும், மாண்ட உயிர் மீண்டு வருதலும் கற்பினுல் நிகழும்.

கற்புடைய மாதர், கணவனை யன்றி வேறு ஒன்றையும் விரும்பார். ஆடவரும், இறைவனை, வீடுபேறும் வேண்டாது, கூடும் அன்பினுலேயே கும்பிடுதல் வேண்டும்.

கணவனையே விரும்பி, அரண்மனையையும், அரச வாழ்வையும் துறந்துவந்த சீதை, ஒரு கணம் பொன்மானை விரும்பிய சின்னஞ்சிறு பிழையால், பத்துமாதங்கள் துன்புற்றனள். எனவே, பெண்மணிகள் கற்பு நெறி நின்று, கணவனையே பேணி, எழுபிறப்பும் இன்பம் பயக்கும் பழி பிறங்காப் பண்புடை மக்களைப் பெற்று, உலகிற்கு உதவி புரிதல் வேண்டும்.

நாயகனையே விரும்பிய நங்கையர் நலமுறுவர், என்பதனை அடியிற்கண்ட வரலாறு விளக்கும்.

பிறன்மனை நோக்காத பேராண்மையும், போரிற் புறங்கொடாத போராண்மையும் உடைய ஒரு மன்னனுக்கு ஐம்பது மனைவியர் இருந்தனர். அவர்கள் ஒருமைப்பட்ட மனமுடைய பெருமையுடையராய், சிறுமையின்றி செந்நெறி நின்றனர்.

ஒருநாள் காவலன், கடல் கடந்து செல்லுபவனுய், ஒவ்வொரு மனைவியரையும் தனித்தனியே கண்டு, "நான் தூர தேயம் செல்கின்றேன், உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டான். முதல் மனைவி 'பட்டாடை வேண்டும்' என்ருள்.

இரண்டாம் மனைவி அணிகலன்கள் வேண்டுமென்றாள். மூன்றாம் மனைவி முத்தாரம் வேண்டுமென்றாள். நாலாம் மனைவி நாகமணி வேண்டுமென்றாள். இங்ஙனம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பொருளை விரும்பிக் கேட்டனர். அரசன் அவைகளை முறையே குறிப்புத்தாளில் குறித்து வைத்துக் கொண்டனன். ஐம்பதாவது மனைவியின் பால் சென்று உனக்கென்ன வேண்டுமென்று வினவினான். அவள் கணவன் பாத மலரைப் பணிந்து, கண்ணீர் மல்கி நின்று, "ஆர்வலரீர்! அலை கடல் சூழ்ந்த நிலவுலகில் யான் விரும்பத் தக்க பொருள் வேறொன்றுமில்லை. தங்கள் திருவடி ஒன்றே வேண்டுமென்றாள். மன்னன் குறிப்புத்தாளில் திருவடி யென்று குறித்துக் கொண்டான்.

கடல் கடந்து தன் அலுவல்களை முடித்துக்கொண்டு திரும்பிய மன்னவன், மனைவியர்கள் விரும்பிய பொருள் களைத் தனித்தனிப் பெட்டியில் வைத்து, அதன்மீது அவர்கள் முகவரி எழுதி, அவரவர் பால் அனுப்பினான். ஐம்பதாவது மனைவிபால் அவன் சென்று அவளை மகிழ்வித்தான். அவள் மனையில் இருந்த வண்ணம், அரசவைக்குப் போவதும் வருவதுமாக இருந்தான்.

தங்கள் மனைக்கு வேந்தன் வராமல், இளையாள் இல்லத் திலேயே இருப்பதைக் கண்ட ஏனைய இல்லக்கிழத்தியர், "**மனைவியர் மாநாடு**" கூடி, கணவரைக் கண்டு கண்டிக்க வேண்டும் என்று முடிவு செய்து, முடிமன்னவன்பால் வந்து பணிந்து, "மன்னவரே! நாங்கள் என்ன பிழை செய்தோம்? அயல் நாடு சென்று மீண்ட தாங்கள் எமதில்லம் வரா தொழிந்த காரணம் யாது?" என்று வினவினர்.

மன்னன், "மங்கைமீர்! இக் குறிப்புத்தாளைக் காண்மின். நீங்கள் விரும்பியதை, விரும்பியவாறு வழங்கினேன். இவ் விளையாள் என் திருவடி ஒன்றையே விரும்பினாள். திரு வடியை விரும்பியவள் வீட்டில், திருவடி தங்கியுள்ளது" என்று இயம்பினான்.

அது கேட்ட அரிவையர்கள் நாணி, அரசனைத் தொழுது, "இனி நாங்களும் உமது திருவடி ஒன்றையே விரும்புவோம்" என்று கூறி, கணவனை அடையப் பெற்று இன்புற்றனர்.

## 85. நல்ல தந்திரம்

தென் கன்னட மாவட்டத்தில் கொல்லூர் என்ற ஊரில் மூதாம்பிகை கோயில் மிகவும் புகழ் பெற்றது. அம்பிகை வரமளிக்கும் ஞானச்செல்வியாய் விளங்குகின்றனர். அங்கு சென்றவுடன் தனிமையும் இனிமையும் கிடைக்கின்றன.

அதையடுத்த பெருங் கானகத்தில் விலங்கு வேந்தாகிய சிங்கம் ஒன்று வாழ்ந்தது. அது மிகவும் ஆற்றல் வாய்ந்தது. அதற்கு **மதியூகி** என்ற ஒரு யானை மந்திரியாக அமைந்திருந்தது. அடர்ந்த அக் கானகத்தில் எப்பொழுதும் வானளாவிய மரங்கள் பூப்பதும் காய்ப்பதும் கனிவதுமாக இருக்கும். அடிக்கடி வானம் பொழிய, அருவிகள் "கல்" என்று இரைந்து கொண்டு ஓடும். ஆண் குரங்குகள் வேர்ப்பலாப் பழத்தைக் கீறிப் பலாச்சுளைகளை எடுத்துக் கருவுற்ற பெண் குழந்தைகளுக்குக் கொடுக்கும். வளப்பமிக்க அக்காட்டின் அரசாக அச் சிங்கம் பெருமிதமாக உலாவி வந்தது. அதற்கு எல்லா விலங்குகளுங் கப்பம் தருவதுபோல் மாமிச உணவைக் கொணர்ந்து கொடுக்கும்.

ஒரு நாள் சிங்கம் ஒரு குன்றின்மேல் சிறப்பாக அமர்ந்திருந்தது. மந்திரியாகிய யானை, புலி, கரடி, காட்டுப்பன்றி முதலிய பரிவாரங்கள் அதைச் சூழ்ந்து நின்றுகொண்டிருந்தன. சிங்கம் தன் மந்திரியை நோக்கி, "மதியூகியே! நமது கானகத்தில் அறிவுள்ள விலங்கு எது?" என்று கேட்டது. யானை, "அரசே! அறிவு யானைகட்குத்தான் அதிகம் உண்டு. ஒரு காரியம் செய்வதானால் அதற்கு அறிவு அவசியம் வேண்டும். அறிவிருந்தால்தான் அந்தக் காரியம் தடையின்றி முடியும். அதனால் அறிவு என்ற கணபதிக்கு யானை முகம் இருப்பதாக ஞான நூல்கள் கூறுகின்றன. காரியஞ் செய்யப் புகுமுன் விநாயக வணக்கம் என்பது அறிவை வணங்கி

அடைவது என்பதுவேயாகும். யானை சிவபிரானை வழிபட்ட தலமே திருவானைக்கா. கஜேந்திரம் என்ற யானை திருமாலை வழிபட்டு முத்தியடைந்த வரலாறு உலகமறிந்த ஒன்று. திருக்காளத்தி மலையிலும் யானை சிவபெருமானை வழிபட்டுள்ளது. இனி யானைகள் இலக்குமியைப் பூசிக்கின்றன. அதனால் "கஜலட்சுமி" என்று திருமகளை அழைக்கின்றனர். எல்லா இடங்களிலும் கஜலட்சுமியின் திருவுருவத்தை அமைப்பது வழக்கம். அறிவு நிரம்பினால் செல்வம் பெருகும் என்பதுவே அதன் உட்பொருள். திருமகள்—செல்வம்; யானைகள்—அறிவின் பெருக்கம்.

இனி அறிவுள்ள யானையை மனிதர்கள் கானகத்தில் வைத்துப் பல தொழில்களைச் செய்வித்துப் பயன்பெறுகின்றார்கள். ஐராவதம் என்ற யானை முதல் எட்டு திக்கஜங்கள் உலகத்தைத் தாங்குகின்றன என்றும் அறிஞர் கூறுகின்றனர்" என்று கூறியது.

சிங்கம், "யானையே! உன் சொற்கள் மிகவும் ஆழ்ந்த கருத்துக்களுடன் கூடியவை. யானை அறிவுள்ளதென்பதற்கு உன் சொல்லே போதுமான சான்று. ஆனால் சிலர் குள்ள நரி அறிவுள்ளது என்று கூறுகின்றார்களே, அதன் கருத்து யாது?"

யானை "அரசே; குள்ளநரி அறிவுள்ள பிராணியாகாது. அறிவுக்கு அடையாளம் அடங்குதலேயாகும்.

"ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்
பேதையிற் பேதையார் இல்."

என்பார் வள்ளுவனார்.

"கல்விக் கழகு கற்றுணர்ந் தடங்கல்."

ஆதலினால், அறிவுள்ள யானை, அடக்கமாக ஆண்டவனுக்கு முன்னே விழாக்காலத்திலே வீதியிலே வரும். அரசனை அம்பாரிமேல் சுமந்து உதவும். ஒரு நாட்டுக்கு மன்னன் வேண்டுமாயின், தனது தும்பிக்கையில் பூமாலையைத் தாங்கி உலகமெங்கும் உலாவி, நல்லரசனை நாடி உத்தம லட்சணமுடையவனுக்கு மாலை சூட்டி, அவனைத் தன் பிடரியின் மீது வைத்

துக் கொணர்ந்து அரசனுக்கும். இது எத்துணை அரிய செயல் என்பதை எண்ணிப்பாரும். கரிகால் வளவனையும், சேரமான் பெருமாள் நாயனுரையும் பட்டத்து யானைகளே தேர்ந் தெடுத்தன என்று வரலாறு கூறுகின்றது. இன்னும் பல சான்றுகள் உண்டு. விரிவஞ்சி விடுக்கின்றேன்.

குள்ள நரிக்கு அடக்கம் கிடையாது. அதற்குத் தந்திர மும் சூழ்ச்சியுமே உண்டு. விலங்குகள் பலவற்றையும் பழக் கிப் பலவாறு அவற்றைத் தொழிற்படுத்திக் காட்டும் காட்சி (சர்க்கஸ்)யில் குள்ளநரியை வைத்து ஒரு வித்தை பழக்கினுர் இல்லை. அடக்கமில்லாத பிராணி குள்ள நரி. தந்திரத்தில் பேர் போனது. ஆதலின் குள்ள நரியை அறிவுள்ள பிராணி என்று கூறுவதற்கு இடமில்லை" என்று கூறியது.

சிங்கம் குள்ளநரியின் தந்திரத்தைக் கண்டறிய வேண் டும் என்று எண்ணியது. யானை, கரடி, புலி, எருமை, பன்றி, எலி, முயல், ஓநாய், உடும்பு, நரி முதலிய எல்லா வகைப் பிராணிகளையும் அழைத்தது. காட்டில் உள்ள எல்லா உயிர்களும் ஒருங்கு கூடின.

சிங்கம் ஒரு சிறு எலியைப் பிடித்துத் தன் கையில் ஏந்தி, "ஏ நண்பர்களே! இது என்ன பிராணி? நீங்கள் அறிவீர் களா?" என்று வினவியது. புலி, கரடி, யானை முதலிய எல்லாப் பிராணிகளும் தனித் தனியே "இது எலி" என்று கூறின. குள்ளநரிகள் "இதை எலி என்று கூறுகின்ருர் கள்" என்றே கூறின. ஒன்ருவது "இது எலி" என்று தன் கூற்ருகக் கூருமல், "எலி என்று கூறுகின்ருர்கள்" என்று பிறர் கூற்ருகவே எல்லா நரிகளும் கூறிய தந்திரத்தைச் சிங்கம் உற்று நோக்கியது.

"எல்லோருக்கும் தெரிந்த ஒரு எலியை மிருக வேந்தனு கிய சிங்கம் அறியாமல் இருக்குமா? என்ன காரணத்தினுல் கேட்கின்ருரோ? நாம் ஏன் இதில் சிக்கிக்கொள்ள வேண் டும். எலி என்று கூறினுல் பிறகு என்ன வருமோ? எலி என்று கூறுகின்ருர்கள் என்ருல் நமக்கு ஒன்றும் வராது" என்று, ஒவ்வொரு நரியும் தனக்குள் எண்ணித் தந்திரமாக இப்படிப் பதில் பகர்ந்தது.

விலங்கரசனுகிய சிங்கத்திற்குச் சிரிப்புத் தாங்கவில்லை. எலியை எலி என்று கூருமல், எலியென்று கூறுகின்ருர்கள் என்று கூறிய நரிகளின் தந்திரத்தை உற்றுநோக்கி வியந்தது.

ஒரு நரியைக் கூப்பிட்டு, "ஓ நரியே! இந்த எலியை இத்தனை நாட்களாக நீ அறிந்ததே கிடையாதா? இதன் பேர் உனக்குத் தெரியாதா? எலி என்று திட்டமாகச் சொல்லாமல் ஜோதிடஞ் சொல்வதுபோல் சொல்லுகின்ருயே? உனக்கு ஒரு மாதம் தவணை கொடுத்திருக்கின்றேன். உன் இனத்தாருடன் கூடி ஆராய்ந்து, இது இன்ன பிராணியென்று திட்டமாக வந்து சொல். போய்வா" என்று கட்டளையிட்டது.

நரி காட்டில் தனது கூட்டத்தாரை யணுகியது. சிங்கத்தின் கட்டளையைத் தெரிவித்து, நாம் "எலி என்று கூறினுல் நமக்கு என்ன ஆபத்துவருமோ" என்று ஏங்கியது. ஒரு மாதம் கழிந்தது.

சிங்கத்தின் குகையினிடம் முக்கியமான புலி, யானை முதலிய சிப்பந்திகள் கூடியிருந்தன. நரி மெல்ல வந்தது. சிங்கம், "நரியே! வா. இந்த பிராணியைப் பற்றித் தெளிவாகத் தெரிந்து கொண்டனையா? இதன் பேர் யாது? கூறு" என்று கேட்டது.

நரி, "எங்கள் மன்னர் பெருமானே! இதைப்பற்றி நாங்கள் எல்லோருஞ் சேர்ந்து நன்ருக ஆலோசித்தோம். இதை எலி என்று தங்களிடம் சொல்லச் சொன்னுர்கள்" என்று இசைத்தது. "முந்தி எலி என்று சொல்லுகின்ருர்கள்" என்று இசைத்தது. இப்போது ஒரு மாதம் தவணை தந்துங் கூட எலி என்று சொல்லச் சொன்னுர்கள் என்று கூறிய நரியின் தந்திரமான சொற்களைக் கேட்டு சிங்கம் தோள் குலுங்க நகைத்தது. குள்ள நரியின் தந்திரத்தைக் கண்டறிந்தது.

"யானை கூறியது உண்மையே. குள்ள நரி ஒரு பெரிய தந்திரசாலியே" என்று எண்ணிய சிங்கம். "நரியே! நீ என்ன எண்ணுகின்ருய்? அதைச் சொல்" என்றது.

நரி "எஜமானே! தாங்கள் எப்படி எண்ணுகின்றீர்களோ அப்படியே அடியேனும் எண்ணுகின்றேன்" என்றது. சிங்கம் அதன் குயுக்தியைக் கண்டு களித்து, "நரியே! சரி. நீ போய் வா" என்றது. நரி மகிழ்ச்சியுடன் தனது காட்டிற்குச் சென்றது. சிங்கம் இனிது வாழ்ந்தது.

## 85. பிஞ்சுமிருக்கின்றது

புலவர்கள் பலர் இந்த நாட்டை வளம் புரிந்தார்கள். புலவர்கட்கு நல்ல அறிவுத்திறன் இயல்பாகவே அமைந்திருந்தது. புலவர் பலர், மொழிக்காகவும் தேசத்துக்காகவும் தங்களை அர்ப்பணித்திருந்தார்கள். வாழ்நாள் முழுவதும் வேறு வேலை பார்க்காமல், தாய்மொழியின் வளர்ச்சியிலேயே காலத்தைக் கழித்தார்கள். அதனால், பொருளாளர்கள், புலவர்கட்குப் பொன்னும் பொருளும் வழங்கிப் புலவர்களை ஆதரித்தார்கள். புலவர்களும் கவலையின்றி மொழி வளத்துக்காக உழைத்தார்கள், காவியம் பல செய்தார்கள். ஒரு நாட்டின் பெருமையைத் தெற்றென விளக்குவது நாட்டின் காவியமே யாகும். தமிழகத்துக்குக் குன்றாத பெருமையைக் கொடுத்துக் கொண்டிருக்கின்றன திருக்குறளும், சங்க நூல்களும், கம்பராமாயணமும், பெரிய புராணமும், பிறவும்.

ஒரு புலவன், தன் சிறுமகனை அழைத்துக்கொண்டு, ஒரு சிற்றரசன்பால் சென்றான். அக் குறுநில மன்னன் நற்குண சீலன். புலவர்களை அன்புடன் ஆதரிக்கும் அருளாளன். குறிப்பறிந்து கொடுக்கும் கொடையாளி.

புலவருக்குப் பொன் கொடுத்தான். சரிகையிழைத்த பொன்னாடை ஒன்றைக் கொண்டுவரச் சொல்லிப் புலவருக்குப் போர்த்தினான். அம் மன்னனிடம் உள்ளவர்களில் சிலருக்குப் பொறாமையிருந்தது. புலவர்கட்கு அம் மன்னன் அள்ளிக்கொடுப்பதை அவர்கள் விரும்பவில்லை. வெறுத்தார்கள். தடுக்கவுஞ் செய்தார்கள்! மன்னன் அவர்கள் ஆலோசனையைப் புறக்கணித்தான்.

அன்று கருவூலத்தில் இருந்த ஒரு கஞ்சன் ஒரு பழைய கிழிந்த பொன்னுடையைக் கொணர்ந்து மன்னனிடம் நீட்டினன். மன்னன் அதனை உற்றுப் பார்க்காது புதியதென்றே நினைத்துப் புலவருக்குப் போர்த்தினன். புலவர் மகன் இதனைக் கவனித்தான். அரசவையில், கிழிந்த ஆடையென்று, வெடுக்கென்று விளம்புவதும் முறையாகாது.

புலவர் மகன், மெல்ல அரசனுக்கும் புலவருக்கும் இடையில் நின்று, "அப்பா! இந்த ஆடையில் சரிகை வேலைப்பாடு நிரம்ப இருக்கின்றன. அப்பா! இது என்ன" என்று வினவினன். (அந்த ஆடையில் சரிகையிழைகளால் செடி கொடி இலை பூ பழம் முதலிய வேலைப்பாடுகள் செய் திருந்தன.)

புலவர் "மகனே! இது ஒரு கொடி"
"அப்பா! இது என்ன?"
மகனே; இது இலை.
ஓ இது என்ன?
இது மலர்கள்.
ஆ! ஆ! இது என்ன?
இவைகள் காய்கள்.
அற்புதம்! அற்புதம்! இவைகள் யாவை?
கண்ணே! இவைகள் கனிகள்.

"பேஷ் அப்பா! இந்த ஆடையில் செடிகள் இருக்கின்றன. கொடிகள் இருக்கின்றன; இலைகள் இருக்கின்றன; மலர்கள் மலர்ந்திருக்கின்றன; காய்கள், பழங்கள் எல்லாம் இருக்கின்றன. அப்பா! பிஞ்சும் இருக்கின்றது" என்று வேட்டி பிய்ந்திருப்பதை நயமாக வெளிப்படுத்தினன். அப்படிக் கூறும்போது கிழிந்த இடத்தைக் காட்டி 'மலரிலிருந்து பிஞ்சு; பிஞ்சிலிருந்து காய்; காயிலிருந்து கனி இப்படித் தானே வெளிப்படும் அந்த நியாயத்தை வைத்து, பூ இருக்கின்றது, காயிருக்கின்றது, கனியிருக்கின்றது, இடையில் பிஞ்சிருக்கின்றது' என்முன். இந்தக் குறிப்பை மன்னவன் உணர்ந்தான், அவன் மனமே கிழிந்துவிட்டது போன்ற ஒரு உணர்ச்சி ஏற்பட்டது. புலவர் பெருமானுக்குக் கிழிந்த

ஆடை தந்தது பெரிய இழிவு அல்லவா? நமது மானம் கிழிந்ததே என்று கருதினான். கருவூலத்து அலுவலாளனை அழைத்தான். இவ்வாறு கிழிந்த ஆடையைத் தரலாமா? என்று கேட்டு, சாட்டையினால் முதுகில் தோள் பிய்ஞ்சு போகுமாறு அடித்தான். வேறு புதிய ஆடையை வழங்கினான். வேட்டி பிஞ்சிருப்பதை வெளிப்படையாகக் கூறாமல் நயமாக வெளிப்படுத்திய புலவருடைய புதல்வனது புத்திக் கூர்மையை மெச்சினான், அப் புதல்வனுக்கும் புதிய ஆடை தந்து மகிழ்வித்தான்.

## 86. சென்னை தமிழ் இசைச் சங்கம் பண் ஆராய்ச்சியின் பதினாருவது கூட்டத்தில்

### தொடக்கவுரை (25—12—65)

### இசை

இசை யென்ற சொல்லுக்கு, எல்லோரையும்—எல்லா வற்றையும் இசைவிப்பது என்பது பொருள். சராசரங்களை யெல்லாம் தன்பால் ஈர்த்து இசைவிக்கும் பேராற்றலுடையது இசை.

### மூன்று என்ற எண்ணின் முதன்மை

மூன்று என்ற எண் சிறந்தது! சிறந்த பொருள்கள் அனைத்தும் மூன்று மூன்ருகவே திகழ்கின்றன.

(1) சத்து, சித்து, ஆனந்தம்.
(2) ஆக்கல், அளித்தல், ஒடுக்குதல்.
(3) வேதம் மூன்று; இருக்கு, யஜுர், சாமம்.
(4) இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி.
(5) சுவர்க்க, மத்ய, பாதலம்.
(6) இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம்.
(7) ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் (முந்நீர்).
(8) அயன், அரி, அரன்.
(9) ஆன்மதத்துவம், வித்தியாதத்துவம், சிவதத்துவம்.
(10) பாசஞானம், பசுஞானம், பதிஞானம்.

(11) பாசபுண்ணியம், பசுபுண்ணியம், பதிபுண்ணியம்.
(12) இதிகாசம் மூன்று : சிவரகசியம், இராமாயணம், மகாபாரதம்.
(13) அக்கினி மூன்று : ஆகவனீயம், காருகபத்யம், தாட்சிணுக்கினி.
(14) மண், பெண், பொன்.
(15) தனேஷணே, தாரேஷணே, புத்ரேஷணே.
(16) பதி, பசு, பாசம்.
(17) ஆணவம், கன்மம், மாயை.
(18) திருக்குறள் முப்பால் : அறம், பொருள், இன்பம்,
(19) தூலம், சூக்குமம், காரணம்.
(20) மூலம், நடு, முடிவு. (ஆதிமத்யாந்தம்)
(21) ஆகாமியம், பிராரப்தம், சஞ்சிதம்.
(22) சத்துவம், ராஜஸம், தாமஸம்.
(23) இகம், பரம், வீடு.
(24) தொகை, வகை, விரி.
(25) முதனூல், வழிநூல், சார்புநூல்.
(26) வல்லினம், மெல்லினம், இடையினம்.
(27) ஆண், பெண், அலி.
(28) கேவலம், பெத்தம், முத்தம்.
(29) மூன்று சுடர் : சூரியன், சந்திரன், அக்கினி.
(30) வாதம், பித்தம், சிலேத்துமம்.
(31) இயல், இசை, நாடகம்.

இன்னும் பல.

## தமிழ் மூன்று

தமிழ் மூன்று வகை : இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ்.

இயற்றமிழ்—சத்து, இசைத்தமிழ்—சித்து, நாடகத்தமிழ்—ஆனந்தம்.

## இசைத்தமிழின் ஏற்றம்

இத்தகு வித்தகத்தில் இசை நடுநாயகமாகத் திகழ்கின்றது.

"ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே"

என்கின்றார் அப்பர் பெருமான்.

ஓசையிலிருந்து உலகம் உண்டாயிற்று என்று ஞான நூல் பேசுகின்றது.

ஆடவல்லானுடைய திருக்கரத்தில் விளங்கும் உடுக்கையின் ஓசையில் உலகம் தோன்றியது.

"தோற்றந் துடியதனில்" —உண்மை விளக்கம்.

எங்கும் நீர்மயமாகி எல்லாம் ஒடுங்கியபோது சிவபெருமான் வீணைவாசித்து மீளவும் உலகத்தை மலரச் செய்தார் என்று அப்பர் பெருமான் அருளிச் செய்கின்றார் :

பெருங்கடல் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும்போய்
இருங்கடல் மூடி யிறக்கும் இறந்தான் களேபரமும்
கருங்கடல் வண்ணன் களேபர முங்கொண்டு
கங்காளராய்
வருங்கடல் மீளநின் றெம்மிறை நல்வீணை
வாசிக்குமே.

நவக்கிரகங்களாகிய ஒன்பது கோள்களையும் சிவபெருமான் வீணைவாசித்து அவற்றின் கொடுமைகளை நீக்கி நல்லவர் ஆகச் செய்கின்றார் என்று திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச் செய்கின்றார் :

"வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமே லணிந்தென்
உளமே புகுந்த வதனால்
ஞாயிறுதிங்கள் செவ்வாய் புதன்வியாழன் வெள்ளி
சனிபாம் பிரண்டு முடனே
ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே"

இறைவனை வேண்டித் தவஞ்செய்து அசுவதரன், கம்பளதரன் என்ற இரு கந்தருவர்கள், குண்டலமாகிச் சிவமூர்த்தியின் செவிகளில் அணிகலமாக இருந்துகொண்டு, இடையறாது இசைபாடி இறைவனை மகிழ்விக்கின்றார்கள்.

யாழ் வாசித்து உதயணன் மதயானையை அடக்கினான் என்று உதயணகாவியம் கூறுகின்றது. குழந்தையும், பாம்பும், பசுவும் இசையைக் கேட்டுத் தம்மை மறந்துவிடு கின்றன.

## உண்மை இன்பம் எது?

இன்பத்தை விரும்பாத உயிர்களேயில்லை. எல்லா மதத்தவரும், எல்லாத் தேயத்தவரும், எல்லாக் காலத்தவரும், எல்லாக் கட்சியினரும் இன்பத்தை விழைகின்றார்கள். எனக்குத் துன்பம் வேண்டும் என்று, எங்காவது, எவரேனும் கூறுகின்றார்களா? இல்லை.

இன்பத்தை யடைகின்றவர்கள் கோடிக்கொருவரும் இலர். ஏன்? இன்பத்தை விரும்புகின்றார்களே யன்றி இன்பத்தைப் பெறும் வழியைத் தெள்ளத்தெளிவாகத் தெரிவிக்கின்றார்களில்லை.

நம்மில் அநேகர், பொருளால் இன்பம் வரும் என்று பிழையாகக் கருதி, வாணாள் முழுவதும் பொருள் தேடி வாடி வருந்தி ஓடியலைந்து உழன்று சுழன்று இன்பத்தைப் பெறாது துன்புற்று மாய்கின்றார்கள். பெருந்தனம் படைத்தவர்கள் அல்லும் பகலும் துன்புற்றுத் துடிப்பதைக் கண்கூடாகப் பார்க்கின்றோம். ஆதலால் பொன்னால் பொருளால் இன்பம் இல்லை. மனைவி மக்களால் இன்பம் என்று எண்ணி, விளக்கைக் கனியெனக் கருதி அதில் வீழ்ந்து மாயும் விட்டில் பூச்சியைப்போல், மாந்தர் பலர் மனைவி மக்களால் துன்புறுவதை எங்குங் காண்கின்றோம்.

மதலையைப் பெறுநாள் துன்பம் வளர்த்திடு
நாளுந் துன்பம்
விதலைநோ யடையில் துன்பம் வியன்பருவத்துந்
துன்பம்
கதழுறு காலர் வந்து கைப்பற்றில் கணக்கில்
துன்பம்
இதழுறு பாலர் தம்மால் எந்நாளுந் துன்ப மாகும்.

"மனைமக்கள் சுற்ற மெனுமாயா
வலையைக்க டக்க அறியாதே
வினையிற்செ ருக்கி யடிநாயேன்
விழலுக்கி றைத்து விடலாமோ"

—திருப்புகழ்.

"மனையோடு தியங்கி மயங்கிடவோ" —கந்தரநுபூதி

"கற்பகமரத்தின் கீழ்வாழும் பெருஞ்சுகத்தை விரும்பி நான் பெருந்துன்பம் அடைந்தேன்" என்று இந்திரனுடைய புதல்வன் சயந்தன் புலம்பி நின்றான் :

"தண்டேன் துளிக்குந் தருநிழற்கீழ் வாழ்க்கை வெஃகிக்
கொண்டேன் பெருந்துயரம் வான்பதமுங் கோது என்றே
கண்டேன்"

ஆதலால் பொன்னாலும், பொருளாலும், நிலபுலங்களாலும் மனைவி மக்களாலும் சுகம் இல்லை என்பது துணிபு.

எங்கே, எதனால் இன்பம் எய்தும்? எங்கே மனம் ஒடுங்குகின்றதோ, அங்கேதான் இன்பம் விளைகின்றது.

**மனம் அடங்க இசை**

மனம் அடங்கிய இடம் சுகாரம்பம். இந்த சுகத்தை மறைகள் எல்லாம் முழங்குகின்றன.

சும்மா விருக்கச் சுகஞ்சுக மென்று சுருதியெல்லாம்
அம்மா நிரந்தரஞ் சொல்லவும் கேட்கும் அறிவின் றியே
பெம்மான் மவுனி மொழியையுந் தப்பிஎன் பேதைமையால்
வெம்மாயக் காட்டில் அலைந்தேன் அந்தோ! என் விதிவசமே.

—தாயுமானார்.

இன்று வருமோ நாளைக் கேவருமோ! அல்லதுமற்
றென்று வருமோ அறியேன் எங்கோவே—துன்றுமல

N. Latha



வெம்மாயை யற்று வெளிக்குள் வெளிகடந்து
சும்மா இருக்கும் சுகம்.

—வள்ளலார்

இனிச் சும்மா இருப்பதாகிய மனம் அடங்கும் நிலை எவ்வாறு உண்டாகும் என்று சிந்திப்போம். பேய்மனம் எளிதில் அடங்காது; ஒடுங்காது. எண்ணில்லாத காலமாக அலைந்து அலைந்து உழன்றது. அதன் கொட்டத்தை அடக்குவது மிகவும் கடினம்.

வடநாட்டில், மனம் அடங்கக் கஞ்சா அபினி முதலியவற்றைச் சில துறவிகள் கையாளுகின்ருர்கள்.

நமது பொன்னுடாகிய தென்னுட்டில் மனம் அடங்கக் கண்டுபிடித்த வழி இசைப்பாடலே யாகும்.

## இசை பெறு இசை

சங்கீதம் பூராத் தெரிந்தவர் தம்பூராவை மீட்டிப் பாடினுல், கேட்டவர்கள் மனம் அப்படியே ஒருமைப் பாட்டை யடைந்து விடுகின்றது.

எனவே, இனிய நாதம், ஓடியலையும் மனத்தை ஒடுங்கச் செய்யும் பேராற்றலுடையது. இசை, உயிரையும் உய்விக்கும்; பயிரையும் வளர்க்கும். கயிலை மலையைப் பேர்த்த இராவணன் இசையால் பாடி உயர்வு பெற்ருன்.

சமண முனிவர்கள் இசையை வெறுத்து ஒதுக்கினுர்கள். அக்காலத்தில், தமிழகத்தில் ஆளுடைய பிள்ளையார் அவதரித்து, நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பி, மனித குலத்தை வாழவைத்தருளினுர்.

அவருடைய தமிழ் வேதத்தைத் திருநீலகண்ட யாழ்ப் பாணர் யாழில் இசைத்து வாசித்து உலகுக்கு இன்பத்தை வழங்கினுர்.

## குழலும் யாழும்

குழலும் யாழும் இசைக் கருவிகளில் முதன்மை யானவை. முதன் முதலாகக் குழல் வாசித்தவர் குமாரக் கடவுள்.

"குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்"
—திருமுருகாற்றுப்படை

முதன்முதலாக யாழ்வாசித்தவர் சிவபெருமான். "வீணு தட்சிணுமூர்த்தி" என்ற மூர்த்தியே சான்று. "குழலினிது யாழ் இனிது என்ப" என்கின்ருர் திருவள்ளுவர்.

இறைவனை நமது தாய்மொழியால் பாடித் துதிப்பது மிகவும் சிறந்தது. பொருள் தெரிந்து பாடுகின்றபோது மனம் ஒன்றுகின்றது.

## இனிமையும் நீர்மையும் தமிழெனலாகும்

மொழிகளில் சிறந்த மொழி தமிழ். ஏனைய மொழிகள் கனமானவை; தமிழ் இலகுவான மொழி.

கனமான உடம்புடையவனும் மென்மையான உடம்புடையவனும் நடக்கத் தொடங்கினுல் பருத்த உடம்புடையவன் பிந்துவான்; மென்மையுள்ளவன் முந்துவான்.

வன்மையான பிற மொழிகள் பிந்தும், மென்மையான தமிழ் முந்தும். அதனுலே அருணகிரி சுவாமிகள்,

"முந்து தமிழ்மாலை கோடிக்கோடி"

என்கின்ருர்.

இனி இறைவனுடைய செவியில் முந்திச் சென்று சேரும் மொழி தமிழ். அது இனிய மொழி. என்றுமுள இளந் தமிழ், சாவாதது; மூவாதது. தேவாமிர்தம் போன்ற தித்திக்கும் மொழி. சித்திக்கும் முத்திக்கும் உரியது தமிழ்.

## தமிழ் இசைச் சங்கத்தின் தளராத தொண்டு

அதனுல் இங்கே தமிழ் இசைச் சங்கம் என்று ஒரு நிறுவனம் அமைத்து, நாளும் நாளும் தமிழையும் இசையையும் வளர்க்கின்ருர்கள். இத்தமிழிசை, மனம் ஒருமைப்பட்டு உயர்ந்த தெய்வ நலத்தை உலகுக்கு வழங்குகின்றது.

அகத்திய முனிவருடைய சீடர் பன்னிருவரில் ஒருவரான சிகண்டி முனிவர் இசை நுணுக்கம் என்ற நூலை யாத்தருளினூர். காலவெள்ளத்தால் அந்நூல் இன்று மறைந்துவிட்டது.

**இறையின்பம் பெற இசைவிப்பது இசை**

தேவார முதலிய திருமுறைகளும், திருப்புகழ் முதலிய தமிழ் மறைகளும் இசைமயமானவை. அன்பர்கள் அனைவரும் சித்தரும் முத்தரும் பத்தரும் போற்றும் இசைத் தமிழினைப் பயின்று, மனத்தை ஒடுக்கி, இறையின்பமாகிய பேரின்பத்தைப் பெற்று உய்வார்களாக.

## 87. திருப்புகழ்

ஒரு வீட்டுக்கு, அதனைப் புதுக்கியோன் பேர் சூட்டுவான். "பங்கஜ நிலையம்" "அன்பு நிலையம்" "குமார பவனம்" "முருகனில்லம்" என்றெல்லாம் அழகுபெறப் பெயரிடுவார்கள்.

அதுபோல், ஒரு நூல் செய்தவர்தான், அந்த நூலுக்குப் பேரிடுவார். இதுதான் எங்கும் என்றும் வழக்கம்.

ஆனுல், இதற்குப் புறநடையாக, அருணகிரியார் பாடியருளிய பாடல்களுக்கு, முருகனே திரும்புகழ் என்று பேர் சூட்டினுரா, இல்லை. பாடு முன்னரேயே "திருப்புகழ் பாடு" என்று கட்டளையிட்டார். இக் கருத்தை,

"திருப்புகழ் விருப்பமொடு செப்பென
எனக் கருள்கை மறவேனே"

என்று அருணகிரிநாதரே கூறுகின்றுர்.

சிவபெருமான் சுந்தரரைப் பார்த்து "சொற்றமிழ் பாடுக" என்றுதான் கூறினுர். முருகன் "தமிழ் பாடுக" என்று கூறினுரில்லை. "திருப்புகழ் பாடுக" என்றே கூறியருளினுர். இதனுல் திருப்புகழின் உயர்வு நன்கு தெரிகின்றதல்லவா?

திருவண்ணுமலையில், அருணகிரியாரைத் திருப்புகழ் பாடுக என்று கட்டளையிட்டு, வாக்கு வன்மை தந்த கந்த வேள், வயலூரில் திருப்புகழைப் பாடும் தன்மையும், ஊக்கமும், அன்பும் தந்தருளினர்.

"பாத பங்கய முற்றிட உட்கொண்
டோது கின்ற திருப்புகழ் நித்தம்
பாடு மன்பது செய்ப்பதி யில்தந்
தவனீயே"

என்று அருணகிரிப் பெருமான் கூறுவதால் அறிக. பல பிறவிகளில் செய்த புண்ணியம் இருந்தால்தான், ஒருவனுக்குத் திருப்புகழில் பற்று வரும்.

திருப்புகழ் என்பது, முருகப் பெருமானுடைய திருமார்பில் ஞானவொளிவீச விளங்கும் மதாணியாக விளங்குகின்றது.

"உரைபெற வகுத்தகருணை நகரிலொரு பத்தனிடும்
ஒளிவளர் திருப்புகழ் மதாணிக் காரனும்"
—திருவகுப்பு

திருமுருகன் திருமார்பில் திகழும் கடப்பமலர் மாலைக்குத் திருப்புகழ்ப் பாடல்கள் பன்னீராக அமைந்து மணங் கமழ்கின்றன.

"பலபல பைம்பொன் பதக்க மாரமும்
அடிமை சொலுஞ்சொல் தமிழ்ப்ப னீரொடு
பரிமள மிஞ்சக் கடப்ப மாலையும்
அணிவோனே"

என்ற திருப்புகழ் வாக்கால் இதனை உணர்க.

இத்தகைய தெய்வத் திருமறையை, இடையருது, எப்போதுந் தப்பாது, ஓதி ஓதி உணர்ந்து. உருகி உருகி வழிபாடு செய்து உய்வோமாக.

## 88. கனவு

நமக்கு விழிப்பு நிலை, கனவு நிலை, உறக்க நிலை என்று மூன்று நிலைகள் உண்டு; ஜாக்ரம், சொப்பனம், சுஷுப்தி என்பார்கள்.

கனவு என்பது மிகவும் சிந்தனைக்கு உரிய ஒன்று. கனு சாஸ்திரம் என்று வியாழ பகவான் எழுதியிருக்கிறார். கனவதிகாரம் ஒன்று பாம்பன் அடிகளாரும் எழுதியிருக்கிறார்கள்.

கனவிலே மூன்று வகை உண்டு. ஒன்று பகலிலே கண்டவை விட்டும் தொட்டும் வரும். ஒன்று பித்த மயக்கத்தால் வருவது. ஒன்று எதிர்காலத்தில் விளையக்கூடிய நிகழ்ச்சிகளை விளக்குவது.

இந்தத் தூல உடம்புக்குள் இன்னும் ஓர் உடம்பு இருக்கிறது. அது சூட்சும சரீரம் எனப்படும். அதற்குக் கண் காது முதலிய அவயங்கள் உண்டு. மெல்லிய பட்டுச் சட்டைக்கு மேல் கோட்டுத் தரித்திருப்பதுப்போல், ஆன்மா சூட்சும சரீரத்துக்குமேல் இந்தத் தூல சரீரத்தைத் தாங்கிக் கொண்டிருக்கிறது. சூட்சும சரீரந்தான் கனுவில் தொழிற்படுகிறது. முதல் சாமத்தில் கண்ட கனு ஓர் ஆண்டில் பலிக்கும். இரண்டாம் சாமத்தில் கண்ட கனு எட்டு மாதத்திலும், மூன்றும் சாமத்தில் கண்ட கனு மூன்று மாதத்திலும், நாலாம் சாமத்தில் கண்ட கனு நாற்பது நாட்களிலும் பலிக்கும். முப்பது அல்லது பத்து நாட்களிலும் பலிப்பதுண்டு.

பூமி சம்பந்தமான கனு, நீர் சம்பந்தமான கனு, நெருப்புச் சம்பந்தமான கனு, காற்றுச் சம்பந்தமான கனு, ஆகாய சம்பந்தமான கனு என்று பல வகையான கனவுகள் உண்டு. இன்ன இன்ன கனுக் கண்டால் இன்ன இன்ன பலன் என்று கனு நூல் விரிவாக விளம்புகிறது.

ஞானேந்திரியங்கள் 5, கன்மேந்திரியங்கள் 5, சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற புலன்கள் 5, வசனம் கமனம் தானம் ஆனந்தம் விசர்ச்சனம் என்ற கன்மங்கள் 5, வாயுக்கள் 10. மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்ற அந்தக்கரணங்கள் 4, புருடன் 1, ஆக 35, இந்த 35 தத்துவங்களுடன்

புருவ நடுவில் ஆன்மா நின்ற நிலை சாக்கிரம். வாயுக்கள் 10, புலன்கள் 5, வசனாதிகன்மங்கள் 5, அந்தக்கரணம் 4, புருடன் 1, ஆக 25, இந்த இருபத்தைந்து தத்துவங்களுடன் ஆன்மா கண்டத்தில் நின்ற நிலை கனவு. பிராணன் 1, சித்தம் 1, புருடன் 1, ஆக மூன்று, இந்த மூன்று தத்துவங்களுடன் இதயத்தில் ஆன்மா நிற்கும் நிலை உறக்கம் (சுஷுப்தி).

சாக்கிரமா நுதலினிலிந் திரியம் பத்தும்
சத்தாதி வசனாதி வாயு பத்தும்
நீக்கமிலந் தக்கரணம் புருட னோடு
நின்றமுப் பானைந்தும் நிலவும்; கண்டத்
தாக்கியசொப் பனமதனில் வாயு பத்தும்
அடுத்தனசத் தாதிவச னாதி யாக
நோக்குகர ணம்புருடன் உடனே கூட
நுவல்வர்இரு பத்தைந்தாம் நுண்ணியோரே.

இனி, கனவுகளில் சிலவற்றின் பயன்களைக் கூறுகிறேன். பாம்பு தேள் சிலந்தி இவைகளைக் கண்டால் வெற்றி உண்டாகும். தவளை முதலியவற்றைக் கண்டால் நன்மை. பூனையைக் கண்டால் தீமை. தங்கத்தைக் கண்டால் சுபம். வெள்ளியைக் கண்டால் எண்ணிய கருமம் கெடும். ஈயத்தைக் கண்டால் விவாதம். இரும்பைக் கண்டால் வறுமை. மயிலைக் கண்டால் நன்மை. இறந்து விட்ட பெரியோர்களைக் கண்டால் காரிய சித்தி. மயானத்தைக் கண்டால் நல்லது.

நூல்களில் கனவு நிலைகளைப்பற்றிய செய்திகள் வருகின்றன. அவற்றுள் சிலவற்றை இங்கே தருகின்றேன்.

*(1)* சிந்தாமணி என்ற பழம்பெரு நூலில் சச்சந்தனுடைய மனைவி விசயை பூங்கொத்துக்கள் நிறைந்த அழகிய அசோக மரம் அடிபெயர்ந்து வீழ்ந்ததாகவும், அதன் அடியில் ஒரு முளை தோன்றியதாகவும் கண்டாள்.

தொத்தணி பிண்டி தொந்தற வீழ்ந்ததென்
மூத்தணி மாலை முடிக்கிட னாக
ஒத்ததன் தாள்வழி யேமுளை யோங்குபு
வைத்தது போல வளர்ந்ததை யன்றே.

இந்தக் கனுநிலையை அவள் தன் கணவனிடம் கூறி, "அதற்கு என்ன பயன்?" என்று கேட்டாள்.

"அசோகமரம் வீழ்ந்தது, எனக்கு அழிவு உண்டாகும் என்பதையும்; பல மாலைகட்கு இடனாக ஒரு முளை தோன்றியது, பல மனைவியருடன் உன் மகன் சிறப்புறுவான் என்பதையும் குறிக்கின்றன" என்று சச்சந்தன் தன் மனைவியிடம் கூறினான்.

(2) கேகய நாட்டில் வசித்த பரதர் தீய கனவுகள் கண்டார். "என்தந்தை தலைமயிரைவிரித்துக்கொண்டு அழுக்குத் துணியுடன் ஒரு மலையின் உச்சியிலிருந்து சாணம் நிறைந்த மடுவில் குதித்து நீந்தி விளையாடுவதாகக் கண்டேன். கைகளால் எண்ணெயை வாரிக்குடித்துக்கொண்டு அடிக்கடி உரக்கச் சிரித்துக் கொண்டிருந்தார். உடம்பில் எண்ணெய் பூசிக் கொண்டிருந்தார். எள்ளன்னத்தைத் தின்றுகொண்டு எண்ணெய் நிறைந்த மடுவில் தலைகீழாக விழுந்து முழுகினார். கடல் வற்றியது. சந்திரன் விண்ணிலிருந்து விழுந்தான். எங்கும் இருள் மூடியது. பட்டத்து யானையின் கொம்பு துகளாகியது. தீ அணைந்தது. பூமி வெடித்தது. மரங்கள் பட்டுப் போயின. மலைகளில் புகை கிளம்பியது. தயரதர் கரிய உடை உடுத்துக் கொண்டு இரும்பு ஆசனத்தில் அமர்ந்திருந்தார். கறுப்பு நிறமுள்ள பெண்களும், மஞ்சள் நிறமுள்ள பெண்களும், அவரைச் சுற்றி நின்றுகொண்டு கைகொட்டிச் சிரித்தார்கள். சிவப்புச் சந்தனமும், சிவப்பு மாலையும் தரித்துக்கொண்டு கழுதைகள் பூட்டிய தேரில் அவர் அமர்ந்து தெற்கே சென்றார். இத்தகைய கொடிய கனவுகளைக் கண்டேன்" என்று பரதர் கூறினார்.

(8) சுந்தர காண்டத்தில் காட்சிப் படலத்தில் திரிசடை கண்ட கனவைப் பற்றிக் கம்ப ராமாயணத்தில் வருகின்றது.

"அம்மா ஜானகி, இப்போது நான் சில கனவுகள் கண்டேன். என் கனவுகள் பொய்யாகமாட்டா. பலிக்கக் கூடியவை.

எண்ணெய்பொன் முடிதொறும் இழுகி ஈறிலாத்
திண்ணெடுங் கழுதைபேய் பூண்ட தேரின்மேல்

அண்ணல் அவ் விராவணன் அரத்த ஆடையன்
நண்ணினன் தென்புலம் நவையில் கற்பினுய்.

"குற்றமற்ற கற்புடைய தாயே! என் பெரிய தந்தை யாகிய இராவணன் சிவந்த ஆடையை உடுத்துக்கொண்டு, கழுதைகளும் பேய்களும் பூட்டிய தேரின்மீது ஏறித் தென் திசை சென்றதாகக் கனுக் கண்டேன். சுற்றமும் புதல்வர் களும் இராவணனைத் தொடர்ந்து சென்ருர்கள். இராவணன் வீட்டில் வளர்க்கும் நெருப்பு அணைந்தது. இடி விழுந்து அழகிய அரண்மனை இடிந்தது. அரக்கமாதர்களின் தாலிகள் அறுபட்டு வீழ்ந்தன. மண்டோதரியின் கூந்தல் கீழே விழுந் தது. மேலும் அக்கூந்தலில் தீப்பிடித்து எரிந்து நாறியது. யானைகள் வாழும் காட்டில் புலிக்கூட்டங்களுடன் இரண்டு சிங்கங்கள் வந்து அழித்தன. அந்தக் காட்டில் வாழ்ந்த மயில் அந்தச் சிங்கங்களுடன் சென்றது.

ஆயிரந் திரிவிளக் கமைய மாட்டிய
சேயொளி விளக்கதொன் றேந்திச் செய்யவள்
நாயகன் தனிமனை நின்று நண்ணுதல்
மேயினள் வீடணன் கோயில் மென்சொலாய்.

"ஆயிரம் திரிகள் எரிகின்ற சிவந்த விளக்கினை ஏந்திக் கொண்டு ஒரு பெண் இராவணனுடைய வீட்டிலிருந்து விபீஷணருடைய வீட்டிற்கு வந்ததாகக் கனுக் கண்டேன்."

இவ்வாறு இன்னும் பல கனு நிகழ்ச்சிகளைக் கூறினுள்.

(4) கந்தபுராணத்திலும் இக் கனவு நிலையைப் பற்றிய செய்தி உண்டு.

இந்திரன் மகனுகிய சயந்தன் வீரமகேந்திரபுரியில் சிறை யில் கிடந்து இடர்ப்பட்டான்; அழுதான்; சிவபெருமானை வேண்டித் தொழுதான். அவனுடைய துயரைக் கலையுமாறு கந்தவேள் கருணையுடன் அவனுடைய கனவில் காட்சியளித் தருளினுர்.

வீறு கேதனம் வச்சிரம் அங்குசம் விசிகம்
மாறி லாதவேல் அபயமே வலம்இடம் வரதம்
ஏறு பங்கயம் பணிமழுத் தண்டுவில் இசைந்த
ஆறி ரண்டுகை அறுமுகங் கொண்டுவேள்
அடைந்தான்!

முருகப்பெருமான் ஆறுமுகம் பன்னிரு கரங்கள் அமைந்த திருவுருவுடன் கனவில் காட்சியளித்தருளினர்.

சயந்தன் இந்தத் தூல உடம்புக்குள் இருக்கிற சூட்சும உடம்பிலுள்ள கண்களால் கண்டு தொழுதான்.

தந்தை யில்லதோர் பரமனைத் தாதையா
 வுடைய
கந்தன் ஏகியே யனையதன் உருவினைக் காட்ட
இந்தி ரன்மகன் உளப்படும் யாக்கையுள் இருந்த
முந்து கண்களால் கண்டனன் தொழுதனன்
 மொழிவான்.

(5) பரமஞான அநுபூதிமானுகிய தாயுமானுர் தம் கனவுநிலையை அருளிச் செய்துள்ளார். அவருடைய தலையின் மீது சிவபெருமான் திருவடி சூட்டியதாகக் கனவு கண்டார்.

மால்வைத்த சிந்தை மயக்கறஎன் சென்னிமிசைக்
கால்வைக்க வும்கனவு கண்டேன் பராபரமே.

மற்றும் ஒருநாள் கனவில் இறைவன் தோன்றிச் சின் முத்திரையைக் கரத்தால் காட்டி அருள் புரிந்தான்.

மைகாட்டு மாயை மயக்கமற நீகுருவாய்க்
கைகாட்ட வும்கனவு கண்டேன் பராபரமே.

மண்ணீர்மை யாலே மயங்காதுன் கையால்
கண்ணீர் துடைக்கவும்நான் கண்டேன்
 பராபரமே.

(6) ஆண்டாளம்மையார் திருமாலை நினைந்து நினைந்து உள்ளம் நெகிழ்ந்து நெகிழ்ந்து வழிபட்டார். எம்பெருமாட்டியின் கனவில் அரங்கத்தில் அரவணையில் அறிதுயில் அமர்ந்த அரிமுகுந்தன் காட்சி தந்து அருளினர். அதனை அந்த அம்மையார் அமுதத் தமிழால் அருளிச்செய் தருளினர்.

மத்தளங் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாமம் நிரைதாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதன் வந்தென்னைக்
கைத்தலம் பற்றக் கனக் கண்டேன் தோழீநான்

(7) திருநாவுக்கரசு சுவாமிகள் வேதாரண்யத்தில்தங்கி யிருந்தபோது அவருடைய கனவிலே சிவபெருமான் சென்றருளி, "நம் வாய்மூருக்கு வா" என்று அருளிச் செய்தார்.

(8) திலகவதியாருடைய கனவிலே சிவபெருமான் தோன்றி, "உன் தம்பி சமணசமயம் புகுந்தான் என்று நீ வருந்தற்க. அக் கவலையை ஒழி. இவன் முன்னமே முனியாக என்னை அடையத் தவஞ்செய்தான். அவனைச் சூலை வலியால் ஆட்கொள்வோம்" என்று அருளிச் செய்தார்.

(9) சங்கிலி நாச்சியார் கனவில் தோன்றியருளினர்.

(10) அருணகிரிநாத சுவாமிகள் வயலூரில் கண்துயிலும் போது முருகவேள் கனவில் தோன்றி, "நம் விராலிமலைக்கு வருக" என்று அருள் புரிந்தார்.

**கனவிலாள் சுவாமீநின் மயில்வாழ்வும்**
**கருணைவாரி கூரேக முகமும்வீர மாருத**
**கழலுநீப வேல்வாகு மறவேனே.**

—(திருவுருப) திருப்புகழ்.

## 89. ஓர் அரிசி

ஆண்டவனை வழிபடுவதைக் காட்டிலும் அடியாரை வழிபடுவது சிறந்தது. ஆண்டவனை வழிபடுவோர்க்கு ஒரு பலன். அடியாரை வழிபடுவோர்க்கு இரட்டைப் பலன். ஏன்? அடியார்கள் உள்ளக் கோயிலில் ஆண்டவன் உறைகின்றான், ஆதலின் அடியார் வழிபாடு உயர்ந்தது என்றுணர்க.

ஆண்டவனுக்குத் தந்த ஒன்று அடியார்க்குச் சேராது. அடியார்க்குத் தந்தது ஆண்டவனைச் சேரும். அஞ்சல் தலைமை நிலையத்தில் இட்ட அஞ்சல், அஞ்சல் பெட்டிக்கு வராது; அஞ்சல் பெட்டியில் இட்ட அஞ்சல் தலைமை நிலையத்துக்குச் சேர்ந்துவிடும். அஞ்சல் தலைமை நிலையம் இறைவன்; அஞ்சல் பெட்டி அடியார்கள் என்றுணர்க.

"படமாடக் கோயில் பரமர்க்கொன் றீயின்
நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா
நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றீயின்
படமாடக் கோயில் பரமர்க்கங் காமே"

என்பார் திருமூலர்.

ஆண்டவனுக்குச் செய்யும் வழிபாடு ஆராதனை எனப்படும். அடியார்க்குச் செய்யும் வழிபாடு சமாராதனை எனப்

படும். சம் ஆராதனை-சமாராதனை. சம்-நன்றாக, ஆராதனை-வழிபாடு. நன்றாக வழிபட்டது சமாராதனை.

ஆதலால் காதலால் அடியார்க்குச் செய்யும் வழிபாடு மிகமிகச் சிறந்த பயனை நல்கும்.

ஒரு சமயம் நான் பெருந் தனவந்தர் ஒருவரைச் சந்தித்தேன். அவர் மிகவும் இனிமையாகப் பேசி மிகவும் உபசரித்தார். "ஐயா, உமக்கு இத்துணைப் பெருஞ் செல்வம் எவ்வாறு வந்தது?" என்று கேட்டேன். அத்தனவந்தர் செல்வ நலத்தால் மட்டும் சிறந்தவர் அன்று; கல்வி நலத்தாலும் சிறந்தவர். உடனே இரு வெண்பாக்களினால் எனக்கு விடையிறுத்தார்.

கட்டத் துணியற்றுக் காந்துபசிக் கன்னமற்
றெட்டி மரமொத் திருந்தயான்—ஒட்ட
எறும்பிற்கு நொய்யரிசி யிட்டேன்; அதனால்
சிறிதுபொருள் ஈந்தான் சிவன்.

அப்பொருள்கொண் டீசன் அடியார்கட் கன்னமிட்டேன்
ஒப்புவமை யில்லான் உளமுவந்தே-இப்பார்
அளகேசன் என்றே அதிசயிக்கச் செல்வம்
அளவிலா தீந்தான் அவன்.

"உடுக்கத் துணியும் உண்ணச் சோறும் இன்றி எட்டி மரம் போல் வாழ்வு கசந்து இருந்த நான், வேறு ஒரு நற்பணியும் செய்ய இயலாது திகைத்து, எறும்பு வளைக்கு நொய்யரிசியிட்டு வந்தேன். அதனால் சிவபெருமான் சிறிது செல்வத்தை வழங்கியருளினார். சிவன் தந்த செல்வத்தைப் பாங்கியில் போடாமல் அப் பரமனுடைய அடியார்க்கு அன்னம் இட்டு வந்தேன். அதனால் அகம் மகிழ்ந்த அரனார் குபேரன் என்று என்னை எல்லோரும் மதிக்குமாறு அளவிறந்த செல்வத்தை வழங்கியருளினார்." இது அவர் கூறிய விடை!

ஒரு கிராமத்தில் ஒரு கிழவி இருந்தாள். சூது வாது வஞ்சனை பொய் களவு முதலிய தீக்குணங்கள் அத்தனைக்கும் அவள் உறைவிடமாக இருந்தாள். தரும குணம் ஒரு சிறிதும் இல்லாத பொல்லாத கிழவி. அவள் வீட்டில் வாழும் எறும்புகளுக்கு நித்திய ஏகாதசி. ஒன்றையும் சிந்தமாட்டாள். எறும்பின் வாயில் ஒரு நொய்யைப் பார்த்தால்

உடனே ஓடி அதை எடுத்துப் பானையில் போட்டுக் கொள் வாள். அவள் வீட்டில் சாப்பிட்ட இலை வெளியில் விழுந் தால், சாப்பிடாத இலை மாதிரி சுத்தமாக விழும். அதில் ஒரு துளிப் பசைகூட இராது. நாய்கள் வந்து பார்த்து ஏமாந்து போகும். நாம் செய்கின்ற வேலைகள் முழுவதையும் இந்தக் கிழவியே செய்துவிட்டாள் போலும் என்று பேசிக் கொள்ளும்.

பழைய சோற்றைப் பிசைந்து வடகம் போட்டுத் தின் பாள். கந்தல்களையெல்லாம் மடித்து மடித்துத் தலையணை யாக்கிப் போட்டுக்கொள்வாள். கோயிலுக்குப் போவாள். சுவாமி கும்பிடுவதற்கு அன்று; அங்கு யாராவது விட்டிருக் கும் பாதரட்சைகளைக் கவர்ந்து வரும் பொருட்டே. யாரா வது பிச்சைக்காரர் அவளுடைய வீட்டுக்குச் சென்றால் சீறி விழுந்து கடிக்க வருவாள். அவர்கள் அப்படியே நடுங்கி ஓடி விடுவார்கள்.

அவள் வாயில் மறந்தும் தெய்வத் திருநாமம் வராது. அவள் சிந்தையில் கருணைக்கு இடமே இல்லை. கருணைக் கிழங்காகத்தான் போகும். அவளை அந்த ஊரில் அனைவரும் வெறுத்து ஒறுத்தார்கள்.

ஒரு நாள் காலை, கிழவி நடையில் அரிசி தீட்டிக்கொண் டிருந்தாள். ஒரு சிறந்த சிவனடியார் வந்து,

"அரஹர சிவசிவ அம்பல வாணா
பரம தயாபர வரத குணாளா"

என்று பாடிக்கொண்டு நின்றார். "பாட்டீ! ஒரு பிடி அரிசி போடு" என்றார்.

கிழவி, "ஏம்! உனக்கென்ன மமதை? எனக்கு என்ன வயது? எண்பதுதானே ஆயிற்று? பாட்டி என்கின்றாய். பச்சை வெட்டு மருந்து சாப்பிட்டுப் பல் போய்விட்டது. தேன் பட்டு மயிர் நரைத்துவிட்டது. இது என்ன தரும சத்திரமா? உனக்கென்ன கேடு? செக்குலக்கை மாதிரி இருக் கின்றாய். போ போ!" என்று விரட்டினாள்.

"பெரியம்மா! காதில் தங்கத்தால் செய்த பாம்புவடம் போட்டிருக்கின்றாயே! கழுத்து நிறையத் தங்கச் சங்கிலி. இவையெல்லாம் ஏது? சிவன் தந்ததுதானே? நான்

பொன்னையும் பொருளையும் கேட்கவில்லையே! ஒரு பிடி அரிசிதானே யாசிக்கின்றேன்? அண்டாத் தொண்டையால் தகர டின் தட்டியதுபோல் கர்ச்சித்துப் பேசுகின்றனையே!

பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லை; பிறந்து
மண்மேல்
இறக்கும் பொழுது கொடுபோவ தில்லை இடைநடுவில்
குறிக்கும் இச்செல்வம் சிவன்தந்தது என்று
கொடுக்கறியாது
இறக்கும் குலாமருக் கென்சொல்லு வேன்கச்சி
ஏகம்பனே.''

அவ்வளவுதான். கிழவிக்குப் பொங்கி எழுந்தது சீற்றம். ஆலகால விஷம்போல் கொதித்தாள். "பிச்சைக்காரப் பயலே! என் வீட்டிலே வந்து இந்தத் தரித்திரம் பிடித்த மரணத்தைக் குறிக்கின்ற பாட்டைப் பாடுகின்றாயே!" என்று வைது, அரிசி தீட்டுகின்ற உலக்கையால் பத்திர காளிபோல் அந்தச் சிவனடியாரை அடிக்க ஓங்கினாள்.

உலக்கையில் ஒட்டியிருந்த ஓர் அரிசி அவருடைய அட்சய பாத்திரத்தில் வீழ்ந்தது. அதனைக் கிழவி பார்க்கவில்லை. பார்த்திருந்தால் எல்லா அரிசியும் என்னது என்று கொண்டிருப்பாள். அடியார் பிடித்தார் ஓட்டம்.

மற்ற வீடுகளுக்குச் சென்றார். சிறிது அரிசி கிடைத்தது. ஒரு மண்டபத்தில் அதைப் பொங்கி, தாம் வழிபடும் சிவலிங்கத்துக்கு நிவேதித்தார். பசியாறினார். சிவயோகத்தில் அமர்ந்தார். சிவஞானிகள் இன்றிருந்த ஊரில் நாளை இரார். அவர் தலயாத்திரைக்குச் சென்று விட்டார்.

நாளடைவில் கிழவி கண்ணை மூடிவிட்டாள். கால தூதர்கள் அவளைக் கட்டிப்பிடித்து யாதனா சரீரத்துடன் கொண்டுபோய் அறக்கடவுளுக்கு முன்னே நிறுத்தினார்கள்.

அறக்கடவுள் கடுகடுத்த முகத்துடன், "சித்திரகுப்தா, இவள் கணக்கை எடுத்துப் படி" என்று கட்டளையிட்டார்.

சித்திரகுப்தன் கிழவியின் கணக்கை எடுத்துப் படித்தான். "எல்லாம் பாவந்தான். புண்ணியமே இல்லை. எறும்பு வளையில் நெருப்பை இட்டாள். பெரியோரை நிந்தித்தாள். கோயில் உடைமைகளைக் கவர்ந்தாள். கண்ணில்லாதவர்களுக்குக் காலணாப் போட்டு நாலணா எடுத்துக்கொண்டாள். சிவராத்திரி சஷ்டி ஏகாதசி முதலிய விரத நாள்களில்கூடத் தலையணைக்குப் பஞ்சடைக்கின்ற மாதிரி வயிறு

புடைக்க தின்றாள். பேசிய யாவும் பொய். ஒருநாள் ஒரு மகனை உலக்கையால் அடிக்கச் சென்றாள். உலக்கையில் ஒட்டிய ஓர் அரிசி அவருடைய கரத்தில் இருந்த அட்சய பாத்திரத்தில் வீழ்ந்தது. அந்த ஓர் அரிசி சிவநிவேதனமாகி அச் சிவயோகியார் திருவயிற்றில் சேர்ந்தது. இந்த ஒன்றுதான் இவள் வாழ்நாளில் செய்த புண்ணியம். அதுவும் அபுத்தி பூர்வமாகச் செய்தது" என்றான்.

அறக்கடவுள், "நல்வினை அபுத்தி பூர்வமாகச் செய்தாலும் நன்மை பயக்கும். 'தான் சிறிதேயாயிடினும் தக்கார்கைப் பட்டக்கால், வான் சிறிதாப் போர்த்து விடும்.' நெருப்பைத் தெரியாமல் மிதித்தாலும் சுடுந்தானே? ஆதலால் இந்த ஓர் அரிசிக்கு என்ன நலத்தை நுகரவேண்டும். பார்த்துச் சொல்" என்றார்.

சித்திரகுப்தன், "அண்ணலே, அந்த ஓர் அரிசி அடியாரின் திருவுதரத்தில் வீழ்ந்தபடியால், திருக்கயிலாய மலையிற் சென்று சிவபெருமானைத் தரிசிக்க வேண்டும்" என்றார்.

அறக்கடவுள், "புண்ணியம் கடுகளவு; பாவம் மலையளவு. சூசீகடாக நியாயப்படி முதலில் புண்ணியத்தை நுகரட்டும். பிறகு பாவங்களை நுகரச் செய்யுங்கள். கிழவியின் பாவங்களுக்காக நரகில் இட்டு வாட்டி வருத்துங்கள். கிழவியின் வாயிலே தீயை வைத்துச் சுடுங்கள். கொதிக்கின்ற எண்ணெயில் இட்டுப் பொரியுங்கள்" என்றார்.

நமனுடைய தமர்கள் கிழவியைப் பாசக்கயிற்றால் நன்றாகப் பிணித்துக்கொண்டு போய்த் திருக்கயிலாயத்தில் சிவ சந்நிதியில் நெடுந்தொலைவில் நிறுத்தினார்கள்.

"கிழவி, அதோ பார். சிவபெருமான்!"

பவளக் குன்று போன்று கோடிச் சந்திரப் பிரகாசமாம் வேத மந்திர பீடத்தில் வீற்றிருக்கும் சிவமூர்த்தியையும், இடப்பாகத்தில் மரகதக் கொடிபோல் வீற்றிருக்கின்ற இமயவல்லி அம்மையையும், இடையில் கனகச் சிறு குன்று போல் களிநடம் புரியும் கந்த வேளையும் கண்டாள் கிழவி. அவள் கண்களில் ஆனந்தக் கண்ணீர் சிந்தியது.

"அப்பா எமதூதர்களே, உங்களுக்கு ஒரு கோடி வணக்கங்கள். ஓர் அரிசிக்கு இத்துணைப் புண்ணியம் வரும் என்று

பாவியாகிய எனக்குத் தெரியாமல் போய்விட்டது. அந்தோ! என் வீட்டில் குதிர் நிறைய நெல்லும் பல மூட்டைகள் அரிசியும் நெய்யும் பாலும் முந்திரிப் பருப்பும் பாதம் பருப்பும் டப்பா டப்பாவாக இருந்தன. அத்தனையும் இப்போது எனக்கு உதவவில்லை. பெட்டி நிறையப் பணம் வைத்திருந்தேன்; வட்டிமேல் வட்டி வாங்கினேன். பெட்டி மேல் பெட்டி அடுக்கினேன். எல்லாம் அங்கேயே நின்று விட்டன. அடியாரிடம் சேர்ந்த ஓர் அரிசிதான் இங்கு உதவுகின்றது. இத்துணைப் புண்ணியம் வரும் என்று யாரும் எனக்கு விவரமாகச் சொல்லவில்லை. சொல்லி யிருந்தால் என் வீடு தேடி வந்த அடியார்க்கு இருக்கையிட்டுப் பாலும் நெய்யும் அன்னமும் சொர்ணமும் அள்ளி வழங்கியிருப்பேன். சண்டாளியாகிய நான் கிள்ளிக்கூடத் தந்தேன் இல்லை. வாழ்நாள் முழுவதும் வீழ்நாளாகக் கழித்தேனே! போற்றாதே ஆற்ற நாள் போக்கினேனே! அப்பா, நீங்கள் நல்ல உத்தமர்கள். தேவருக்கும் மூவருக்கும் காணக் கிடைக்காத கண்ணுதற் கடவுளைக் கண்ணாரக் கண்டேன். ஆனந்தம் கொண்டேன். கடவுளைக் கண்டு கைகூப்பித் தொழவில்லையானால் மேலும் பாவந்தானே? உங்களைத் தலையினால் வணங்குகிறேன். சிறிது கட்டை அவிழ்த்துவிடுங்கள். கைகூப்பிக் கும்பிடுகின்றேன். பிறகு என்னைக் கட்டிக் கொண்டு போய் எரிவாய் நரகில் இருத்துங்கள்” என்று மிக மிக நடுங்கிய குரலுடன் இனிமையாகக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள்.

இரக்கமே அறியாத எமதூதர்களின் உள்ளம் சிறிது உருகிற்று. ‘குடலறுந்த குறுநரி எங்கே போகும்? என்று கருதிச் சிறிது கட்டை அவிழ்த்துவிட்டார்கள்.

கிழவி ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து திருக்கோயிலுக்குள் சென்று கருணைக் கடலாகிய சிவபெருமான் திருவடியைச் சிக்கெனப் பிடித்துக் கொண்டாள்.

“தேவதேவா! மஹாதேவா! தீனரட்சகா! கருணைக் கடலே! ஏழை பங்காளா! அருட் பெருஞ் சோதீ! அப்பனே! சிறியேன் அறியாமையால் வல்வினைகளைச் செய்துவிட்டேன். அத்தனையும் பொறுத்து ஏழையைக் காத்தருள். காலதூதர்கள் இரும்புச் சம்மட்டியால் அடிப்பார்களாமே! கும்பிபாக

நரகில் தள்ளிச் சித்திரவதை செய்வார்களாமே! தாண்டவம் புரியும் ஆண்டவனே! வேண்டியவர்களுக்கு அருளும் தயா நிதியே! என்னை விரட்டியடிக்காமல் காத்தருள். குழந்தைகள் செய்த குற்றங்களுக்கு அம்மையும் அப்பனும் தண்டிக்கலாம். தெருவில் போகும் பயில்வானை விட்டுத் தண்டிக்க மாட்டார்களே! எமனிடம் கொடுத்து என்னைத் தண்டிக்காதே!" என்று கூறிஅழுதாள்; தொழுதாள்.

கருணைநிதியாகிய கண்ணுதற் பெருமான் அவள் மீது கருணை மழை பொழிந்தார். "அஞ்சேல்" என்று அபயம் அளித்தார்.

கிழவி சிவபெருமான் திருவடியின் அருகில் நிமிர்ந்து அமர்ந்தாள்.

இத்தனையும் கண்ட காலதூதர்கள் ஆச்சரியம் அடைந்தார்கள். "கிழவி, வெளியே வா" என்று அழைத்தார்கள். கிழவி, "வரமுடியாது, போங்கள்" என்றாள்.

காலதூதர்கள், "எம்பெருமானே! கிழவியைத் துரத்தி அனுப்புங்கள். இவள் கொடிய பாவி. நரகில் தள்ளி இவளைத் தண்டிக்க வேண்டும்" என்றார்கள்.

சிவபெருமான், "காலதூதர்களே, விண்ணளவு அடுக்கிய பஞ்சுப் பொறி நெருப்பினால் எரிந்து கரிந்து சாம்பரானாற் போல இவளுடைய பாவங்கள் யாவும் என்னைத் தீண்டிய வுடனே நீறாகிவிட்டன. இவளை நாம் மன்னித்து அருள் புரிந்தோம். நீங்கள் உங்கள் உலகுக்குச் செல்லுங்கள்" என்று அருளிச்செய்தார்.

"காலதூதர்கள், ஐயனே, எங்கள் தலைவனுக்கு என்ன சொல்வது?" என்றார்கள்.

சிவபெருமான், "மார்க்கண்டேயர் வரலாற்றை நினைவு படுத்துங்கள்" என்றார்.

காலதூதர்கள் மறைந்து நமனுலகம் போய் நடுங்கி அறக்கடவுளுக்கு முன் நின்றார்கள்.

அறக்கடவுள், "எங்கே கிழவி?" என்று கேட்டார். அவர்கள் நிகழ்ந்ததைக் கூறினார்கள்.

அறக்கடவுள் இறைவனுடைய கருணைத் திறத்தையும் அடியார் குட்சியில் வீழ்ந்த ஓர் அரிசி செய்த விந்தையையும் நினைந்து அதிசயம் அடைந்தார்.

# 90. மீனுட்சியம்மை திருமணம்

தங்கத்தை நிறுக்கத் துலாக்கோல் உண்டு; பாலே அளக்க வேண்டுமானுல் படியுண்டு; துணியை அளக்கவேண்டு மானுல் அதற்கு ஒரு கோல் உண்டு. அதுபோல் ஆளே நல்ல வனு? தீயவனு? என்று அளக்க ஒரு கருவியுண்டு. அது எது? அவ னவன் கண்களே ஆளே அளக்கின்ற அளவு கோல் என்று அறிக.

இவன் உண்டிருக்கின்ருன்; இவன் பசித்திருக்கின்ருன்; இரவில் கண் விழித்திருக்கின்ருன்; கோபமாக இருக்கின்ருன்; மகிழ்ச்சியாக இருக்கின்ருன்; மது உண்டிருக்கின்ருன்; துன் பத்துடன் இருக்கின்ருன் என்று கண்கள் அறிவித்து விடும். வேறு நாசியைக் கொண்டோ, செவியைக் கொண்டோ அறிய முடியாது.

சீதாதேவியைக் கண்டவுடன் அம் மாதரசியின் கண்களி ஞல் அவளேக் கற்புக்கரசி யென்று அநுமான் கண்டுகொண்ட தாக அவர் இராமரிடம் கூறுகின்ருர். எனவே, மனிதனே அளக்குங் கருவி கண் என உணர்க.

அம்பிகையின் நாமங்களில் பல கண்ணேப் பற்றியே அமைந்திருக்கின்றன. கமலாட்சி, பங்கஜாட்சி, வனஜாட்சி, நீலாயதாட்சி, விசாலாட்சி, நீரஜாட்சி, ஜீவாட்சி, காமாட்சி, மீனுட்சி முதலியன. திருமாலேயும் புண்டரீகாட்சன் என்பர். கண்ணன் என்ற பேர் எத்துணே அருமையுடையது.

அம்பிகைக்கு மீனுட்சி என்ற பேர் எதனுல் அமைந்தது என்பதைச் சிந்திப்போம்.

ஆமை மணலில் முட்டையிட்டு, மணலால் மூடிவிட்டுத் தண்ணீருக்குள் செல்லும். மந்தமான அந்த ஆமை, சில நாள் பொறுத்து, தான் இட்ட முட்டைகளே இருந்த இடத்தில் இருந்து கொண்டே நினேக்கும். நினேத்த மாத்திரத்தில் மணலில் முட்டைகள் வெடித்துக் குஞ்சுகள் வெளிப்படும்.

அதுபோல், குருநாதன் இமயத்தில் இருப்பார். சீடன் சிதம்பரத்தில் இருப்பான். சீடன் நலம்பெற வேண்டுமென்று அவர் அங்கிருந்து சிந்திப்பார். சிந்தித்த மாத்திரத்தில் சீட ஞுக்குச் சகல நலன்களும் விளேயும். இது மானச தீட்சை யாகும்.

பறவை முட்டையிட்டு அடை காக்கும். அதன் பரிசத் தால் முட்டை வெடித்துக் குஞ்சுகள் வெளிப்படும். அது போல் குருநாதர் சீடனேத் தமது ஒரு கரத்தால் தொட்டு ஞானத்தை வழங்குவார். இது பரிச தீட்சை.

ராமகிருஷ்ண பரமஹம்சர், விவேகானந்தருடைய மார்பில் தமது திருக்கரத்தை வைத்து ஞானதானம் புரிந்தார்.

மூன்றாவது; மீன் வரிசையாக முட்டைகளை இடும். அவை முத்துக்களைக் கோர்த்ததுபோல் அழகாக இருக்கும். தாய் மீன் மீளவும் அவற்றைப் பார்க்கின்றவரை அவைகள் அப்படியே இருக்கும். தாய் மீன் தன் கண்களால் அம் முட்டைகளைப் பார்க்கும்; மீன் கண்களிலிருந்து ஒளி.முட்டைகள் மீது பட்டவுடன் முட்டைகள் வெடித்துக் குஞ்சுகள் வெளிப்படும். தாய் மீன் நடுவில் செல்லும்; இருபுறத்தும் மீன் குஞ்சுகள் செல்லும். எதிரிலே வரும் சிறிய மீனைப் பெரிய மீன் ஆன தாய் மீன் உண்ணும். பக்கங்களில் உள்ள சேய் மீன்களைத் தாய் மீன் பார்க்கும்; பார்த்த மாத்திரத்தில் சேய் மீன்கள் பசியாறும். "பார்த்தால் பசியாறும்" என்பது பழமொழி. அது மீன்களுக்காக ஏற்பட்டது. மனிதனுக்குரியதன்று. பலகாரக் கடையை, சாப்பாட்டுக் கடையை மனிதன் கண்ணால் பார்த்தால் பசியாறுமா? ஆறாது. உண்டால்தான் பசியாறும். குருநாதன் சீடனுக்குப் பார்வையால் ஞானத்தைத் தருவார். இது நயன தீட்சையாகும்.

தாய் மீன் பார்த்துத் தன் சேய் மீன்களைக் காப்பது போல், எம்பெருமாட்டி தன் கடைக்கண் பார்வையால் அகில உலகங்களையும் காத்தருளுகின்றார்.

"கரைபொழி திருமுக கருணையால் உலகெழு
கடனிலை பெறவளர் காவேந்திய பைங்கிளி
மாசாம்பவி"

என்கிறார் அருணகிரிநாதர்.

தனந்தரும் கல்விதரும் ஒருநாளும் தளர்வறியா
மனந்தரும் தெய்வவடிவுதரும் நெஞ்சில்
வஞ்சம்இல்லா
இனந்தரும் நல்லன எல்லாந்தரும் அன்பர்
என்பவர்க்கே
கனந்தரும் பூங்குழாள் அபிராமிகடைக் கண்களே.

—அபிராமியந்தாதி

மீனாட்சியம்மையை இறைவன் மதுரையில் திருமணஞ் செய்துகொண்டார்.

"இறைவனுக்குத் திருமணம் தேவையா? சுவாமிக்கும் மனைவி மக்கள் உண்டா? திருக்கோயிலில் ஆண்டுதோறும் திருமணவிழா நடைபெறுகின்றதே அது ஏன்? அம்மன் கழுத்தில் சுவாமி தாலி கட்டுகின்றாரா? குருக்கள்தானே கட்டு

கின்றார். ஆண்டுதோறும் திருமணம் என்றால், வெவ்வேறு தாலி என்றால் எத்தனை தாலிகள்? ஒரே தாலியென்றால், இருக்கின்றது அப்படியே இருக்கட்டுமே; அதனையேன் அவிழ்த்துக் கட்டவேண்டும்? இவையெல்லாம் அறிவுக்குப் பொருந்தாதவை” என்று வாதிப்போரும் உளர்.

திருமணம் விலங்குகட்கு இல்லை. விலங்குகள், தாய், தங்கை, மகள் என்ற முறையின்றி வாழும். மனிதன் புனிதமான வாழ்வை நடாத்துபவன். இவள் தாய், இவள் உடன் பிறந்தாள்; இவள் மனைவி; இவள் மகள் என்ற முறைமையுடன் வாழ்பவன்.

ஆசிரியர் மாணவனுக்குக் கணக்குச் சொல்லிக் கொடுக்கும்போது ஐந்தும், மூன்றும் எட்டு என்று தன் விரல்களை விட்டு எண்ணிச் சொல்லிக் கொடுப்பார். மாணவன் வீட்டில் போய் “ஆசிரியர் சுத்த மக்கு; அவரும் விரலை விட்டுவிட்டுத் தான் எண்ணிப் பார்க்கின்றார்” என்று சொன்னால், அம் மாணவன் அறிவை என்னென்றுரைப்பது? நம் பொருட்டு இறைவன் தன்னைவிட்டுப் பிரிவிலாத எம்பிராட்டியைத் திருமணம் செய்து காட்டுகின்றார். உண்மையில் அது நமது திருமணம் போன்றதன்று. இறைவனுடைய பெருங் கருணை தான் சக்தி.

சிவம் வேறு, சக்தி வேறு அன்று. பொன்னும் நகையும் போல, சிவமும் சக்தியும் தாதான்மியம் என வுணர்க.

உமாதேவியார் கருவிருந்து ஒரு மகவையீன்றாள் என்று வரலாறு உண்டா?

“பவன் பிரமசாரியாகும் பான்மொழி
கன்னியாகும்”

என்று சிவஞான சித்தியார் கூறுகின்றது.

அவள் “உண்ணாமுலை”. ஒரு குழந்தையும் வாய் வைத்து அருந்தாத இளமுலை நாயகி. விநாயகர், வீரபத்திரர், வைரவர், வேலவர் இந்நான்கு சிவகுமாரர்களும் சிவபெருமானுடைய திருமேனியிலிருந்தே தோன்றினார்கள். பார்வதியம்மை கருவிருந்து வளைகாப்பிட்டுப் பிரசவ வேதனையுற்றுப் பிறந்தவர்கள் அல்லர். அவள் என்றும் கன்னியாகும்.

“அகிலாண்ட கோடியீன்ற அன்னையே
பின்னையுங்
கன்னியென மறைபேசும் ஆனந்த ரூபமயிலே”

என்கின்றார் தாயுமானார்.

**வரலாறு**

பாண்டி நாட்டின் தலைநகரம் மதுரையம்பதி. அது துவாதசாந்தத் தலம். 64 சக்தி பீடங்களில் தலைசிறந்த சியாமளா பீடமாக விளங்குந் தலம். அந்நகரை, மதிகுல மன்னன் மலயத்துவஜ பாண்டியன் மநுவறம் தன்வழிச் செல அரசு புரிந்தான்.

விச்சாவதி என்ற ஒரு யட்ச மகள், தந்தைபால் உப தேசம் பெற்று, மதுரையில் அங்கயற் கண்ணம்மையின் திரு முன் பன்னிரு மாதம் தவம் புரிந்தாள். அம்பிகை தோன்றி "என்ன வரம் வேண்டும்" என்றார். "தாயே நின் திருவடி யில் மாறாத அன்பு ஒன்றே வேண்டும்" என்றாள் அவள்.

"அவ்வரம் வழங்கினேன்; வேறு வரமுங் கேள்"என்றாள் எம்பெருமாட்டி. விச்சாவதி, "தாயே! நீ எனக்கு மகளாக வரவேண்டும்" என்று வேண்டினாள்.

அம்பிகை அருள் சுரந்து "நீ மறுபிறப்பில் சோழ மன்ன வனுக்கு மகளாகப் பிறந்து, காஞ்சனமாலை என்ற பேருடன் வளர்ந்து, பாண்டிய மன்னனை மணப்பாய். அப்போது வேள்வியில் நான் தோன்றி நின் மகளாக வளர்வேன்" என்று வரமளித்தாள்.

அந்த வரத்தின்படி விச்சாவதி யென்ற தவமாது, சோழன் மகளாகப் பிறந்து, காஞ்சனமாலை என்ற நாமந் தாங்கி, மலயத்துவஜனை மணந்து, பிள்ளைப்பேறு வேண்டித் தவஞ் செய்தாள்.

மலயத்துவஜன் புர்ந்த புத்திரகாமேஷ்டி என்ற வேள்வி யில், அகில லோக மாதா மரகதச்சிலை போல் தோன்றி யருளினார். தடாதகை யென்று நாமஞ்சூட்டினான். குழந் தைக்கு மூன்று தனங்கள் இருக்கக் கண்டு பாண்டியன் வருந் தினான். கணவனார் வரும்போது ஒரு தனம் மறையும் என்று வானொலி வழங்கியது.

புதல்விக்கு உரிய காலத்தில் அரிய மகுடாபிஷேகம் புரிந்தான். மன்னன் மகளுக்கு மண்ணுலகம் ஈந்து, பொன் னுலகம் பெற்றான்.

தடாதகைப் பிராட்டியார் திக்கு விஜயம் புரிந்து, மன் னர்கள், திசை பாலகர்கள், பிரமா, திருமால் முதலியோரை வென்று திருக்கயிலை சென்றார். அங்கு சிவபெருமானைச் சந் தித்தார். நடுவில் உள்ள தனம் மறைந்தது. சிவபெருமான் மதுரை போந்து, சோமவாரத்தன்று, தேவரும், மூவரும், யாவரும் போற்றத் தடாதகைப் பிராட்டியாரைத் திருமணஞ் செய்துகொண்டு, எல்லா உயிர்கட்கும் அருள் புரிந்தார்.

முற்றும்